# அழகப்பா பல்கலைக்கழகம்

தேசியத் தர நிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+(CGPA: 3.64) தகுதியும்
மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல் தரப்
பல்கலைக்கழகம் மற்றும் தன்னாட்சித் தகுதியும் பெற்றது)

காரைக்குடி - 630003

## தொலைநிலைக்கல்வி இயக்ககம்

## இளங்கலை வரலாறு

## இரண்டாமாண்டு - நான்காம் பருவம்

## தாள்: 108 43

# சம கால இந்தியா
# கி.பி. 1947- இல் இருந்து

# முன்னுரை

இந்தியாவின் சுதந்திரம் என்பது ஒரு புதிய சகாப்தத்தின் தொடக்கம் எனலாம். இந்திய மக்களிடம் மாபெரும் எதிர்பார்ப்புகள் ஏற்பட்டிருந்தன. பிரிட்டிஷ் ஆட்சியில் நிலவிய வறுமை, கல்லாமை, பின்தங்கிய நிலை ஆகியவற்றை ஒழிப்பதற்கு நெடும் பயணம் தொடங்கியது. சுதந்திரப் போராட்ட கால வாக்குறுதிகளை நிறைவேற்ற வேண்டும் என்ற கனவுகள் நனவாக வேண்டும்.

தேசத்தைக் கட்டி எழுப்புவதில் மக்களும், தலைவர்களும் இணைந்துச் செயல்பட வேண்டிருந்தது. அதிலும் சுதந்திர இந்தியாவின் முதல் பிரதமரான நேருவிற்குப் பொறுப்புகள் அதிகமாகின. அவர் தேசத்தின் முன் உள்ள சவால்களை இருப்பெரும்பிரிவுகளாகப் பிரித்துக் கொண்டார். 1. உடனடித் தீர்வு- பிரிவினையால் ஏற்பட்ட சட்ட ஒழுங்கிணைச் சீரமைத்தல், சுதேச சமஸ்தான அரசுகளை இணைத்தல் மற்றும் மொழிவாரி அடிப்படையில் மாநிலங்களை மறுச் சீரமைத்தல். 2. நீண்டகாலப் பிரச்சனைகளானப் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள், வறுமை, கல்லாமை, மக்களிடையேயுள்ள ஏற்றத்தாழ்வுகள், மலைவாழ் மக்கள் பிரச்சனை, மாநிலங்களுக்குள் ஏற்படும் பிரச்சனைகள், வெளிநாடுகளோடு உறவு குறிப்பாக வல்லரசு, ஐ.நா., மற்றும் அண்டைநாடுகளோடும் நல்லுறவினைப் பேணுவதற்காகச் சுதந்திரமான வெளிவுறவுக் கொள்கை ஆகியவை குறிப்பிடத்தக்கப் அம்சங்களாக இருந்தன.

நேரு பதினேழு ஆண்டுகள் தன்னாட்சியில் இப்பிரச்சனைகளுக்கானத் தீர்வை நோக்கி நகரத்துவங்கினார். ஆயினும் எந்த ஒரு தனிநபரும் இத்தனைப் பிரச்சனைகள் கொண்டுள்ள தேசத்தை முழுமையாக மாற்ற இயலாது. கடந்த 73 ஆண்டுகளில் நேருக்குப் பிறகு ஆட்சிக்கு வந்த இந்திரா காந்தி, ராஜீவ் காந்தி, வி.பி.சிங், வாஜ்பாய் மற்றும் நரேந்திர மோடி ஆகியோர் இந்த தேசத்தின் முன்னேற்றத்திற்கு தங்களுடைய முழுமையானப் பங்களிப்பை வழங்கியுள்ளனர். இந்த நூலானது நேருவின் காலத்தில் துவங்கி நரேந்திர மோடி காலம் வரை நடந்த பல்வேறு அரசியல், சமூகம் மற்றும் பொருளாதாரக் காரணிகளை ஆராய்ந்து. இந்த நூலைப் படிக்கும் மாணவர்கள் சமகால இந்தியாவை புரிந்துக்கொள்வதற்கு உதவியாக இருக்கும்.

இந்த நூல் பதினான்கு அத்தியாயங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அத்தியாயங்களின் தொடக்கத்திலுள்ள முன்னுரை மற்றும் நோக்கங்கள் மாணவர்களுக்கு அறிமுகத்தை வழங்குகிறது. பாடத்தை நன்கு புரிந்துக் கொள்வதற்கு வசதியாக அத்தியாயத்திற்குள் ‘உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்’ என்ற தலைப்பில் வினாக்களும் உரியப்பதில்களும் வழங்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு அலகுகளிலும் அத்தியாயச் சுருக்கம் வழங்கப்பட்டுள்ளது. மாணவர்களுக்கு இந்த நூலை எளிமையாகவும் சுருக்கமாகவும் அறிந்துக் கொள்ளவுதவுகிறது.

நூலில் கொடுக்கப்பட்டுள்ள முக்கியச் சொற்களும் அதன் விளக்கமும் அத்தியாயம் தொடர்பான மேலதிக விளக்கத்தை வழங்குகிறது. மேலும் பயிற்சிக் கேள்விகள் அத்தியாத்தில் இறுதியில் வழங்கப்பட்டுள்ள பாடம் தொடர்பான பல நூல் பட்டியல், இந்தப் பாடத்தைத் தாண்டி மேலும் பயிலவேண்டும் என்று நினைப்போருக்குச் சிறந்த வழிகாட்டியாக உள்ளதையும், மற்றும் நூலின் இறுதியில் மாதிரி வினாத்தாள் கொடுக்கப்பட்டுள்ளதைக் கொண்டு மாணவர்கள் தன் சுயயறிவினை அறிந்துகொள்ள முடியும் என்பன முன்னுரை வாயிலாகக் கூறப்படுகிறது.

# சம கால இந்தியா கி.பி. 1947- இல் இருந்து

## பாடத்திட்டங்கள் - புத்தக வரைபட அட்டவணை
## SYLLABI-BOOK MAPPING TABLE

| பாடத்திட்டங்கள் | புத்தகத்தில் வரைபடம் |
|---|---|
| **அலகு-1** | **பக்கம் 01 - 26** |

**பிரிவினை, அதன் தாக்கம் மற்றும் இந்திய சுதேச மாநிலங்களின் ஒருங்கிணைப்பின் வல்லபாய் படேல் பங்கு**

பிரிவினைமௌண்ட்பேட்டன் திட்டம் - ராட்கிளி∴ப் எல்லைக் கோடு - பஞ்சாப் பிரிவினை வங்காளப் பிரிவினை - இந்திய சுதந்திரச் சட்டம் - பிரிவினையின் விளைவுகள் - வங்காள இனக்கலவரங்கள் - குடியேற்றம் - அகதிகளுக்குப் புனரமைப்பு - - சமஸ்தானங்களின் நிலை - சமஸ்தானங்கள் இணைவு - ஜுனாகத் இணைப்பு - ஐதராபாத் - ராஸாகார்கள் - இராணுவ நடவடிக்கை - காஷ்மீர் இணைவு - பதான் ஊடுருவல் - ஐ.நா.சபையில் காஷ்மீர் விவகாரம்

| | |
|---|---|
| **அலகு-2:** | **பக்கம் 26 - 61** |

**இந்திய அரசியலமைப்பின் சிறப்புக் கூறுகள் - இந்தியாவின் வெளியுறவுக் கொள்கை - இந்தியாவில் மொழிவாரி மாநிலங்கள் அமைத்தல்**

அரசியலமைப்பின் வரலாற்றுப் பின்னணி - இந்திய கவுன்சில் சட்டத்தின் முக்கிய அம்சங்கள், 1861 - இந்திய அரசுச் சட்டம், 1919 (மான்டேகு-சேம்ஸ்∴போர்ட் சட்டம்) - அரசியலமைப்புச் சட்டமன்றக் கோரிக்கை - அரசியலமைப்புச் சட்டமன்றம் - சட்ட முன்வரைவு - அரசியல் அமைப்பு உருவாக்கம் - இந்திய அரசியல் அமைப்பின் சிறப்பியல்புகள்

| | |
|---|---|
| **அலகு-3** | **பக்கம் 61 - 90** |

**நேரு காலம் - மத்திய மாநில உறவுகள் - லால் பகதூர் சாஸ்திரி - 1965 இந்தியா பாகிஸ்தான் போர்**

வரலாற்றில் நேருவின் இடம் - அறிவியல் தொழில் நுட்பத்துக்கான பங்களிப்பு - மத்திய மாநில உறவுகள் . நீர் மேலாண்மை - லால்பகதூர் சாஸ்த்ரி - இந்தி எதிர்ப்புப் போராட்டம் - இந்திய பாகிஸ்தான் போர் – 1965 - காஷ்மீர்ப் படையெடுப்பு - தாஷ்கண்ட் பிரகடனம் 1966

**அலகு - 4** **பக்கம் 90 - 123**

**இந்திராகாந்தி - வங்கிகள் தேசியமயமாக்கப்படல் -**
**1971 இந்தியா - பாகிஸ்தான் போர் - அவசரநிலை பிரகடனம்**

இந்திரா காந்தி - அடுப்பங்கரை அமைச்சரவைக் குழு - ரூபாய் மதிப்புக் குறைப்பு - பசு பாதுகாப்புப் போராட்டம், 1967-ஆம் ஆண்டு பொதுத் தேர்தல் - காங்கிரஸ் பிளவு, 1969 - வங்கிகள் தேசியமயமாக்கப்படல் - மன்னர் மானிய ஒழிப்பு, 1970 - மானிய ஒழிப்பு - பங்ளாதேஷ் போர், 1971 - அவசர காலத்திற்கு முன்பு இருந்த சூழ்நிலைகள்

**அலகு - 5** **பக்கம் 123 - 148**

**ஜனதா கட்சித் தோற்றம் - மொரார்ஜி தேசாய்- சரண்சிங் -**
**பொதுத் தேர்தல், 1980 - நீல நட்சத்திர நடவடிக்கை**

ஜனதா கட்சியின் எழுச்சி - பிரதமர் மொரார்ஜி தேசாய் - சரண்சிங் எழுச்சியும்-வீழ்ச்சியும்
பொதுத் தேர்தல், 1980 - நீல நட்சத்திர நடவடிக்கை (Operation Blue Star) - பிரதமர் படுக்கொலை

**அலகு-6** **பக்கம் 148 - 167**

**இராஜீவ் காந்தி - வி.பி.சிங். மற்றும்**
**மண்டல் கமிஷன் அறிக்கை**

சீக்கியர் எதிர்ப்புக் கலவரங்கள் -. பொதுத்தேர்தல்-1984 - போபால் பேரழிவு - அஸ்ஸாம் உடன்பாடு 1985 - ராஜீவ் காந்தி - லோங்கோவால் உடன்பாடு- 1985 - தொழில்நுட்ப மிஷன்கள் - தொலைத் தொடர்பு புரட்சி - கணினிமயமாக்கல் திட்டம் - புதிய கல்விக் கொள்கை - 64-வது அரசியலமைப்புச் சட்டத்திருத்த மசோதா - இந்தியத் தபால் சட்டத் திருத்த மசோதா - ராஜீவ் காந்தி வீழ்ச்சி - வி.பி.சிங். மற்றும் மண்டல் கமிஷன் அறிக்கை -மண்டல் ஆர்ப்பாட்டம்

**அலகு-7** **பக்கம் 167 - 180**

**நரசிம்ம ராவ் நிர்வாகம் - உலகமயமாக்கல் -**
**தனியார்மயமாக்கல் - தாராளமயமாக்கல்**

பிரதமர் நரசிம்ம ராவ் - டாக்டர் மன்மோகன் சிங் - பொருளாதாரப் புரட்சி - வரவு-செலவுத் திட்டம் - உலகமயமாதல் தாராளமயமாதல், தனியார்மயமாதல் - பொருளாதார சீர்திருத்தம் -. சந்தைப் பொருளாதாரம் (Market Economy)

**அலகு-8** **பக்கம் 180 - 198**

### பாஜகவின் தோற்றம் - ஏ.பி.வாஜ்பாய் மற்றும் அவரது வளர்ச்சி திட்டங்கள்

தேசிய ஜனநாயகக் கூட்டணி ஆட்சி (1998-2004) - வாஜ்பாயின் அணு ஆயுதக்கொள்கை- பேருந்து இராஜதந்திரம் கூட்டணிக் கட்சிகளின் நெருக்குதல் - கார்கில் போர் (Kargil War), 1999 மே - ஜூலை 13வது பொதுத்தேர்தல், 1999 செப்டம்பர் - அக்டோபர் - தேசிய ஜனநாயகக் கூட்டணி ஆட்சி, 1999-2004 - விமானக் கடத்தல், 1999 டிசம்பர் - கி.பி. 2000 - தெகல்கா எழுப்பிய ஊழல் புயல், 2001 மார்ச் - நாடாளுமன்றம் தாக்கப்படல் - பொடா சட்டம் (POTA) 2002, ஏப்ரல் 2 - மூன்று மாநிலத் தேர்தல் முடிவு - அரசியலமைப்புச் சட்ட மறு ஆய்வுக் கமிஷன் - குஜராத் கலவரம் கோத்ரா நிகழ்ச்சி - இனப்படுகொலை -குடியரசுத் தலைவர் தேர்தல், 2002 ஆகஸ்டு - வீழ்ச்சியை நோக்கி அரசு - கட்சித்தாவல் தடைத்திருத்தச் சட்டம், 2003 - 2004 ஆம் ஆண்டுப் பொதுத்தேர்தல்

**அலகு-9** **பக்கம் 198 - 232**

### மன்மோகன்சிங் - நரேந்திரமோடி உள்நாட்டு, வெளிநாட்டு கொள்கைகள்

ஐக்கிய முற்போக்குக் கூட்டணி ஆட்சி, 2004-2009 - ஐக்கிய முற்போக்குக் கூட்டணி ஆட்சி 2, 2009-2014 - அண்டை நாடுகளுடனான உறவு 16- வது மக்களவைத் தேர்தல் - 17-வது மக்களவைகானத் தேர்தல்

**அலகு-10** **பக்கம் 232 - 251**

### இந்தியாவின் திட்டமிட்டப் பொருளாதாரம் - ஐந்தாண்டுத் திட்டங்கள் - தொழில் வளர்ச்சி

இந்தியா திட்டமிட்டப் பொருளாதாரம் - ஐந்தாண்டுத் திட்டங்கள் - தொழில் வளர்ச்சி - தொழில் கொள்கை, 1948 - புதிய தொழில் கொள்கை

**அலகு-11** **பக்கம் 251 - 270**

**அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சி –**

**பசுமைப் புரட்சி - வெண்மைப் புரட்சி**

அறிவியல் கொள்கை, 1958 - பசுமைப் புரட்சி (Green Revolution) - வெண்மைப் புரட்சி (White Revolution)

**அலகு-12** **பக்கம் 270 - 318**

**நீலப் புரட்சி- அணு ஆற்றல் ஆராய்ச்சி- விண்வெளி ஆராய்ச்சி**

**மற்றும் வளர்ச்சி- தகவல் தொடர்புகள்**

நீலப் புரட்சி - அணு ஆற்றல் ஆராய்ச்சி (Atomic Research) - அணு ஆற்றல் ஆணையம், 1948 - அணு ஆராய்ச்சி நிறுவனங்கள் - விண்வெளி ஆராய்ச்சி மற்றும் வளர்ச்சி (Space Research and Development) - விக்ரம் சாராபாய் விண்வெளி மையம் (Vikram Sarabai Space Centre) - விண்வெளி மையம் - ஸ்ரீஹரிகோட்டா (Sriharikota) - தகவல் தொடர்புகள் - தகவல் தொழில் நுட்பம் (Information Technoiogy)- புதிய தகவல் தொழில்நுட்பக் கொள்கை.

**அலகு-13** **பக்கம் 318 - 335**

**சமகாலச் சவால்கள்: வகுப்புவாதம்-தீவிரவாதப் பிரச்சனை-**

**தாராளமயமாக்கல், தனியார்மயமாக்கல்**

குஜராத்தில் இனப் படுகொலை - தீவிரவாதப் பிரச்சனை - தாராளமயமாக்கல், தனியார்மயமாக்கல் - தாராளமயமாக்கல் (Liberalisation) - தனியார்மயமாக்கல் (Privatisation)

**அலகு-14** **பக்கம் 335 - 353**

**உலகமயமாக்கல் - மனித உரிமை மீறல்கள் -**

**சுற்றுச்சூழல் பாதிப்பு**

உலகமயமாக்கல் (Globalisation) - மனித உரிமை மீறல்கள் - சுற்றுச்சூழல் பாதிப்பு

# பொருளடக்கம்

## அலகு-1

## பிரிவினை, அதன் தாக்கம் மற்றும் இந்திய சுதேச மாநிலங்களின் ஒருங்கிணைப்பின் வல்லபாய் படேல் பங்கு

**பாட அமைப்பு**


1.1. முன்னுரை

1.2. நோக்கங்கள்

1.3. பிரிவினை

13.1. மௌண்ட்பேட்டன் திட்டம் (The Mountbatten Plan 1947)

1.3.2. ராட்கிளிஃப் எல்லைக் கோடு

1.3.2.1. ராட்கிளிஃப் பரிந்துரை

1.3.3. பஞ்சாப் பிரிவினை (The Partition of Punjab)

1.3.4. வங்காளப் பிரிவினை (The Partition of Bengal)

1.3.5. இந்திய சுதந்திரச் சட்டம் (Indian Independence Act, 1947)

1.3.6. நள்ளிரவில் விடுதலை

1.3.7. பிரிவினையின் விளைவுகள்

1.3.8. வங்காள இனக்கலவரங்கள் (Bengal Communal Riots)

1.3.9. குடியேற்றம் (Migration)

1.3.10. அகதிகளுக்குப் புனரமைப்பு (Rehabilitation of Refugees)

1.4. சமஸ்தானங்களின் நிலை

1.4.1. சமஸ்தானங்கள் இணைவு

1.4.2. ஜுனாகத் இணைப்பு (Accession of Junagadh)

1.4.3. ஐதராபாத்

1.4.4. ராஸாகார்கள்

1.4.5. இராணுவ நடவடிக்கை (Operation Polo)

1.4.6. ஐதராபாத் இணைவு

1.4.7. காஷ்மீர் இணைவு (Accession of Kashmir)

1.4.8. பதான் ஊடுருவல்

1.4.9. இந்தியாவுடன் இணைவு

1.4.10. காஷ்மீரில் இந்திய இராணுவம்

1.4.11. அஸாத் காஷ்மீர்

1.4.12. ஐ.நா.சபையில் காஷ்மீர் விவகாரம்

1.5. உங்கள் முன்னேற்றக் கேள்விகளைச் சரிபார்க்க விடைகள்

1.6. அத்தியாயச் சுருக்கம்

1.7. முக்கியச் சொற்கள்

1.8. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

1.9. கூடுதல் வாசிப்புகள்

**அலகு-2:**

**இந்திய அரசியலமைப்பின் சிறப்புக் கூறுகள் - இந்தியாவின் வெளியுறவுக் கொள்கை - இந்தியாவில் மொழிவாரி மாநிலங்கள் அமைத்தல்**

**பாட அமைப்பு**

2.1. முன்னுரை

2.2. நோக்கங்கள்

2.3. அரசியலமைப்பின் வரலாற்றுப் பின்னணி

2.3.1. இந்திய கவுன்சில் சட்டத்தின் முக்கிய அம்சங்கள், 1861

2.3.2.இந்திய கவுன்சில் சட்டம், 1892

2.3.3. இந்திய கவுன்சில் சட்டம், 1909 (மிண்டோ-மார்லி சட்டம்)

2.3.4. இந்திய அரசுச் சட்டம், 1919 (மான்டேகு-சேம்ஸ்ஃபோர்ட் சட்டம்)

2.3.5. இந்திய அரசுச் சட்டம் 1935

2.3.5.1. சைமன் கமிஷன், 1927-30

2.3.5.2. நேரு அறிக்கை, 1928

2.3.5.3. நேரு அறிக்கையின் முக்கிய அம்சங்கள்

2.3.5.4. வட்ட மேசை மாநாடுகள், 1930-32

2.3.5.5. சட்டத்தின் முக்கிய அம்சங்கள், 1935

2.4. அரசியலமைப்புச் சட்டமன்றக் கோரிக்கை

2.4.1. அரசியலமைப்புச் சட்டமன்றம்

2.4.2. வரைவுக் குழு

2.4.3. சட்ட முன்வரைவு

2.4.4. இந்திய அரசியல் நிர்ணய சபையை உருவாக்குதல்

2.4.5. அரசியல் அமைப்பு உருவாக்கம்

2.5. இந்திய அரசியல் அமைப்பின் சிறப்பியல்புகள்

2.5.1. முகவுரை

2.5.2. முகவுரையின் முக்கியக் கலைச் சொற்கள்

2.5.3. எழுதப்பட்ட அரசியலமைப்பு

2.5.4. மதச்சார்பின்மை

2.5.5. அடிப்படை உரிமைகள்

2.5.6. அடிப்படை கடமைகள்

2.5.7. அரசு நெறிமுறைக் கோட்பாடுகள்

(Directive Principles of State Policy)

2.5.8. கூட்டாட்சி மற்றும் வேற்றுமையில் ஒற்றுமை

2.5.9. பாராளுமன்ற முறையிலான அரசாங்கம்

2.5.10. ஈரவை நாடாளுமன்றம்

2.5.11. நெகிழா மற்றும் நெகிழும் அமைப்பு

2.5.12. சுதந்திரமான நீதித்துறை

2.5.13. நீதிப்புனராய்வு

2.5.14. வயதுவந்தோர் வாக்குரிமை

2.6. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்

2.7. அத்தியாயச் சுருக்கம்

2.8. முக்கியச் சொற்கள்

2.9. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

2.10. கூடுதல் வாசிப்புகள்

## அலகு-3

## நேரு காலம் - மத்திய மாநில உறவுகள் - லால் பகதூர் சாஸ்திரி - 1965 இந்தியா பாகிஸ்தான் போர்

**பாட அமைப்பு**

3.1. முன்னுரை

3.2. நோக்கங்கள்

3.3. வரலாற்றில் நேருவின் இடம்

3.3.1. இந்தியாவின் சுதந்திரத்தை வலுப்படுத்துதல்

3.3.2. தேசிய ஒற்றுமையை உருவாக்குதல்

3.3.3. ஜனநாயகம் மற்றும் பார்லிமென்டரி அமைப்பை வளர்த்தல்

3.3.4. சோஷலிசத்தை அமைத்தல்

3.3.5. பொருளாதார வளர்ச்சிக்குத் திட்டமிடுதல்

3.3.6. வகுப்புவாதத்தை எதிர்த்தல்

3.3.7. அறிவியல் தொழில் நுட்பத்துக்கான பங்களிப்பு

3.3.8. சீர்திருத்தக்காரர்

3.3.9. மதிப்பீடு

3.4. மத்திய மாநில உறவுகள்

3.4.1. ஆளுகை உறவுகள்

3.4.2. நிதித் தொடர்பான உறவுகள்

3.4.3. நீர் மேலாண்மை

3.4.4. மாநிலங்களுக்கிடைப்பட்ட குழு

3.5. லால்பகதூர் சாஸ்த்ரி

3.5.1. இந்தி எதிர்ப்புப் போராட்டம்

3.5.2. அமைச்சரக ஆணை

3.5.3. எதிர்ப்புப் போராட்டம்

3.5.4. பிறமாநிலங்களில் இந்தி எதிர்ப்புப் போராட்டம்

3.6. இந்திய-பாகிஸ்தான் போர்- 1965

3.6.1. காஷ்மீர்ப் படையெடுப்பு

3.6.2. தாஷ்கண்ட் பிரகடனம் (Dashkent Declaration), 1966

3.7. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்க

3.8. அத்தியாயச் சுருக்கம்

3.9. முக்கியச் சொற்கள்

3.10. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

3.11. கூடுதல் வாசிப்புகள்

## அலகு-4

## இந்திராகாந்தி - வங்கிகள் தேசியமயமாக்கப்படல் - 1971 இந்தியா - பாகிஸ்தான் போர் - அவசரநிலை பிரகடனம்

**பாட அமைப்பு**

4.1. முன்னுரை

4.2. நோக்கங்கள்

4.3. இந்திரா காந்தி

4.3.1. அடுப்பங்கரை அமைச்சரவைக் குழு (Kitchen Cabinet)

4.3.2. ரூபாய் மதிப்புக் குறைப்பு

4.3.3. பசு பாதுகாப்புப் போராட்டம், 1966 நவம்பர்

4.4. 1967-ஆம் ஆண்டு பொதுத் தேர்தல்

4.4.1. குடியரசுத் தலைவர் தேர்தல்- 1967

4.4.2. நாட்டு நிர்வாகம், 1967-1970

4.4.3. மாநிலங்களோடு உறவு

4.4.4. மீண்டும் குடியரசுத் தலைவர் தேர்தல், 1969

4.4.5. காங்கிரஸ் பிளவு, 1969

4.5. வங்கிகள் தேசியமயமாக்கப்படல்

4.5.1. மன்னர் மானிய ஒழிப்பு, 1970

4.6. மானிய ஒழிப்பு

4.6.1. 24- வது சட்டத் திருத்தம்

4.6.2. பொதுத் தேர்தல், 1971 மற்றும் அதன் விளைவும்

4.6.3. தேர்தல் முடிவு

4.7. இந்திய - பங்ளாதேஷ் போர், 1971

4.7.1. ஆட்சியில் குழப்பம்

4.7.2. அகதிகள் பிரச்சனை

4.7.3. இந்தியாவின் பங்கு

4.7.4. முக்தி பாஹினி

4.7.5. பிரதமரின் பயணம்

4.7.6. இந்தியா-பாகிஸ்தான் போர்- 1971

4.7.7. கிழக்கு வங்காளம் மீட்கப்படல்

4.7.8. போர் நிறுத்தம்

4.7.9. போரின் விளைவுகள்

4.7.10. சிம்லா ஒப்பந்தம் (Simla Agreement), 1972

4.8. அவசர காலத்திற்கு முன்பு இருந்த சூழ்நிலைகள்

4.8.1. அலகாபாத் நீதிமன்றத் தீர்ப்பு, 1975

4.8.2. உச்சநீதி மன்றத்தில் முறையீடு

4.8.3. எதிர்க்கட்சிகளின் கோரிக்கை

4.8.4. அவசர நிலை அறிவிப்பு

4.8.5. 20 அம்சத்திட்டம் (Twenty point Programme)

4.8.6. நெருக்கடி காலத்தில் சஞ்சய் காந்தியின் திட்டம்

4.8.7. தேர்தல் அறிவிப்பு- 1977

4.9. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்

4.10. அத்தியாயச் சுருக்கம்

4.11. முக்கியச் சொற்கள்

4.12. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

4.13. கூடுதல் வாசிப்புகள்

**அலகு-5**

## ஜனதா கட்சித் தோற்றம் - மொரார்ஜி தேசாய்- சரண்சிங் - பொதுத் தேர்தல், 1980 - நீல நட்சத்திர நடவடிக்கை

**பாட அமைப்பு**

5.1. முன்னுரை

5.2. நோக்கங்கள்

5.3. ஜனதா கட்சியின் எழுச்சி

- 5.3.1. எழுச்சிக்கான பின்னணி
- 5.3.2. ஜனதா கட்சியின் தோற்றம்
- 5.3.3. தேர்தல் முடிவுகள்

5.4. பிரதமர் மொரார்ஜி தேசாய்

- 5.4.1. ஜனதா நிர்வாகம்
- 5.4.2. மாநிலச் சட்டப் பேரவைகள் கலைப்பு
- 5.4.3. சுருள் திட்டம் (Rolling Plan)
- 5.4.4. இந்திரா காந்திக்கு எதிரான நடவடிக்கைகள்
- 5.4.5. ஷா கமிஷன் விசாரணை (Shaw Commission Enquiry)
- 5.4.6. விசாரணை வலைகள்
- 5.4.7. காலப் பெட்டகம் (Time Capsule)
- 5.4.8. இந்திரா காந்தியின் மீண்டும் அரசியல் பிரவேசம்
- 5.4.9. ஜனதா வீழ்ச்சி

5.5. சரண்சிங் எழுச்சியும்-வீழ்ச்சியும்

5.6.பொதுத் தேர்தல், 1980

- 5.6.1அஸ்ஸாம் அகதிகள் பிரச்சனை

5.7. நீல நட்சத்திர நடவடிக்கை (Operation Blue Star)

- 5.7.1. ஆனந்பூர் சாகிப் தீர்மானங்கள்
- 5.7.2. அகாலிவுடன் பேச்சுவார்த்தை

5.7.3. ஜர்னைல் சிங் பிந்தரன்வாலே

5.7.4. காலிஸ்தான் கோரிக்கை

5.7.5. அமைதின்மை

5.7.6. நீல நட்சத்திர நடவடிக்கை

5.7.7.பிரதமர் படுக்கொலை

5.8. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்

5.9. அத்தியாயச் சுருக்கம்

5.10. முக்கியச் சொற்கள்

5.11. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

5.12. கூடுதல் வாசிப்புகள்

## அலகு-6

## இராஜீவ் காந்தி - வி.பி.சிங். மற்றும் மண்டல் கமிஷன் அறிக்கை

**பாட அமைப்பு**

6.1. முன்னுரை

6.2. நோக்கங்கள்

6.3. புதிய பிரதமர்

6.3.1. சீக்கியர் எதிர்ப்புக் கலவரங்கள் (Anti-Sikh Riots)

6.3.2. பொதுத்தேர்தல்-1984

6.3.3.போபால் பேரழிவு

6.3.4. அஸ்ஸாம் உடன்பாடு (Assam Accord), 1985

6.3.5. ராஜீவ் காந்தி - லோங்கோவால் உடன்பாடு- 1985

6.3.6. தொழில்நுட்ப மிஷன்கள் (Technology Missions)

6.3.7. தொலைத் தொடர்பு புரட்சி (Telecommunication Revolution)

6.3.8. கணினிமயமாக்கல் திட்டம் (Computerisation Programme)

6.3.9. புதிய கல்விக் கொள்கை (New Education Policy)

6.3.10. ஷா பானு வழக்கு, 1985 (The Shah Banu Case)

6.3.11. முஸ்லீம் பெண்கள் மசோதா, 1986

(Muslim Women's Bill, 1986)
6.3.12. 64-வது அரசியலமைப்புச் சட்டத்திருத்த மசோதா
6.3.13. இந்தியத் தபால் சட்டத் திருத்த மசோதா
(Indian Postal Act Amendment Bill)-1986
6.3.14. ராஜீவ் காந்தி வீழ்ச்சி
6.4. வி.பி.சிங். மற்றும் மண்டல் கமிஷன் அறிக்கை (Mandal Commission Report)
6.4.1 மண்டல் ஆர்ப்பாட்டம் (Mandal Agitation)
6.5. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்க பதில்கள்
6.6. அத்தியாயச் சுருக்கம்
6.7. முக்கியச் சொற்கள்
6.8. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்
6.9. கூடுதல் வாசிப்புகள்

## அலகு-7

## நரசிம்ம ராவ் நிர்வாகம் - உலகமயமாக்கல் - தனியார்மயமாக்கல் - தாராளமயமாக்கல்

**பாட அமைப்பு**

7.1. முன்னுரை
7.2. நோக்கங்கள்
7.3. பிரதமர் நரசிம்ம ராவ்
7.3.1. நரசிம்ம ராவ் ஆட்சி (1991-1996)
7.3.2. புதியப் பொருளாதாரக் கொள்கை
7.3.3. டாக்டர் மன்மோகன் சிங்
7.3.4. பொருளாதாரப் புரட்சி
7.3.5. வரவு-செலவுத் திட்டம்
7.3.6. காங்கிரஸ் தலைவர் ராவ்
7.4. உலகமயமாதல் தாராளமயமாதல், தனியார்மயமாதல்
7.4.1. பொருளாதார சீர்திருத்தம்
7.4.2. சந்தைப் பொருளாதாரம் (Market Economy)
7.5. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்
7.6. அத்தியாயச் சுருக்கம்
7.7. முக்கியச் சொற்கள்

7.8. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

7.9. கூடுதல் வாசிப்புகள்

## அலகு-8

## பாஜகவின் தோற்றம் - ஏ.பி.வாஜ்பாய் மற்றும் அவரது வளர்ச்சி திட்டங்கள்

**பாட அமைப்பு**

8.1. முன்னுரை

8.2. நோக்கங்கள்

8.3. தேசிய ஜனநாயகக் கூட்டணி ஆட்சி (1998-2004)

- 8.3.1. வாஜ்பாயின் அணு ஆயுதக்கொள்கை
- 8.3.2. பேருந்து இராஜதந்திரம்
- 8.3.3. கூட்டணிக் கட்சிகளின் நெருக்குதல்
- 8.3.4. கார்கில் போர் (Kargil War), 1999 மே - ஜூலை
- 8.3.5. 13வது பொதுத்தேர்தல், 1999 செப்டம்பர் - அக்டோபர்
- 8.3.6. தேசிய ஜனநாயகக் கூட்டணி ஆட்சி, 1999-2004
- 8.3.7. விமானக் கடத்தல், 1999 டிசம்பர்
- 8.3.8. கி.பி. 2000
- 8.3.9. தெகல்கா எழுப்பிய ஊழல் புயல், 2001 மார்ச்
- 8.3.10. நாடாளுமன்றம் தாக்கப்படல்
- 8.3.11. பொடா சட்டம் (POTA) 2002, ஏப்ரல் 2
- 8.3.12. மூன்று மாநிலத் தேர்தல் முடிவு
- 8.3.13. அரசியலமைப்புச் சட்ட மறு ஆய்வுக் கமிஷன் (Constitution Review Commission)
- 8.3.14. குஜராத் கலவரம் கோத்ரா நிகழ்ச்சி
- 8.3.15. இனப்படுகொலை
- 8.3.16. குடியரசுத் தலைவர் தேர்தல், 2002 ஆகஸ்டு
- 8.3.17. வீழ்ச்சியை நோக்கி அரசு
- 8.3.18. கட்சித்தாவல் தடைத்திருத்தச் சட்டம், 2003
- 8.3.19. 2004 ஆம் ஆண்டுப் பொதுத்தேர்தல்

8.4. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்

8.5. அத்தியாயச் சுருக்கம்

8.6. முக்கியச் சொற்கள்

8.7. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

8.8. கூடுதல் வாசிப்புகள்

## அலகு-9

## மன்மோகன்சிங் - நரேந்திரமோடி

## உள்நாட்டு, வெளிநாட்டு கொள்கைகள்

**பாட அமைப்பு**

9.1. முன்னுரை

9.2. நோக்கங்கள்

9.3. ஐக்கிய முற்போக்குக் கூட்டணி ஆட்சி, 2004-2009

9.3.1. சுனாமிச் சவால், 2004

9.3.2. முற்போக்குத் திட்டங்கள் தேசியக் கிராமப்புறச் சுகாதாரத் திட்டம்

9.3.3. சச்சார் கமிஷன், 2005

9.3.4. நிர்வாகச் சீர்திருத்தக் கமிஷன்

9.3.5. தேசிய அறிவுக் கமிஷன் (National Knowledge Commission)

9.3.6. தகவல் அறியும் உரிமைச் சட்டம்

9.3.7. முல்லை பெரியார் அணைத் தகராறு

9.3.8. நதிகள் ஒருங்கிணைப்பு (Interlinking of Rivers)

9.3.9. பாரத் நிர்மாண் திட்டம், 2006

9.3.10. கட்டாயத் திருமணப்பதிவு (Compulsory Registration of Marriage)

9.3.11. தேசிய கிராம வேலைவாய்ப்பு உத்திரவாதத் திட்டம் - (National Rural Employment Guarantee Scheme)

9.3.12. காவேரி தீர்ப்பாயத்தின் தீர்ப்பு (Cauvery Tribunal Award)

9.4. ஐக்கிய முற்போக்குக் கூட்டணி ஆட்சி 2, 2009-2014

9.4.1. அமைச்சரவை

9.4.2. கற்கும் பாரதம்

9.4.3. தேசிய அடையாள அட்டை

9.4.4. வறுமைக் கோடு
9.4.5. ஊழல் எதிர்ப்பு இயக்கம்
9.4.6. லோக்பால் மசோதா முதல் முயற்சி
9.4.7. உணவுப் பாதுகாப்பு
9.4.8. தேசிய ஒருமைப்பாட்டு மன்றம்
9.4.9. மன்மோகன் சிங்கின் வெளிநாட்டுக் கொள்கை
9.4.9.1. இந்திய-அமெரிக்க உறவு
9.4.9.2. இந்திய-அமெரிக்க அணு ஆற்றல் ஒப்பந்தம்
9.4.9.3. மன்மோகன் சிங்கின் அமெரிக்கப் பயணம்
9.4.9.4. ஒபாமாவின் வருகை
9.4.9.5. ஹிலாரி கிளிண்டன் வருகை
9.4.10. இந்திய-ரஷ்ய உறவு
9.4.11. அண்டை நாடுகளுடனான உறவு
9.4.11.1. இந்திய-பாகிஸ்தான்
9.4.11.2. இந்திய-சீன உறவு
9.4.11.3. இந்திய-இலங்கை உறவு
9.5. 16- வது மக்களவைத் தேர்தல்
9.5.1. தெலுங்கானா 29-வது மாநிலமாகிறது
9.5.2. கருப்புப் பணத்தை ஒழித்தல்
9.5.3. பணமதிப்பிழப்பு நடவடிக்கை
9.5.4. இந்தித் திணிப்பைச் சுற்றியுள்ள சர்ச்சை
9.5.5. காவிரி நீர்ப் பகிர்வு இறுதி தீர்ப்பு
9.5.6. சரக்கு மற்றும் சேவை வரி அறிமுகம்
9.5.7. நீதிபதிகள் நியமன மசோதா
9.5.8. நரேந்திர மோடி வெளிநாட்டுக் கொள்கை
9.5.8.1. இந்திய-அமெரிக்க உறவுகள்
9.5.8.2. இந்திய-ரஷ்யா உறவுகள்
9.5.8.3. இந்திய-பாகிஸ்தான் உறவுகள்
9.5.8.4. இந்தியா-சீனா உறவுகள்
9.6. 17-வது மக்களவைகானத் தேர்தல்
9.7. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்
9.8. அத்தியாயச் சுருக்கம்
9.9. முக்கியச் சொற்கள்

9.10. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

9.11. கூடுதல் வாசிப்புகள்

## அலகு-10

## இந்தியாவின் திட்டமிட்டப் பொருளாதாரம் - ஐந்தாண்டுத் திட்டங்கள் - தொழில் வளர்ச்சி

**பாட அமைப்பு**

10.1. முன்னுரை

10.2. நோக்கங்கள்

10.3. இந்தியா திட்டமிட்டப் பொருளாதாரம்

  10.3.1. திட்டக்கமிஷன் (Planning Commission, 1950)

  10.3.2. தேசிய வளர்ச்சி மன்றம் (National Development Council)

10.4. ஐந்தாண்டுத் திட்டங்கள்

  10.4.1. முதல் ஐந்தாண்டுத் திட்டம் (1951-1956)

  10.4.2. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் (1956-1961)

  10.4.3. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் (1961 - 1966)

10.5.தொழில் வளர்ச்சி

10.6. தொழில் கொள்கை, 1948

10.7. புதிய தொழில் கொள்கை

10.8. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்

10.9. அத்தியாயச் சுறுக்கம்

10.10. முக்கிய சொற்கள்

10.11. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

10.12. கூடுதல் வாசிப்புகள்

## அலகு-11

## அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சி – பசுமைப் புரட்சி - வெண்மைப் புரட்சி

**பாட அமைப்பு**

11.1. முன்னுரை

11.2. நோக்கங்கள்

11.3. அறிவியல் கொள்கை, 1958

11.4. பசுமைப் புரட்சி (Green Revolution)

11.5. வெண்மைப் புரட்சி (White Revolution)

11.6. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்

11.7. அத்தியாயச் சுருக்கம்

11.8.முக்கியச் சொற்கள்

11.9.சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

11.10.கூடுதல் வாசிப்புகள்

## அலகு-12

## நீலப் புரட்சி- அணு ஆற்றல் ஆராய்ச்சி- விண்வெளி ஆராய்ச்சி மற்றும் வளர்ச்சி- தகவல் தொடர்புகள்

**பாட அமைப்பு**

12.1.முன்னுரை

12.2. நோக்கங்கள்

12.3. நீலப் புரட்சி

12.4. அணு ஆற்றல் ஆராய்ச்சி (Atomic Research)

- 12.4.1.அணு ஆற்றல் ஆணையம், 1948
- 12.4.2.அணு ஆராய்ச்சி நிறுவனங்கள்

12.5. விண்வெளி ஆராய்ச்சி மற்றும் வளர்ச்சி (Space Research and Development)

- 12.5.1. விக்ரம் சாராபாய் விண்வெளி மையம் (Vikram Sarabai Space Centre)
- 12.5.2. விண்வெளி மையம்
  - 12.5.2.1. ஸ்ரீஹரிகோட்டா (Sriharikota)

12.6. தகவல் தொடர்புகள்

- 12.6.1. தபால்வழி தகவல் தொடர்பு (Postal Communication)
- 12.6.2. தொலைபேசி மூலம் தகவல் தொடர்பு (Telecommunications)
- 12.6.3. புதிய தொலைத் தொடர்புக் கொள்கை, 1999 (New Telecom Policy, 1999)
- 12.6.4. வானொலி தகவல் தொடர்பு (Radio Communication)
- 12.6.5. தொலைக்காட்சி தகவல் தொடர்பு (Television Communication)

12.7. தகவல் தொழில் நுட்பம் (Information Technoiogy)

- 12.7.1. புதிய தகவல் தொழில்நுட்பக் கொள்கை

12.8. உங்கள் முன்னேற்ற கேள்விகளை சரிபார்க்க விடைகள்

12.9. அத்தியாயச் சுருக்கம்

12.10. முக்கியச் சொற்கள்

12.11. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

12.12. கூடுதல் வாசிப்புகள்

## அலகு-13

## சமகாலச் சவால்கள்: வகுப்புவாதம்-தீவிரவாதப் பிரச்சனை-தாராளமயமாக்கல், தனியார்மயமாக்கல்

**பாட அமைப்பு**

13.1. முன்னுரை

13.2. நோக்கங்கள்

13.3. குஜராத்தில் இனப் படுகொலை

13.4. தீவிரவாதப் பிரச்சனை

13.5. தாராளமயமாக்கல், தனியார்மயமாக்கல்

13.5.1.தாராளமயமாக்கல் (Liberalisation)

13.5.2. தனியார்மயமாக்கல் (Privatisation)

13.6. உங்கள் முன்னேற்ற கேள்விகளை சரிபார்க்க விடைகள்

13.7. அத்தியாயச் சுருக்கம்

13.8. முக்கியச் சொற்கள்

13.9. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

13.10. கூடுதல் வாசிப்புகள்

## அலகு-14

## உலகமயமாக்கல் - மனித உரிமை மீறல்கள் - சுற்றுச்சூழல் பாதிப்பு

**பாட அமைப்பு**

14.1. முன்னுரை

14.2. நோக்கங்கள்

14.3. உலகமயமாக்கல் (Globalisation)

14.4. மனித உரிமை மீறல்கள்

14.5. சுற்றுச்சூழல் பாதிப்பு

14.6. உங்கள் முன்னேற்ற கேள்விகளை சரிபார்க்க விடைகள்

14.7. அத்தியாயச் சுருக்கம்

14.8. முக்கியச் சொற்கள்

14.9. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

14.10. கூடுதல் வாசிப்புகள்

# அலகு-1

## பிரிவினை, அதன் தாக்கம் மற்றும் இந்திய சுதேச மாநிலங்களின் ஒருங்கிணைப்பின் வல்லபாய் படேல் பங்கு

குறிப்பு

**பாட அமைப்பு**

1.1. முன்னுரை
1.2. நோக்கங்கள்
1.3. பிரிவினை
13.1. மௌண்ட்பேட்டன் திட்டம் (The Mountbatten Plan 1947)
1.3.2. ராட்கிளிஃப் எல்லைக் கோடு
1.3.2.1. ராட்கிளிஃப் பரிந்துரை
1.3.3. பஞ்சாப் பிரிவினை (The Partition of Punjab)
1.3.4. வங்காளப் பிரிவினை (The Partition of Bengal)
1.3.5. இந்திய சுதந்திரச் சட்டம் (Indian Independence Act, 1947)
1.3.6. நள்ளிரவில் விடுதலை
1.3.7. பிரிவினையின் விளைவுகள்
1.3.8. வங்காள இனக்கலவரங்கள் (Bengal Communal Riots)
1.3.9. குடியேற்றம் (Migration)
1.3.10. அகதிகளுக்குப் புனரமைப்பு (Rehabilitation of Refugees)
1.4. சமஸ்தானங்களின் நிலை
1.4.1. சமஸ்தானங்கள் இணைவு
1.4.2. ஜுனாகத் இணைப்பு (Accession of Junagadh)
1.4.3. ஐதராபாத்
1.4.4. ராஸாகார்கள்
1.4.5. இராணுவ நடவடிக்கை (Operation Polo)
1.4.6. ஐதராபாத் இணைவு
1.4.7. காஷ்மீர் இணைவு (Accession of Kashmir)
1.4.8. பதான் ஊடுருவல்
1.4.9. இந்தியாவுடன் இணைவு
1.4.10. காஷ்மீரில் இந்திய இராணுவம்

1.4.11. அஸாத் காஷ்மீர்

1.4.12. ஐ.நா.சபையில் காஷ்மீர் விவகாரம்

1.5. உங்கள் முன்னேற்றக் கேள்விகளைச் சரிபார்க்க விடைகள்

1.6. அத்தியாயச் சுருக்கம்

1.7. முக்கியச் சொற்கள்

1.8. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

1.9. கூடுதல் வாசிப்புகள்

## 1.1. முன்னுரை

இந்தியா 15 ஆகஸ்ட்1947- நாளில் சுதந்திரமடைந்தது. மக்களிடம் உற்சாகம் மற்றும் ஆர்வம் நிரம்பியது. எண்ணற்றத் தேசபக்தர்களுடைய தியாகத்தினால் இந்திய மக்களுடைய கனவு நனவாகிவிட்டது. ஆனால், தேசம் இரு நாடுகளாகப் பிரிக்கப்பட்டு விட்டன. மதக் கலவரங்கள் வெடித்தன. அப்பாவி மக்கள் படுகொலைச் செய்யப்பட்டார்கள். இரு நாடுகளிலிருந்தும் லட்சக்கணக்கான மக்கள் குடும்பத்தோடு அகதிகளாக வந்தார்கள். உணவு மற்றும் நுகர்வுப் பொருள்களுக்குப் பஞ்சம் ஏற்பட்டது.

சுதந்திர இந்தியாவில் அடுத்த ஒரு முக்கியமான அம்சம் சுதேச மாநிலங்களை இணைப்பதாகும். ஆங்கிலேயே அரசாங்கம் சுதேச அரசுகளை இந்தியாவோடோ அல்லது பாகிஸ்தானோடோ அல்லது சுதந்திரமாகவோ இருப்பதற்கு அனுமதித்தது. ஆயினும் பெரும்பான்மையான அரசுகள் இவ்விருநாடுகளில், ஏதோ ஒன்றில் இணைந்தன அதே சமயத்தில் காஷ்மீர் மற்றும் ஹைத்ராபாத் அரசுகள் யாரோடும் இணைவதில்லை என முடிவுச் செய்தன. இத்தகைய சூழ்நிலையில் வல்லபாய் படேலின் தீவிர முயற்சியின் பேரில் இத்தகையக் கடுமையானப் பணி செய்து முடிக்கப்பட்டது.

இந்த அத்தியாயம் மேலே குறிப்பிடப்பட்டுள்ள காரணங்களால் பிரிவினை மற்றும் சுதேச மாநிலங்கள் இணைப்பு ஆகியவற்றை விவரிக்கிறது.

**குறிப்பு**

## 1.2. நோக்கங்கள்

நீங்கள் இப்பாடத்தைப் பயின்ற பின்னர் அறிய முடியும்,

- இந்தியாவின் சுதந்திரத்தின் போது வகுப்புவாதப் படுகொலைகளை விவரிக்கிறது.
- சுதேச அரசுகள் இந்திய ஒன்றியத்தில் எவ்வாறு ஒருங்கிணைக்கப்பட்டன என்பதைப் புரிந்துக் கொள்ள உதவுகிறது.
- சுதேச மாநிலங்களை இந்தியாவோடு இணைப்பதில் சர்தார் படேலின் பங்கினைப் பற்றி விவாதிக்கிறது.

## 1.3. பிரிவினை

மௌண்ட்பேட்டன் திட்டத்தின் படி இந்தியத் துணைக்கண்டமானது இரு நாடுகளாக (இந்திய-பாகிஸ்தான்) எனப் பிரிக்கப்பட்டது. ஆனால் இந்தப் பிரிவினையாது அமைதியான சூழலில் நடைபெறவில்லை. இரு நாடுகளிலும் மதச் சிறுபான்மையினர் ஈவு இரக்கம் இன்றி மதக் கலவரதுக்கு பழியாகினர்கள்.

## 13.1. மௌண்ட்பேட்டன் திட்டம் (The Mountbatten Plan 1947)

மார்ச் 1947 ஆங்கிலேயரின் கடைசி வைசிராயாக மௌண்ட்பேட்டன் பிரபு பொறுப்பேற்றுக்கொண்டார். வைசிராயாகப் பதவியேற்ற உடனேயே அவர் ஜின்னா, நேரு, வல்லபாய் படேல், அபுல் கலாம் ஆசாத், காந்தி மற்றும் பிற முக்கியத் தலைவர்களுடன் கலந்தாலோசித்தார். அதன்பின் மௌண்ட்பேட்டன் அட்லியின் அறிவிப்பையொட்டி ஒரு திட்டத்தைத் தயாரித்தார். இத்திட்டத்தைத் தயாரிக்க நேருவும் மற்றும் வைசிராயின் சீர்திருத்தக் கமிஷனராகயிருந்த வி.பி.மேனனும் உறுதுணையாக இருந்தனர். பிரிட்டிஷ் அமைச்சரவையின் ஒப்புதலைப் பெற்ற இத்திட்டமே "மௌண்ட்பேட்டன் திட்டம்" என்று அறியப்படுகிறது. இதுவே இந்தியப் பிரிவினைக்கு (Partition of India) அடிப்படையாக அமைந்தது.

1947 ஜூன் 3 ஆம் தேதி இந்தியப் பிரிவினையைப் பற்றி மௌண்ட்பேட்டனும், நேருவும், ஜின்னாவும் டெல்லி வானொலி மூலமாக அறிவிப்பு வெளியிட்டனர். இந்த அறிவிப்புக்கு இந்திய விடுதலைச் சட்டம் வடிவம் கொடுத்தது. இந்திய தேசிய காங்கிரஸ் அங்கீகாரம் அளித்தது.

இத்திட்டதின் படி கிழக்கு வங்காளம், மேற்கு பஞ்சாப் சிந்து மாகாணம் மற்றும் பலுசிஸ்தான், பாலைவனம் ஆகியவற்றை உள்ளடக்கியது பாகிஸ்தான் என்ற புதிய நாடு. மற்றப்பகுதிகளை இந்தியா என்று அழைக்கப்பட்டு, அதே சமயத்தில் ஐநூற்றுக்கும் மேற்பட்ட சுதேசி சமஸ்தான அரசுகள் இந்தியவோடு அல்லது பாகிஸ்தானனோடு இணைந்து கொள்வதற்கு அனுமதி வழங்கப்பட்டது.

## 1.3.2. ராட்கிளி∴ப் எல்லைக் கோடு

மௌண்ட்பேட்டன் திட்டத்தின்படி இந்தியப் பிரிவினை முடிவாயிற்று. இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் சேரவேண்டிய பகுதிகளைப் பற்றிய பிரச்சினைக்குத் தீர்வு காண்பதற்குப் பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் ஒரு எல்லைக் கமிஷனை அமைத்தது. அக்கமிஷனின் தலைவராக சர் சிரில் ராட்கிளி∴ப் (Sir Cyril Radcliffe) நியமிக்கப்பட்டார். அவர் பல்கலைகளில் வல்லவரான இவர்க்குப் பஞ்சாப் -வங்காள எல்லைகளைப் பற்றியோ அல்லது இந்திய எல்லைச் சட்டச் சிக்கல்கள் பற்றியோ எதுவும் தெரியாது. அவர் இந்தியாவுக்கும் வந்ததில்லை, அதன் காரணமாகவே ராட்கிளிப் பாரபட்சமின்றிச் செயல்படுவார் என்று கருதி எல்லைக் கமிஷன் தலைவராக நியமிக்கப்பட்டார் (1947 - ஜூன்).

ராட்கிளி∴ப் இந்தியா வந்தவுடன் இந்தியா - பாகிஸ்தான் எல்லைப் பிரச்னை பற்றி வைசிராய் மௌண்ட்பேட்டனுடன் கலந்தாலோசித்தார். முஸ்லீம்களும் முஸ்லீம்களல்லாதோரும் பெரும்பான்மையினராக உள்ள பகுதிகளையும் பிற காரணிகளையும் கணக்கிலெடுத்துக் கொண்டு எல்லைக் கோடுகளை முடிவு செய்யுமாறு யோசனைகளை கூறினார் மௌண்ட்பேட்டன். ஆனால் அவர் பிற காரணிகள் யாவை என்பது பற்றி எதுவும் கூறவில்லை. இந்திய இராணுவத் தலைவராயிருந்த சர் கிளாட் அச்சின்லெக் (Sir Claude Auchinleck) என்பவர் எல்லைக் கோடுகளை வகுக்கையில் பாதுகாப்புப்

பிரச்னை பற்றிக் கவலைப்பட வேண்டாம் என்று ராட்கிளி.ஃ.ப்புக்கு உறுதி கூறினார்.

எல்லைப் பிரிவினைத் திட்டத்தை 1947 ஆகஸ்ட் 15 ஆம் தேதிக்குள் கொடுத்துவிட வேண்டும் என்ற வைசிராய் மௌண்ட்பேட்டனின் நிபந்தனை ராட்கிளிப்புக்குப் பெரும்கவலையை அளித்தது. பிரிக்கப்பட வேண்டிய எல்லைப் பகுதிகளை நேரில் சென்று பார்வையிடவோ, அல்லது எல்லைப் பகுதி மக்களைச் சந்தித்து அவர்களின் கருத்துக்களைக் கேட்டறிவதற்கோ ராட்கிளி.ஃ.ப்புக்குப் போதிய கால அவகாசமில்லை. அவசரமாக எல்லைக் கோடுகளை வகுப்பதில் தவறுகள் ஏற்படுவது தவிர்க்க முடியாது என்று எச்சரித்தார் ராட்கிளி.ஃ.ப். எனினும் அந்த "அறுவை சிகிச்சை"யை மௌண்ட்பேட்டனும், ஜின்னாவும் மற்றும் நேரும் ஏற்றுக் கொண்டார்கள்.

### 1.3.2.1. ராட்கிளி.ஃ.ப் பரிந்துரை

நிலப்படங்கள், மக்கள் தொகை அட்டவணைகள், ஆவணங்கள், புள்ளி விவரங்கள், அறிக்கைகள் ஆகியவற்றின் அடிப்படையில் இந்தியா மற்றும் பாகிஸ்தானுக்குச் சேரவேண்டிய பஞ்சாப் - வங்காள எல்லைப் பகுதிகளை முடிவு செய்தார் ராட்கிளி.ஃ.ப். அவருக்குக் காங்கிரஸ் மற்றும் முஸ்லீம் லீக்கால் அங்கீகரிக்கப்பட்ட எட்டு உயர்நீதி மன்ற நீதிபதிகள் உதவி செய்தனர். பிரிவினைக்குப் பின்னரும் பஞ்சாபிலும், வங்காளத்திலும் பெரும்பான்மைச் சமூகத்தினரிடையே சிறுபான்மைச் சமூகத்தினர் விடுபடுவது தவிர்க்க முடியாததாயிற்று. இதன் பின்விளைவுகளைப் பற்றி ராட்கிளி.ஃ.ப் நன்கறிந்திருந்தார். எனினும் கால நெருக்கடியின் கட்டாயத்துக்குட்பட்டு அவரிடம் ஒப்படைக்கப்பட்டப் பொறுப்பை நிறைவேற்றினார். ராட்கிளி.ஃ.ப் பரிந்துரை 1947 ஆகஸ்டு 17 ஆம் தேதி - அதாவது இந்தியா சுதந்திரம் பெற்று இரண்டு நாட்களுக்குப் பின்னர் வழங்கப்பட்டது.

## 1.3.3. பஞ்சாப் பிரிவினை (The Partition of Punjab)

ராட்கிளி.ஃ.ப் எல்லைக் கமிஷன் பரிந்துரையின்படி பஞ்சாப் இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டன. மேற்கு பஞ்சாப் பகுதியை பாகிஸ்தானுடனும், கிழக்கு பஞ்சாப் பகுதியை இந்தியாவுடனும்

இணைக்கப்பட வேண்டும் என்று முடிவாயிற்று. சிந்து நதி முதல் டெல்லியின் எல்லை வரை உள்ள நகரங்கள், கிராமங்கள் ஒவ்வொன்றாகப் பிடிக்கப்பட்டது. மேலும் நெல் மற்றும் கோதுமை வயல்களும் பிரிக்கப்பட்டன. அதன் விளைவாக இந்தியாவின் கிழக்குப் பஞ்சாபில் வாழ்ந்த முஸ்லீம்கள் பாகிஸ்தானுக்கும், பாகிஸ்தானின் மேற்கு பஞ்சாபில் வாழ்ந்த இந்துக்களும், சீக்கியர்களும் இந்தியாவுக்கும் குடிபெயர்ந்து செல்லவேண்டியதாயிற்று.

## 1.3.4. வங்காளப் பிரிவினை (The Partition of Bengal)

ராட்கிளி.ஃப் தீர்ப்பின்படி பஞ்சாப்பைப் போன்றே வங்காளம் இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது. கிழக்கு வங்காளம் பாகிஸ்தானுடனும், மேற்கு வங்காளம் இந்தியாவுடனும் இணைக்கப்பட வேண்டும் என்று முடிவாயிற்று. வங்காளத்தில் வாழ்ந்து வந்த 35 மில்லியன் முஸ்லீம்களும், 30 மில்லியன் இந்துக்களும் சமயவழி முறையில் வேறுபட்டிருந்தாலும் மொழி - கலாச்சாரம் - பொருளாதார வழியில் ஒன்றுபட்டிருந்தார்கள். இந்நிலையில் வங்காளம் பிரிக்கப்பட்டு கிழக்கு வங்காளம் இந்தியாவின் மேற்குக் கோடியில் 970 மைல்களுக்கு அப்பாற்பட்டிருந்த பாகிஸ்தானோடு இணைக்கப்பட்டது. கிழக்கு வங்காளம் கிழக்கு பாகிஸ்தானாக உருவாகியது. இதை “பூகோள அபத்தம்” (Geographical Aberration) என்று வரலாற்று ஆசிரியர்கள் வர்ணித்துள்ளனர்.

## 1.3.5. இந்திய சுதந்திரச் சட்டம் (Indian Independence Act, 1947)

இந்தியப் பிரிவினை முடிவானதும் பிரிட்டிஷ் அரசாங்கம் விரைவாகச் செயல்பட்டது. பிரிவினைத் திட்டத்துக்கு வடிவம் கொடுக்கப்பட்டது. இந்திய விடுதலை மசோதா தயாரிக்கப்பட்டு, பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் அறிமுகப்படுத்தப்பட்டு (ஜூலை 4), இந்திய விடுதலைச் சட்டமாக நிறைவேற்றப்பட்டது (ஜூலை 18).

## 1.3.6. நள்ளிரவில் விடுதலை

குறிப்பு

சுதந்திர இந்தியா 1947 ஆகஸ்டு மாதம் 14-15 நள்ளிரவில் பிறந்தது. புது டெல்லியில் நாடாளுமன்றக் கட்டிடத்தின் மைய மண்டபத்தில் இந்திய அரசியலமைப்புச் சட்டமன்றம் கூடியது. அதற்கு ராஜேந்திரப் பிரசாத் தலைமை தாங்கினார். சரியாக இரவு பன்னிரண்டு மணிக்கு சுதேச கிருபளாணி “வந்தே மாதரம்” பாடலை உணர்ச்சியோடும் பெருமிதத்தோடும் பாடினார். ராஜேந்திரப் பிரசாத்தின் தலைமை உரைக்குப் பின் ஜவஹர்லால் நேரு இந்திய சுதந்திரம் பற்றிய தீர்மானத்தை முன்மொழிந்துப் பேசினார். அவரது குரல் நள்ளிரவின் அமைதிக்கிடையே கணீரென ஒலித்தது. “நீண்ட நெடுங்காலத்துக்கு முன்னால் நாம் விதியோடு ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டோம். அந்த ஒப்பந்தத்திலிருந்து நம்மை விடுவித்துக் கொள்ளும் நேரம் வந்துவிட்டது. இந்த நள்ளிரவு நேரத்தில் உலகமே உறங்கிக் கொண்டிருக்கையில் இந்தியா சுதந்திரமாக வாழ்வதற்காக விழித்துக் கொள்கிறது”. அரசியலமைப்புச் சட்டமன்ற உறுப்பினர்களின் சுதந்திர தினச் சூளுரைக்குப் பின் பெண்களின் சார்பாக ஹன்சா மேத்தா மூவர்ண தேசியக் கொடியை எடுத்துக் கொடுக்க, இந்தியாவின் கடைசி வைசிராயும் முதல் கவர்னர் ஜெனரலுமான மௌண்ட்பேட்டன் பிரபு கொடி மரத்திலிருந்து யூனியன் ஜாக் கொடியை இறக்கிவிட்டு அதற்குப் பதில் சுதந்திர இந்தியாவின் அசோகச் சக்கரம் பதிக்கப்பட்ட மூவர்ணக் கொடியை ஏற்றினார். “இந்தியா விடுதலை அடைகிறது” என்று அரசியலமைப்புச் சட்டமன்றப் பிரகடனத்தில் கையெழுத்திட்டார். அன்றிலிருந்து அரசியலமைப்புச் சட்டமன்றம் இந்தியாவின் நாடாளுமன்றமாயிற்று. மக்களின் ஆரவாரத்துக்கிடையே இராணுவ அணிவகுப்புடன் முதல் இந்தியப் பிரதமர் ஜவகர்லால் நேரும், அவரது சகாக்களும் சென்றார்கள். ஆனால் இக்காட்சியைக் காண மகாத்மா காந்தி அங்கில்லை. அவர் நவகாளியில் இந்து-முஸ்லீம் இனக்கலவரத் தீயை அணைப்பதில் முழுமூச்சுடன் தன்னை ஈடுபடுத்திக் கொண்டிருந்தார்.

குறிப்பு

## 1.3.7. பிரிவினையின் விளைவுகள்

**பஞ்சாப் வகுப்பு வாத வன்முறை**

ராட்கிளி∴ப் பஞ்சாப் பிரிவினை பற்றிய தீர்ப்புக் குளவிக்கூட்டில் கைவிட்ட கதையாயிற்று. பஞ்சாபியரின் பெரும்பான்மையோர் அத்தீர்ப்பை ஏற்கவில்லை. 1947-ஆம் ஆண்டு துவக்கத்திலிருந்தே பஞ்சாபில் நிலவி வந்த இன ஒற்றுமை குலையத் துவங்கியது. முஸ்லீம் லீக் “இன வெறியர்கள்” பஞ்சாப் முஸ்லீம்களை இரகசியமாகச் சந்தித்து அவர்களது உள்ளங்களில் இனவாத நச்சு விதைகளை விதைத்து வந்தனர், இன வெறுப்பைத் தூண்டியும் விட்டனர்.

இந்தியப் பிரிவினை நடைமுறைக்கு வருமுன்னரே பஞ்சாபில் இனக்கலவரம் எரிமலையாய் வெடித்தது. 1947 மார்ச் மாதம் சீக்கியத் தலைவர் ஒருவர் முஸ்லீம் லீக்கின் கொடிக் கம்பத்தை வெட்டிச் சாய்த்ததன் விளைவாக மூவாயிரம் இந்துக்கள் - பெரும்பாலும் சீக்கியர்கள் - கொன்று குவிக்கப்பட்டனர். திட்டமிட்டக் கிளர்ச்சிகளும் ஆர்ப்பாட்டங்களும் பஞ்சாப்பை இனமோதல் படுகளமாக்கியது. பத்தாண்டுகளுக்கும் மேலாகப் பஞ்சாப்பை ஆட்சி செய்து வந்த கூட்டணி அரசாங்கம் (Coalition Government) பதவி விலகியது. பஞ்சாப் ஆளுநர் சர் இவான் ஜென்கின்ஸ் (Sir Evan Jenkins) நிர்வாகப் பொறுப்பேற்றுக்கொண்டார்.

மார்ச் மாதம் படுகொலையால் பாதிக்கப்பட்டச் சீக்கியர்கள் பழிக்குப் பழி வாங்கக் காத்திருந்தனர். இந்தியா சுதந்திரம் பெற்றபோது மேற்கு பஞ்சாபிலிருந்த இந்து - சீக்கியர்களையும், கிழக்கு பஞ்சாபிலிருந்து முஸ்லீம்களையும் விரட்டும் முயற்சியைச் சமூக விரோத சக்திகளும் மேற்கொண்டது. லாகூரில் இந்து-சீக்கியர்களின் வீடுகளை தீக்கரையாக்கியும், சொத்துக்கள் சூறையாடப்பட்டும், கிடங்குகளில் அடைக்கப்பட்டு ஆண்கள் முஸ்லீம் காவல் படையினரால் சுட்டுக் கொல்லப்பட்டும். பெண்கள் மானபங்கபடுத்தப்பட்டும் கொடுமைகள் நடந்தேறின. அதேபோன்று அமிர்தசரசில் முஸ்லீம்களின் வீடுகள் தரைமட்டமாக்கப்பட்டன, வயல்கள் நாசமாக்கப்பட்டன, வாய்க்கால்கள் பிணங்களால் நிறைந்தன. தற்காப்புக்காக லாகூரிலும் அமிர்தசரசிலும் முஸ்லீம்கள் சீக்கியர்களையும், சீக்கியர்கள் முஸ்லீம்களையும் கொன்றுக் குவித்தனர். இம்மனித மிருகத்தாக்குதலிலிருந்து எந்த ஒரு

நகரமும், கிராமமும், தெருவும் தப்பவில்லை. பஞ்சாபில் நிர்வாகம் முற்றிலும் சீர்குலைந்துப் போயிற்று. அமிர்தசரஸ் இனக்கொலைக்குப் பதிலாக லாகூரிலிருந்து அமிர்தசரஸ் சென்ற டென்-டவுன் எக்ஸ்பிரஸில் பயணம் செய்த சீக்கிய அகதிகள் அனைவரையும் கொன்றுப் பிணமாக அனுப்பி வைத்தனர்.



குறிப்பு

## 1.3.8. வங்காள இனக்கலவரங்கள் (Bengal Communal Riots)

இந்தியப் பிரிவினை மீண்டும் வங்காளத்தில் இனக்கலவரத்தைத் தூண்டிவிட்டது. 1946 ஆகஸ்ட் 16-ம் தேதி முஸ்லீம் லீக் கட்டவிழ்த்து விட்ட நேரடி நடவடிக்கை நாளன்று பாதிக்கப்பட்ட மோசமான பகுதிகளில் ஒன்று நவகாளி. நவகாளி கங்கை - பிரம்மபுத்திரா சதுப்பு நிலப்பகுதியில் உள்ள ஸ்ரீராம்பூரில் இருக்கிறது. நாற்பது சதுர மைல் பரப்பளவேயுடைய நவகாளியில் வாழ்ந்த இரண்டரை மில்லியன் மக்களில் எண்பது விழுக்காட்டினர் முஸ்லீம்கள். மகாத்மா காந்தி நவகாளி சென்று, அசாதாரணத் துணிவுடன் சென்று கலவரத்தை அடக்கும் பணியில் ஈடுபட்டார். அச்செயலை உலகே வியந்துப் பாராட்டியது. நாட்டுப் பிரிவினையையொட்டி வெடித்த கல்கத்தா இனக் கலவரத்தை அடக்க எந்த எல்லைப் படையும் அனுப்பப்படவில்லை. மாறாக, மகாத்மா காந்தி தனி மனித எல்லைப் படையாக (One Man Boundary Force) இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார் வைசிராய் மௌண்ட்பேட்டன் பிரபு.

மகாத்மா காந்தி வைசிராயின் வேண்டுகோளை ஏற்று இந்தியா சுதந்திரம் பெறுவதற்கு முப்பத்தியாறு மணி நேரத்துக்கு முன்னால் நவகாளி சோடேபூர் ஆசிரமத்தை விட்டுப் புறப்பட்டு பத்து மைல்களுக்கப்பால் இருந்த கல்கத்தாவுக்குச் சென்றார். கல்கத்தா முஸ்லீம்களின் தனிப்பெரும் தலைவராகத் திகழ்ந்த ஷாகீத் சூரவத்தியுடன் ஒரே காரில் கல்கத்தா வீதிகளுக்குச் சென்று இன ஒற்றுமையையும் அமைதியையும் நிலைநாட்டினார். 1947 ஆகஸ்ட் 14 ஆம் தேதி மாலை சரியாக ஐந்து மணிக்குப் பிரார்த்தனைக் கூட்டத்தில் பேசிய காந்தி நாளையிலிருந்து நாம் பிரிட்டிஷ் ஆட்சித் தலையிலிருந்து விடுபடுவோம். ஆனால் இன்றிரவு இந்தியா இரு கூறுகளாகப் பிரிக்கப்படும். நாளை இன்பகரமான நாள்; துக்ககரமான நாளும் கூட.

குறிப்பு

55,000 படை வீரர்களைக் கொண்ட பஞ்சாப் எல்லைப் படை செய்ய முடியாத அதிசயத்தை காந்தி என்ற தனிமனிதன் நிகழ்த்திக் காட்டியுள்ளார்.

## 1.3.9. குடியேற்றம் (Migration)

1947-ஆம் ஆண்டு மார்ச் மாதத்திலிருந்தே இனக் கலவரங்களின் விளைவாக மேற்கு பஞ்சாபிலிருந்து சீக்கியர்களும் இந்துக்களும் குடிப்பெயர்ந்து இந்தியாவுக்கு வரத் துவங்கினர். ஆகஸ்ட் 14 ஆம் தேதி லாகூரில் இனக்கலவர பூகம்பம் வெடித்தது. அதன் எதிரொலி அமிர்தசரசிலும் கேட்டது. ஒரு நாளைக்கு ஐந்திலிருந்து ஆறு மில்லியன் சீக்கியர்களும் இந்துக்களும் மேற்குப் பஞ்சாபிலிருந்து இந்தியாவுக்கும், அதே எண்ணிக்கையில் முஸ்லீம்கள் கிழக்குப் பஞ்சாபிலிருந்து பாகிஸ்தானுக்கும் அகதிகளாகச் சென்றனர். முன்னுதாரணமற்ற இக்குடியேற்றத்தின் போது பல்லாயிரக்கணக்கானோர் காட்டுமிராண்டித் தனமான தாக்குதல்களால் உயிரிழந்தனர். பிரிவினையின்போது பாகிஸ்தானிலிருந்து சுமார் 60 லட்சம் அகதிகள் இந்தியாவுக்கு ஓடிவந்தார்கள். இந்தியாவிலும் பாகிஸ்தானிலும் சிறுபான்மையினர் வன்முறைக்கு ஆளானார்கள். சில மாதங்களில் சுமார் ஐந்து லட்சம் மக்கள் கொல்லப்பட்டார்கள். கோடிக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள உடைமைகள் கொள்ளையடிக்கப்பட்டன. டில்லியில் கூட முஸ்லிம்கள் கொல்லப்பட்டு அவர்களுடைய உடைமைகள் அழிக்கப்பட்டன.

இந்திய நாடு முழுவதிலும் வகுப்புக் கலவரங்கள் வெடிக்கும் என்ற பேரச்சம் ஏற்பட்டது. ஆனால் தேசியத் தலைவர்களுடைய அரசியல் மற்றும் நிர்வாக நடவடிக்கைகள் மூலம் நிலைமையைக் கட்டுக்குள் கொண்டுவரப்பட்டது. அரசாங்கம் முஸ்லீம் சிறுபான்மையினருடைய உயிர் மற்றும் உடைமைகளைப் பாதுகாத்தது. அதன் விளைவாக நாலரைக் கோடி முஸ்லிம்கள் இந்தியாவில் இருக்க முடிவு செய்தார்கள்.

மதக்கலவரங்களை ஒடுக்கிவிட்டோம். வகுப்பு வாதத்தை விரட்ட வேண்டும். அவற்றை எதிர்த்துத் தொடர்ச்சியாகப் போராட வேண்டும் என்றும் நேரு வலியுறுத்தினார். “வகுப்புவாதம் இந்தியாவை உடைத்துவிடும்” என்றும், வகுப்புவாதம் என்பது “பாசிசத்தின் இந்திய

**குறிப்பு**

வடிவம்" என்றும் நேரு கருதினார். "முஸ்லீம் லீக் ஜெர்மனியின் நாஜிக் கட்சியினரிடமிருந்து பாசிசத்தைக் கற்றுக் கொண்டது. பாசிச ஸ்தாபன முறைகள் இந்துக்களிடம் பரவிக் கொண்டிருக்கின்றன. இந்து அரசை அமைப்போம் என்ற கோஷம் அதன் பிரதிபலிப்பேயாகும்" என்றார் நேரு. நேரு வகுப்புவாதத்தை வன்மையாகக் கண்டித்தார். "மதச்சார்பு இல்லாத அரசு ஒன்றே நாகரிகமான அரசு" என்று அவர் கூறினார். "எங்காவது ஒரு நபர் மற்றொருவரைக் கொல்வதற்குத்தன் கரத்தை உயர்த்தினால் நான் அவனை எதிர்த்துக் கடைசி மூச்சு உள்ளவரைப் போராடுவேன்" என்று 1951இல் நேரு டில்லியில் காந்தி ஜெயந்தியின் போது பேசினார். அவர் ஜனநாயகவாதி என்றாலும் மதத்தை அடிப்படையாகக்கொண்ட அரசியல் ஸ்தாபனங்களைத் தடை செய்தார். வகுப்புவாதத்தை வளர்க்கின்ற பேச்சையும் எழுத்தையும் கட்டுப்படுத்துவதற்காக அரசியலமைப்புச் சட்டத்தில் திருத்தங்களைக் கொண்டுவந்தார். அதற்கு சர்தார் படேல் அவருடன் ஒத்துழைத்தார். "இது மதச்சார்பற்ற அரசாங்கம். இந்தியாவின் குடிமகன் என்ற முறையில் முஸ்லிம்களுக்கு சமஉரிமை தரப்படுகிறது. இந்த நாட்டின் மகத்தான பாரம்பரியம் இது" என்று படேல் 1949-பிப்ரவரியில் பேசினார்.

வகுப்புவாதம் இந்தியாவில் வெறுப்புணர்ச்சியை ஏற்படுத்தியதன் விளைவாக காந்திஜி 30.1.1948-இல் படுகொலைச் செய்யப்பட்டார். நாட்டில் ஏற்பட்ட மதக்கலவரங்கள் காந்திஜியை வேதனைப்படுத்தின. 1947 ஆகஸ்டு மாதம் நாடு சுதந்திரத்தைக் கொண்டாடியபொழுது, காந்தி நவகாளி (வங்காளம்) என்ற இடத்தில் மதகலவரங்களை கட்டுப்படுத்தக் கூடிய வேலையில் ஈடுபட்டுயிருந்தார். 1947-இல் பிறந்த நாள் வாழ்த்துக்கூற வந்தவர்களிடம் "நான் இனிமேல் வாழ விரும்பவில்லை. இங்கு மனிதன் காட்டுமிராண்டியாக மாறிக்கொண்டிருக்கிறான். அவன் இந்துவாக அல்லது முஸ்லிமாக அல்லது வேறு எந்தப் பெயரில் இருந்தாலென்ன?" என்று வேதனையோடு பேசினார்.

நாதுராம் கோட்சே என்ற இந்து மதவெறியன் ஜனவரி 30-ஆம் நாளன்று மாலையில் காந்திஜியைச் சுட்டுக்கொன்றான். இந்தியாவிலும் உலகத்திலும் மக்களும் அரசியல் தலைவர்களும் காந்தியின் இறப்பைக் கேட்டு அதிர்ச்சியடைந்தார்கள்.

## 1.3.10. அகதிகளுக்குப் புனரமைப்பு (Rehabilitation of Refugees)

குறிப்பு

மேற்கு பாகிஸ்தானில் உள்ள மக்கள் உடைமைகளைப் போட்டு விட்டு இந்தியாவுக்கு ஓடிவந்த 60 லட்சம் அகதிகளாகக் குடியமர்த்தப்பட்டார்கள். 1951-க்குள் அந்தப் பிரச்சினை முழுமையாகத் தீர்க்கப்பட்டது. கிழக்கு வங்காளத்திலிருந்து இந்துக்கள் தொடர்ச்சியாக வந்துக் கொண்டிருந்ததால் அகதிகளின் பிரச்சினையத் தீர்க்கப்படாமல் நீடித்தது. மேற்கு பஞ்சாபிலிருந்து வந்த அகதிகளில் பெரும் பகுதியினர் பஞ்சாப், உ.பி., ராஜஸ்தான் ஆகிய மாகாணங்களில் குடியமர்த்தப்பட்டார்கள். பஞ்சாபி மற்றும் சிந்து அகதிகளை இன்றைய இமாசலப் பிரதேசம் மற்றும் ஹரியானாவில் குடியமர்த்த அவர்கள் பேசிய மொழி உதவி செய்தது. ஆனால் கிழக்கு வங்காளத்திலிருந்து ஓடி வந்த அகதிகளை பிரதானமாக வங்காளம், ஓரளவுக்கு அஸ்ஸாம், திரிபுரா ஆகிய மாநிலங்களில்தான் குடியமர்த்த முடியும். ஏற்கெனவே விவசாயிகளாக இருந்த அகதிகள் தற்பொழுது நகரங்களில் கூலி வேலைகளில் ஈடுபட்டார்கள்.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. இந்தியாவில் வகுப்புவாதப் படுகொலை எப்பொழுது வெடித்தது?
2. பிரிவினையின் போது இந்தியாவின் கவர்னர் ஜெனரல் யார்?
3. வகுப்புவாதப் படுகொலைகளால் கடுமையாகப் பாதிக்கப்பட்ட மாநிலங்கள் எது?
4. இந்தியச் சுதந்திர மசோதா பிரிட்டிஷ் பாராளுமன்றத்தால் எப்போது நிறைவேற்றப்பட்டது?

## 1.4. சமஸ்தானங்களின் நிலை

நாடு சுதந்திரமடைந்தபொழுது சமஸ்தானங்களின் நிலை என்ன என்ற கேள்வி எழுந்தது. பெரிய சமஸ்தானங்கள் சுதந்திரமான அரசுகளாக இருக்க விரும்பின. பிரிட்டிஷ் அரசருடைய பாரமவுன்ட் அதிகாரம் முடிந்ததும் சமஸ்தானங்கள் விருப்பப்படி நடந்துகொள்ளலாம் என்று பிரிட்டிஷ் பிரதமர் அட்லி 20.2.1947-இல் அறிவித்தார். ஆகவே 15.8.1947-க்குப் பிறகு நாங்கள் சுதந்திரமான அரசுகளாக இருப்போம்

**குறிப்பு**

என்று சில சமஸ்தானங்களின் அரசர்கள் அறிவித்தார்கள். சமஸ்தானங்களில் அரசர்களுடைய சர்வாதிகாரத்தை எதிர்த்து மக்கள் போராடினார்கள். சர்தார் படேல் தன்னுடைய முழுத் திறமையைப் பயன்படுத்தி நூற்றுக்கணக்கான சமஸ்தானங்களை இந்தியாவுடன் இணையும்படி செய்தார். சில சமஸ்தானங்கள் அரசியல் நிர்ணைய சபைக்குத் தமது பிரதிநிதிகளை அனுப்பி வைத்தன.

27.6.1947இல் சர்தார் படேல் புதிதாக உருவாக்கப்பட்ட சமஸ்தான இலாகாவின் அமைச்சராகப் பெறுப்பேற்றார். வி.பி.மேனன் இலாகாவின் செயலாளராக இருந்தார். "ஆபத்தான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. நாம் உடனே சரியான நடவடிக்கை எடுக்காவிட்டால், தியாகங்களைச் செய்து பெற்ற சுதந்திரம் சமஸ்தானம் என்ற கதவின் வழியாக வெளியேறிவிடும்" என்று படேல் வி.பி. மேனனிடம் கூறினார். இந்திய யூனியன் பிரதேசத்திற்குள் உள்ள சமஸ்தானங்கள் உடனடியாக மூன்று விஷயங்களில் (அந்நிய உறவுகள், தற்காப்பு மற்றும் செய்தித் தொடர்பு) இந்திய யூனியனுடன் இணைந்து கொள்ளவேண்டும்.

## 1.4.1. சமஸ்தானங்கள் இணைவு

மன்னர் மாநிலங்களை சட்டப்படி இந்தியாவுடன் சேர்ப்பதில் சில சிக்கல்கள் இருந்தன. ஏனெனில் மன்னர்கள் தங்களது தனித்தன்மையையும், சலுகைகளையும் சுயாட்சியையும் நிலைநிறுத்திக் கொள்ள விரும்பினர். எனவே, அவர்களுக்குச் சட்ட நிலைமையை எடுத்துக் கூறுவதற்காக கவர்னர் ஜெனரல் மௌண்ட்பேட்டன் பிரபு 1947 ஜூலை 25ஆம் தேதி இந்திய மன்னர்கள் மாநாடு ஒன்றைக் கூட்டினார். அம்மாநாட்டில் அவர் இந்தியாவில் பிரிட்டிஷ் மேலாதிக்கம் ஆகஸ்டு 15 ஆம் தேதியுடன் முடிவடைகிறது என்றும், அதற்குள் மன்னர்கள் தங்களது ஆள் நிலப் பகுதிகளை பூகோள நிலைமைக்கேற்றவாறு இந்தியாவுடனோ அல்லது பாகிஸ்தானுடனோ இணைத்துக் கொள்ளலாம் என்றும் அறிவித்தார். தனது செல்வாக்கைப் பயன்படுத்தி மன்னர்களின் எதிர்கால வாழ்வுக்கான ஏற்பாடுகளைச் செய்வதாகவும் உறுதியளித்தார். அதன் பின் சர்தார் வல்லபாய் பட்டேல் மன்னர்களுடன் கலந்து பேசி இணைப்பு உடன்பாடுகளுக்கு அவர்களது இசைவைப் பெற்றார். இந்தியாவுடன் இணையும் மன்னர்களுக்குப் பிரிட்டிஷ் அரசாங்கம்

அளித்து வந்த ஆதரவையும், சலுகைகளையும் நீடிப்பதாக உத்திரவாதமளித்தார். அந்த உத்திரவாதத்தின் பேரில் 550 மன்னர்கள் தங்களது ஆட்சிப் பகுதிகளை இந்தியாவுடன் சட்டப்படி இணைப்பதற்கான இணைப்புப் பத்திரத்தில் (Instrument of Accession) கையொப்பமிட்டனர். ஆனால் ஜுனாகத், ஐதராபாத் மற்றும் காஷ்மீர் மன்னர்கள் மட்டும் அவ்வாறு இணைவதற்கு இணங்கவில்லை.

## 1.4.2. ஜுனகத் இணைப்பு (Accession of Junagadh)

ஜுனகத் பம்பாய்க்கு வடக்கே மேற்குக் கடற்கரைப் பகுதியில் உள்ளது. நவாபின் ஆட்சியின் கீழ் இருந்த அப்பகுதியின் 6,20,000 மக்கள் தொகையில் 80 விழுக்காட்டுக்கு மேல் இந்துக்கள். இந்துக்களை மிகப் பெரும்பான்மையினராகக் கொண்டிருந்த ஜுனகத்துக்கு முஸ்லீம் நவாப் மகாராஜாவாக இருந்தார். நவாப் ஒரு நாய்ப் பிரியர். மக்களை விட அவர் வளர்த்த நாய்கள் மீது அத்துமீறிய அன்பும் அக்கறையும் காட்டினார். அவரது அரண்மனையில் நாய்க்கென அனைத்து வசதிகளையும் கொண்ட தனி அறைகள் - ஒதுக்கப்பட்டன. அது மட்டுமல்ல ரோஷனாவுக்கும் பாபிக்கும் நடந்த திருமணத்துக்கு வைசிராய் முதல் இந்தியப் பிரமுகர்கள் அழைக்கப்பட்டனர். 1,50,000 பேர் கலந்து கொண்ட அந்த “நாய்த் திருமணம்” கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது.

ஜுனகத்துக்குப் பாகிஸ்தானுடன் எவ்வித பூகோளத் தொடர்பும் இல்லை. அப்பகுதி மக்கள் இந்தியாவுடன் சேர்வதையே விரும்பினர். எனினும் ஜுனகத் நவாப் இந்தியாவுடன் இணைவதை விரும்பவில்லை. மாறாக, ஜுனகத் பாகிஸ்தானுடன் 1947 ஆகஸ்டு 15 நாளில் இணைவதாகத் தன்னிச்சையாக அறிவித்தார். அந்த அறிவிப்பை எதிர்த்து மக்கள் கிளர்ச்சி செய்தனர். கிளர்ச்சியை எதிர்கொள்ள முடியாத நவாப் கராச்சிக்குத் தப்பிச் சென்றார். ஜுனகத் திவானாக இருந்த ஷா நவாஸ் புட்டோ ஜுனகத் நிர்வாகத்தை மேற்கொள்ளுமாறு இந்திய அரசாங்கத்துக்கு நவம்பர் 8 தேதி அன்று வேண்டுகோள் விடுத்தார். அவரது வேண்டுகோளுக்கிணங்க இந்திய அரசாங்கம் ஜுனகத் நிர்வாகத்துக்குப் பொறுப்பேற்றது. பின்னர் மக்கள் வாக்கெடுப்பு

(Plebicite)-க்குப் பின் ஜுனகத் இந்தியாவுடன் முறையாக 1948 பிப்ரவரி 20 தேதியில் இணைக்கப்பட்டது.

**குறிப்பு**

## 1.4.3. ஐதராபாத்

ஆந்திராவின் பகுதியான ஐதராபாத் இந்தியாவின் மையப் பாகத்தில் உள்ளது. இருபது மில்லியன் இந்துக்களையும், மூன்று மில்லியன் முஸ்லீம்களையும் கொண்ட ஐதராபாத்துக்கு 'பத்தேஜங்' என்ற முஸ்லீம் நிஜாமாக இருந்தார். ஐதராபாத் நிஜாம் 1947 ஆகஸ்டு 15-ஆம் தேதிக்குள் இந்தியாவுடனோ அல்லது பாகிஸ்தானுடனோ இணைய இசையவில்லை. இந்திய வைசிராய் மௌண்ட்பேட்டன் பிரபுவின் வற்புறுத்தலின் பேரில் இந்திய அரசாங்கம் நிஜாமுடன் ஓராண்டு கால நிலை ஒப்பந்தம் (Standstill Agreement) செய்து கொண்டது. அதற்குள் ஐதராபாத் இணைப்புப் பிரச்னைக்குத் திருப்திகரமான தீர்வு காண முடியும் என்று நம்பப்பட்டது. ஆனால் நிஜாம் அந்த நம்பிக்கையைப் பொய்யாக்கினார்.

ஐதராபாத் நிஜாம் ஓராண்டு கால நிலை ஒப்பந்தத்தைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு இராணுவத்தைப் பலப்படுத்தினார்; ஐரோப்பிய நாடுகளிலிருந்து போர்த் தளவாடங்களை வாங்கினார். சர் வால்டேர் மான்க்டன் (Sir Walter Monekton) என்ற ஆங்கிலேய சட்ட வல்லுநரின் ஆலோசனையைப் பெற்றார். இந்தியாவுடன் சமரசப் பேச்சுவார்த்தை நடத்திக் கொண்டு காலம் கடத்தினார். முடிந்தால் சுதந்திரமாக இருப்பது முடியாவிட்டால் பாகிஸ்தானுடன் இணைந்து விடுவது என்ற முடிவில் இருந்தார் நிஜாம். ஒப்பந்த விதிகளை மீறிக் கொண்டிருந்தார். அது மட்டுமல்ல, இந்தியா ஐதராபாத்தைத் தாக்கினால் பல்லாயிரக்கணக்கான பத்தானியர்கள் இந்தியாவின் மீது படையெடுப்பர் என்று 1948 ஏப்ரல் மாதத்தில் ஐதராபாத் வானொலி எச்சரித்தது.

## 1.4.4. ராஸாகார்கள்

இதற்கிடையில் ஐதராபாத் நிஜாமுக்கு ஆதரவாக "ராஸாகார்கள்" (Razakars) என்ற முஸ்லீம் தீவிரவாதிகள் பாகிஸ்தானின் துணையுடன் ஐதராபாத்தை ஒரு சுதந்திர முஸ்லீம் நாடாக்கி விட வேண்டும் என்று

முனைப்புடன் செயல்பட்டனர். இந்தியா ஐதராபாத்தைக் கைப்பற்ற முனைந்தால் இந்துக்களைக் கொன்று விடுவதாக ராஸாகார்களின் தலைவரான காசிம் ராஸ்வி (Kasim Razvi) அச்சுறுத்தினார். 1948 மார்ச் 31 ஆம் தேதியன்று போர் ஆயுத-வாரத்தைத் (Ams-Week) துவக்கினார். ஐதராபாத் முஸ்லீம்களை இந்தியாவின் மீது படையெடுத்துச் செல்லுமாறு தூண்டிவிட்டார். ஐதராபாத்தில் சட்டம் ஒழுங்கு சீர்குலைந்து, ராஸாகார்கள் ஐதராபாத் வழியாக பம்பாயிலிருந்து சென்னைக்குச் சென்று கொண்டிருந்த புகை வண்டியை வழி நிறுத்தித் தாக்கினர். ஐதராபாத்தில் பயங்கர ஆட்சி (Reign of Terror) கட்டவிழ்த்து விடப்பட்டது. பல இந்துக்கள் கொல்லப்பட்டனர். ஆயிரக்கணக்கானோர் சிறையிலடைக்கப்பட்டனர்.

ஐதராபாத் இணைப்புப் பிரச்னைக்கு சமாதானத் தீர்வு காண விரும்பினார் நேரு. சமரசப் பேச்சுவார்த்தையாலும், பொருளாதாரத் தடையாலும், அச்சுறுத்தலாலும் நிஜாமை வழிக்குக் கொண்டு வர முயன்றார். ஆனால் நிஜாம் நேருவின் 'நில் - கவனி' (Wait and Watch) போக்கைத் தனக்குச் சாதகமாக்கிக் கொண்டு இந்திய விரோத நடவடிக்கைகளில் ஈடுபடலானார். கராச்சியிலிருந்து போர்த் தளவாடங்களைப் பெற்றார். கிழக்கு வங்காளத்திலும், மேற்கு பாகிஸ்தானிலும் ஈராக் மற்றும் ஈரானிலும் இந்தியாவுக்கு எதிராகப் பயன்படுத்த விமானப் படையைத் தயார் நிலையில் வைத்திருந்தார். ஐதராபாத்தை சுதந்திரப் பகுதியாக அங்கீகரிக்க வேண்டுமென்று பிரிட்டனை வற்புறுத்தி வந்தார். இந்தியாவுக்கு எதிராகக் கோவாவைப் பயன்படுத்திக் கொள்ள போர்ச்சுகலுடன் உடன்படிக்கைச் செய்து கொண்டதாகவும் எஸ்.கோபால் கூறுகிறார்.

### 1.4.5. இராணுவ நடவடிக்கை (Operation Polo)

1948 ஜுன் மாதம் மௌண்ட்பேட்டன் இந்தியாவை விட்டுச் சென்ற பின்னரும் கூட நேரு ஐதராபாத் இணைப்புக்கு சமாதானத் தீர்வையே விரும்பினார். ஆனால் சர்தார் வல்லபாய் பட்டேல் இராணுவத்தின் துணைக்கொண்டு இப்பிரச்சனைக்கு முடிவுக்குக் கொண்டு வர விரும்பினார். சுதந்திர இந்தியாவில் ஐதராபாத் தனித்தீவாக இருப்பது இந்திய உடலில் குத்திய முள்ளாக இருக்கும் என்று எண்ணினார்.

எனவே, இரத்தம் சிந்தியாவது இந்தியாவின் ஒற்றுமையைக் காப்பாற்றத் துணிந்தார். 1948 செப்டம்பர் 13-ஆம் தேதி அன்று இந்திய இராணுவம் சட்டம் ஒழுங்கை நிலைநாட்ட ஐதராபாத்துக்குள் நுழைந்தது. இத்தகைய தாக்குதல் இராணுவ நடவடிக்கை (Operation Polo) என்று அழைக்கப்பட்டது. நிஜாமின் படை நான்கு நாட்களில் இந்தியாவிடம் சரணடைந்தது.

## 1.4.6. ஐதராபாத் இணைவு

ஐதராபாத் இந்தியாவுடன் இணைக்கப்பட்டது. "ஐதராபாத் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை இந்தியாவில் ஆரோக்கியமான தாக்கத்தை ஏற்படுத்தியது. இந்துக்கள் அச்சமின்றியும் முஸ்லீம்கள் பாதுகாப்பு உணர்வுடனும் வாழ்வதற்கான சூழ்நிலை ஏற்பட்டது. இந்த நெருக்கடியின் போது இந்தியாவின் பிற பகுதிகளில் வாழ்ந்த முஸ்லீம்கள் தங்களது நினைப்பாலும் நடத்தையாலும் இந்தியாவின் முழுமையான குடிமக்கள் என்பதைத் தெளிவுபடுத்தினர். சமயம் சாராமை இந்த இரண்டாவது சோதனையையும் வெற்றிகரமாகக் கடந்தது" என்று எஸ்.கோபால் மதிப்பீடு செய்துள்ளார்.

## 1.4.7. காஷ்மீர் இணைவு (Accession of Kashmir)

ஜுனகத், ஐதராபாத் போலன்றி இந்தியாவுடன் காஷ்மீர் இணைந்தது சிக்கலானது; சிக்கலாக்கப்பட்டது. ஜம்மு-காஷ்மீர் பகுதி எழில்மிகு இமாலயப் பள்ளத்தாக்கு "கிழக்கு உலகின் வெனிஸ்" (Venice of Orient) என்று வர்ணிக்கப்பட்டது. 85,000 சதுரமைல் பரப்புள்ள இப்பகுதி இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடைப்பட்ட இராணுவ முக்கியத்துவம் வாய்ந்த இடமாகும். இந்தியப் பிரிவினையின் போது ஜம்மு-காஷ்மீரின் மக்கள் தொகை நான்கு மில்லியன். அவர்களுள் நான்கில் மூன்று பகுதியினர் முஸ்லீம்கள். இந்துக்கள் பெரும்பான்மையினராக இருந்த ஜுனகத்தையும், ஐதராபாத்தையும் முஸ்லீம் நவாபும், நிஜாமும் ஆட்சி செய்ததைப் போன்று முஸ்லீம்களைப் பெரும்பான்மையினராகக் கொண்ட ஜம்மு - காஷ்மீரை

குறிப்பு

இந்து அரசர் ஹரி சிங் (Hari Singh) ஆட்சி செய்து வந்தார். ஹரி சிங் தோக்ரா ராஜபுத்திர வகுப்பைச் சேர்ந்தவர். அவர் பிராமணப் பண்டிதர்களை அரசாங்க ஊழியர்களாக வைத்துக் கொண்டு ஜம்முகாஷ்மீரை ஆண்டு வந்தார்.

பிரிட்டிஷ் அரசாங்கம் அதிகார மாற்றத்தை அறிவித்தப் போது ஹரிசிங் ஜம்மு-காஷ்மீரை இந்தியாவுடனோ அல்லது பாகிஸ்தானுடனோ இணைக்க விரும்பவில்லை. அவர் ஆட்சி செய்த மாகாணம் "ஆசியாவின் சுவிட்சர்லாந்தாகவே" சுதந்திரமாக இருக்க வேண்டும் என்று ஆசைப்பட்டார். காந்தியும் நேருவும் மகாராஜா ஹரி சிங்குக்கு 1947 ஆகஸ்டு 15-ஆம் தேதிக்குள் இந்தியாவுடன் இணைந்து விடுமாறு ஆலோசனையைக் கூறினார்கள். ஆனால் வைசிராய் மௌன்ட்பேட்டன் பிரபு ஹரிசிங் இந்தியாவுடனோ அல்லது பாகிஸ்தானுடனோ அவர் விருப்பம் போல் சேரலாம் என்று கூறினார். காஷ்மீர் மகாராஜா இருதலைக் கொள்ளி எறும்பானார். முடிவெடுக்க முடியாமல் குழம்பினார். இக்குழப்பத்திலிருந்து விடுபட இரு நாடுகளுடனும் நிலை ஒப்பந்தம் (Standstill Agreement) செய்து கொள்ள விரும்பினார். இந்தியாவிடமிருந்து பதிலின்மையால் ஹரிசிங் பாகிஸ்தானுடன் நிலை ஒப்பந்தம் செய்து கொண்டார்.

## 1.4.8. பதான் ஊடுருவல்

மகாராஜாவின் மனக்குழப்பத்தைத் தனக்குச் சாதகமாக்கிக் கொண்ட பாகிஸ்தான் காஷ்மீரைக் கைப்பற்றத் துணிந்தது. மகாராஜா ஹரி சிங்கின் பலவீனத்தைப் பயன்படுத்திக் கொண்டு காஷ்மீரின் மேற்குக் கோடியில் இருந்த பூஞ்ச் (Poonch) பகுதியை முஸ்லீம் விவசாயிகள் தோக்ரா ராஜபுத்திர நிலச்சுவான்தாரர்களின் அடக்கு முறைக்கு எதிராகக் கிளர்ச்சிச் செய்தனர். பூஞ்ச் கிளர்ச்சிக்கு ஆதரவாக பாகிஸ்தானால் தூண்டிவிடப்பட்ட ஐயாயிரத்துக்கும் மேற்பட்ட மலைவாழ் மக்கள் (பத்தான்ஷ்) பாகிஸ்தானின் வடமேற்கு எல்லைப் புறத்திலிருந்து புறப்பட்டு வந்து காஷ்மீரைத் தாக்கினர். கார்கி (Gargi) மற்றும் டோமெல் (Domel) ஆகிய இரு காஷ்மீர் பகுதிகளைக் கைப்பற்றிக் கொண்டனர். அதன்பின் காஷ்மீரின் புகழ் பெற்ற நகரமான முஸ்பராபாத்

**குறிப்பு**

(Muzafarabad)-க்குள் நுழைந்து முகாமிட்டனர். அங்கிருந்து பாராமுலா (Baramula)-வைக் கைப்பற்றிக் கொண்டு யூரி (Uri) நோக்கி முன்னேறி ஸ்ரீநகரை அடையத் திட்டமிட்டனர். படையெடுப்பாளர்கள் முன்னேறிச் சென்று ஸ்ரீநகருக்கு மின்சாரம் கொடுத்து வந்த மகூரா மின் நிலையத்தைக் கைவசப்படுத்திக் கொண்டனர். காஷ்மீரின் கோடைகாலத் தலைநகரான ஸ்ரீநகர் இருளில் மூழ்கியது. ஸ்ரீநகர் நோக்கி முன்னேறிய பாகிஸ்தான் ஆக்கிரமிப்பாளர்கள் 1947 அக்டோபர் 26 ஆம் தேதி 'ஈத் பண்டிகை'யை ஸ்ரீநகரிலிருந்து கொண்டாடப்போவதாக அறிவித்தனர்.

இதற்கிடையே ஜம்மு-காஷ்மீர் மகாராஜா ஹரி சிங் ஸ்ரீநகரிலிருந்து தப்பிச் சென்று குளிர்காலத் தலைநகரான ஜம்முவை அடைந்தார். பூஞ்ச் கிளர்ச்சியை அவரைப் பதவியிலிருந்து இறக்குவதற்கான சதி என்று கருதினார். பாகிஸ்தான் படையெடுப்பாளர்களின் போக்கைக் கண்ட ஹரிசிங் புதுடெல்லியின் ஆதரவை நாடினார். ஷேக் அப்துல்லாவை நேருவிடம் பேச்சுவார்த்தை நடத்தப் புதுடெல்லிக்கு அனுப்பினார். 1947 அக்டோபர் 26 ஆம் தேதி ஜம்மு-காஷ்மீர் இந்தியாவுடன் இணைவதாகவும், ஸ்ரீநகரைக் காப்பாற்ற இராணுவ உதவி வேண்டும் என்று இந்திய அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டார்.

## 1.4.9. இந்தியாவுடன் இணைவு

1947 அக்டோபர் 24 ஆம் தேதி இரவு காஷ்மீர் படையெடுப்பு பற்றிய தகவல் இந்திய அரசாங்கத்துக்குக் கிடைத்தது. அடுத்த நாள் கூடிய பாதுகாப்புக் கமிட்டி (Defence Committee) இந்திய இராணுவத்தைக் காஷ்மீருக்கு அனுப்பத் தீர்மானித்தது. இதனிடையே 26 அக்டோபர் 1947-ம் ஆண்டு ஹரிசிங், காஷ்மீர் முறையாக இந்தியாவுடன் இணையும் ஒப்பந்தச் சாசனத்தில் கையெழுத்திட்டுக் காஷ்மீர் இந்தியாவின் ஒருங்கிணைந்தப் பகுதி என்பதை உருதிப்படுத்தினார்.

குறிப்பு

## 1.4.10. காஷ்மீரில் இந்திய இராணுவம்

ஜம்மு-காஷ்மீர் முறையாகச் சட்டப்படி இந்தியாவுடன் இணைந்ததற்கு அடுத்த நாளே (அக்டோபர்- 27) இந்தியத் துருப்புகள் ஆகாய விமானங்கள் மூலம் டெல்லியிலிருந்து ஸ்ரீ நகருக்கு அனுப்பப்பட்டது. சரியான சமயத்தில் காஷ்மீரின் தலைநகர் ஆக்கிரமிப்பாளர்களின் தாக்குதலினின்றும் காப்பாற்றப்பட்டது. பாகிஸ்தானின் படையெடுப்புத் திட்டம் தோற்கடிக்கப்பட்டது, படையெடுப்பாளர்கள் பின்வாங்கிச் சென்றனர்.

## 1.4.11. அஸாத் காஷ்மீர்

காஷ்மீருக்குச் சென்ற இந்தியப் படை ஆக்கிரமிப்பாளர்களை பின்வாங்கச் செய்தனரேயன்றி அவர்கள் கைப்பற்றிக் கொண்ட பகுதிகளை மீட்கவில்லை. படையெடுப்பாளர்கள் யூரி மற்றும் பூஞ்ச் பகுதிகளில் தங்களை நிலைப்படுத்திக் கொண்டனர். அவர்கள் கைப்பற்றிய பகுதிகளை அஸாத் காஷ்மீர் (Azad Kashmir) அதாவது சுதந்திர காஷ்மீர் என்றும், அதன் தலைநகர் முசபராபாத் என்றும், படையெடுப்பாளர்களே அஸாத் காஷ்மீரின் இராணுவம் என்றும் அறிவித்து அப்பகுதியைப் பாகிஸ்தானுடன் இணைத்து விட்டனர். ஷேக் அப்துல்லா எஞ்சிய ஜம்மு-காஷ்மீரின் முதல் பிரதமரானார்.

## 1.4.12. ஐ.நா.சபையில் காஷ்மீர் விவகாரம்

பிரதமர் நேரு ஆக்கிரமிப்பாளர்களைக் காஷ்மீர் பகுதிகளிலிருந்து அகற்ற வேண்டும். அதன் பின்னரே ஜம்மு-காஷ்மீரில் மக்கள் வாக்கெடுப்பு நடத்த வேண்டும் என்பதில் குறியாகவும் மற்றும் போரின்றி ஆக்கிரமிப்பாளர்களை அகற்ற வேண்டும் என்று விரும்பினார் பாகிஸ்தானுடன் போர் தொடுக்காமல் நேருவின் நோக்கத்தை நிறைவேற்றுவதற்கான நேர்வழி காஷ்மீர் ஆக்கிரமிப்பைப் பற்றி ஐக்கிய நாடுகள் சபையிடம் புகார் செய்வதே ஆகும் என்று கவர்னர் ஜெனரல் மௌண்ட்பேட்டன் பிரபு ஆலோசனையைக் கூறினார். அவரது ஆலோசனையின்படி பாகிஸ்தானின் காஷ்மீர் ஆக்கிரமிப்புப் பற்றி

ஐ.நாவிடம் புகார் செய்தார் பிரதமர் நேரு. நேரு, மௌண்ட்பேட்டன் காட்டிய வழியில் சென்றார். ஐ.நாவின் போர் நிறுத்த ஏற்பாடு 1948 ஜனவரி முதல் தேதியிலிருந்து ஜம்மு-காஷ்மீரில் நடைமுறைக்கு வந்தது. ஐ.நா. காஷ்மீர் விவகாரத்தை இந்தியா-பாகிஸ்தான் பிரச்னையாக மாற்றிவிட்டது. காஷ்மீர் விவகாரத்தை ஐநாவுக்குக் கொண்டு செல்ல மௌண்ட்பேட்டன் நேருவை சம்மதிக்கச் செய்தது அவப்பேராகும் என்று எஸ்.கோபால் குறிப்பிட்டுள்ளார். ஆனால் பாகிஸ்தான் அபகரித்துக் கொண்ட அசாத் காஷ்மீரிலிருந்து விலகவில்லை. காஷ்மீர் பிரச்னை இன்று வரை தீர்க்கப்படாமலேயே உள்ளது.

**குறிப்பு**

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

5. சுதேச அரசுகளை இந்தியாவில் ஒருங்கிணைப்பதற்கு யார் காரணம்?
6. காஷ்மீர் இந்தியாவுடன் இணைந்தபோது அதன் அரசராக இருந்தவர் யார்?
7. ஜூனகத்தில் பொது வாக்கெடுப்பு எப்போது நடத்தப்பட்டது?
8. ஆபரேஷன் போலோ எந்த சுதேச அரசுக்கு எதிராக மேற்கொள்ளப்பட்டது?

## 1.5. உங்கள் முன்னேற்றக் கேள்விகளைச் சரிபார்க்க விடைகள்

1. 1947-இல் இந்தியாவில் இனவாதப் படுகொலை வெடித்தது.
2. லார்ட் மவுண்ட்பேட்டன் பிரிவினை நேரத்தில் இந்தியாவின் கவர்னர் ஜெனரலாக இருந்தார்.
3. வகுப்புவாதப் படுகொலைகளால் பஞ்சாப், வங்கம் மற்றும் டெல்லி கடுமையாகப் பாதிக்கப்பட்டன.
4. இந்திய சுதந்திர மசோதா 1947 ஜூலை 18 அன்று பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்டது.
5. இந்திய சுதேச மாநிலங்களின் ஒருங்கிணைப்புக்கு சர்தார் படேல் பொறுப்பு.
6. மகாராஜா ஹரி சிங் இந்தியாவுடன் இணைந்தபோது காஷ்மீரின் ஆட்சியாளராக இருந்தார்.
7. பிப்ரவரி 1948.

8. ஹைதராபாத்.

குறிப்பு

## 1.6. அத்தியாயச் சுருக்கம்

- 3 ஜூன், 1947-இல் மவுண்ட்பேட்டன் திட்டம் அறிவிக்கப்பட்டது. இது பிரிவினை மற்றும் இந்தியச் சுதந்திரத்தை மையமாகக் கொண்டது.
- இந்தியச் சுதந்திரச் சட்டம் பிரிட்டிஷ் பாராளுமன்றத்தால் 18 ஜூலை 1947 இல் நிறைவேற்றப்பட்டது.
- வங்காளம் மற்றும் பஞ்சாப் மேற்கு மற்றும் கிழக்கு என இரண்டாகப் பிரிக்கப்பட்டன.
- பிளவுபட்ட பஞ்சாப் மற்றும் வங்காளத்தின் எல்லைகளை வரையறுக்க ஜூன் 1947-இல் ராட்க்ளி∴ப் தலைமையில் ஒரு எல்லை கமிஷன் அமைக்கப்பட்டது.
- 1947 சுதந்திரத்தின் போது,பிரிவினை மற்றும் அதனுடன் ஏற்பட்ட வன்முறை கிட்டத்தட்ட ஆறு மில்லியன் அகதிகள் இந்தியாவிலும் பாகிஸ்தானிலும் எல்லாவற்றையும் இழக்க வழிவகுத்தது. இந்தியா மற்றும் பாகிஸ்தானில் சிறுபான்மையினர் இனவாதப் படுகொலைக்குப் பலியாகினர். சுமார் லட்சக்கணக்கானோர் போரில் கொல்லப்பட்டனர் மற்றும் அவர்தம் சொத்துக்களையும் இழந்தனர்.
- பஞ்சாப், வங்காளம் மற்றும் டெல்லி இனவாத வன்முறையின் முக்கிய மையங்களாக மாறியது.
- வகுப்புவாதப் படுகொலையால் வெகுஜன இடம்பெயர்வுகள் ஏற்பட்டது. மில்லியன் கணக்கான மக்கள் இந்தியாவில் இருந்து பாகிஸ்தானுக்கும் பாகிஸ்தானிலிருந்து இந்தியாவிற்குக் குடிப்பெயர்ந்தனர்.
- நேரு வகுப்புவாத வன்முறைகளைக் கட்டுப்படுத்த நடவடிக்கை எடுத்தார்.
- சுதந்திரத்தின் போது,560 க்கும் மேற்பட்ட சுதேச மாநிலங்கள் இருந்தன.
- பிரிட்டிஷ் பாராமவுண்ட்ஸி அரசர்களை இந்தியா அல்லது பாகிஸ்தானுடன் சேர அல்லது சுதந்திரத்திரமாக இருக்க அனுமதித்தது.

**குறிப்பு**

- சர்தார் படேல் இந்திய மாநிலங்களை ஒருங்கிணைக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டார்.
- சுதேச அரசுகளை இந்திய ஒன்றியத்தில் இணைக்க ராஜதந்திரத்தின் மூலமாகவோ மற்றும் போரின் மூலமாகவோ இணைத்தார்.
- சுதந்திரத்தின் போது,காஷ்மீர், ஜுனகத் மற்றும் ஹைதராபாத் தவிர பெரும்பாலான சுதேச மாநிலங்கள் இந்தியாவுடன் இணைந்தன.
- காஷ்மீரின் ராஜா ஹரி சிங் அக்டோபர் 1947 இல் பாகிஸ்தான் ஆதரவுப் பெற்ற பதான் இனத்தவரின் ஊடுருவலைத் தொடர்ந்து இந்தியாவோடு இணையும் சாசனத்தில் கையெழுத்திட்டார்.
- காஷ்மீர் காரணமாக இந்தியாவிற்கும் பாகிஸ்தானுக்கும் இடையே ஒரு போர் வெடித்தது (1947-1948).
- ஜுனகத் மக்கள் இந்தியாவோடு இணைய விரும்பினர், அதன் நவாப் பாகிஸ்தானுடன் இணைய விரும்பினார். ஜீனாகத்தில் நடைப்பெற்றப் போராட்டத்தைத் தொடர்ந்து நவாப் பாகிஸ்தானுக்குத் தப்பி ஓடினார். அங்கு கருத்துக் கணிப்பு வாக்கெடுப்பு நடைப்பெற்றது. அதில் மக்கள் இந்தியாவோடு இணைவதை உறுதிப்படுத்தின. எனவே, ஜுனகத் இந்தியாவுடன் இணைந்தது.
- ஹைதராபாத் நிஜாம் தனது சுதந்திரத்தை அறிவித்தார். இருப்பினும், அவர் பாகிஸ்தானுடன் ஒரு ரகசியக் கூட்டணியைப் பராமரித்தார்.
- நிஜாமுடன் படேலின் பேச்சுவார்த்தைகள் தோல்வியடைந்தபோது ஆபரேஷன் போலோ மேற்கொள்ளப்பட்டது. இறுதியாக, ஹைதராபாத் இந்தியாவுடன் இணைந்தது.

## 1.7. முக்கியச் சொற்கள்

**பிரிட்டிஷ் பாராமவுண்ட்ஸி:** பாரமவுண்ட் என்பது அதிகார வரம்புக்கு 'மிக உயர்ந்த அதிகாரம் கொண்டவர்' என்று பொருள். இந்தியாவில் உள்ள பிரிட்டிஷ் முக்கியத்துவம், இந்திய பூர்வீக மாநிலங்களின் மீது உச்ச

அதிகாரம் அல்லது அதிகார வரம்பைப் பயன்படுத்தி ஆங்கிலேயர்கள் இந்தியாவில் அதிகாரத்தை நிலைநாட்டியுள்ளனர் என்பதை வெளிப்படையாகக் குறிக்கிறது.

**மவுண்ட்பேட்டன் திட்டம்:** பிரிவினை மற்றும் சுதந்திரம் தொடர்பாக மவுண்ட்பேட்டன் தனது திட்டத்தை 1947-இல் அறிவித்தார். கிழக்கு வங்கம், மேற்கு பஞ்சாப், சிந்து மாகாணம், பலுசிஸ்தான், சில்ஹெட் (அசாம்) மற்றும் வடகிழக்கு எல்லைபுறப் பகுதிகள் (NWFP) ஆகியவை பாகிஸ்தானாக இருக்க வேண்டும் என்று திட்டம் பரிந்துரைத்தது. மீதமுள்ள பிரதேசங்கள் இந்தியா என்று அழைக்கப்படும்.

**இந்தியச் சுதந்திரச் சட்டம்:** இந்தியச் சுதந்திர மசோதா 1947-ஜுலை 4 அன்று பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தில் அறிமுகப்படுத்தப்பட்டது. இது 1947 ஜுலை 18 அன்று நிறைவேற்றப்பட்டது, ஆகஸ்ட் 15, 1947 முதல் இந்தியா மற்றும் பாகிஸ்தானின் இரண்டு சுயாதீன நாடுகளை அமைப்பதற்கு வழங்கப்பட்டது.

**வகுப்புவாதப் படுகொலை:** இது சிறுபான்மையினருக்கு எதிரான மத வன்முறையைக் குறிக்கிறது. இந்தியாவில், 1946 மற்றும் 1948-ஆண்டு இடையில், வகுப்புவாத வன்முறை காரணமாக ஏராளமான மக்கள் கொல்லப்பட்டனர். மேலும், பல்லாயிரக்கணக்கான மக்கள் இந்தியாவில் இருந்து பாகிஸ்தானுக்கு பாகிஸ்தானிலிருந்து இந்தியாவிற்கும் குடிப்பெயர்ந்தனர்

**அகதிகள்:** போர், துன்புறுத்தல் அல்லது இயற்கைப் பேரழிவில் இருந்து தப்பிக்க தங்கள் நாட்டை விட்டு வெளியேற வேண்டியக் கட்டாயம் ஏற்பட்ட மக்கள் அகதிகள் என்று அழைக்கப்படுகிறார்கள் . இந்தியாவின் சுதந்திரத்தின் போது,மில்லியன் கணக்கானவர்கள் வீடற்றவர்களாக இருந்தனர் மற்றும் அகதி முகாம்களில் தஞ்சம் கோரினர்.

**பதான் பழங்குடியினர்:** பஷ்டுன் பழங்குடியினர், அல்லது ஆப்கானிய பழங்குடியினர், பஷ்டுன் மக்களின் பழங்குடியினர், பாஷ்டோ மொழியைப் பயன்படுத்தி பஷ்டுன்வாலி நடத்தை நெறியைப் பின்பற்றும் ஒரு பெரிய கிழக்கு ஈரானிய இனக்குழு. அவர்கள் முதன்மையாக ஆப்கானிஸ்தான் மற்றும் பாகிஸ்தானில் காணப்படுகின்றன. பாகிஸ்தான் இராணுவத்தின் உதவியுடன், அவர்கள் அக்டோபர் 1947 இல் காஷ்மீருக்குள் ஊடுறுவினர்.

**ஆபரேஷன் போலோ:** ஹைதராபாத் அரசுக்கு எதிராக செப்டம்பர் 1948 இல் ஹைதராபாத் 'போலிஸ் நடவடிக்கை' என்பதன் குறியீட்டு பெயராக ஆபரேஷன் போலோ இருந்தது. இது ஒரு இராணுவ நடவடிக்கையாகும், அதில் இந்திய ஆயுதப்படைகள் நிஜாம் ஆட்சிச் செய்த சுதேச அரசை ஆக்கிரமித்து. அதை இந்திய ஒன்றியத்தில் இணைத்தன.

நவாப்: இந்தியாவில் நவாப் என்றால் கவர்னர் என்று பொருள். நவாப்களுக்கு முகலாயர்களிடமிருந்து சுயாட்சி கிடைத்தது.

## 1.8. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

**குறுகிய வினாக்கள்**

1. மவுண்ட்பேட்டன் திட்டத்தைக் குறிப்பிடுக.
2. இந்தியச் சுதந்திர மசோதா குறித்து எழுதுக.
3. ஆபரேஷன் போலோவைப் பற்றி ஒரு சிறு குறிப்பை வரையறு.
4. ஜுனகத்தில் நடத்தப்பட்டப் பொது வாக்கெடுப்பு பற்றி கூறுக.

**விரிவான வினாக்கள்**

1. இந்தியாவில் 1947 ஆம் ஆண்டு இனவாத படுகொலை குறித்து ஒரு கட்டுரை எழுதுக.
2. இந்திய மாநிலங்களை ஒருங்கிணைப்பதில் சர்தார் வல்லபாய் படேலின் பங்கைக் குறித்துப் பகுப்பாய்வுச் செய்க?
3. காஷ்மீர் பிரச்சனை 1947-1948 இந்தோ-பாக் போருக்கு வழிவகுத்தது என்பதை விவரி?

## 1.9. கூடுதல் வாசிப்புகள்

Ananth V. Krishna. 2011. *India since Independence: Making Sense of Indian Politics.* New Delhi: Pearson.

பிபன் சந்திரா, மிருதுலா முகர்ஜி, ஆதித்யா முகர்ஜி. 2015.*சுதந்திரத்திற்குப் பிறகு இந்தியா*, சென்னை: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.

Grover B.L, and Grover S. 2007. *A New Look at Modern Indian History*. New Delhi: S. Chand & Company.

வெங்கடேசன்.க. 2012. *சமகால இந்திய வரலாறு 1947-2012*, ராஜபாளையம்: வி.சி.பப்ளிகேஷன்ஸ்.

Shasi Tharoor. 2006. *India from Midnight to the Millennium and Beyond*. Arcade Publishing: New York.

Sumit Sarkar. 2014. *ModernIndia1885-1947*, Delhi: Pearson.

## அலகு-2:

## இந்திய அரசியலமைப்பின் சிறப்புக் கூறுகள்- இந்தியாவின் வெளியுறவுக் கொள்கை- இந்தியாவில் மொழிவாரி மாநிலங்கள் அமைத்தல்

**பாட அமைப்பு**

2.1. முன்னுரை
2.2. நோக்கங்கள்
2.3. அரசியலமைப்பின் வரலாற்றுப் பின்னணி
    2.3.1. இந்திய கவுன்சில் சட்டத்தின் முக்கிய அம்சங்கள், 1861
    2.3.2.இந்திய கவுன்சில் சட்டம், 1892
    2.3.3. இந்திய கவுன்சில் சட்டம், 1909 (மிண்டோ-மார்லி சட்டம்)
    2.3.4. இந்திய அரசுச் சட்டம், 1919 (மான்டேகு-சேம்ஸ்ஃபோர்ட் சட்டம்)
    2.3.5. இந்திய அரசுச் சட்டம் 1935
        2.3.5.1. சைமன் கமிஷன், 1927-30
        2.3.5.2. நேரு அறிக்கை, 1928
        2.3.5.3. நேரு அறிக்கையின் முக்கிய அம்சங்கள்
        2.3.5.4. வட்ட மேசை மாநாடுகள், 1930-32
        2.3.5.5. சட்டத்தின் முக்கிய அம்சங்கள், 1935
2.4. அரசியலமைப்புச் சட்டமன்றக் கோரிக்கை
    2.4.1. அரசியலமைப்புச் சட்டமன்றம்
    2.4.2. வரைவுக் குழு

2.4.3. சட்ட முன்வரைவு
2.4.4. இந்திய அரசியல் நிர்ணய சபையை உருவாக்குதல்
2.4.5. அரசியல் அமைப்பு உருவாக்கம்
2.5. இந்திய அரசியல் அமைப்பின் சிறப்பியல்புகள்
2.5.1. முகவுரை
2.5.2. முகவுரையின் முக்கியக் கலைச் சொற்கள்
2.5.3. எழுதப்பட்ட அரசியலமைப்பு
2.5.4. மதச்சார்பின்மை
2.5.5. அடிப்படை உரிமைகள்
2.5.6. அடிப்படை கடமைகள்
2.5.7. அரசு நெறிமுறைக் கோட்பாடுகள்
(Directive Principles of State Policy)
2.5.8. கூட்டாட்சி மற்றும் வேற்றுமையில் ஒற்றுமை
2.5.9. பாராளுமன்ற முறையிலான அரசாங்கம்
2.5.10. ஈரவை நாடாளுமன்றம்
2.5.11. நெகிழா மற்றும் நெகிழும் அமைப்பு
2.5.12. சுதந்திரமான நீதித்துறை
2.5.13. நீதிப்புனராய்வு
2.5.14. வயதுவந்தோர் வாக்குரிமை
2.6. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்
2.7. அத்தியாயச் சுருக்கம்
2.8. முக்கியச் சொற்கள்
2.9. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்
2.10. கூடுதல் வாசிப்புகள்

குறிப்பு

## 2.1. முன்னுரை

அரசியலமைப்பு என்பது ஒரு ஆவணமாகும். அது எழுதப்பட்டதாகவோ அல்லது எழுதப்படதாகவோ இருக்கலாம். அதன் முக்கிய நோக்கம் அரசாங்கத்தையும் மற்றும் அதன் சார்ந்தச் சமூகத்தியும் சட்டப்படியாக வழிநடத்துவது. எழுதப்பட்ட மிக விரிவான இந்திய அரசியலமைப்பு ஜனவரி 26 1950- ஆண்டிலிருந்து நடைமுறையில் உள்ளது. இவ்வரசியலமைப்பு அரசியலமைப்புச்

சபையினால் ஒவ்வொருச் சரத்துக்களும் விரிவாக விவாதிக்கப்பட்டு ஏற்றுக்கொள்ளப்பட்டது. இத்தகைய அரசியலமைப்புப் பல்வேறு சிறப்பம்சங்களைக் கொண்டுள்ளது. குறிப்பாக சமதர்மச் சிந்தனை, சமய சகிப்புத்தன்மை, அனைவருக்கும் சமமான நீதி, அடிப்படை உரிமைகள், நாடாளுமன்ற முறையிலான நிர்வாகம், சுதந்திரமான நீதித்துறை மற்றும் பிற. இந்த அத்தியாமானது இந்தியா அரசியலமைப்பின் துவக்கம், வரலாற்றுப் பின்னணி மற்றும் சிறப்பியல்புகள் ஆகியவற்றைக் குறித்து விளக்கமாக விவரிக்கிறது.

சுதந்திர இந்தியாவில் முக்கியமான நிகழ்வுகளின் ஒன்று மொழி வாரி மாநிலங்களை உருவாக்குதல். ஏனென்றால் ஆங்கிலேயர்கள் ஆட்சியில் மாகாணங்களின் எல்லைகள் ஒரு குறிப்பிட்ட மொழிபேசும் பகுதியாக இல்லை. குறிப்பாக இரண்டோ அல்லது அதற்கு மேற்பட்ட மொழியையோ உள்ளடக்கிருந்தது. இதனால் நிர்வாகச் சிக்கலும் மற்றப்பிறப் பிரச்சனைகள் ஏற்பட்டது. எனவே தான் சுதந்திர இந்தியாவில் மொழி வாரி மாநிலக் கோரிக்கை வலிமையாக எழுப்பப்பட்டது. ஆயினும் தேசியத் தலைவர்கள் மீண்டும் ஒரு பிரிவினையை ஏற்படுத்துவது நாட்டைப் பலவினப்படுத்திவிடும் எனக் கருதினர். எனவே, இப்பிரச்சனையைத் தள்ளிப்போட விரும்பினர். ஆயினும் பிராந்தியத் தலைவர்களும் மக்களும் பல்வேறு கட்டப் போராட்டங்களை முன்னெடுத்ததால் இறுதியில் மொழி வாரி மாநிலங்கள் 1956 இல் அமைக்கப்பட்டது. இந்த அத்தியாயமானது மொழி வாரி மாநிலங்கள் உருவாவதற்கு காரணம் குறித்தும் மொழி வாரிச் சட்டம் குறித்தும் மற்றும் அதன் விளைவுகள் குறித்தும் ஆராய்கிறது.

சுதந்திரமான ஒவ்வொரு நாட்டிற்கும் தனித்தன்மையோடு கூடிய வெளியுறவுக் கொள்கை அவசியமானது. ஏனென்றால் ஒரு நாடு இறையாண்மைப் பெற்றுள்ளது என்பதை உறுதிப்படுத்தும் காரணிகளுள் முதன்மையாது வெளியுறவுக் கொள்கையாகும். வெளியுறவுக் கொள்கைப் பல்வேறுக் காரணிகளை மையமாகக் கொண்டு உருவாக்கப்படுகிறது. குறிப்பாக, புவியியல் அமைப்பு, கலாச்சாரம், வரலாறு மற்றும் அப்போதைய அரசியல் ஆகியவை முக்கியச் சக்திகளாக விளங்குகிறது. இந்திய வெளியுறவுக் கொள்கையின் சிற்பி என்று அழைக்கப்படும் நேரு இந்தியாவிற்கு எக்காலத்திற்கும் ஒத்துப்போகும் தனித்தன்மையோடு

கூடிய வெளியுறவுக் கொள்கையை உருவாக்கினார். அக்காலக்கட்டத்தில் உலக நாடுகள் இரும்பெரும் வல்லரசுகளான அமெரிக்காவோடு அல்லது ரஷ்யாவோடு நட்புப் பாராட்டினர். அதே சமயத்தில் இந்தியா இரு நாடுகளையும் சமத்தூரத்தில் வைத்து உலக அமைதிக்கு மிகப் பெரியப்பங்காற்றியது. இத்தகைய பின்னணியில் இந்த அத்தியாயமானது பஞ்சசீலக் கொள்கை, அணிச்சேராக் கொள்கை மற்றும் இனவெறி எதிர்ப்பு ஆகியவைக் குறித்து ஆராய்கிறது.

## 2.2. நோக்கங்கள்

இந்த அலகு படித்த பிறகு, நீங்கள் பின்வருவனவற்றைப் புரிந்துக் கொள்ள முடியும்:

- அரசியலமைப்பின் வரலாற்றுப் பின்னணி.
- அரசியலமைப்பை உருவாக்குவதில் அரசியலமைப்புச் சபையின் பங்கு.
- அரசியலமைப்பின் முக்கிய அம்சங்கள்.
- மொழியியல் கோரிக்கைகளின் வரலாற்றுப் பின்னணி.
- மொழியியல் பிரச்சனைகளைத் தீர்க்கச் சுதந்திரத்திற்குப் பிந்தைய இந்தியாவில் பல்வேறு குழுக்களை நியமித்தல்.
- மொழியியல் மறுசீரமைப்பை உருவாக்குவதில் ஆந்திர மாநிலத்தின் பங்கு.
- மொழியியல் மறுசீரமைப்புச் சட்டம் 1956 மற்றும் புதிய மாநிலங்களை உருவாக்குதல்.
- இந்தியாவின் வெளியுறவுக் கொள்கையின் அடிப்படைத் தன்மைகளை அடையாளம் காண உதவுகிறது.
- அணிச்சேரா இயக்கத்தின் அர்த்ததையும் அதன் செயல்பாடுகளையும் அறிந்துக் கொள்ள இயலும்.
- பஞ்சசீலக் கோட்பாடுகளின் முக்கியம்சத்தை அறிய முடியும்.
- பாண்டுங் மாநாட்டின் அரசியல் முக்கியத்துவத்தைப் புரிந்துக்கொள்ள இயலும்.

குறிப்பு

## 2.3. அரசியலமைப்பின் வரலாற்றுப் பின்னணி

**(அ) இந்திய கவுன்சில் சட்டம், 1861**

இந்தியாவைப் பொருத்தவரை, இது இந்தியாவில் நிர்வாக அமைப்பில் எந்த மாற்றத்தையும் கொண்டுவரவில்லை. 1857 ஆம் ஆண்டின் புரட்சிக்குப் பின்னர், இந்தியாவில் குறிப்பிடத்தக்க நிர்வாக மாற்றங்கள் வேண்டுமென மக்களால் உணரப்பட்டது. எனவே, பிரிட்டிஷ் பாராளுமன்றம் முதல் கவுன்சில் சட்டத்தை 1861- ஆண்டில் நிறைவேற்ற முடிவு செய்தது.

## 2.3.1. இந்திய கவுன்சில் சட்டத்தின் முக்கிய அம்சங்கள், 1861

(1) இந்த சட்டம் இந்தியாவில் இலாகா முறையை (portfolio system) அறிமுகப்படுத்தியது.

(2) மெட்ராஸ் மற்றும் பம்பாய் மாகாணங்களுக்கு சட்டங்களை உருவாக்கும் மற்றும் திருத்துவதற்கான சட்டமன்ற அதிகாரங்களை இந்த சட்டம் மீட்டெடுத்தது.

(3) கவர்னர் ஜெனரலுக்கு 6 மாதங்களுக்கு அவசரகாலப் பிரகடனம் செய்யும் அதிகாரம் வழங்கியது.

(4) வைஸ்ராயின் நிர்வாக சபைக்கு சட்டத் துறையில் இருந்து வந்த ஒரு உறுப்பினரை (5 ஆக) அதிகரித்தது.

(5) இந்தச் சட்டம் நாடாளுமன்ற முறையினை அறிமுப்படுத்தியது.

## 2.3.2.இந்திய கவுன்சில் சட்டம், 1892

**சட்டத்தின் பின்னணி**

1861 ஆம் ஆண்டின் சட்டத்திற்குப் பிறகு இந்திய அரசியலமைப்பின் வளர்ச்சி பெரும்பாலும் அரசியல் அதிருப்தி மற்றும் கவுன்சில் சீர்திருத்தத்துடன் பின்னிபிணைந்துள்ளது. சீர்திருத்தங்கள் எப்போதுமே போதுமானதாக இல்லை. சந்தர்ப்பத்தில் அதிருப்தி மற்றும் மேலும் சீர்திருத்தங்களுக்கான கோரிக்கையைத் தூண்டின. இந்தியா தொடர்பான பிரிட்டிஷ் பாராளுமன்றம் 1892, 1909, 1919 மற்றும் 1935

ஆம் ஆண்டின் சட்டங்கள் நிறைவேற்றிய அனைத்து அடுத்தடுத்தச் சட்டங்களிலும் இது உறுதிப்படுத்தப்பட்டது.

குறிப்பு

**சட்டத்தின் விதிகள்**

(1) இந்தச் சட்டம் இந்தியாவில் உள்ள சட்டமன்றச் சபைகளின் அதிகாரங்கள், செயல்பாடுகள் மற்றும் அமைப்பு ஆகியவற்றை மட்டுமே குறிப்பிட்டது. மத்திய சட்டமன்றத்தைப் பொறுத்தவரை, "கூடுதல்" உறுப்பினர்களின் எண்ணிக்கை 10 க்கு குறையாமலும் 16 க்கு மிகாமலும் இருக்க வேண்டும் என வலியுறுத்தியது. சபையின் மொத்த உறுப்பினர்களில் ஐந்தில் இரண்டு பங்கு அதிகாரிகள் அல்லாதவர்களாக இருக்க வேண்டும் என்பதையும் குறிப்பிட்டது .

(2) வழங்கப்பட்ட இந்தச் சட்டம் கொள்கை அடிப்படையில் தேர்தலை அறிமுகப்படுத்தியது.

(3) முதல்முறையாக, உறுப்பினர்கள் ஆறு நாட்கள் அறிவிப்பு வழங்கிய பின்னர் பொது நலன் சார்ந்த விஷயங்களில் கேள்விகளைக் கேட்க அனுமதிக்கப்பட்டனர்.

(4) மாகாண சட்டமன்றங்களுக்கான கூடுதல் உறுப்பினர்கள் எட்டுக்குக் குறையாமலும் அல்லது 20 க்கு மிகாமல் இருக்க வேண்டும் என்பதை இந்தச் சட்டம் தெளிவாகக் குறிப்பிடுகிறது.

## 2.3.3. இந்திய கவுன்சில் சட்டம், 1909 (மிண்டோ-மார்லி சட்டம்)

**சட்டத்தின் அவசியம்**

1892 ஆம் ஆண்டு இந்திய கவுன்சில் சட்டம் காங்கிரஸின் நியாயமான விருப்பங்களை நிறைவேற்றத் தவறியது மற்றும் லோக்மாண்ய திலக் காங்கிரஸின் பலவீனமான கொள்கையைக் கண்டித்தார். முஸ்லீம் லீக்கின் தோற்றம் இஸ்லாமியர்களுக்கு அரசாங்கத்திடமிருந்து புதிய சலுகைகளைக் கேட்கத் துவங்கின. காங்கிரஸ் சூரத் மாநாட்டில் மிதவாதிகள் மற்றும் தீவிரவாதிகள் ஏற்று இருப் பிரிவினராகப் பிரிந்தன. மிதவாதிகளின் ஆதரவைப்பெற

ஆங்கிலேய அரசாங்கம் முயற்சிச் செய்தது. அதன் வெளிப்பாடுதான் 1909 ஆம் ஆண்டுச் சட்டம்.

குறிப்பு

**சட்டத்தின் குறிக்கோள்கள்**

(1) மத்திய சட்டமன்றம் 69 உறுப்பினர்களாக உயர்த்தப்பட்டன. அவர்களில் 37 பேர் அதிகாரிகளாகவும், மீதமுள்ள 32 பேர் அதிகாரிகள் அல்லாதவர்களாகவும் இருப்பார்கள்.

(2) உறுப்பினர்களுக்கு விவாதம் மற்றும் துணைக் கேள்விகளைக் கேட்கும் உரிமை வழங்கப்பட்டது.

(3) இந்த சட்டம் முஸ்லிம்களுக்கு தனித் தேர்தல் தொகுதியை வழங்கியது.

## 2.3.4. இந்திய அரசு சட்டம், 1919 (மான்டேகு-சேம்ஸ்.ஃபோர்ட் சட்டம்)

**சட்டத்தின் பின்னணி**

மிண்டோ-மார்லி சீர்திருத்தங்கள் இந்தியாவில் ஒரு பாராளுமன்ற அமைப்பை நிறுவுவதற்கான நோக்கத்துடன் அல்ல, மாறாக பிரிட்டிஷ் அதிகாரத்தை தக்கவைத்துக் கொள்ள மிதவாதிகள் மற்றும் முஸ்லிம்களை தங்களுக்கு ஆதரவாகச் செயல்பட ஊக்கப்படுத்தியது. உண்மையில், 1909 ஆம் ஆண்டின் சீர்திருத்தங்கள் எந்தொரு பிரிவினரையும் திருப்திப்படுத்தவில்லை.

**சட்டத்தின் முக்கிய விதிகள்**

i) இந்திய வருவாயில் இருந்து ஊதியம் செலுத்தப்பட்ட இந்திய வெளியுறவுத்துறைச் செயலாளர் இப்போது பிரிட்டிஷ் கருவூலத்தால் செலுத்தப்பட வேண்டும்.

ii) கவர்னர் ஜெனரலின் செயற்குழுவில் இந்தியர்களின் எண்ணிக்கை எட்டாக உயர்த்தப்பட்டது. இந்திய உறுப்பினர்களுக்கு சட்டம், கல்வி, தொழிலாளர், சுகாதாரம் மற்றும் தொழில்கள் போன்ற துறைகள் ஒப்படைக்கப்பட்டன.

iii) இலாகாகள் இரண்டாகப் பிரிக்கப்பட்டது: (i) மத்திய மட்டத்தில் அதிகாரங்கள் மற்றும் (ii) மாநில அளவில் அதிகாரங்கள். தேசிய

குறிப்பு

விவகாரங்கள், பாதுகாப்பு, அரசியல் உறவுகள், தகவல் தொடர்பு, சிவில் மற்றும் குற்றவியல் சட்டம் மற்றும் நடைமுறைகள் போன்ற தேசிய முக்கியத்துவம் வாய்ந்த விஷயங்கள் மைய அரசால் நிர்வகிக்கப்பட்டன. அதே சமயம் பொது சுகாதாரம், உள்ளூர் அரசியல், கல்வி, மருத்துவ நிர்வாகம், நில வருவாய் நிர்வாகம், நீர் வழங்கல், பஞ்ச நிவாரணம், சட்டம் ஒழுங்கு, வேளாண்மை போன்றவை மாநிலங்களால் நிர்வகிக்கப்பட்டன.

iv) இந்தச் சட்டம் மத்தியில் ஈரவை சட்டமன்றத்தை அமைத்தது.

v) ஒன்று மாநில அல்லது மேல் அவை, இரண்டு கீழ்சபை அல்லது மக்களவை .

vi) மாநிலங்கள் அவையில் 60 உறுப்பினர்களைக் கொண்டிருந்தது. அவர்களில் 26 பேர் கவர்னர் ஜெனரலால் நியமுக்க வேண்டும். 34 பேர் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும், இதன் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட மேல் சபையை அறிமுகப்படுத்தியது.

vii) கீழ் சபை 145 உறுப்பினர்களைக் கொண்டிருக்கும், அவர்களில் 41 பேர் நியமிக்கப்படுவார்கள், 104 பேர் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

viii) சட்டமன்றத்தின் ஆயுள் 3 ஆண்டுகள் ஆக இருந்தது. ஆனால் அதை கவர்னர் ஜெனரலால் நீட்டிக்க முடியும்.

ix) மாகாண மட்டத்தில், இரட்டை ஆட்சி அறிமுகப்படுத்தப்பட்டது.

x) மாகாண மட்டத்தில் உள்ள இலாக்ககள் இரண்டாகப் பிரிக்கப்பட்டது: (i) ஆளுநர் மற்றும் அவரது அதிகாரிகளின் கீழ் ஒதுக்கப்பட்ட இலாக்ககள் (ii) தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக் கொண்ட ஆளுநர் தலைமையில் மாற்றப்பட்டத்துறை.

xi) முதல் முறையாக, மத்திய மற்றும் மாகாணங்கள் அளவில் தேர்தல் அறிமுகப்படுத்தப்பட்டது.

xii) வாக்களிக்கும் உரிமை வரையறுக்கப்பட்டது. குறைந்தபட்ச வருமானமாக ரூ. 10,000 அல்லது வருடத்திற்கு குறைந்தபட்ச நில வரி ரூ. 750 ஆண்டுக்குக் கட்டுபவர்கள் வாக்களிக்கத் தகுதிப் பெற்றனர்.

## 2.3.5. இந்திய அரசுச் சட்டம் 1935

### 2.3.5.1. சைமன் கமிஷன், 1927-30

ஆணைக்குழு பிரிட்டிஷ் அரசாங்கத்தால் மாகாண மட்டத்தில் அறிமுகப்படுத்தப்பட்ட இரட்டை ஆட்சிச் செயல்பாடுகளை ஆராய நியமிக்கப்பட்டது.சர் ஜான் சைமன் தலைமையிலான இந்த ஆணையம் முற்றிலும் பிரிட்டிஷரால் ஆனது, எந்த இந்தியருக்கும் கமிஷனின் இடமில்லை. எனவே, காங்கிரஸ் கமிஷனை நிராகரித்தது மற்றும் நாடு முழுவதும் கமிஷன் எங்கு சென்றாலும் எதிர்த்தது.இந்த ஆணையம் 1928 இல் இந்தியாவை அடைந்தது. பெரும்பாலான மாநிலங்களுக்கு விஜயம் செய்தது மற்றும் இரட்டை ஆட்சித் தொடர்பான தகவல்களை சேகரித்தது.1930 ஆம் ஆண்டில், ஆணைக்குழு தனது பரிந்துரைகளைக் குறிப்பாக மாகாணங்களில் உள்ள இரட்டை ஆட்சிகள் செயல்பாடுகள் குறித்து வழங்கியது.

### 2.3.5.2. நேரு அறிக்கை, 1928

சைமன் கமிஷன் இந்திய பொதுக் கருத்தில் இருந்து தனிமையில் தனது பணிகளை மேற்கொண்டிருந்தபோது,முன்னணி இந்திய அரசியல் கட்சிகள் ஒரு பொதுவான அரசியல் திட்டத்தை உருவாக்க முயன்றன. டாக்டர் எம்.ஏ.அன்சாரி தலைமையில் அனைத்துக் கட்சிகள் மாநாடு 1928 மே 19 அன்று பம்பாயில் கூட்டப்பட்டு, இந்தியாவுக்கான அரசியலமைப்பின் கொள்கைகளைப் பரிசீலிக்கவும் தீர்மானிக்கவும் மோதிலால் நேருவின் தலைமையின் கீழ் ஒரு குழுவை நியமித்தது.

### 2.3.5.3. நேரு அறிக்கையின் முக்கிய அம்சங்கள்

இந்தியப் பாராளுமன்றம் பின்வருவனவற்றைக் கொண்டிருக்க வேண்டும் என்று அறிக்கைப் பரிந்துரைத்தது:

(i) 200 உறுப்பினர்களைக் கொண்டுள்ள செனட் என்ற மேலவை 7 ஆண்டுகளுக்குப் பதவியில் நீடிக்குமெனக் கூறியது.

(ii) வயது வந்தோர் வாக்குரிமையின் மூலம் 5 ஆண்டுகளுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட 500 உறுப்பினர்களைக் கொண்ட பிரதிநிதிகள் சபை உருவாகப்படும் என அறிவித்தது.

### 2.3.5.4. வட்ட மேசை மாநாடுகள், 1930-32

முதல் மாநாடு நவம்பர் 16, 1930 முதல் ஜனவரி 19, 1931 வரை நடத்தப்பட்டது, இரண்டாவது மாநாடு செப்டம்பர் 1 முதல் டிசம்பர் 1, 1931 வரை நடைபெற்றது, மூன்றாவது மாநாடு நவம்பர் 17 முதல்

டிசம்பர் 24, 1932 வரை நடைபெற்றது. முதல் மாநாட்டில் காங்கிரஸ் பங்கேற்கவில்லை, ஏனெனில் அதன் தலைவர்கள் அனைவரும் சட்டமறுப்பு இயக்கத்தில் பங்கேற்றதற்காகக் கைது செய்யப்பட்டனர். இருப்பினும், காந்தி இந்திய தேசிய காங்கிரஸின் பிரதிநிதியாக இரண்டாவது மாநாட்டில் கலந்து கொண்டார். ஆயினும் காந்தி மிகவும் ஏமாற்றமடைந்தார். ஏனெனில் அவரது கோரிக்கைகள் எதுவும் ஆங்கிலேயர்களால் ஏற்றப்படவில்லை. மூன்றாவது மாநாட்டிற்கு, காங்கிரஸ் பங்கேற்கவில்லை. மூன்று மாநாடுகளிலும் முகமது அலி ஜின்னா மற்றும் பிற தலைவர்கள் கலந்துக் கொண்டு விவாதங்களில் பங்கேற்றனர். சைமன் கமிஷன் பரிந்துரைகள், நேரு அறிக்கைகள் மற்றும் மூன்று மாநாடுகளின் விளைவுகளின் அடிப்படையில், 1935 ஆம் ஆண்டின் சட்டம் நிறைவேற்றப்பட்டது.

**2.3.5.5. சட்டத்தின் முக்கிய அம்சங்கள், 1935**

i) மாகாண மட்டத்தில் இரட்டை ஆட்சி இரத்துச் செய்யப்பட்டது. அது மத்தியில் அறிமுகப்படுத்தப்பட்டது.

ii) மாகாண சுயாட்சி அறிமுகப்படுத்தப்பட்டது.

iii) மையத்தில் கூட்டாட்சி முன்மொழியப்பட்டது.

iv) கூட்டாட்சி பிரிட்டிஷ் இந்தியா மற்றும் சுதேச அரசுகளைக் கொண்டிருக்க வேண்டும்.

இவ்வாராக 1861 ஆம் ஆண்டு சட்டத்திலிருந்துத் துவங்கி 1935 ஆம் ஆண்டுச் சட்டம் வரை பல்வேறு சிறப்பம்சங்களைச் கொண்டுள்ளது. குறிப்பாக, நாடாளுமன்ற முறை, தேர்தல் முறை, கூட்டாச்சி மற்றும் மாகாணங்களில் தன்னாட்சி மற்றும் அவரசநிலைப் பிரகடனம் ஆகியவை மேலே குறிப்பிடப் பட்டுள்ளச் சட்டங்களிலுள்ளது. இவையனைத்தும் தற்போதைய அரசியலமைப்புக்கு முன்னோடியாக உள்ளது.

**உங்கள் முன்னேற்றத்தைச் சோதித்துச் சரிபார்க்கவும்**

1. முதல் கவுன்சில் சட்டம் பற்றி எழுதுக.
2. முதல் கவுன்சில் சட்டத்தை விட இரண்டாவது கவுன்சில் சட்டம் எவ்வாறு சிறந்தது?
3. “டையார்க்கி” என்பதன் பொருள் யாவை?
4. ‘மாகாண சுயாட்சி’ என்றால் என்ன?

குறிப்பு

## 2.4. அரசியலமைப்புச் சட்டமன்றக் கோரிக்கை

இந்தியா அரசியல் சுதந்திரம் அடைந்த போது அதற்கெனப் பிரத்யேக அரசியலமைப்புச் சட்டம் எதுவுமில்லை. இந்தியாவும் பாகிஸ்தானும் பிரிட்டிஷ் பாராளுமன்றம் இயற்றிய 1935 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தின் (The Government of India Act, 1935) கீழ் ஆட்சிச் செய்யப்பட்டன. 1946 ஆம் ஆண்டு அமைக்கப்பட்ட இந்திய அரசியலமைப்புச் சட்டமன்றம் அல்லது அரசியல் நிர்ணய சபை (The Constituent Assembly) உருவாக்கிய இந்திய அரசியலமைப்புச் சட்டம் 1950 ஜனவரி 26-ஆம் தேதி செயல்படுத்தப்பட்டது.

### 2.4.1. அரசியலமைப்புச் சட்டமன்றம்

1946 ஜூலையில் கேபினட் தூதுக்குழு வருகைக்குப் பிறகு அரசியலமைப்புச் சட்டமன்றத்துக்கான தேர்தல் நடைபெற்றது. டாக்டர் ஆர்.ராஜேந்திரப் பிரசாத் அரசியல் அமைப்புச் சட்டமன்றத் தலைவராக 1946 டிசம்பர் 11 அன்று தேர்ந்தெடுக்கப்பட்டார். 1946 டிசம்பர் மாதம் நடைபெற்ற மன்றத்தின் கூட்டுக் கூட்டத்தில் நேரு அரசியலமைப்புச் சட்டமன்ற நோக்கங்கள் பற்றியத் தீர்மானத்தைக் (Objectives Resolution) கொண்டு வந்தார். இந்தியா விடுதலை அடைந்த பின்னரும் அச்சட்டமன்றம் அரசியலமைப்புச் சட்டத்தை வரைவதில் தொடர்ந்து ஈடுபட்டது. 1947 ஆகஸ்டு 15-ஆம் தேதி அதிகார மாற்றம் செய்யப்பட்டது. அரசியலமைப்புச் சட்டமன்றம் இரண்டு நிலைகளில் செயல்பட்டது. ஒன்று, இந்திய அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்கும் மன்றம் இரண்டாவது, சட்ட மன்றம் அல்லது நாடாளுமன்றம். ஆர்.ராஜேந்திர பிரசாத் அரசியலமைப்புச் சட்டமன்றத் தலைவராகவும், ஜி.வி. மௌலங்கர் சட்டமன்றச் சபாநாயகராகவும் இருந்து வழிநடத்தினர்.

### 2.4.2. வரைவுக் குழு

அரசியலமைப்புச் சட்டமன்றம் டாக்டர் ராஜேந்திரப் பிரசாத் தலைமையில் -செயல்பட்டது. 1947 ஆகஸ்டு 29 ஆம் தேதி இச்சட்டமன்றம் ஒரு வரைவுக் குழுவை (Drafting Committee) நியமித்தது. நேருவின்

அமைச்சரவையில் சட்ட அமைச்சராக இடம் பெற்றிருந்த டாக்டர் பி.ஆர்.அம்பேத்கார் வரைவுக் குழுவின் தலைவராகவும், என்.கோபாலசுவாமி ஐயங்கார், அல்லாடி கிருஷ்ணசுவாமி ஐயர், கே.எம்.முன்ஷி, சயித் முகமது சாதுல்லா, என்.மாதவராவ், டி.பி.கைத்தான் ஆகியோர் உறுப்பினர்களாகவும் இருந்தனர். வரைவுக் குழு அடிப்படை உரிமைகள், அரசியலமைப்புச் சட்டம், மத்திய அதிகாரங்கள், மாநில அரசியலமைப்புச் சட்டங்கள், சிறுபான்மையினர், பட்டியலிடப்பட்டப் பகுதிகள், பட்டியலிடப்பட்டச் சாதிகள் பற்றிய துணைக் குழுக்களை நியமித்தது. வரைவுக்குழுவிடம் சமர்ப்பிக்கப்பட்டத் துணைக் குழுக்களின் அறிக்கைகள் நன்கு பரிசீலிக்கப்பட்டு, ஒருங்கிணைக்கப்பட்டு, இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் முன்வரைவு தயாரிக்கப்பட்டது.

## 2.4.3. சட்ட முன்வரைவு

1948 பிப்ரவரி 21 ஆம் தேதி கூடிய இந்திய அரசியலமைப்புச் சட்டமன்றக் கூட்டுக் கூட்டத்தில் அரசியலமைப்புச் சட்டத்தின் முன்வரைவு விரிவாகச் சரத்து வாரியாக விவாதிக்கப்பட்டது. மொத்தம் 7,635 திருத்தங்கள் கொண்டு வரப்பட்டன. அவற்றுள் 2473 திருத்தங்கள் விவாதத்திற்கு ஏற்றுக் கொள்ளப்பட்டன. 165 நாட்கள் விவாதம் நடைபெற்றது. இவற்றில் 114 நாட்கள் அரசியலமைப்புச் சட்ட முன்வரைவை பற்றிய விவாதிப்பதற்கே செலவிடப்பட்டது.

## 2.4.4. இந்திய அரசியல் நிர்ணய சபையை உருவாக்குதல்

இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு, அதிகாரத்தை இந்தியர்களிடம் ஒப்படைத்து நாட்டை விட்டு வெளியேறும் விருப்பத்தை பிரிட்டிஷ் அரசு அறிவித்தது. லார்ட் பெத்திக் லாரன்ஸ், ஏ.ஓ. அலெக்சாண்டர் மற்றும் ஸ்டா∴போர்ட் கிரிப்ஸ் ஏப்ரல் 1946- இல் இந்தியாவுக்கு விஜயம் செய்தனர் மற்றும் இந்திய அரசியல் தலைவர்களுடன் கலந்துரையாடி இந்திய அரசியல் அமைப்பின் எதிர்காலம் குறித்து ஒரு உடன்பாட்டை எட்டினர். முஸ்லீம் லீக் நாட்டைப் பிரிக்க வலியுறுத்துகையில் காங்கிரஸ் ஒரு ஐக்கிய இந்தியாவை விரும்பியதால் எந்த உடன்பாடும் எட்டப்படவில்லை.

குறிப்பு

எனவே, கேபினட் தூதுக்குழுப் பரிந்துரைகளின் அடிப்படையில் பிரிட்டிஷ் அரசு 1946 மே 16 அன்று “வெள்ளை அறிக்கை'' வெளியிட்டது. அதன்படி, பிரிட்டிஷ் அரசு அரசியலமைப்பு சட்டமன்றத்தை அமைப்பதற்கான தனது முடிவை அறிவித்தது, இது ஐக்கிய இந்தியாவுக்கான புதிய அரசியலமைப்பை வடிவமைக்க அதிகாரம் பெற்றது. ஆகவே, 1946 மார்ச்சில் புதிய தேர்தல்கள் நடந்த மாகாண சட்டமன்ற உறுப்பினர்களால் அரசியலமைப்புச் சபை உறுப்பினர்களை மறைமுகமாகத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. பூர்வீக மாநிலங்களின் பிரதிநிதிகள் அந்தந்த ஆட்சியாளர்களால் பரிந்துரைக்கப்பட வேண்டும். ஜூலை 1946 இல் அரசியலமைப்பு சபைக்கு பின்வரும் அடிப்படையில் தேர்தல்கள் நடத்தப்பட்டன:

(அ) ஒவ்வொரு மாகாணத்திற்கும் அதன் மக்கள்தொகைக்கு விகிதாசாரமாகக் குறிப்பிட்ட எண்ணிக்கையிலான இடங்கள் ஒதுக்கப்பட்டன. ஒரு மில்லியன் மக்களை பிரதிநிதித்துவப்படுத்த ஒரு இருக்கை வழங்கப்பட்டது.

(ஆ) ஒவ்வொரு மாகாணத்திற்கும் ஒதுக்கப்பட்ட இடங்களின் எண்ணிக்கை முக்கியச் சமூகங்களிடையே அவர்களின் மக்கள்தொகைக்கு ஏற்பப் பிரிக்கப்பட்டுள்ளது. முஸ்லிம்கள், சீக்கியர்கள் மற்றும் பிறர் (இந்துக்கள், கிறிஸ்தவர்கள் மற்றும் பார்சிகள் போன்றவர்கள்) மூன்று பிரிவுகள் மட்டுமே ஒதுக்கப்பட்டன.

(இ) ஒரு மாகாணத்தில் ஒவ்வொரு சமூகத்திற்கும் ஒதுக்கப்பட்டப் பிரதிநிதிகள் அதன் சட்டமன்றத்தில் அந்தச் சமூகத்தின் உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

(ஈ) டெல்லி, அஜ்மீர், கூர்க் மற்றும் பலுசிஸ்தான் தலைமை ஆணையர்களின் மாகாணங்களுக்கு நான்கு இடங்கள் ஒதுக்கப்பட்டன. மொத்தத்தில் 296 உறுப்பினர்கள் பிரிட்டிஷ் இந்திய மாகாணங்களால் தேர்ந்தெடுக்கப்பட்டனர், அதில் 210 பொது இடங்கள், 78 முஸ்லிம் இடங்கள், 4 சீக்கிய இடங்கள் மற்றும் 4 தலைமை ஆணையர்கள் மாகாணங்களில் இருந்தும். அவற்றில், காங்கிரஸ் கட்சி 202 இடங்களையும், முஸ்லிம் லீக் 73 இடங்களையும் மற்றக் கட்சிகள் 21 இடங்களையும் கைப்பற்றியது. அரசியலமைப்புச் சபைக்கு 93 உறுப்பினர்களை பூர்வீக ஆட்சியாளர்களுக்கு ஒதுக்கப்பட்டு இருந்தது. பாகிஸ்தான் கோரிக்கை ஏற்கப்படாததால் முஸ்லிம் லீக் உறுப்பினர்கள்

சட்டமன்றத்தின் விவாதங்களில் பங்கேற்க மறுத்துவிட்டனர். பாகிஸ்தான் உருவான பின்னர் தனி அரசியலமைப்பு உருவாக்கும் அமைப்பை உருவாக்க அவர்கள் விரும்பினர்.

## 2.4.5. அரசியல் அமைப்பு உருவாக்கம்

சச்சிதானந்தா சின்ஹாவின் தலைமையின் கீழ் புது தில்லியில் 1946 டிசம்பர் 9 ஆம் தேதி அரசியலமைப்புச் சபை முதல் முறையாக கூடியது. பின்னர், டாக்டர் ராஜேந்திர பிரசாத் அரசியலமைப்பு சபையின் நிரந்தரத் தலைவரானார். 1947 ஆகஸ்ட் 15-இல் சுதந்திரம் அடைந்த பிறகு, அரசியலமைப்புச் சபை சட்டமன்ற அதிகாரங்களையும் ஏற்றுக்கொண்டது. புதிய அரசியலமைப்பு 1950 ஜனவரி 26 ஆம் தேதி முதல் 1952 ஆம் ஆண்டில் புதிய நாடாளுமன்றத்திற்கு புதிய தேர்தல்கள் நடைபெறும் வரை இது இந்தியாவின் முதல் நாடாளுமன்றமாகச் செயல்பட்டது.

| S. No. | Name of the Committee | Chairman |
|---|---|---|
| 1 | Committee on the Rules of Procedure | Rajendra Prasad |
| 2 | Steering Committee | Rajendra Prasad |
| 3 | Finance and Staff Committee | Rajendra Prasad |
| 4 | Credential Committee | Alladi Krishnaswami Ayyar |
| 5 | House Committee | B Pattabhi Sitaramayya |
| 6 | Order of Business Committee | KM Munshi |
| 7 | Ad hoc Committee on the National Flag | Rajendra Prasad |
| 8 | Committee on the Functions of the Constituent Assembly | GV Mavalankar |

குறிப்பு

| | | |
|---|---|---|
| 9 | States Committee | Jawaharlal Nehru |
| 10 | Advisory Committee on Fundamental Rights, Minorities and Tribal and Excluded Areas | Vallabbhai Patel |
| 11 | Minorities Subcommittee | HC Mookherjee |
| 12 | Fundamental Rights Subcommittee | JB Kripalani |
| 13 | North-East Frontier Tribal Areas and Assam, Excluded and Partially Excluded Areas Subcommittee | Gopinath Bardoloi |
| 14 | Excluded and Partially Excluded Area (other than those in Assam) Subcommittee | AV Thakur |
| 15 | Union Powers Committee | Jawaharlal Nehru |
| 16 | Union Constitution Committee | Jawaharlal Nehru |
| 17 | Drafting Committee | BR Ambedkar |

அரசியலமைப்பின் வரைவுக் குழுவின் தலைவராக டாக்டர் பி.ஆர் அம்பேத்கர் உடன் ஏழு உறுப்பினர்களைக் கொண்டது. குழுவின் மற்ற முக்கிய உறுப்பினர்கள் சர் அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர், கே.எம். முன்ஷி, டி.டி. கிருஷ்ணமாச்சாரி, என்.கோபாலசாமி அய்யங்கர். இந்திய அரசியலமைப்பின் பல சரத்துக்கள் 1935 ஆம் ஆண்டு இந்திய அரசுச் சட்டத்திலிருந்து எடுக்கப்பட்டன. பிரிட்டன், அயர்லாந்து மற்றும் யு.எஸ்.ஏ. அரசியலமைப்பிலிருந்து பல அம்சங்கள் இணைக்கப்பட்டன. அரசியலமைப்புச் சபை டாக்டர் ராஜேந்திர பிரசாத்தின் தலைமையில் அதன் விவாதங்களை நடத்தியது மற்றும் வரைவு அரசியலமைப்பை

1949 நவம்பர் 26 அன்று நிறைவேற்றியது. இது 1950 ஜனவரி 26 முதல் நடைமுறைக்கு வந்தது. இந்த அரசியல் அமைப்பை எழுதிமுடிப்பதற்கு மொத்தம் 2 ஆண்டுகள் 11 மாதங்கள் 17 நாட்கள் தேவைப்பட்டது.

**உங்கள் முன்னேற்றத்தைச் சோதித்துச் சரிபார்க்கவும்**

5. அரசியலமைப்புச் சபை உறுப்பினர்கள் எவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்டனர் என்பதைக் கூறுக.

6. அரசியலமைப்புச் சபையில் டாக்டர் ராஜேந்திர பிரசாத்தின் பங்கைப் பற்றி எழுதுக.

7.தற்போதைய அரசியலமைப்பு, அரசியலமைப்பு சபையால் எப்போது ஏற்றுக்கொள்ளப்பட்டது?

## 2.5. இந்திய அரசியல் அமைப்பின் சிறப்பியல்புகள்

### 2.5.1. முகவுரை

ஜவஹர்லால் நேரு 1946 டிசம்பர் 13 ஆம் தேதி அரசியலமைப்பின் குறிக்கோள்களை முன்மொழிந்தார், அது 1947 ஜனவரி 22 அன்று அரசியலமைப்புச் சட்டமன்றத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. அதுவே இந்திய அரசியலமைப்பின் முகவுரையாக மாறியது.

“இந்திய மக்களாகிய நாம், இந்தியாவை ஒரு இறையாண்மை வாய்ந்த, சமதர்ம நெறி சார்ந்த, மதச்சார்பற்ற, மக்களாட்சிக் குடியரசாக அமைக்கவும், அதன் குடிமக்கள் அனைவருக்கும்சமுதாய, பொருளாதார மற்றும் அரசியல் நீதியும்,சிந்தனை வெளிப்பாட்டில் நம்பிக்கையும், பற்றார்வத்தில் மற்றும் வழிபாட்டில் சுதந்திரமும்,தகுதி நிலையில் மற்றும் வாய்ப்பில் சமத்துவமும், உறுதியாகக் கிடைக்கச் செய்யவும், தனி ஒருவரின் மாண்புக்கும், நாட்டின் ஒற்றுமைக்கும், ஒருமைப்பாட்டிக்கும் உறுதியளிக்கும் உடன் பிறப்புணர்வை அவர்கள் அனைவரிடையே வளர்க்கவும், விழுமிய முறைமையுடன் உறுதி பூண்டு,”

1949, நவம்பர் இருபத்து ஆறாம் நாளாகிய இன்று நம்முடைய அரசியலைப்புப் பேரவையில்,ஈங்கிதனால், இந்திய அரசியலமைப்பை ஏற்று, சட்டமாக இயற்றி, நமக்கு நாமே வழங்கிக் கொள்கிறோம்.

குறிப்பு

## 2.5.2. முகவுரையின் முக்கியக் கலைச் சொற்கள்

Sovereign - இறையாண்மை - முழுவதும் தன்னிச்சையாக செயல்படும் தன்மை, யாருக்கும் உட்படாத தன்மை, மேலும் இதற்கு மேல் உயர்ந்த அமைப்பு இல்லை.

Socialist - சமதர்மம் - இவ்வாசகம் 1976-ஆம் ஆண்டு 42-வது அரசியலமைப்புச் சட்ட திருத்தம் வாயிலாக அரசியலமைப்பில் சேர்க்கப்பட்டது.

Secular - மதச்சார்பின்மை - 42-ஆவது சட்டத் திருத்தம் (1976) மூலம் முகவுரையில் சேர்க்கப்பட்டது. (பிரிவு 25 - 28)

Democratic - மக்களாட்சி - மார்க்சியம் மற்றும் காந்திய சமதர்மக் கொள்கைகளை கொண்டது.

Justice - நீதி - சமூக, பொருளாதார மற்றும் அரசியல் - நீதி

Liberty - உரிமை, சுதந்திரம் - சிந்தனை, சிந்தனை வெளிப்பாடு, நம்பிக்கை, பற்றார்வம் மற்றும் வழிபாடு

Equality - சமத்துவம் - தகுதி நிலையில் மற்றும் வாய்ப்பில்

Fraternity - சகோததரத்துவம் - தனி ஒருவரின் மாண்பிற்கும், நாட்டின் ஒற்றுமைக்கும்.

## 2.5.3. எழுதப்பட்ட அரசியலமைப்பு

இந்திய அரசியலமைப்பு என்பது நாட்டின் சரியான நிர்வாகத்திற்கான பல்வேறு சட்டங்களை உள்ளடக்கிய ஒரு முழுமையான எழுதப்பட்ட ஆவணம் ஆகும். இந்திய அரசியலமைப்பில் மாநிலங்கள், மையம் மற்றும் அவற்றின் தொடர்பு ஆகியவற்றுக்கு தனித்தனி விதிகள் உள்ளன. உலகின் பல அரசியலமைப்பிலிருந்து பல்வேறு விதிகளிலிருந்து பெறப்பட்டது, இது மிகவும் விரிவானது. மேலும், திட்டமிடப்பட்டச் சாதிகள், பட்டியலிடப்பட்டப் பழங்குடியினர், பிற்படுத்தப்பட்டோர், குழந்தைகள் மற்றும் பெண்கள் ஆகியோரைக் குறித்து விளக்கமாகக் குறிப்பிடபட்டுள்ளது.

## 2.5.4. மதச்சார்பின்மை

அரசியலமைப்பின் ஒரு முக்கிய அம்சம் மதச்சார்பின்மைக்கு முக்கியத்துவம் அளிப்பதாகும். மதச்சார்பின்மை என்ற சொல் 1976 இல் நிறைவேற்றப்பட்ட 42 ஆவது திருத்தத்தால் அரசியலமைப்பின் முன்னுரையில் இணைக்கப்பட்டது. மதத்தின் அடிப்படையில் மக்கள் பாகுபாடு காட்டப்படுவதில்லை. அனைத்துக் குடிமக்களும் வழிபாட்டுச் சுதந்திரத்தை அனுபவிக்கிறார்கள் மற்றும் அவர்களின் மத நம்பிக்கைகளைப் பொருட்படுத்தாமல் சமமான சிவில் மற்றும் அரசியல் உரிமைகளைக் கொண்டுள்ளனர். அரசுக்கு என சொந்த மதம் இல்லை. அரசு நிதியில் இருந்து பராமரிக்கப்படும் எந்தவொரு கல்வி நிறுவனத்திலும் எந்த மத அறிவுறுத்தலும் வழங்கப்படவில்லை.

## 2.5.5. அடிப்படை உரிமைகள்

அரசியலமைப்பின் 3-வது பகுதி (12-35) ஆறு அடிப்படை உரிமைகளை விரிவாக விவாதிக்கிறது. இதில் உத்தரவாதம் அளிக்கப்பட்ட அனைத்து உரிமைகளும் நீதிமன்றத்தால் செயல்படுத்தப்பட வேண்டும். ஆறு உரிமைகள் சமத்துவம், சுதந்திரம், சுரண்டலுக்கு எதிரான உரிமை, மத உரிமைகள், சிறுபான்மையினரின் கலாச்சார மற்றும் கல்வி உரிமைகள் மற்றும் அரசியலமைப்புக்குட்பட்டு பரிகாரம் தேடும் உரிமை.

**சமத்துவம் (சரத்துகள் 14-18)**

அரசியலமைப்பின் 14-ல் இருந்து-18 வரை உள்ள சரத்துகள் சமத்துவத்திற்கான உரிமையை உறுதிப்படுத்துகின்றன. சரத்து 14 சட்டத்தின் முன் அனைவரும் சமம். 15, மதம், இனம், சாதி அல்லது பிறந்த இடம் ஆகியவற்றின் அடிப்படையில் பாகுபாடு காண்பதைத் தடைசெய்கிறது. 16 அரசு வேலைவாய்ப்பு விஷயங்களில் அனைவருக்கும் சமமான வாய்ப்பினை உறுதிப்படுத்துகிறது. 17 நாட்டில் தீண்டாமை நீக்குகிறது மற்றும் 18 அரசு மற்றும் கல்வி ரீதியிலான வழங்கப்படும் பட்டங்களை தவிர மற்றவற்றை நிராகரிக்கிறது.

**சுதந்திரத்திற்கான உரிமை (சரத்துகள் 19-22)**

சரத்துகள் 19-22 சுதந்திரத்திற்கான உரிமையைக் குறிப்பிடுகிறது. அனைத்துக் குடிமக்களுக்கும் பேச்சு மற்றும் கருத்துச் சுதந்திரம், அமைதியாக ஆயுதமின்றி ஒன்றுகூடுவதற்கும், சங்கங்கள் அல்லது தொழிற்சங்கங்களை உருவாக்குவதற்கும், இந்தியா முழுவதும் சுதந்திரமாகச் செல்வதற்கும், பிரதேசத்தின் எந்தப் பகுதியிலும் வசிப்பதற்கும் குடியேறுவதற்கும் மற்றும் விரும்பிய எந்தவொரு தொழிலையும் செய்வதற்கு உரிமை வழங்கப்பட்டுள்ளது.

குற்றத்தின் போது நடைமுறையில் உள்ள சட்டத்தை மீறுவதைத் தவிர எந்தவொரு நபரும் எந்தவொரு குற்றத்திற்கும் தண்டனைப் பெறக்கூடாது என்று 20- வது சரத்துக் குறிப்பிடுகிறது.

சரத்து 21- வாழ்வியல் சுதந்தரத்தை உறுதிப்படுத்துகிறது.

சரத்து 22- சில சந்தர்ப்பங்களில் கைது மற்றும் தடுப்புக்காவலில் இருந்து பாதுகாப்பை வழங்குகிறது.

**சுரண்டலுக்கு எதிரான உரிமை (சரத்துகள் 23 மற்றும் 24)**

சரத்துகள் 23 மற்றும் 24 ஆகியவை சுரண்டலுக்கு எதிரான உரிமையைக் குறிப்பிடுகிறது. 23 ஒருவரைக் கட்டாயப்படுத்திச் சட்ட விரோதச் செயல்களிலிருந்து தடுக்கிறது. குறிப்பாத பிச்சை எடுத்தல், ஆள் கடத்தல்.

24- குழந்தைத் தொழிலாளர்களை தடைசெய்கிறது. 14 வயதிற்குட்பட்ட எந்தவொரு குழந்தையும் எந்தவொரு தொழிற்சாலையிலோ அல்லது சுரங்கத்திலோ வேலை செய்யவோ அல்லது வேறு எந்த ஆபத்தான வேலையிலோ ஈடுபடுத்தக்கூடாது என குறிப்பிடுகிறது.

**மத சுதந்திரத்திற்கான உரிமை (சரத்துகள் 25-28)**

சரத்துகள் 25, 26, 27, மற்றும் 28 ஆகியவை மதச் சுதந்திரத்திற்கான உரிமையை வழங்குகின்றன. 25 மனசாட்சியின் சுதந்திரம் மற்றும் சுதந்திரமான தொழில், மற்றும் மதத்தின் நடைமுறை மற்றும் பரப்புதல் ஆகியவற்றைக் குறிக்கிறது. 26 மத விவகாரங்களை நிர்வகிப்பதற்கான சுதந்திரத்தைப் பற்றியது. எந்தவொரு குறிப்பிட்ட மதத்தையும் ஊக்குவிப்பதற்காக வரி செலுத்துவது தொடர்பான சுதந்திரம் 27 வது சரத்து. 28 வது சரத்து சில கல்வி நிறுவனங்களில் மத போதனை அல்லது மத வழிபாட்டில் கலந்துகொள்வது போன்ற சுதந்திரத்தைப்

பற்றியது. மேற்கண்ட விதிகளின் விளைவாக, இந்தியா ஒரு மதச்சார்பற்ற நாடு என்பதை உறுதிப்படுத்துகிறது.

**குறிப்பு**

**சிறுபான்மையினரின் கலாச்சார மற்றும் கல்வி உரிமைகள் (சரத்துகள் 29- 30)**

சரத்துகள் 29 மற்றும் 30 சிறுபான்மையினர்க்கு கலாச்சார மற்றும் கல்வி உரிமைகளை வழங்குகின்றன. 29 சிறுபான்மையினரின் மொழி, எழுத்துகள் மற்றும் கலாச்சாரம் தொடர்பான நலன்களைப் பாதுகாக்கிறது. மதம் அல்லது மொழியை அடிப்படையாகக் கொண்ட அனைத்துச் சிறுபான்மையினரும் தங்களுக்கு விருப்பமான கல்வி நிறுவனங்களை நிறுவுவதற்கும் நிர்வகிப்பதற்கும் உரிமை உண்டு என்று சரத்து 30 வழங்குகிறது.

**அரசியலமைப்புக்குட்பட்டு பரிகாரம் தேடும் உரிமை (சரத்து 32)**

இந்திய அரசியலமைப்பின் சிற்பி டாக்டர் அம்பேத்கர் 32 வது சரத்தின் முக்கியத்துவத்தை வலியுறுத்தினார். மேலும் இது இந்திய அரசியலமைப்பின் ‘ஆத்மா’ என்றும் அதன் இதயம் என்றும் குறிப்பிட்டார். அரசியலமைப்பின் மூன்றாம் பாகத்தால் வழங்கப்பட்ட அடிப்படை உரிமைகளை அமல்படுத்துவதற்கான பொருத்தமான நடவடிக்கைகளின் மூலம் உச்சநீதிமன்றத்தை நாடுவதற்கான உரிமையைச் சரத்து 32 வழங்குகிறது. சாதாரண சட்டகளின் மூலமாக அடிப்படை உரிமைகளை நடைமுறைப் படுத்துவதில் சிக்கல்கள் ஏற்படும் போது உச்ச நீதி மன்றமும், உயர் நீதி மன்றங்களும் நீதி பேராணை (Writs) வழங்குகிறது. அவைகளாவன ஹேபியாஸ் கார்பஸ் (habeas corpus) மாண்டமஸ் (mandamus) தடை (prohibition) குவா வாரன்டோ (quo warranto) மற்றும் செர்டாரரி (certiorari) ஆகியவை.

## 2.5.6. அடிப்படை கடமைகள்

இந்திய அரசியல் சட்டம் பகுதி IV அ, பிரிவு 51 அ இதில் உள்ள 42 ஆவது அரசு சட்டத்திருத்தம் இந்தியக் குடிமக்களின் கடமைகளை வலியுறுத்துகிறது. அவைகளாவன;

1. அரசியல் சட்டதிட்டம், தேசியச் சின்னம், தேசியக் கொடி மற்றும் தேசிய கீதத்திற்கு மதிப்பு அளித்தல்.

2. தேசிய சுதந்திரப் போராட்ட வீரர்களின் உன்னத உணர்வு நினைத்துப் பேணுதல்.

3. நமது நாட்டின் இறைமை, ஒற்றுமை மற்றும் ஒருமைப்பாடு நிலைநிறுத்துதலும் பாதுகாத்தலும்.

4. நாட்டின் பாதுகாப்பிற்காகச் செயலாற்றல், தேவை ஏற்பட்டால் பாதுகாப்புப் பணியில் ஈடுபடல்.

5. மதம், மொழி, இனம், வகுப்பு வேற்றுமைகளைத் துறந்து சகோதர உணர்வுடன் தேசிய ஒற்றுமை ஓங்கச் செய்தல்.

6. நம்முடைய பண்பாடு பன்முகப் பாரம்பரியக் கலாசாரத்தின் மேன்மையை மதித்தல் பாதுகாத்தல்.

7. காடு, ஏரி, குளம், ஆறு மற்றும் விலங்குகள் போன்ற இயற்கை வளங்களையும் சுற்றுச்சூழலையும் பாதுகாத்தல் - மேம்படுத்துதல்.

8. அறிவியல் மனப்பான்மை மனித நேயம், ஆய்வு மனப்பான்மை, சீர்திருத்தம், சிந்தனை ஆகியவற்றை மேம்படுத்தல்.

9. நாட்டின் பொதுச் சொத்துக்களை அக்கறையுடன் பாதுகாத்தல், வன்முறையைக் கைவிடல்.

10. நாடு தன்னுடைய முயற்சியிலும், சாதனைகளிலும் தொடர்ந்து முன்னேறும் வகையில் அனைத்துத் துறைகளிலும் தனிமனித மற்றும் கூட்டு நடவடிக்கைகளில் மேன்மைக்குப்பாடுபடுதல்.

11. பெற்றோர்கள் அல்லது பாதுகாவலர்கள் 6 முதல் 14 வயது வரை உள்ள குழந்தைகள் கல்வி பெறுவதற்கு வாய்ப்பினை ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும். இக்கடமை 2002 ஆம் ஆண்டு 86 ஆவது அரசியலமைப்புத் திருத்தத்தின்படி இணைக்கப்பட்டது ஆகும்.

## 2.5.7. அரசு நெறிமுறைக் கோட்பாடுகள்

**(Directive Principles of State Policy)**

சட்டங்கள் இயற்றும்போதும் அவற்றை நடைமுறைப் படுத்தும்போதும் பின்பற்ற வேண்டிய கருத்துக்கள் கொண்ட தொகுப்பே "அரசு நெறிமுறைக் கோட்பாடுகள்" எனலாம். இந்திய அரசியலமைப்பு முகவுரையில் குறிப்பிடப்பட்டுள்ள சமய, பொருளாதார, அரசியல், நீதி,

சமத்துவம், சுதந்திரம், ஒற்றுமை, ஒருமைப்பாடு, சகோதரத்துவம், தனிமனித கண்ணியம் ஆகியவற்றை நிலைநாட்டுவதற்கு வழிகாட்டவல்லக் கொள்கைகளாக அரசு நெறிமுறைக் கோட்பாடுகள் திகழ்கின்றன. இவை தார்மீகத் தன்மையைப் பெற்றவையாகும். இந்திய அரசியலமைப்பின் நான்காம் பாகத்தில், அரசாங்கம் சட்டம் இயற்றும் பொழுது பின்பற்ற வேண்டிய அறநெறிக் கோட்பாடுகள் வகுக்கப்பட்டுள்ளன.

இந்திய அரசியலமைப்பில் நான்காவது பகுதியில் "36 முதல் 51 விதிகள்" வரை உள்ள பகுதியில் அரசு நெறிமுறைக் கோட்பாடுகள் இடம் பெற்றுள்ளன. அடிப்படை உரிமைகளுக்கு நீதிமன்ற உத்தரவாதம் இருக்கும்போது, அறநெறிக் கோட்பாடுகளுக்குத் தார்மீக உத்தரவாதம் மட்டுமே உள்ளன. இன்றைய நிலையில் அறநெறிக் கோட்பாடுகள் அதிக முக்கியத்துவம் பெற்று வருகின்றன.

நியாயமான ஊதியம் மற்றும் வேலைக்கு சம ஊதியம் (சரத்து 39 (ஈ); குழந்தை மற்றும் இளைஞர்களை சுரண்டலிலிருந்து பாதுகாக்கும் உரிமை (39 F); வேலை செய்யும் உரிமை (சரத்து 41); மருத்துவ பராமரிப்பு உரிமை (சரத்துகள் 41 மற்றும் 47); முதுமையில் சமூகப் பாதுகாப்புக்கான உரிமை (சரத்து 41); நியாயமான மற்றும் மனித நேயங்களைப் பாதுகாப்பதற்கான உரிமை (சரத்து 42); மகப்பேறு தொடர்பான உரிமை (சரத்து 42); வாழ்க்கைத் தரத்திற்கான உரிமை (சரத்து 43); மற்றும் ஊட்டச்சத்து நிலை மற்றும் வாழ்க்கைத் தரங்களை உயர்த்துவதற்கான உரிமை (சரத்து47). இதுமட்டுமின்றி சமூக மேம்பாட்டுகான பல்வேறு ஆலோசனைகளை வழங்கியுள்ளது. குறிப்பாக பஞ்சயாத்து ராஜ், சுற்றுப்புறச் சூழலைப் பாதுகாத்தல், நினைவு சின்னங்களை பாதுகாத்தல் மற்றும் கால்நடை வளர்ப்பை ஊக்கப்படுத்துதல் ஆகிய அம்சங்கள் இதில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## 2.5.8. கூட்டாட்சி மற்றும் வேற்றுமையில் ஒற்றுமை

இந்திய அரசியலமைப்பின் மற்றொரு முக்கிய அம்சம் என்னவென்றால், அது கூட்டாட்சி வடிவத்தில் ஆனால் சாராம்சத்திலும் அடிப்படையிலும் ஒற்றுமையாக இருக்கும் ஒரு அரசாங்க முறையை வழங்கியுள்ளது. இது கூட்டமைப்பின் மூன்று சிறப்பியல்புகளைக்

கொண்டுள்ளது- எழுதப்பட்ட மற்றும் நெகிழா அரசியலமைப்பு, மத்திய மாநில அரசுகளுக்கிடையே அதிகாரப் பகிர்வு மற்றும் ஒரு உச்ச நீதிமன்றம். இந்த எழுதப்பட்ட அரசியலமைப்பில் அது பரிந்துரைக்கப்பட்ட நடைமுறைக்கு ஏற்ப மட்டுமே திருத்தப்பட முடியும் என்ற அடிப்படையில் உள்ளது. அதிகாரங்கள் மூன்று பிரிவுகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன: 97 யூனியன் பட்டியல், 66 மாநிலப் பட்டியல் மற்றும் 47 பாடங்கள் பொதுப் பட்டியல். நாட்டின் உயர்ந்தபட்ச நீதிபரிபாலன முறைக்காக உச்ச நீதிமன்றம் அமைக்கப்பட்டு செயல்பட்டு வருகிறது. அதே சமயத்தில் அமெரிக்க அரசியலமைப்பைப் போலன்றி, இந்திய அரசியலமைப்பு அனைத்து மக்களுக்கும் ஒரே குடியுரிமையை வழங்கிறது. ஆனால் சாராம்சத்தில், இந்திய அரசியலமைப்பு ஒற்றுமை தன்மையைக் கொண்டுள்ளது. சட்டமன்ற, நிதி மற்றும் நிர்வாகத் துறைகளில் மாநிலங்களின் மீது மத்திய அரசு கேள்விக்கேக்க இயலாத அதிகாரத்தைக் கொண்டுள்ளது. அவசர காலங்களில் இந்தக் கட்டுப்பாடு இறுக்கமாகிறது.

## 2.5.9. பாராளுமன்ற முறையிலான அரசாங்கம்

அரசியலமைப்பு மையத்திலும் மாநிலத்திலும் பாராளுமன்ற முறையிலான நிர்வாகத்தை நடைமுறைப்படுத்துகிறது. இம்முறைப்படி மத்தியில் ஜனாதிபதியும் மாநிலங்களில் ஆளுநர்களும் பெயரளவிலான தலைவர்களாக உள்ளன. அமைச்சரவையே முழுமையான அதிகாரங்களைப் பெற்றுள்ளது மற்றும் சம்பந்தப்பட்டச் சட்டமன்றத்திற்கு இது பொறுப்பாகிறது. அமைச்சரவை அதன் பதவிக் காலம் முடிவதற்கு முன்பே சட்டமன்றத்தில் நம்பிக்கையில்லா வாக்கெடுப்பு மூலம் பதவியில் இருந்து நீக்கப்படலாம். சுருங்கக்கூறி நிர்வாகத்தின் மையமாக விளங்குவது நாடாளுமன்றமே ஆகும். நாடாளுமன்றத்தின் அனுமதியின்றி எந்த நிர்வாக நடவடிக்கைகளையும் செய்ய இயலாது.

## 2.5.10. ஈரவை நாடாளுமன்றம்

இந்த முறை மத்தியிலும் மாநிலங்களிலும் நடைமுறையிலுள்ளது. கீழ் சபையின் (Lok Sabha) உறுப்பினர்கள் மக்களால் நேரடியாக

தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். கீழ் சபையின் காலம் 5 ஆண்டுகள் ஆகும், அதற்கு முன்னரும் கலைக்கப்படலாம். மேலவையின் (Rajya Sabha) உறுப்பினர்கள் 6 வருட காலத்திற்கு மறைமுகமாக தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். மேல் சபை ஒரு நிரந்தர அமைப்பாகும் அதன் உறுப்பினர்களில் மூன்றில் ஒரு பங்கு ஒவ்வொரு 2 வருடங்களுக்கும் ஓய்வுப் பெறுகிறார்கள்.

## 2.5.11. நெகிழா மற்றும் நெகிழும் அமைப்பு

நெகிழா மற்றும் நெகிழும் தன்மை இந்திய அரசியலமைப்பின் சிறப்புத்தன்மையாகும். எடுத்துக்காட்டாக விதி 2, 3, 4 மற்றும் 169 மாநிலங்களின் இணைப்பு, அமைப்பு மற்றும் பெயர் மாற்றம் தொடர்பான விதிகளை, மைய அரசு சட்டசபைகளின் பெரும்பான்மை ஆதரவின் அடிப்படையில் மாற்றலாம். 368 ஆவது சரத்தினைச் சார்ந்த சட்டங்கள் நிறைவேற்ற இருசட்டசபைக்கு 2∴3 உறுப்பினர்கள் முன்னிலையில் சிறப்புப் பெரும்பான்மை அடிப்படையில்தான் மாற்ற இயலும். எனவே நெகிழும் மற்றும் நெகிழா தன்மை இந்திய அரசியலமைப்பின் சிறப்பியல்புகளாகும். 70 ஆண்டுகளில் 126 அரசியலமைப்புத் திருத்தங்கள் கொண்டுவரப்பட்டவை நெகிழும் தன்மையை வெளிப்படுத்துகிறது.

## 2.5.12. சுதந்திரமான நீதித்துறை

அரசியலமைப்பின்படி நீதித்துறையானது நிர்வாகத்திடமிருந்து சுதந்திரமான செயல்படுகிறது. இந்திய குடியரசுத் தலைவர் உச்சநீதிமன்றம் மற்றும் உயர் நீதிமன்றங்களின் நீதிபதிகளை இந்திய தலைமை நீதிபதியுடன் கலந்தாலோசித்த பின்னர் நியமிக்கிறார். நீதிபதிகள் நிர்வாகக் கட்டுப்பாட்டில் இருந்து விடுபடுகிறார்கள். அவர்களின் பதவிக்காலம் உத்தரவாதம் மற்றும் அவர்களின் சம்பளம் அரசியலமைப்பால் நிர்ணயிக்கப்படுகிறது. இத்தகைய காரணங்களால் சுதந்திரமான நீதி அனைவருக்கும் கிடைப்பதற்கு உத்தரவாதம் வழங்குகிறது.

குறிப்பு

## 2.5.13. நீதிப்புனராய்வு

இந்திய அரசியலமைப்பின் மற்றொரு குறிப்பிடத்தக்க அம்சம் நீதிப்புனராய்வு. இதன் பொருள், பாராளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்ட ஒரு சட்டத்தை அடிப்படை உரிமைகளுக்கு முரணாக இருந்தால் அது செல்லாது என்று அறிவிக்க உச்ச நீதிமன்றத்திற்கு அதிகாரம் உள்ளது. மாநில சட்டமன்றங்கள் நிறைவேற்றிய சட்டங்களின் விஷயத்தில், இந்த அதிகாரம் சம்பந்தப்பட்ட உயர் நீதிமன்றங்களுக்கு வழங்கப்படுகிறது. எனவே, நீதிப்புனராய்வு முறை அரசியலமைப்பின் மேலாதிக்கத்தைப் பாராளுமன்றத்தின் மேலாதிக்கத்திலிருந்து வேறுபட்டது என்று குறிப்பிடுகிறது.

## 2.5.14. வயதுவந்தோர் வாக்குரிமை

வயது வந்தோருக்கான வாக்குரிமை அரசியலமைப்பின் ஒரு முக்கிய அம்சமாகும். 1946 வரை, வரி செலுத்துவோர் மற்றும் சொத்து உரிமையாளர்கள் மட்டுமே வாக்காளர்களாக இருந்தனர். புதிய அரசியலமைப்பை அமல்படுத்தியதன் மூலம், 21 வயது (இப்போது 18 வயது) அடைந்த அனைத்து மக்களும் தங்கள் வாக்குரிமையைப் பயன்படுத்தத் தகுதியுடையவர்கள். இதன்மூலம், கிட்டத்தட்ட 50% மக்கள் வாக்காளர்களாகச் சேர்க்கப்பட்டனர்.

**உங்கள் முன்னேற்றத்தைச் சோதித்துச் சரிபார்க்கவும்**

8. அரசியலமைப்பின் முகவுரையின் நோக்கம் என்ன?
9. அரசியலமைப்பின் எந்த பகுதி அடிப்படை உரிமைகளை விவரிக்கிறது
10. சரத்து 21 இன் முக்கியத்துவம் என்ன?
11. அரசியலமைப்பால் மத உரிமைகள் எவ்வாறு உறுதிப்படுத்தப்படுகின்றன ?
12. இந்திய அரசியலமைப்பில் குறிப்பிடப்பட்டுள்ள நீதிப்பேராணை யாவை?

## 2.6. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்

குறிப்பு

1. இது 1861-ஆம் ஆண்டில் அறிமுகப்படுத்தப்பட்டது. இது இந்தியாவில் பாராளுமன்ற முறைக்கு அடித்தளம் அமைத்து, இலாக்க முறையைச் செயல்படுத்தியது.

2. சட்டமன்ற உறுப்பினர்களின் எண்ணிக்கை அதிகரிக்கப்பட்டது. தேர்தல்கள் கொள்கை அடிப்படையில் ஏற்றுக்கொள்ளப்பட்டன. உறுப்பினர்கள் கேள்வி கேட்க அனுமதிக்கப்பட்டனர்.

3.டை என்றால் இரண்டு, யார்க்கி என்றால் ஆட்சி (இரட்டை ஆட்சி) என்றும் பொருள். இது 1919-ஆம் ஆண்டு சட்டத்தின் மூலம் இந்திய மாகாணங்களில் அறிமுகப்படுத்தப்பட்டது.

4. மாகாணச் சுயாட்சி என்பது பகுதி சுதந்திரம் என்று பொருள். இது 1935-ஆம் ஆண்டு சட்டத்தால் அறிமுகப்படுத்தப்பட்டது. இதன்படி மாகாணங்கள் நேரடியாக ஆங்கிலேயர்க்கு பதிலளிக்க வேண்டும், மத்திய அரசுக்கு அல்ல.

5. 1946-ஆம் ஆண்டு அரசியலமைப்பு சபையின் உறுப்பினர்கள் மாகாண சட்டமன்ற உறுப்பினர்களால் மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

6. அவர் அரசியலமைப்புச் சபையின் தலைவராகப் பணியாற்றினார். அரசியலமைப்புச் சபையால் நியமிக்கப்பட்டப் பல குழுக்களுக்கு அவர் தலைமை தாங்கினார்.

7. இது நவம்பர் 26, 1949-ஆம் ஆண்டில் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

8. அரசியலமைப்பின் முகவுரை இந்தியாவை “இறையாண்மை, சோசலிச, மதச்சார்பற்ற, ஜனநாயக குடியரசு’’ என்று அறிவிக்கப்படுகிறது. இந்தியா காமன்வெல்த் நாடுகளின் உறுப்பினராக இருந்தாலும், அது உள்நாட்டிலும் வெளியிலும் இறையாண்மையைக் கொண்டுள்ளது. குடியரசின் நோக்கம் அதன் அனைத்து குடிமக்களுக்கும், நீதி, சுதந்திரம், சமத்துவம் மற்றும் சகோதரத்துவம் ஆகியவற்றைப் பாதுகாப்பதாகும்.

9. அரசியலமைப்பின் மூன்றாம் பகுதி அடிப்படை உரிமைகள் பற்றி விவாதிக்கிறது (சரத்துக்கள் 12-35).

10. இந்தச் சரத்து வாழ்வியல் சுதந்திரத்தைப் பற்றியது. இது இந்தியாவில் வசிக்கும் அனைத்து மக்களின் உயிர் வாழ்வதை உறுதிச்செய்கிறது.

11. சரத்துக்கள் 25-28 மத உரிமைகளுக்கு உத்தரவாதம் அளிக்கிறது. நம்பிக்கை மற்றும் வழிபாடு, வரி செலுத்துதல் மற்றும் மத நடவடிக்கைகளில் பங்கேற்பதற்கான உரிமை உள்ளிட்ட மதச் சுதந்திரத்தை உறுதிச்செய்கிறது.

12. இவை இந்திய அரசியலமைப்பால் குறிப்பிடப்பட்டுள்ள ஆட்கொணர்வு நீதிப்பேராணை (Habeas Corpus) கட்டளை நீதிப்பேராணை (Mandamus), தடை நீதிப்பேராணை (Prohibition), உரிமைவினா நீதிப்பேராணை (Quo-warranto) மற்றும் தடைமாற்று நீதிப்பேராணை (Certiorary).

13. மொழியியல் மாகாணங்களின் விருப்பத்தை விசாரிக்க நியமிக்கப்பட்டது.

14. இந்தக் குழு தற்போதைக்கு மொழியியல் மாநிலங்களை உருவாவதைத் தள்ளிப்போட அறிவுறுத்தியது. ஒற்றுமை, தேசிய பாதுகாப்பு மற்றும் பொருளாதார மேம்பாடு ஆகியவற்றைக் காலத்தின் கட்டாயம் என்று வலியுறுத்தப்படுகிறது.

15. ஆந்திரா 1953-ஆம் ஆண்டில் மொழியின் அடிப்படையில் உருவாக்கப்பட்ட முதல் மாநிலமாகும்.

16. தனி ஆந்திராவைக் கோரி பொட்டி ஸ்ரீராமாலு உண்ணா விரதம் இருந்து 58 நாட்களுக்குப் பிறகு இறந்தார். இதன் பிறகு ஆந்திராவில் மிகப் பெரியப் போராட்டங்கள் நடைப்பெற்றது. இறுதியில் ஆந்திரா தனி மாநிலமாக 1953 உதயமானது.

17. ஆகஸ்ட் 1953 இல் (எஸ்.ஆர்.சி), நீதிபதி ஃபஸல் அலி, கே.எம். பனிக்கர், மற்றும் ஹிருதயநாத் குன்ஸ்ரு ஆகியோர் நியமிக்கபட்டார்கள்.

18. மாநில மறுசீரமைப்புச் சட்டம் 1956 நவம்பரில் பாராளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்டது.

19. மாநில மறுசீரமைப்புச் சட்டத்தால் பதினான்கு மாநிலங்களும் ஆறு யூனியன் பிரதேசங்களும் உருவாக்கப்பட்டன.

20. பஞ்சாப் மாநில மறுசீரமைப்புச் சட்டம் இயற்றப்பட்டபோது திருமதி இந்திரா காந்தி பிரதமராக இருந்தார்.

21. ஒரு நாட்டின் வெளியுறவுக் கொள்கை, இராஜதந்திரத்தின் மூலம் அதன் பகிரப்பட்ட நோக்கங்களை மேம்படுத்துவதற்கான நாட்டின்

ஒருங்கிணைந்த முயற்சிகள் என வரையறுக்கப்படலாம். தேசிய இலக்குகளை உருவாக்குதல் மற்றும் இராஜதந்திர வழிகள் மூலம் அவற்றை அடைவதற்கான முயற்சிகள் வெளியுறவுக் கொள்கை என்று அழைக்கப்படுகிறது.

22. வெளியுறவுக் கொள்கை கீழ்க்கண்ட காரணிகளான புவியியல், வரலாறு, கலாச்சாரம் மற்றும் அரசியல் மற்றும் நடைமுறையில் உள்ள உலக ஒழுங்கு போன்ற பல காரணிகளால் தீர்மானிக்க முடியும்.

23. இந்தியச் சுதந்திரப் போராட்டம் குறிப்பாக காந்தியின் அகிம்சைக் கொள்கை வெளியுறவுக் கொள்கையை உருவாக்க முக்கியக் காரணிகளாக விளங்குகிறது. (எ.கா.) சர்வதேச அளவில் இந்தியா அமைதியை விரும்பும் நாடாகவும், எந்த நாட்டின் மீதும் தானாக வலுக்கட்டாயமாகப் போரைத் திணிக்கும் நாடாகவும் இல்லாமல் உள்ளது.

24. இந்தியா சுதந்திரமானபோது,அமெரிக்காவும் சோவியத் யூனியனும் ஒருவருக்கொருவர் சவாலான சித்தாந்தங்களைக் கொண்ட இருப் பெரும் சக்திகளாக இருந்தன. இந்தியா இவ்விருசக்திகளிடமிருந்து சமமான தூரத்தைத் தக்க வைத்துக் கொள்ள விரும்பியது மற்றும் அணிசேரா என்ற புதிய கொள்கையை உருவாக்கியது..

25. எல்லைகளை மதித்தல் மற்றும் இறையாண்மை, ஆக்கிரமிப்பு, உள்நாட்டு விவகாரங்களில் தலையிடாதது இருத்தல், சமத்துவம் மற்றும் பரஸ்பர நன்மை மற்றும் அமைதியான சகவாழ்வு ஆகியவை பஞ்சசீலக் கொள்கைகளாகும்.

26. முதல் ஆப்ரோ-ஆசிய மாநாடு இந்தோனேசிய தலைநகர் பாண்டுங்கில் ஏப்ரல் 1955 இல் நடைபெற்றது. இதில் 29 நாடுகள் பங்கேற்றன.

27. அணிச்சேரா இயக்கத்தின் முதல் மாநாடு 1961-ஆண்டில் யூகோஸ்லாவியாவில் பெல்கிரேடில் நடைபெற்றது. இதில் 25 நாடுகள் பங்கேற்றன.

## 2.7. அத்தியாயச் சுருக்கம்

- அரசியலமைப்புத் தற்போதைய அரசியலமைப்பு நன்கு எழுதப்பட்ட அரசியலமைப்பு ஆகும்.

**குறிப்பு**

- இது 22 பாகங்கள், 395 சரத்துக்கள் மற்றும் 12 அட்டவணைகளைக் கொண்டுள்ளது.
- தற்போதைய அரசியலமைப்பின் பரிணாமத்தின் துவக்கம் 1861 ஆம் ஆண்டுச் சட்டமாகும்.
- இந்தச் சட்டம் இந்தியாவில் பாராளுமன்ற முறையை அறிமுகப்படுத்தியது.
- இதைத் தொடர்ந்து, இரண்டாவது கவுன்சில் சட்டம் சட்டமன்றத்தின் வலிமையை அதிகரித்தது.
- மிண்டோ-மார்லி சட்டம் 1909 வகுப்புவாதப் பிரதிநிதித்துவத்தை வழங்கியது.
- 1919 சட்டம் மத்தியில் இருசபை சட்டமன்றத்தை மாகாணங்களில் இரட்டை ஆட்சியை அறிமுகப்படுத்தியது.
- 1935 சட்டம் மாநிலச் சுயாட்சி மற்றும் மத்தியில் கூட்டாட்ச்சியை அறிமுகப்படுத்தியது.
- டாக்டர் ராஜேந்திர பிரசாத் தலைமையிலான அரசியலமைப்புச் சபை அரசியலமைப்பை உருவாக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டது.
- டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அரசியலமைப்பின் வரைவுக் குழுக்குத் தலைமை தாங்கினார்.
- தற்போதைய அரசியலமைப்பு மதச்சார்பற்றது.
- அரசியலமைப்பின் மூன்றாம் பகுதி, சரத்துக்கள் 12-35, ஆறு அடிப்படை உரிமைகளை விவரிக்கிறது. இந்த உரிமைகள் சமத்துவம், சுதந்திரம், சுரண்டலுக்கு எதிரான உரிமை, மத உரிமைகள், சிறுபான்மையினரின் கலாச்சார மற்றும் கல்வி உரிமைகள் மற்றும் அரசியலமைப்புத் தீர்வுகள்.
- பகுதி IV (36-51) அரசுக்கு வழிகாட்டும் நெறிமுறைக் கோட்பாடுகளை விளக்குகிறது.
- பகுதி IV A (51 A) அடிப்படைக் கடமைகளைக் குறிப்பிடுகிறது.
- அரசியலமைப்புப் பாராளுமன்ற நிர்வாகத்தை அறிமுகப்படுத்தியது.
- நீதித்துறை மறுஆய்வு என்பது இந்திய அரசியலமைப்பின் மற்றொரு அம்சமாகும்.

**குறிப்பு**

- அரசியலமைப்பு வயது வந்தோருக்கான வாக்குரிமையை வழங்குகிறது.
- மாநில மறுசீரமைப்புச் சட்டம் 1956-ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்டு இது 14 மாநிலங்களையும் 6 யூனியன் பிரதேசங்களையும் உருவாக்கியது.
- மொழியியல் மாநிலங்களின் அடிப்படையில் மறுசீரமைப்பதற்கானக் கோரிக்கைச் சுத்திந்திர இந்தியாவில் எழுப்பப்பட்டப் பிரச்சனைகள் அல்ல; அது சுதந்திரப் போராட்டத்தின் ஒரு பகுதியாக இருந்தது.
- 1921-ஆம் ஆண்டில், காங்கிரஸ் அதன் அரசியலமைப்பைத் திருத்தி மற்றும் அதன் பிராந்திய கிளைகளை மொழியியல் அடிப்படையில் மறுசீரமைத்தது.
- 1948 ஆம் ஆண்டில், அரசியலமைப்புச் சபை எஸ்.கே தார் தலைமையில் நியமிக்கப்பட்டக் குழு மொழி வாரிப் பிரச்சனையை ஆராய்ந்தது.
- அதே ஆண்டில், இப் பிரச்சனைகாக ஜேவிபி குழு நியமிக்கப்பட்டது.
- இரு குழுக்களும் மறுசீரமைப்பிற்கு ஆதரவாக இல்லை.
- பொட்டி ஸ்ரீராமாலு தனி ஆந்திராவைக் கோரி சாகும்வரை உண்ணாவிரதம் இருந்து உயிர் நீத்தார். அவரது மரணத்திற்குப் பிறகு, ஆந்திரா முழுவதும் கலவரம் பரவியது.
- இறுதியில் புதிய ஆந்திரா மாநிலம் 1953-ஆம் ஆண்டில் உருவாக்கப்பட்டது. மொழியின் அடிப்படையில் உருவாக்கப்பட்ட முதல் மாநிலம்.
- இதைத் தொடர்ந்து, மத்திய அரசு மாநில மறுசீரமைப்பு ஆணையத்தை நியமித்தது.
- ஆணையம் சில மாற்றங்களுடன் மாநில மறுசீரமைப்பிற்கு ஆதரவாக தனது அறிக்கையைச் சமர்ப்பித்தது.
- எஸ்.ஆர்.சியின் பரிந்துரைகளின் அடிப்படையில், மாநில மறுசீரமைப்புச் சட்டம் 1956 இல் நிறைவேற்றப்பட்டது. 14 மாநிலங்களும் 6 யூனியன் பிரதேசங்களும் உருவாக்கப்பட்டன.

**குறிப்பு**

- இருப்பினும், இந்தச் சட்டம் பம்பாய் மாநிலத்தைப் பிரிப்பதற்கான கோரிக்கையை ஏற்கவில்லை.
- 1960 இல், பம்பாய் மாநிலம், மகாராஷ்டிரா மற்றும் குஜராத் எனப் பிரிக்கப்பட்டது. பம்பாய் மற்றும் அகமதபாத் அந்தந்த மாநில தலைநகரங்களாக அறிவிக்கப்பட்டது..
- 1966 ஆம் ஆண்டில், திருமதி இந்திரா காந்தி பஞ்சாப் மறுசீரமைப்புச் சட்டத்தை நிறைவேற்றினார். அதன்படி பஞ்சாப் மற்றும் ஹரியானா மாநிலங்கள் உருவாக்கப்பட்டன. புதிதாக நிறுவப்பட்ட யூனியன் பிரதேசங்கள் (சண்டிகர்) இரு மாநிலங்களின் கூட்டு தலைநகரங்களாகச் செயல்படுகிறது. இதோடு மொழி வாரி மறுசீரமைப்பு முடிவுக்கு வந்தது.
- இந்தியா சுதந்திரத்திற்குப் பின் அதன் சொந்த வெளியுறவுக் கொள்கையை உருவாக்கியது.
- முதல் பிரதமர் ஜவஹர்லால் நேரு இந்தியாவின் வெளியுறவுக் கொள்கையை வகுப்பதில் முக்கியப் பங்கு வகித்தார். எனவே இந்தியாவின் வெளியுறவுக் கொள்கையின் சிற்பி என்று அழைக்கப்படுகிறார்.
- இந்தியாவின் வெளியுறவுக் கொள்கை புவியியல், வரலாறு, கலாச்சாரம் மற்றும் அரசியல் மற்றும் நடைமுறையில் உள்ள உலக ஒழுங்கு போன்ற பல்வேறு காரணிகளால் தீர்மானிக்கப்பட்டது.
- பஞ்சசீலக் கொள்கைகள் சர்வதேச அமைதி மற்றும் சிரத்தன்மையை உறுதிப்படுத்தும் ஐந்து அம்சங்களைக் கொண்டிருக்கின்றன. அதுமட்டுமின்றி இக்கொள்கை இந்தியாவின் வெளியுறவுக் கொள்கையின் முதுகெலும்பாகக் கருதப்படுகிறது.
- நேருவும் சீனப் பிரதமரும் பஞ்சசீலக் கோட்பாடுகளில் கையெழுத்திட்டனர்.
- இந்திய வெளியுறவுக் கொள்கையின் மற்றொரு அடையாளமாக பாண்டுங் மாநாடு இருந்தது
- முதல் ஆப்ரோ-ஆசிய மாநாடு இந்தோனேசிய தலைநகர் பாண்டுங்கில் ஏப்ரல் 1 1955 இல் நடைபெற்றது, இதில் 29 நாடுகள் பங்கேற்றன. (1) மூன்றாம் உலக நாடுகளிடையே

நல்லெண்ணத்தையும் ஒத்துழைப்பையும் ஊக்குவிப்பதும் (2) ஆசிய மற்றும் ஆபிரிக்க மக்களின் சமூக, பொருளாதார மற்றும் கலாச்சார பிரச்சனைகளைக் கருத்தில் கொள்வதும் (3) ஆசியா மற்றும் ஆப்பிரிக்காவின் நிலையை உயர்த்துவதும் இம்மாநாட்டின் நோக்கங்கள். உலக அமைதி மற்றும் ஒத்துழைப்பை மேம்படுத்துவதற்கு இந்த மாநாடு உறுதியேற்றது.

- இந்தியாவின் வெளியுறவுக் கொள்கையின் மற்றொரு முக்கிய அம்சம், அணிசேரா இயக்கம், அதன் முதல் மாநாடு 1961 ஆண்டில் யூகோஸ்லாவியாவில் பெல்கிரேடில் நடைபெற்றது, இதில் 25 நாடுகள் பங்கேற்றன.

## 2.8. முக்கியச் சொற்கள்

**இலாக்க முறை:** வெளி விவகாரங்கள், பாதுகாப்பு, வீடு மற்றும் நிதி போன்ற பல்வேறு துறைகளை பிரித்தல். இலாக்க அமைப்பின் அடிப்படை நோக்கம் அதிகாரப் பரவலாக்கலை அறிமுகப்படுத்துவதாகும்.

**மாகாணங்கள்:** இது நாட்டிற்குள் உள்ள நிர்வாக அமைப்பு. பிரிட்டிஷ் ஆட்சியின் போது,அனைத்து மாநிலங்களும் மாகாணங்கள் என்று அழைக்கப்பட்டன.

**கூட்டாச்சி:** ஒரு சக்திவாய்ந்த அரசை உருவாக்க சிறிய மாநிலங்களை உள்ளடக்கிய ஒரு அமைப்பு. இது 1935 சட்டத்தால் இந்தியாவில் அறிமுகப்படுத்தப்பட்டது.

**அரசியலமைப்பு:** இது மாநிலத்தையும் சமூகத்தையும் ஒழுங்குபடுத்துவதற்கான சட்ட ஆவணம். இது எழுதப்பட்ட அல்லது எழுதப்படாத வடிவத்தில் இருக்க வேண்டும். இந்திய அரசியலமைப்பு எழுதப்பட்டுள்ளது மற்றும் மிக நீண்ட அரசியலமைப்பு.

**மதச்சார்பின்மை:** மதச்சார்பின்மை என்ற சொல்லுக்கு ஒரு நாட்டின் சாதாரண சமூக மற்றும் அரசியல் நடவடிக்கைகளில் மதம் ஈடுபடக்கூடாது என்ற நிலை உள்ளது.

**கீழ் சபை (மக்களவை):** அனைத்து உறுப்பினர்களும் நேரடியாக மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். இது ‘லோக் சபா’ என்று அழைக்கப்படுகிறது. இதன் பதவிக்காலம் 5 ஆண்டுகள். அதன் பதவிக்காலத்திற்கு முன்பே அது கலைக்கப்படலாம்.

**மேல் சபை:** (மாநிலங்களவை) ஜனாதிபதியால் பரிந்துரைக்கப்பட்ட 12 உறுப்பினர்களைத் தவிர அனைத்து உறுப்பினர்களும் மாநில சட்டமன்றத்தால் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். இது 'ராஜ்ஜிய சபா' என்று அழைக்கப்படுகிறது. இவை நிரந்தரமானது. ஒரு உறுப்பினருக்கான காலம் 6 ஆண்டுகள். மூன்றில் ஒரு பங்கு உறுப்பினர்கள் ஒவ்வொரு 2 வருடங்களுக்கு ஒருமுறை ராஜினாமா செய்வார்கள்.

**மொழிஇயல்:** மொழியியல் என்பது ஒரு மொழியின் அறிவியல் ஆய்வு. மொழி எப்போதும் கலாச்சாரத்துடன் இணைக்கப்பட்டுள்ளது.

**மொழியியல் மாகாண ஆணையம்:** 17 ஜுன் 1948 இல், மொழியியல் மாகாண ஆணையம் எஸ்.கே. தார் தலைமையில் அமைக்கப்பட்டது. இது மொழி வாரி மாநிலங்கள் கோரிக்கைக் குறித்து உரிய விசாரணை நடத்தி அரசுக்கு தங்களுடையப் பரிந்துரையை வழங்கியது.

**எஸ்.ஆர்.சி:** மாநில மறுசீரமைப்பு ஆணையத்தில் ஃபஸ்ல் அலி, கே.எம். பனிக்கர், மற்றும் ஹிருதயநாத் குன்ஸ்ரு ஆகியோர் இடம்பெற்றனர். இந்தக்குழுப் பரிந்துரையின் பேரின் மாநிலம் மறுசீரமைப்புச் சட்டம் 1956 ஆம் ஆண்டு நடைமுறைக்கு வந்தது.

**குருத்வாரா பிரபந்தக் குழு:** ஷிரோமணி குருத்வாரா பிரபந்தக் கமிட்டி என்பது குருத்வாராக்கள், பஞ்சாப், ஹரியானா, மற்றும் இமாச்சலப் பிரதேசம் ஆகிய மூன்று மாநிலங்களில் உள்ள சீக்கிய வழிபாட்டுத் தலங்கள் மற்றும் சண்டிகரின் யூனியன் பிரதேசங்களை நிர்வகிக்கும் பொறுப்பாகும்.

**வெளியுறவுக் கொள்கை:** வெளியுறவுக் கொள்கை என்பது ஒரு நாடு மற்ற நாடுகளுடன் தொடர்புக் கொள்ளும்போது ஊக்குவிக்கும் கொள்கைகள், ஆர்வங்கள் மற்றும் குறிக்கோள்களின் மொத்தத் தொகுப்பு.

**பாண்டுங்:** இது இந்தோனேசியாவில் உள்ளது. முதல் ஆப்ரோ-ஆசிய மாநாடு ஏப்ரல் 1955 இல் பாண்டுங்கில் நடைபெற்றபோது இந்த இடம் வரலாற்று முக்கியத்துவத்தைப் பெற்றது.

**வல்லரசுகள்:** இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு, அமெரிக்கா முதலாளித்துவச் சித்தாந்தத்தை ஊக்குவித்தது, சோவியத் யூனியன் கம்யூனிசச் சித்தாந்தத்தைப் பின்பற்றியது. இரு நாடுகளும் கூட்டணிகள் மற்றும் எதிர் கூட்டணிகளின் மூலம் தங்கள் சித்தாந்தங்களை உலகம்

முழுவதும் பரப்ப விரும்பின. 1990 ல் சோவியத் யூனியன் பிளவுபடும் வரை இந்த நாடுகள் உலக வல்லரசுகள் என்று அழைக்கப்பட்டன.

**அணிசேரா இயக்கம்:** முதலாளித்துவச் சிந்தனையும் அல்லது கம்யூனிசச் சித்தாந்தத்தை ஊக்குவிக்காத மூன்றாம் உலக நாடுகளால் உருவாக்கப்பட்ட இயக்கம் இது. இந்த நாடுகள் அதிகாரப்பூர்வமாக 1961 இல் பெல்கிரேடில் சந்தித்தன. இதுவே அணிசேரா இயக்கமாகும்.

**இறையாண்மை:** ஒரு நாடு தனது அரசியல் மேலாண்மை சுதந்திராமான வெளியுறவுக் கொள்கை ஆகியவற்றில் எந்த ஒரு நாட்டின் கட்டுப்பாடு இல்லாமல் விளங்குகின்ற நாட்டை இறையாண்மைக் கொண்ட நாடு என்றுக் கருதப்படும். சுருங்கூறின், அனைத்து உணர்வுகளையும் சுதந்திராமாக முடிவு எடுக்கும் தன்மை இறையாண்மை என்று அழைக்கப்படும்.

**சர்வதேச அமைதி:** அமைதி என்றால் போர் இல்லாதது. போர்க்களத் தடுப்பது மிகவும் அவசியம், ஏனென்றால் லட்சக்கணக்கான உயிர்களைக் காப்பாற்ற முடியும். சர்வதேச அளவில், அமைதி என்ற கருத்து அரசியல் மற்றும் சமூகம் இரண்டையும் ஊக்குவிக்கிறது.

**மூன்றாம் உலக நாடுகள்:** இது பெரும்பாலும் ஆசியா மற்றும் ஆப்பிரிக்காவைக் குறிக்கும், அவை அமெரிக்கா அல்லது சோவியத் யூனியனுடன் நட்புப் பாராட்டாமல், தனித்திறமையோடு விளங்குகின்ற நாடுகள்.

**நிறவெறி:** நிறவெறி (அப்பாதைய்டு) என்பது தென்னாப்பிரிக்காவில் இருவதாம் நூற்றாண்டின் ஆங்கிலேயர்களால்ப் பின்ப்பற்றப்பட்ட இனவெறிக் கொள்கையாகும். இதன்படி வெள்ளயினத்தவரான ஆங்கிலேயர்கள் உயர்ந்தவர்கள் என்றும் கருப்பினத்தவர்களான ஆப்பிரிக்கர்கள் இரண்டாம் தர குடிமக்கள் என்று கருதப்பட்டனர். இத்தகைய இனவெறிக் கொள்கைக்கு எதிராகப் போராடியதால் நெல்சன் மண்டேலா 27 ஆண்டுகள் சிறையில் அடைக்கப்பட்டார்.

## 2.9. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

### குறுகிய வினாக்கள்

1. 1861 கவுன்சில் சட்டத்தின் விளைவுகள் என்ன?
2. மிண்டோ-மார்லி சட்டத்திற்கான காரணங்கள் யாவை?

3. 'நேரு அறிக்கை' குறித்து ஒரு குறிப்பை எழுதுக.
4. சமத்துவத்திற்கான உரிமையைப் பற்றி கூறுக.
5. இருசபை சட்டமன்றத்தை விளக்குக.
6. நீதித்துறை மறுஆய்வு பற்றி எழுதுக.
7. மொழிஇயல் மாகாண ஆணையம் குறித்து ஒரு குறிப்புஎழுதுக.
8. ஜேவிபி குழுவின் முக்கியப் பரிந்துரைகளைப் பற்றி கூறுக.
9. எஸ்.ஆர்.சி. நியமனத்திற்குக் காரணங்கள் யாவை?
10. மொழியியல் மறுசீரமைப்பு சட்டம் இயற்றப்பட்டப்போது பம்பாய் மாநிலத்தில் ஏற்பட்ட அரசியல் அமைதியின்மையைக் குறித்து எழுதுக.
11. பஞ்சாப் மறுசீரமைப்புச் சட்டம் 1966 -ஆண்டுக்கான காரணங்களைப் பற்றி எழுதுக.
12. இந்தியாவின் வெளியுறவுக் கொள்கையை உருவாக்கியதில் நேருவின் பங்கு குறித்து குறிப்பு எழுதுக.
13. பாண்டுங் மாநாட்டின் அரசியல் முக்கியத்துவத்தைப் பற்றி கூறுக.
14. அணிச்சேரா இயக்கம் உருவாக்கப்படுவதற்கான காரணங்கள் யாவை?

**விரிவான வினாக்கள்**

1. மான்டேகு-சேம்ஸ்ஃபோர்ட் சட்டத்தின் முக்கிய அம்சங்களை பகுப்பாய்வுச் செய்க.
2. 1935 சட்டத்தை மதிப்பிடுச் செய்க.
3. அரசியலமைப்பை உருவாக்குவதில் அரசியலமப்புச் சபையின் பங்கு குறித்து ஒரு கட்டுரை எழுதுக.
4. இந்திய அரசியலமைப்பினால் வழங்கப்பட்ட அடிப்படை உரிமைகளை பகுப்பாய்வுச் செய்க.
5. மாநிலங்களின் மொழியியல் மறுசீரமைப்பிற்கானக் கோரிக்கையின் வரலாற்றுப் பின்னணியைப் பகுப்பாய்வு செய்து விவரி.
6. மொழியியல் மறுசீரமைப்புச் சட்டம் மற்றும் அதன் விளைவுகள் குறித்துக் கட்டுரை வடிவில் எழுதுக.
7. இந்திய வெளியுறவுக் கொள்கையை நிர்ணயிக்கும் முக்கியக் காரணிகள் குறித்து ஆராய்ந்து எழுதுக.
8. பனிப்போரின் போது அணிச்சேரா இயக்கம் மற்றும் அதன் பங்கு குறித்து கட்டுரை வடிவில் விவரி.

9. பஞ்சசீலக் கொள்கைகள் சர்வதேச மட்டத்தில் அமைதியையும் சிரத்தன்மையையும் எவ்வாறு உறுதிப்படுத்துகின்றன என்பதை விளக்குக.

குறிப்பு

### 2.10. கூடுதல் வாசிப்புகள்

Durga Das Basu. 2015. *Introduction to the Constitution of India.* Lexis Nexis: Hryana. 22nd Edition.

வெங்கடேசன்.க. 2012. *சமகால இந்திய வரலாறு 1947-2012,* ராஜபாளையம்: வி.சி.பப்ளிகேஷன்ஸ்.

Granville Austin. 2007. *The Indian Constitution Cornerstone of a Nation.*New Delhi: OUP.

Manoj Pandey Onkar Kedia. 1993. *Fundamentals of India Constitution.* New Delhi: Vikas Publications PVT. LTD.

N. Jayapalan. 2013. *Modern Governments and Constitutions.* Vol-I. New Delhi: Atlantic Publisher.

S.N. Sen. 2006. *History Modern India.* Delhi: New Age International PVT.LTD.

Sivagami Paramasivam. 1998. *Human Rights -A Study.* Salem: Sriram Computer & Offset.

# அலகு-3

## நேரு காலம் - மத்திய மாநில உறவுகள் - லால் பகதூர் சாஸ்திரி - 1965 இந்தியா பாகிஸ்தான் போர்

### பாட அமைப்பு

3.1. முன்னுரை
3.2. நோக்கங்கள்
3.3. வரலாற்றில் நேருவின் இடம்
3.3.1. இந்தியாவின் சுதந்திரத்தை வலுப்படுத்துதல்
3.3.2. தேசிய ஒற்றுமையை உருவாக்குதல்

3.3.3. ஜனநாயகம் மற்றும் பார்லிமெண்டரி அமைப்பை வளர்த்தல்
3.3.4. சோஷலிசத்தை அமைத்தல்
3.3.5. பொருளாதார வளர்ச்சிக்குத் திட்டமிடுதல்
3.3.6. வகுப்புவாதத்தை எதிர்த்தல்
3.3.7. அறிவியல் தொழில் நுட்பத்துக்கான பங்களிப்பு
3.3.8. சீர்திருத்தக்காரர்
3.3.9. மதிப்பீடு
3.4. மத்திய மாநில உறவுகள்
3.4.1. ஆளுகை உறவுகள்
3.4.2. நிதித் தொடர்பான உறவுகள்
3.4.3. நீர் மேலாண்மை
3.4.4. மாநிலங்களுக்கிடைப்பட்ட குழு
3.5. லால்பகதூர் சாஸ்த்ரி
3.5.1. இந்தி எதிர்ப்புப் போராட்டம்
3.5.2. அமைச்சரக ஆணை
3.5.3. எதிர்ப்புப் போராட்டம்
3.5.4. பிறமாநிலங்களில் இந்தி எதிர்ப்புப் போராட்டம்
3.6. இந்திய-பாகிஸ்தான் போர்- 1965
3.6.1. காஷ்மீர்ப் படையெடுப்பு
3.6.2. தாஷ்கண்ட் பிரகடனம் (Dashkent Declaration), 1966
3.7. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்க
3.8. அத்தியாயச் சுருக்கம்
3.9. முக்கியச் சொற்கள்
3.10. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்
3.11. கூடுதல் வாசிப்புகள்

## 3.1. முன்னுரை

பிறக்கும் போது எந்த விதத்திலும் குறைவில்லாத செல்வ வளத்தோடுப் பிறந்த நேரு தம்முடைய ஆரம்ப மற்றும் உயர்கல்வினை இந்தியாவிலும் இங்கிலாந்திலும் முடித்தார். ஆங்கிலக் கல்வியைப் பெற்றதோடு மட்டுமின்றி ஆங்கில மற்றும் இதர மேற்கித்தியா நாகரிகத்தின் மீது நாட்டம் செலுத்தினார். ஆனால் கல்வியை முடித்து

இந்தியாவிற்குத் திரும்பிய போது காந்தியின் அகிம்சைப் போராட்டத்தால் ஈர்க்கப்பட்டு இந்தியச் சுதந்திரப் போராட்டத்தில் பங்கேற்று அதன் காரணமாக 9 ஆண்டுகள் சிறையில் இருந்தார். சிறந்தப் போராட்டவாதி, எழுத்தாளர், வரலாற்றாசிரியர், சிறந்த நிர்வாகி எனப் பன்முகத்தன்மைப் பெற்ற நேரு சுதந்திர இந்தியாவில் முதல் பிரதமராகப் பொறுப்பேற்றது அனைவரும் அறிந்ததே. சுதந்திரத்திற்குப்பின் தேசம் எதிர்கொண்ட ஒவ்வொருப் பிரச்சனைகளையும் சிறப்பாக கையாண்டு இந்த நாட்டைச் சரியான வழியில் நடத்தினார். நேருவின் அரசியல் எதிரிகள் கூட அவரது தலைமைத்துவத்தைக் கண்டு வியந்தனர். அதனால் தான் நேருவின் மரணத்திற்குப் பிறகு இந்தியாவை வழிநடத்தப் போவது யார் என்ற கலக்கம் தேசம் முழுவதும் பரவியது.

மிகவும் இத்தகைய இக்கட்டானச் சூழ்நிலையில் காங்கிரஸின் ஒட்டுமொத்தத் தேர்வாக லால்பகத்தூர் சாஸ்திரி பிரதமராகப் பொறுப்பேற்றார். நேருவைப் போன்ற அரசியல் ஆளுமையோ அல்லது பின்புலமோ இல்லாவிட்டாலும் விவசாயக் குடும்பத்திலிருந்து வந்த சாஸ்திரி எல்லப் பிரச்சனைகளுக்கும் எதார்த்த வடிவில் தீர்வுகான முன்றார். இவர் பதவிக்காலம் சுமார் இரண்டு ஆண்டுகளுக்குக் குறைவான காலமே இருந்தாலும் எதிர்கொண்ட சவால்கள் மிகவும் பெரிது. இந்தப் பின்னணியில்தான் இந்த அத்தியாயமானது நேருவின் ஆட்சிக்காலம், மத்திய-மாநில உறவுகள் மற்றும் முதலாவது இந்தியா-பாகிஸ்தான் போர் ஆகியவற்றை விவரிக்கிறது.

## 3.2. நோக்கங்கள்

இந்தப் பாடத்தைப் படித்த பிறகு, கீழ்க்கண்டவற்றை அறிய முடியும்:

- நவீன இந்தியாவின் சிற்பி நேருவின் ஆட்சியைக் குறித்து அறிய இயலும்.
- மத்திய-மாநில உறவுகள் குறித்துப் புரிந்துக்கொள்ள இயலும்.
- சாஸ்திரி பதவிக் காலத்தில் நிகழ்ந்த இந்தி எதிர்ப்புப் போராட்டத்தை அறிந்துக் கொள்ள இயலும்.
- 1965 இந்திய - பாகிஸ்தான் போர் மற்றும் அதன் விளைவுகளைத் தெரிந்துக் கொள்ள இயலும்.

## 3.3. வரலாற்றில் நேருவின் இடம்

குறிப்பு

இந்தியாவின் முதல் பிரதமரான ஜவஹர்லால் நேருவை ‘நவீன இந்தியாவின் சிற்பி’ என்று கூறுவது பொருத்தமானதே. அவர் இருபதாம் நூற்றாண்டின் மகத்தான இந்தியர்களில் ஒருவர். ஜனநாயகவாதி, சோஷலிஸ்டு, மனிதநேயவாதி, கற்பனைக்காட்சியாளர் என்று பல்வேறாக அவரை வர்ணிக்கிறார்கள். ஆனால் அவர் இவற்றைக் காட்டிலும் உயர்ந்தவர். அவருடைய ஆளுமையும் திறமையும் நவீன இந்தியாவின் ஒவ்வொரு அம்சத்திலும் பதிந்திருக்கின்றன. அவரை மதிப்பீடுச் செய்வது சுலபமல்ல.

ஏராளமான இந்தியர்கள் இன்று கூட நேருவைப் பற்றிப் பெருமையுடன் நினைக்கிறார்கள். அவர் காலத்தில் வறுமையும் துன்பங்களும் இன்றுள்ளதைக் காட்டிலும் கூடுதலாகவே இருந்தன. அப்படியானால் நாம் ஏன் அவரைப் போற்றுகிறோம்? அவர் எதைச் சாதித்தார்? இன்றுள்ள தலைவர்களின் பேச்சு, செயல், சிந்தனை ஆகியவற்றை மதிப்பிடும் போது அவரை அளவுகோலாகக் கொள்வது ஏன்? அவர் சந்தர்ப்பங்களை வெற்றிக் கொண்டாரா அல்லது சந்தர்ப்பங்களுக்குப் பலியானாரா? இந்த அத்தியாயத்தில் மேற்கூறிய கேள்விகளுக்குப் பதிலளிக்க முயற்சி செய்வோம்.

நேரு மறுமலர்ச்சிக் காலத்தின் (Renaissance) படைப்பாக இருந்தார். பகுத்தறிவு, மனித நேயம், தனிமனித வளர்ச்சி, சுதந்திரப்பற்று, அறிவியல் மற்றும் மதச்சார்பின்மை ஆகியவை அவருடையக் கொள்கைகள். அவர் தன்னுடையச் சகாக்களிடமும் இந்திய மக்களிடமும் மேற்கூறியப் பண்புகளை உருவாக்குவதற்குப் பாடுபட்டார். அவர் 1954-ஆம் ஆண்டில் முதலமைச்சர்களுக்குப் பின்வருமாறு எழுதினார்:

“இந்தியா மாபெரும் நாடாக வளர்ச்சி அடையவேண்டும் என்று நாம் விரும்புகிறோம். அப்படியானால் இந்தியா அகத்திலோ, புறத்திலோ மற்றவற்றை ஒதுக்கக்கூடாது அறிவின் அல்லது ஆன்மாவின் அல்லது சமூகத்தின் வளர்ச்சிக்குத் தடையாகவுள்ள எல்லாவற்றையும் கைவிட வேண்டும்” என்கிறார்.

நேரு முழுமையான தேசியவாதியாக இருந்தார். “சாதி, இனம் மொழி ஆகியவற்றைக் கடந்தவராக அவர் இருந்தார். இந்தியாவில்

குறிப்பு

ஜனநாயகம், சமத்துவம், சோஷலிசம் நிலவ வேண்டும் என்று நேரு விரும்பினார். அவர் தன்னுடைய வாழ்க்கை முழுவதிலும் தேசியம், சோஷலிசம் என்னும் இரண்டு இலட்சியங்களைக் கொண்டிருந்தார். அவற்றை இணைப்பதற்குப் பாடுபட்டார். அது மிகவும் கடினமான பணி. அவர் மார்க்சையும் காந்தியையும் தனக்கு வழிகாட்டிகளாகக் கொண்டிருந்தார். ஆனால் பின்தங்கிய ஒரு நாட்டைப் புனரமைப்பது எப்படி என்று அவர்கள் எழுதவில்லை. எனினும் நேரு நம்பிக்கையுடனும் உற்சாகத்துடனும் அந்தப் பணியில் ஈடுபட்டார். 1962-ஆம் ஆண்டில் சீனா இந்தியாவைத் தாக்கிய பிறகும் அவருடைய நம்பிக்கைக் குறையவில்லை. நேருவின் நம்பிக்கையை எண்ணற்ற இந்தியர்கள் பகிர்ந்துக்கொண்டார்கள்.

ஜனநாயகம், சட்டத்தின் ஆட்சி, தனிமனிதனுடைய சுதந்திரம் மற்றும் கௌரவம், சமூக நீதி, அகிம்சை, அறிவியல், அறப்பண்பு ஆகியவை அவருடைய ஆட்சியின் தூண்களாக இருந்தன. நேர்மையும் இந்திய மக்கள் மீது பேரன்பும் இந்தப் பணிக்கு அவருடையத் தகுதிகளாக இருந்தன.

## 3.3.1. இந்தியாவின் சுதந்திரத்தை வலுப்படுத்துதல்

இந்தியாவின் சுதந்திரத்தைப் பாதுகாப்பதும் வலுப்படுத்துவதும் நேருவின் உடனடிக் கடமையாக இருந்தது. உலகத்தின் வல்லரசுகளான அமெரிக்காவும் சோவியத் யூனியனும் உலக நாடுகளைத் தமது ஆதிக்கத்திற்குள் கொண்டுவருவதற்கு விரும்பின. ஏதாவதொரு வல்லரசின் கைப்பாவையாக இருக்க நேரு விரும்பவில்லை. இந்தியாவின் உள்நாட்டுக் கொள்கையை இந்தியாவே முடிவு செய்தது. இந்தியாவின் அரசியல் மற்றும் பொருளாதாரக் கட்டமைப்பில் அந்நிய இறுவனங்கள் ஊடுருவுவதற்கு நேரு அனுமதிக்கவில்லை.

இந்தியாவின் சுதந்திரமான, சுய - சார்புள்ள பொருளாதார அமைப்பை நிறுவுவதற்கு நேரு பாடுபட்டு வெற்றிக் கண்டார். வேகமான வளர்ச்சி, பொதுத்துறையின் வளர்ச்சி, கன எந்திரத் தொழிற்சாலைகளை நிறுவுதல் தொழில்நுட்ப நிபுணர்களைப் பயிற்றுவித்தல் ஆகியவற்றைச் சுயசார்புள்ள பொருளாதார வளர்ச்சியின் கூறுகளாக நேரு கண்டார்.

"காங்கிரஸ் ஆட்சியின் சாதனை. மக்களுக்கு நம்பிக்கை ஊட்டியது, சுயசார்பை ஏற்படுத்தியது" என்று நேரு கூறினார்.

குறிப்பு

### 3.3.2. தேசிய ஒற்றுமையை உருவாக்குதல்

சுதந்திரப் போராட்டக் காலத்தில் சாதியம், மொழி வெறி, மாகாண வெறி ஆகியவை தலைகாட்டவில்லை. சுதந்திரத்துக்குப் பிறகு அவை தலைதூக்கின. இந்தியா ஒரு நாடாக இன்னும் உருவாக்கம் பெறவில்லை என்று நேரு கருதினார். "இந்தியா பன்முகத் தன்மைகளைக் கொண்ட நாடு. மக்கள் அவை அனைத்தையும் தம்முடையதாக்கவேண்டும்" என்று நேரு கூறினார். நேருவின் ஐந்தாண்டுத்திட்டங்களுக்குப் பின்னால் இந்தியாவின் ஒற்றுமை என்னும் குறிக்கோள் இருந்தது. சுதந்திரமும் ஒற்றுமையும் மிகவும் நெருக்கமானவை என்று அவர் கருதினார்." நாம் ஆபத்தான காலத்தில் வாழ்கிறோம். வலிமை மற்றும் ஒற்றுமை உள்ளவர்களால் மட்டுமே சுதந்திரத்தைத் தக்கவைத்துக் கொள்ள முடியும்" என்றும் நேரு கூறினார்.

### 3.3.3. ஜனநாயகம் மற்றும் பார்லிமென்டரி அமைப்பை வளர்த்தல்

நேரு இந்தியாவில் ஜனநாயகத்தையும் பார்லிமென்டரி அமைப்பையும் வேரூன்றச் செய்தார். வயது வந்தோருக்கு வாக்குரிமை என்ற அடிப்படையில் நடைபெற்ற மூன்று பொதுத் தேர்தல்களில் அவர் பங்கெடுத்தார். பார்லிமென்டரி ஜனநாயகத்தின் குறைகள் அவருக்குத் தெரியும். எனினும் "ஜனநாயக அமைப்பை நான் கைவிடமாட்டேன்" என்று அவர் கூறினார்.

இந்தியா முழுவதிலும் நேருவுக்குத் தனிப்பட்ட செல்வாக்கு இருந்தது. காங்கிரஸ் அரசாங்கம் என்பது 1950-ஆம் ஆண்டிலிருந்து நேருவின் அரசாங்கமாக இருந்தது. எனினும் அவர் ஜனநாயக மரபுகளைக் கடைப்பிடித்தார். முழு அதிகாரத்தைக்கொண்ட பார்லிமென்ட், சுதந்திரமான தேர்தல்களை நடத்த தேர்தல் கமிஷன், பத்திரிகைச் சுதந்திரம், சுதந்திரமான நீதிமன்றங்கள் ஆகியவற்றை அவர் நிறுவினார்.

**குறிப்பு**

"சாதாரண மனிதன் மீது நான் நம்பிக்கை வைத்திருக்கிறேன். அதுவே என் மதம்" என்றார் நேரு. இந்தியாவில் - காங்கிரஸ் கட்சியில் கூட எதேச்சதிகாரம் இருப்பது அவருக்குத் தெரியும். "நம்முடைய ஜனநாயகம் இளஞ்செடி. அதை கவனமாக வளர்க்க வேண்டும்" என்றார். அவர் இந்தியா முழுவதும் அடிக்கடி சுற்றுப் பயணம் செய்தார். மக்களுக்கு அரசியலைப் போதித்தார். ஜனநாயகமே உயர்வானது என்று கற்பித்தார்." நீங்கள் நாட்டுக்கு அளித்தக் கொடை எது என்று கேட்டபொழுது "தங்களை ஆட்சிச் செய்யக்கூடிய 40 கோடி மக்கள்" என்றார்.

ஜனநாயகத்தில் அரசியல் கட்சிகள் ஆட்சிச் செய்கின்றன. ஆனால், அதிகாரம் மக்களிடம் இருக்கிறது. அவர்கள் கட்சிகளை ஆய்வுசெய்து ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை தீர்ப்புக் கூறுகிறார்கள். அதனால்தான் நேரு பஞ்சாயத்து ராஜ்யம், கூட்டுறவு ஸ்தாபனங்கள் ஆகியவற்றை வளர்த்தார்.இந்தியாவைப் போல வேறுபாடுகளைக் கொண்ட சமூகத்தை அடக்குமுறையினால் ஒன்றாக வைத்திருக்க முடியாது. "இந்தியாவில் ஜனநாயக முறைகளைக் கைவிட்டால் வன்முறையும் பிரிவினையும் வளரும்" என்று நேரு 1960- ஆண்டில் கூறினார்.

உலகத்தில் மற்ற நாடுகளில் எதேச்சதிகார முறைகளைப் பயன்படுத்திப் பொருளாதார வளர்ச்சியை ஏற்படுத்தினார்கள். ஆனால் இந்தியாவில் ஜனநாயக முறையில் பொருளாதார வளர்ச்சிக்குத் திட்டமிடப்பட்டது. தாமதமானாலும் இதுவே சிறந்த முறை என்று நேரு கருதினார்.

## 3.3.4. சோஷலிசத்தை அமைத்தல்

நேரு இந்தியாவில் சோஷலிசத்தைப்பற்றி பொதுக்கூட்டங்களிலும் மாநாடுகளிலும் அதிகமாகப் பேசியவர். லட்சக்கணக்கான இந்தியர்கள் சோஷலிசத்தைப் பற்றி சிந்திப்பதற்குத் தூண்டியவர். சோஷலிசத்தைப் பற்றி பொதுப்படையாகத்தான் பேசினார். சமத்துவம், சமவாய்ப்பு, சமூகநீதி, அறிவியல் மூலம் சமூக வளர்ச்சி இதரவை சோஷலிசத்தின் அடிப்படைகள் என்று கருதினார்.

இந்தியாவின் சமூக - பொருளாதாரக் கட்டமைப்பில் ஏழை மக்களுக்குச் சாதகமான மாற்றங்களைச் செய்யவேண்டும். அதை

"அறுவைச் சிகிச்சை" என்று நேரு கூறினார். ஜனநாயக முறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபை, சட்டங்கள் மூலம் அத்தகைய அறுவைச் சிகிச்சைகளைச் செய்யும்.சீர்திருத்தங்களை மக்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும் அல்லது ஏற்றுக்கொள்வதற்கு அவர்கள் தயாராக இருக்க வேண்டும் என்று 1956-ஆம் ஆண்டில் அவர் கூறினார். மாகாண காங்கிரஸ் கமிட்டிகளின் தலைவர்கள் கூட்டத்தில் அவர் பின்வருமாறு பேசினார்: நாம் மகான்களல்ல. முன்னேற்றப் பாதையில் இந்திய மக்களோடு செல்கின்ற சகபயணிகள் நாம் மக்கள் மீது எந்தொரு திட்டத்தையும் திணிப்பதற்கு விரும்பவில்லை. மக்களைத் தயாராக்குவோம். இல்லாவிட்டால் மெதுவாக முன்னேறுவோம் என்பது நேருவின் அணுகுமுறை இருந்தது.

ஐரோப்பாவில் 1930-ஆம் ஆண்டில் பாசிசம் தலை தூக்கிய வரலாறு அவருக்குத் தெரிந்தது. மக்களுடைய உடன்பாடு இல்லாமல் சோஷலிசத்தை அமுலாக்கினால் பாசிசம் வளரக்கூடிய ஆபத்தைப் பற்றி ஜெயபிரகாஷ் நாராயணனுக்கு 1948- ஆம் ஆண்டில் கடிதத்தில் எழுதினார். "காலத்துக்கு முந்திய இடதுசாரிக் கொள்கைப் பிற்போக்கு வாதத்துக்கு உதவும் அல்லது பிரிவினையைத் தூண்டும்" என்று நேரு எழுதினார்.

நேரு காங்கிரசுக்குத் தேர்தல் பிரச்சாரம் செய்த பிறகும் 1952 மற்றும் 1957-ஆம் ஆண்டிகளில் பொதுத்தேர்தல்களில் 50% சதவிகிதத்துக்குக் குறைவான வாக்குகளைப் பெற்றது. ஆனால், வலதுசாரிக் கட்சிகள் மொத்தமாக 25% சதவிகித வாக்குகளைப் பெற்றன. இவர்களுடன் காங்கிரசுக் கட்சியில் உள்ள வலதுசாரிகளையும் சேர்த்துக்கொண்டால் அவர்களுடைய பலத்தைப் புரிந்துகொள்ள முடியும் என நம்பினார்.

பெரும்பான்மையான மக்களை வென்றெடுக்காமல் சிறுபான்மைப் புரட்சியை நடத்தினால் நாட்டில் எதிர்ப்புரட்சி ஏற்படும் ஜனநாயக முறை ஒழிக்கப்படும். இந்திய மக்கள் பிரிந்து விடுவார்கள் என்றுமே. மக்களிடம் மென்மையாக நடந்துகொண்டார் என்று குறை சொல்பவர் உண்டு. அவர் 1964-ஆம் ஆண்டில் மரணமடைவதற்கு முன்பு பின்வருமாறு கூறினார். "என்னிடமுள்ள மென்மை மற்றும் நாகரிகத்தைப் பலவீனம் என்று கருதக்கூடாது. இது மாபெரும் நாடு. மக்களின் வாழ்க்கை முறைகளில்

அதிகமான வேறுபாடுகள் இருக்கின்றன. தன்னை 'பலசாலி' என்று கருதிக்கொண்டு யாரும் அவர்களை மிதித்து நசுக்கிவிடமுடியாது என்று கூறினார்.

சமாதானமான முறையில், அஹிம்சா வழியில் சோஷலிசச் சமூகத்தை அமைக்க முடியும் என்று நேரு நம்பினார். வர்க்கப் போராட்டத்தை அகிம்சை முறையில் தீர்க்க முடியும் என்று அவர் கருதினார். தவறான வழிமுறை மூலம் நல்லக் குறிக்கோள்களை அடைய முடியாது என்ற காந்தியடிகளின் கருத்தை அவர் ஏற்றுக் கொண்டார்.

## 3.3.5. பொருளாதார வளர்ச்சிக்குத் திட்டமிடுதல்

“இந்தியாவில் வேகமான பொருளாதார வளர்ச்சியின் மூலமாகத் தான் வறுமையைப் போக்க முடியும் மக்கள் எல்லோருடைய வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்த முடியும்” என்று நேரு கூறினார். ஆவடியில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் அவர் பின்வருமாறு பேசினார்,“தேசிய வருமானத்தை அதிகப்படுத்தாமல் சோஷலிசத்தைப் பற்றிப் பேசிப்பயனில்லை. செல்வத்தைப் பகிர்ந்துக் கொள்வதற்கு சோஷலிசம் உதவி செய்யும் என்பது உண்மைதான். ஆனால் இந்தியாவில் செல்வம் எங்கே இருக்கிறது? இங்கு வறுமையைத் தான் பகிர்ந்துக்கொள்ளவேண்டும்.” சோஷலிசம் அல்லது முதலாளித்துவ சமூகம் - எந்த சமூகமாக இருந்தாலும் அதில் உற்பத்தி மிகவும் முக்கியமாகும் என்கிறார்.

நேருவின் வளர்ச்சித்திட்டத்தில் மூன்றுக் கூறுகள் இருந்தன விவசாயம் மற்றும் தொழில் துறையில் வேகமான வளர்ச்சிப் பொதுத்துறையில் கேந்திரமானத் தொழில்கள், கலப்புப் பொருளாதாரம்,“இது பெரும்பாலான நிபுணர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தது. முதற்கட்டத்தில் கலப்புப்பொருளாதாரம் (தனியார் துறை நீடிக்கும் வளர்ச்சிக்கு அடிப்படையான தொழில்துறைகள் அரசுக்குச் சொந்தமாக இருக்கும். விவசாயத்திலும் தொழில்களிலும் கூட்டுறவு அமைப்புகள் ஊக்குவிக்கப்படும். நெடுங்கால நோக்கில் சந்தைச்சக்திகள் செயலிழந்துவிடும். லாபம் மட்டுமே குறிக்கோள் என்ற நிலை மாறும். அரசு கேந்திரமான துறைகளில் முதலீடுச் செய்யும்.

**குறிப்பு**

லாபகரமாக நடைபெற்றால் நீடிக்கும். தோல்வியடைந்தால் அகற்றப்படும் என்று 1956 - ஆம் ஆண்டில் தொழில்துறைத் தீர்மானம் கூறியது.

அந்நிய மூலதனத்தைக் குறைவாகப் பயன்படுத்திக்கொண்டு பொதுத்துறையை வளர்க்க வேண்டும். ஏராளமான தொழில்நுட்பவியல் நிபுணர்களை உருவாக்கவேண்டும், இந்தியாவை நவீனப்படுத்த வேண்டும் என்று அவர் விரும்பினார். காலனியப் பொருளாதாரத்திலிருந்து சுயேச்சையானப் பொருளாதாரத்துக்கு இந்தியா மாறியது. அது கலப்புப் பொருளாதாரம்தான் என்பது வேறு விஷயம். நேருவின் பொருளாதாரக் கொள்கை இந்தியாவுக்கு ஏற்றதாக இருந்தது. இந்தியாவின் பொருளாதார வளர்ச்சிக் கணிசமாக இருந்தது.

## 3.3.6. வகுப்புவாதத்தை எதிர்த்தல்

நேரு வாழ்க்கை முழுவதும் வகுப்பு வாதத்தை உறுதியாக எதிர்த்தார். நாட்டில் மதச்சார்பின்மை வேரூன்றுமாறு செய்தார். எல்லாப் பிரச்சனைகளிலும் பொதுக்கருத்தை உருவாக்குவதற்குப் பாடுபட்ட நேரு வகுப்புவாதப்பிரச்சனையில் சமரசம் செய்துக் கொள்ள மறுத்தார். “அது நம் கொள்கைக்குத் துரோகம் செய்வதாகும். இந்தியாவின் சுதந்திரத்தை அழிப்பதாகும்” என்று 1950-ஆம் ஆண்டில் கூறியுள்ளார்.

இந்தியாவில் கல்வித்துறை, அரசியல் கட்சிகள், அரசாங்கம் மதத்திலிருந்து தனித்திருக்கவேண்டும். மதம் ஒரு இந்தியனுடைய சொந்த விவகாரமாக இருக்கும். அரசாங்கம் எல்லா மதங்களையும் சமமாகப் பாவிக்கும். எல்லா மதத்தினருக்கும் சம வாய்ப்புகளைத் தரும் என்று நேரு மதச்சார்பின்மையை விளக்கினார்.

வகுப்புவாதத்தின் சமூக - பொருளாதார மூலவேர்களை அவர் விளக்கினார். மத்திய வர்க்கம் அதற்கு ஆதரவு கொடுக்கிறது. அது பாசிசத்தின் இந்திய வடிவம் என்றார். ஹிந்து, முஸ்லிம், கிறிஸ்துவ மற்றும் சீக்கிய வகுப்பு வாதங்கள் அனைத்தும் ஒரே விதமானவை. ஒரே சமயத்தில் எல்லாவற்றையும் எதிர்க்கவேண்டும் என்றார். பல மதங்களைப் பின்பற்றுகின்ற மக்கள் இந்தியாவில் ஒற்றுமையுடன் வாழ்கின்றார்கள். ஆனால் வகுப்புவாதம் இந்தியாவின் ஒற்றுமைக்குத் தீங்கு செய்யும் என்றார்.

**குறிப்பு**

வகுப்புவாதத்தைப்பற்றி நேருவின் அணுகுமுறையில் முக்கியமானக் குறை இருந்தது. நாட்டில் கல்வி வளர்ச்சி அடையும் பொழுது, மக்களிடம் அறிவியல் சிந்தனை அதிகரிக்கும் பொழுது வகுப்புவாதம், படிப்படியாகக் குறைந்துவிடும் என்று அவர் கருதினார். அவர் சித்தாந்த ரீதியாக வகுப்புவாதத்தை எதிர்த்துப் போராடவில்லை. காங்கிரஸ் பேரியக்கம் வகுப்புவாதத்தை எதிர்த்துப் போராடவில்லை. கேரளாவில் 1960- ஆம் ஆண்டில் முஸ்லிம் மற்றும் கிறிஸ்துவ வகுப்புவாத அமைப்புகளுடன் சேர்ந்து அரசாங்கத்தை எதிர்த்துப் போராட்டம் நடத்தியது. மாகாண அரசாங்கங்கள் வகுப்புவாதத்தை உறுதியாக எதிர்க்கவில்லை. அவருடைய வாழ்க்கையில் இறுதிக்கட்டத்தில் நாட்டில் வகுப்புவாதக் கலவரங்கள் நடைபெற்ற பொழுது அவர் மிகவும் வேதனைப்பட்டார்.

## 3.3.7. அறிவியல் தொழில் நுட்பத்துக்கான பங்களிப்பு

நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தின் அறிவியலும் தொழில் நுட்பமும் குறிப்பிடதக்கப் பங்காற்றுகிறது என நேரு நம்பினார். 1937-ஆம் ஆண்டு இந்திய தேசிய அறிவியல் மாநாட்டிற்கு விடுத்த செய்தியில் அறிவியல் ஒரு சமூக முன்னேற்றத்தில் ஆக்கப்பூர்வமான பங்கை ஆற்றுகிறது. குறிப்பாக, வறுமை ஒழிப்பு, பொருளாதார மேம்பாடு, விவசாயத்தை வளர்த்தெடுத்தல் ஆகியவற்றில் விஞ்ஞானம் அளப்பரியப் பங்காற்றுகிறது என்று குறிப்பிட்டார். இதன் அடிப்படையில்தான் 1958-ஆம் ஆண்டு அறிவியல் கொள்கை வடிவமைக்கப்பட்டது.

சுதந்திர இந்தியாவில் அனைத்துத் துறைகளிலும் அறிவியலை வளர்பதற்கு பல்வேறு விஞ்ஞானிகளை ஹோமி பாபா, எஸ்.எஸ். பட்நகர், மஹலானோபிஸ் மற்றும் டி.எஸ். கோத்தாரி ஆகிய விஞ்ஞானிகள் ஊக்கப்படுத்தப்பட்டனர். மேலும், அணு ஆராய்ச்சி என்பது அமைதிக்கு என்ற கொள்கையை வலியுறுத்தினார். தொழில் நுட்பத்தை வளர்ப்பதற்கு நாடு முழுவதும் ஐஐடி என்று அழைக்கப்படும் உயர்கல்வி நிறுவனங்களை துவக்கினார்.

**குறிப்பு**

## 3.3.8. சீர்திருத்தக்காரர்

சமூகத்தில் பல நூற்றாண்டுகளாக நிலவிய மரபுகளை மாற்ற விரும்பியவர்களை சீர்திருத்தக்காரர்கள் என்றோம். நேரு அப்படிப்பட்டச் சீர்திருத்தக்காரர் அல்ல. அவர் இந்தியச் சமூகத்தைப் புதிய கட்டத்துக்கு உயர்த்த விரும்பியச் சீர்திருத்தக்காரர். இந்து சமயத்திருத்த மசோதாக்கள் அவருடைய மாபெரும் சாதனை ஆகும். பெண்களுக்குக் கல்வி மற்றும் வேலை வாய்ப்புகளைப் பெருக்கியது நேருவின் அடுத்தச் சாதனையாகும்.

## 3.3.9. மதிப்பீடு

நேருவின் சாதனைகளைக் குறிப்பிட்டோம். அவரை மதிப்பீடு செய்வதற்கு அவருடைய பலவீனங்களையும் குறிப்பிட வேண்டும். காந்தியடிகள் அரசியல் போராட்டத்துக்கு மக்களைத் திரட்டினார். "செய் அல்லது செத்து மடி" என்று அறைகூவினார். சமூக மாற்றம் தானாக வரும் என்று நேரு நம்பினார். மக்களுக்கு வாக்குரிமைக் கொடுத்து விட்டோம். அவர்களுடைய நிலைமையில் படிப்படியான மாற்றங்கள் தானாக ஏற்படும் என்று கருதினார். அடுத்தபடியாகத் தன்னுடைய சொற்பொழிவுகள் மக்களை மாற்றும் என்று நம்பினார். அவருடைய சொற்பொழிவுகளை ஆயிரக்கணக்கான மக்கள் கேட்டார்கள். அவர்கள் நேருவை நேசித்தார்கள். ஆனால் நேருவின் கொள்கைகளுக்குப் போராடவில்லை. அவருடைய சொற்பொழிவுகள் மாகாண காங்கிரஸ் தலைவர்களின் செல்வாக்கை அதிகப்படுத்தின. நேருவின் கொள்கைகளான நிலச் சீர்திருத்தம், சோஷலிசம், அணி சேராக் கொள்கை ஆகியவற்றை அவர்கள் தீவிரமாக ஆதரிக்கவில்லை,

1951-ஆம் ஆண்டுக்குப் பிறகு காங்கிரஸ் கட்சி நேருவின் முழுமையான கட்டுப்பாட்டுக்குள் வந்தது. ஆனால் அது ஜீவனுள்ள இயக்கமாக இல்லாமல் தேர்தல் காலத்தில் மட்டும் இயங்கியது. நேரு தன்னுடையக் கொள்கைகளை நிறைவேற்றுவதற்கு அரசு அதிகாரிகளை நம்பினார். அரசு அதிகாரிகள் நகரங்களில், அலுவலகங்களில் உட்கார்ந்துகொண்டு உத்தரவுகளைப் போட்டார்கள். கிராமங்களில் வசித்தக் கடைக்கோடி இந்தியனைப் பற்றி அவர்கள் நினைக்கவில்லை.

இந்தியச் சமூகத்தில் சாதிமுறை, ஆணாதிக்கம், கொத்தடிமை முறை, ஊழல் ஆகியவை நெடுங்காலமாக நிலைத்துவிட்டன. நேரு தன்னுடைய சொற்பொழிவுகளில் இவற்றைக் கண்டிக்கவில்லை. சமூகத்தில் ஆதிக்கம் செலுத்திய வர்க்கங்களின் ஒப்புதலைப் பெற வேண்டும் என்று நேரு விரும்பினார். அதனால் அவருடைய சீர்திருத்தங்கள் தடைப்பட்டன. மக்களுடைய விருப்பங்களை நேரு புரிந்துக்கொண்டார். அவர்களை முன்னேற்றக்கூடிய திட்டங்களைத் தயாரித்தார். இந்தியாவின் எதிர்காலத்தைப் பற்றி பேசி மக்களுக்கு எழுச்சியூட்டினார். ஆனால், அவர் மக்களைப் புதிய பாதையில் செலுத்தக்கூடிய போர்த்திட்டத்தை உருவாக்கவில்லை.

நேருவின் கண்களுக்கு முன்பாக காங்கிரஸில் கோஷ்டிகள் அமைக்கப்பெற்றதையும், முதலமைச்சர்கள் மீது ஊழல் குற்றச்சாட்டுகள் வீசப்பட்டத்தையும், பொதுப்படையான முறையில் ஊழல், பதவிப்போட்டி ஆகியவற்றைக் கண்டித்தார். ஆனால், அவற்றில் சம்பந்தப்பட்டவர்களைப் பதவியிலிருந்து நீக்கவில்லை. மெக்காலே பிரபு உருவாக்கிய கல்வி முறை அப்படியே நீடித்தது. பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள் அதிகரித்தன. சுதந்திர இந்தியாவின் முதல் பிரதமர் என்ற முறையில் நேரு மாபெரும் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு முயற்சிகளைச் செய்தார். அவர் புதிய இந்தியாவைப் படைப்பதற்கு மக்களை மெதுவாக அழைத்துச் சென்றார். இந்திய மக்களிடம் சில குறிக்கோள்களை, மதிப்புகளைப் பதிய வைத்தார். “நேரு வேறுவிதமான மனிதராக இருந்திருந்தால் இந்தியா வேறுவிதமான நாடாக இருந்திருக்கும்” என்று ஜியார்ஜ் டைசன் கூறியுள்ளார்.

நேருவும் அவருடைய சகாப்தமும் வரலாற்றில் இடம் பெற்றுவிட்டன. இன்று இந்தியா பல சாதனைகளைச் செய்திருக்கிறது என்றால் நேரு அதற்கு அடிப்படைகளை அமைத்தார். ஒரு தலைவனிடமிருந்து மக்கள் இதற்கு மேல் எதிர்பார்க்கணும் எங்களுடைய எல்லாப் பிரச்சனைகளையும் நிரந்தரமாக ஏன் தீர்க்க வேண்டும் என்று கேட்பதே நியாயம் என்று கருதினார்.

குறிப்பு

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. நேரு ஆட்சியின் போது எத்தனை பொதுத் தேர்தல்கள் நடத்தப்பட்டன?
2. நேருவின் கூற்றுப்படி இந்தியாவின் நவீனக் கோவில்கள் யாவை?
3. நேருவின் ஆட்சியின் போது முக்கிய விஞ்ஞானிகள் யார்?
4. அறிவியல் கொள்கைத் தீர்மானம் எப்போது அறிமுகப்படுத்தப்பட்டது?

## 3.4. மத்திய மாநில உறவுகள்

கூட்டாட்சியின் அடிப்படையாக மத்திய மாநில அரசுகளின் உறவுகள் பற்றி அரசியமைப்பில் பகுதி XI மற்றும் XII ல் கொடுக்கப்பட்டுள்ளது.

**சட்டமியற்றும் உறவுகள்**

99 துறைகள் கொண்ட மத்தியப் பட்டியலே மூன்றுப் பட்டியல்களிலும் மிகப்பெரியப் பட்டியல் ஆகும். இதில் உள்ள சில முக்கியமான இனப் பாதுகாப்பு, ரயில்வே, அஞ்சல் மற்றும் தந்தி, வருமான வரி, ஏற்றுமதி மற்றும் இறக்குமதி வரி, நாடு முழுவதும் மத்தியப் பட்டியலில் உள்ள துறைகளில் சட்டம் பிறப்பிப்பதற்கு நாடாளுமன்றத்திற்கு மட்டுமே அதிகாரம் உள்ளது.

மாநிலப்பட்டியல் 66 துறைகளை உள்ளடக்கியது. இந்தப் பட்டியலில் உள்ள சில முக்கியமான இடங்களாவன, மாநிலத்தினுள் நடைபெறும் தொழிலும் வணிகமும், காவல், மீன்பிடிப்பு, காடுகள் சார்ந்த தொழிற்சாலைகள் ஆகும். மாநில சட்டசபை இந்த பட்டியலில் உள்ள துறைகள் தொடர்பாகச் சட்டமியற்றுகிறது.

பொதுப்பட்டியல் மத்திய மற்றும் மாநில அரசுகளின் நலன்களைக் கொண்ட 47 துறைகளை உள்ளடக்கியது. இந்தப் பட்டியலில் உள்ள சில முக்கியத் துறைகள் பத்திரக் கட்டணம், மருந்து மற்றும் நச்சுகள், மின்சாரம், செய்தித்தாள்கள் ஆகும். நாடாளுமன்றம் மற்றும் மாநிலச் சட்டசபைகள் சேர்ந்து தான் இந்தத் துறைகளில் சட்டமியற்றும். ஒருவேளை சட்டம் அமைப்பதில் மத்திய மற்றும் மாநில அரசுகளுக்கிடையே பிரச்சனை ஏற்பட்டால் மத்திய அரசு எடுக்கும் முடிவிற்கே அதிக அதிகாரம் உண்டு. இந்த மூன்றுப் பட்டியல்களிலும்

வராத இனங்களில் சட்டமியற்றும் அதிகாரமும் நாடாளுமன்றத்திற்கு தான் உள்ளது. சில சந்தர்ப்பங்களில் மாநிலப் பட்டியலில் உள்ள இனங்களுக்கு கூட நாடாளுமன்றம் சட்டமியற்ற முடியும்.

## 3.4.1. ஆளுகை உறவுகள்

மாநிலங்களின் செயலாட்சி அதிகாரம் நாடாளுமன்றத்தால் ஏற்படுத்தப்பட்டச் சட்டங்களுக்கு இணங்கி கீழ்ப்படிந்து இருக்க வேண்டும். மத்திய செயலாட்சி, தேவைப்படும்போது மாநிலங்களுக்கு வழிகாட்டுதல் வழங்கலாம். தேசிய மற்றும் ராணுவ முக்கியத்துவத்திற்காகவும் ரயில்வேயின் பாதுகாப்பிற்காகவும் தொலைத்தொடர்பு உருவாக்கம் மற்றும் பராமரிப்பிற்காகவும் மத்திய அரசு மாநிலங்களுக்கு உத்தரவு பிறப்பிக்கலாம். அதன்படி மாநில அரசுகள் செயல்பட வேண்டும். இவற்றிற்கும் மேலாக மாநிலங்களுக்கிடையேயான நீர்ப்பிரச்சினையில் நாடாளுமன்றம் மட்டுமே முடிவெடுக்க முடியும். மாநில அரசுகள் கூட மாநிலப் பட்டியலில் உள்ள சில ஆளுகைப் பணிகளை ஒரு குறிப்பிட்டக் காலத்திற்கு மத்திய அரசிடம் ஒப்படைக்க முடியும்.

இந்திய அரசியலமைப்பு ஆளுகை முறையில் ஒரு சீர்மையை உறுதிப்படுத்துவதற்காக சில சிறப்பு அம்சங்களைப் பெற்றுள்ளது. இவை அனைத்திந்தியப் பணியான ஐயுளு மற்றும் ஜீளு உருவாக்கி மாநிலங்களில் முக்கியமான ஆளுகை நிலைகளில் அமர்த்துவதை உள்ளடக்கியது. அனைத்திந்தியப் பணி அலுவர்களின் இருப்பு மற்றும் மாநில அரசின் அதிகாரத்தை அதிகரிப்பதற்கு வழிசெய்கிறது. அனைத்திந்தியப் பணியின் உறுப்பினர்கள் மத்திய அரசால் தேர்ந்தெடுக்கப்பட்டு நியமிக்கப்படுகின்றனர். மாநில அரசுகளால் மத்திய அரசின் அனுமதியின்றி இவர்கள் மீது ஒழுங்கு நடவடிக்கை எதுவும் எடுக்கவியலாது.

மத்திய அரசு சில தருணங்களில் மாநில அரசுகளின் சுய ஆட்சி உரிமையில் தலையிடுவதற்கு அதிக அளவிலான அதிகாரம் பெற்றுள்ளது. உதாரணமாக மத்திய காவல் படை மற்றும் ராணுவம் ஆகியவை மாநில அரசுகளின் வேண்டுகோளின்படி மத்திய அரசால் மாநிலங்களில் நியமிக்கப்படுகின்றன. ஆனால் சில தருணங்களில் ஊசீ

குறிப்பு

மற்றும் ீளுகு ஆகியவை மாநிலங்களின் விருப்பமின்றியே மாநிலங்களில் அனுப்பப்படுகின்றன.

**3.4.2. நிதித் தொடர்பான உறவுகள்**

அரசியலமைப்பில் மத்திய மற்றும் மாநில அரசுகளுக்கு தனித்தனி வருமான வளங்கள் வழங்கப்பட்டுள்ளன. மத்தியப் பட்டியலிலுள்ள துறைகளுக்கு நாடாளுமன்றம் வரிகள் விதிக்கலாம். மாநிலப்பட்டியலிலுள்ள துறைகளுக்கு மாநில அரசு வரிகள் விதிக்கலாம். மாநிலங்களுக்கிடையிலான அடித்தளங்களைக் கொண்ட வரிகள் ஒட்டு மொத்தமாக மத்திய அரசால் விதிக்கப்படுகின்றன. அவற்றில் உள்ளூர் காரணிகளை அடிப்படையாகக் கொண்டவை மாநில அரசால் விதிக்கப்படுகின்றன.

**மத்தியப் பட்டியல் கீழ்வரும் வரிகளைக் கொண்டது:**

பத்திரப்பதிவு வரி மற்றும் மருத்துவ மற்றும் கழிவுப் பொருள்கள் மீதான உற்பத்தி வரி போன்றவை மத்திய அரசினால் விதிக்கப்பட்டு மாநில அரசினால் வசூலிக்கப்பட்டுப் பகிர்ந்தளிக்கும் வரிகள்.

ரயில்வே கடல் வழி அல்லது வான்வழிப் போக்குவரவு வரிகள் போன்றவை மத்திய அரசினால் விதிக்கப்பட்டு வசூலிக்கப்பட்டு மாநிலங்களுக்குப் பகிர்ந்தளிக்கப்படும் வரிகள்.

உற்பத்தி வரி போன்றவை மத்திய அரசினால் விதிக்கப்பட்டு வசூலிக்கப்பட்டு நாடாளுமன்றச் சட்டத்தின்படி மத்திய மாநில அரசுகளுக்கிடையே பகிர்ந்தளிக்கப்படும் வரி.

இறக்குமதி வரி மற்றும் வருமான வரி போன்றவை மத்திய அரசினால் விதிக்கப்பட்டு வசூலிக்கப்பட்டு அவர்களாலே வைத்துக் கொள்ளப்படும் வரி.

வேளாண்மை வரி தவிர்த்து மற்ற வரிகள் மத்திய அரசினால் விதிக்கப்பட்டு ஆனால் மத்திய மற்றும் மாநில அரசுகளுக்கடையே பகிர்ந்தளிக்கப்படும் வரிகள்.

நிதி விஷயத்திலும் மத்திய அரசிற்கு அதிகமான அதிகாரமிருப்பது தெளிவாக விளங்குகிறது. முன்னேற்றத் திட்டங்களின் செலவுகளைச் சந்திப்பதற்காக மாநிலத்தின் நிதிகளின் மீதும்

நன்கொடைகளின் மீதும் மத்திய அரசு ஆதிக்கம் செலுத்த முடியும். நிதி அவசரகாலத்தின் (Financial Emergency) போது மத்திய மாநில அரசுகளுக்கிடையே பகிர்ந்தளிக்கப்படும் வரிகளை நிறுத்தி வைப்பதற்கு குடியரசுத் தலைவருக்கு அதிகாரமுண்டு. மேலும், அவர் மாநிலத்தின் மற்றச் செலவுகள் மீதும் கட்டுப்பாடுகள் விதிக்க முடியும்.

மாநிலத்திட்டங்கள் அனைத்தும், மத்திய திட்டங்களை முதன்மையாகக் கொண்டு உருவாக்கப்பட்டுத் திட்டக்குழுவினால் அனுமதியளிக்கப்பட வேண்டும். மேலும், மாநிலங்கள் மத்திய அரசினால் பண உதவி அளிக்கப்படும் திட்டங்களை மேற்கொண்டு மத்திய அரசின் வழிகாட்டுதலைப் பின்பற்ற வேண்டும். திட்டக்குழுத் திட்ட முறைகளில் மத்திய அரசிற்கே அதிகமான அதிகாரங்கள் வழங்கியுள்ளது. எந்த விதமான முடிவெடுக்கும் அதிகாரமும் மாநிலங்களிடம் விடப்படவில்லை. மத்திய அரசின் திட்டங்கள் மாநிலங்களின் மீது ஒழுங்கற்ற முறையில் திணிக்கப்படுகின்றன.

## 3.4.3. நீர் மேலாண்மை

மாநிலங்களுக்கிடையான நீர்ப்பிரச்சனைகள் - அரசியலமைப்பின் ஷரத்து 62 மாநிலங்களுக்கிடைப்பட்ட நீர்ப்பிரச்சனையைப் பற்றியத் தீர்வுகளைக் கொடுக்கிறது. இதன் இரண்டு கூறுகள்:

நாடாளுமன்றச் சட்டத்தின்படி எல்லா மாநிலங்களுக்கும் இடைப்பட்ட நீரின் பயன்பாடு, பகிர்ந்தளித்தல் மற்றும் கட்டுப்பாடு போன்றவை குறித்துத் தீர்ப்புகள் வழங்க முடியும். மேலும் இந்த விவகாரத்தில் உச்ச நீதிமன்றமோ, உயர்நீதிமன்றமோ தலையிடுதல் கூடாது என்பதை நாடாளுமன்றம் எடுத்துரைக்க முடியும்.

இது தொடர்பாக நாடாளுமன்றம் இரண்டு சட்டங்கள் இயற்றியுள்ளது. ஆற்றுநீர் வாரியச் சட்டம் (1956) மாநிலங்களுக்கிடைப்பட்ட நீர்ப்பிரச்சனைச் சட்டம் (1956).

## 3.4.4. மாநிலங்களுக்கிடைப்பட்ட குழு

சரத்து 263: மாநிலங்களுக்கிடையிலும் அல்லது மத்திய மற்றும் மாநில அரசுகளுக்கிடையேயும் இணக்கத்தை ஏற்படுத்துவதற்காக இரு

மாநிலங்களுக்கிடைப்பட்டக் குழுவை உருவாக்கலாம். இது குடியரசுத்தலைவரால் உருவாக்கப்படவேண்டும்.

மாநிலங்களுக்கிடைப்பட்டக் குழுவின் கடமைகளை வரையறுக்கும் உரிமை குடியரசுத் தலைவருக்கு இருந்தாலும் சரத்து 263 அதற்கான கடமைகளை வரையறுத்துள்ளது.

மாநிலங்களுக்கிடையே எழும் பிரச்சினைகளை விசாரித்து அவற்றிற்கு ஆலோசனை வழங்க வேண்டும்.

மத்திய அல்லது மாநில அரசுகளின் பொதுவான நலன்கள் சட்பந்தப்பட்ட விஷயங்கள் விசாரணை செய்து அது பற்றி விவாதிக்க வேண்டும். அரசுத் திட்டங்களின் மேம்பட்ட இணத்திற்காகவும், செயல்பாடுகளுக்காகவும் பரிந்துரைகள் வழங்க வேண்டும்.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

5. மத்திய-மாநில உறவை எந்தச் சரத்துக்கள் கூறுகின்றன?
6. மத்திய-மாநில அரசுகளுக்கு இடையில் அதிகாரங்கள் எவ்வாறு பகிரப்படுகின்றன என்பதைக் கூறுக?
7. இந்திய அரசியலமைப்பின் படி எஞ்சியிருக்கும் அதிகாரத்தை (residuary power) யார் பெறுகிறார்கள்?
8. மாநில அவசரநிலையை எந்தச் சரத்துக் கையாள்கிறது என்பதை கூறுக?

## 3.5. லால்பகதூர் சாஸ்த்ரி

1964-ல் மே 27-ம் தேதி நேரு காலமானார், குல்சாரிலால் நந்தா இடைக்கால பிரதமராகப் பொறுப்பேற்றார். காமராஜர் தலைமையிலான காங்கிரஸ் அடுத்த பிரதமரைத் தேர்ந்தெடுக்கும் முக்கிய வேலையில் இறங்கியது. பிரதமர் பதவிக்குப் போட்டிகள் இருந்தப் போதிலும் லால்பகதூர் சாஸ்திரி காங்கிரஷின் ஏகபோகத் தேர்வாகினார் இந்தியாவின் இரண்டாவது பிரதமராகப் பொறுப்பேற்றார். இவர் இரண்டு ஆண்டுகளுக்குக் குறைவாகவே இந்தியாவை ஆட்சிச் செய்தப் போதிலும், இந்தக் காலக்கட்டத்தில் பல்வேறு முக்கிய நிகழ்வுகள் நடந்தேரின. அவற்றுள் இந்தி எதிர்ப்புப் போரட்டமும், பாகிஸ்தனுடன் போரும் குறிப்பிடதக்க அம்சமாகும்.

## 3.5.1. இந்தி எதிர்ப்புப் போராட்டம்

குறிப்பு

**மொழிக் கொள்கை**

மொழி மக்களின் உணர்ச்சிச் சம்மந்தப்பட்டது. இந்திய விடுதலைப் போராட்டக் காலத்தில் தேசிய மொழி (National Language) மற்றும் ஆட்சி மொழி (Official Language) பற்றிப் பலத்த சர்ச்சை எழுந்தது. இறுதியில் காங்கிரஸ் சட்டமன்றக் குழு இரண்டாகப் பிரிந்து 78க்கு 77 என்ற வாக்கு வித்தியாசத்தில் இந்திக்கு ஆதரவாக முடிவு செய்தது. இந்தியா சுதந்திரம் பெற்ற பின்னர் மொழிப் பிரச்சனை அரசிலமைப்புச் சட்டமன்றத்தில் காரசாரமாக விவாதிக்கப்பட்டது. அதன்பின் அரசியலமைப்புச் சட்டத்தின் பின்வரும் கருத்துக்கள் இடம் பெற்றன: 1) இந்தி இந்தியாவின் ஆட்சி மொழியாக இருக்கும். 2) ஆங்கிலம் 1965-ஆம் ஆண்டு வரை ஆட்சி மொழியாக நீடிக்கும். 3) 1965-ஆம் ஆண்டுக்குப் பின் ஆங்கிலத்துக்குப் பதில் இந்தி ஆட்சி மொழியாகும். 4) 1965க்குப் பின்னரும் ஆங்கிலத்தை ஆட்சி மொழியாக நீட்டிக்கும் அதிகாரம் நாடாளுமன்றத்துக்கு உண்டு. 5)தேசிய ஆட்சி மொழி மாநிலங்களுக் கிடையேயான தொடர்பு மொழியாக இருந்தப் போதிலும் மாநிலத்தின் ஆட்சி மொழியை மாநிலச் சட்டமன்றம் முடிவு செய்யும்.

அரசியலமைப்புச் சட்டம் ஏற்றியவர்கள் எதிர்பார்த்தப்படி, 1965-ஆம் ஆண்டிற்குள் ஆங்கிலத்துக்குப் பதில் இந்தி தேசிய ஆட்சி மொழியாவதற்கான தகுதியைப் பெறவில்லை இதற்கு இந்தி வெறியர்களின் அவசரமே காரணம் என்று கூறினார் நேரு. 1955-ஆம் ஆண்டில் அமைக்கப்பட்ட ஆட்சி மொழிக் கமிஷன் (Official Language Commission) அதன் அறிக்கையில் (1956) இந்தி படிப்படியாக ஆங்கிலத்துக்குப் பதில் ஆட்சி மொழியாக வேண்டும் என்று பரிந்துரைத்தது. 1960-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் குடியரசுத் தலைவர் பிறப்பித்த ஆணை 1965-ஆம் ஆண்டுக்குப் பிறகு இந்தி பிரதான ஆட்சி மொழியாகவும், ஆங்கிலம் இணை ஆட்சி மொழியாகவும் இருக்கும் என்று அறிவித்தது. இந்த ஆணை இந்தி பேசாத மக்களிடையே சந்தேகத்தை ஏற்படுத்தியது. இந்த சந்தேகத்தைப் போக்கும் பொருட்டு இந்திப் பேசாத மக்கள் ஏற்றுக் கொள்ளும் வரை இந்தி அவர்கள் மீது

திணிக்கப்படமாட்டாது என்று உத்திரவாதமளித்தார் நேரு. இந்த உத்திரவாதத்தை உள்ளடக்கிய தேசிய மொழிகள் சட்டம் (Official Languages Act) 1963-ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்டது. இச்சட்டம் இந்திய மொழிக் கொள்கையைத் தெளிவுபடுத்தியது.

## 3.5.2. அமைச்சரக ஆணை

பிரதமரின் பக்கபலத்தோடு உள்துறை அமைச்சர் குல்சாரிலால் நந்தா இந்தியை ஆட்சி மொழியாக்கும் முயற்சியில் ஈடுபட்டார். உள்துறை அமைச்சரகம் ஆட்சிமொழி பற்றி ஒரு ஆணைப் பிறப்பித்தது. அவ்வாணையில்,1)1965 ஜனவரி 26 குடியரசு தினத்திலிருந்து இந்தி இந்திய யூனியனின் பிரதான ஆட்சி மொழியாக இருக்கும். 2) மத்திய செயலகத்தில் சில கோப்புகளில் இந்தியில் மட்டும் குறிப்பெழுத வேண்டும். 3) இந்தி தெரியாதவர்களுக்கு ஆங்கில மொழி பெயர்ப்பு கொடுக்கப்படும். 4) இந்தியில் எழுதப்படும் கடிதங்களுக்கு இந்தியில் பதில் எழுத வேண்டும். 5) அதிகாரபூர்வமானச் சுற்றறிக்கைகளும், அறிவிப்புகளும் இந்தி மற்றும் ஆங்கிலத்தில் வெளியிடப்படும்.

## 3.5.3. எதிர்ப்புப் போராட்டம்

இந்தியை ஆட்சி மொழியாக்குவது பற்றிய மத்திய உள்துறை அமைச்சரக ஆணை குளவிக் கூட்டில் கைவிட்டது போலாயிற்று. அந்த ஆணை நேருவின் வாக்குறுதியை மீறியது. "தென்னாட்டு மக்கள் தாமாக விரும்பாதவரை இந்தி அவர்கள் மீது திணிக்கப்படாது"என்பதே நேரு கொடுத்த வாக்குறுதியாகும். தமிழ் நாட்டில் மத்திய அரசின் இந்தி மொழித் திணிப்பால் மனக் கொதிப்படைந்த திராவிட முன்னேற்றக் கழகம் (தி.மு.க) இந்தி எதிர்ப்புப் போராட்டத்தைத் துவக்கியது. 1965 ஜனவரி 8-ஆம் தேதி சென்னையில் கூடிய தி.மு.க. தலைமைச் செயற்குழு முக்கிய முடிவெடுத்தது. அதன்படி, 1) 1965 ஜனவரி 26-ஆம் நாளாகிய குடியரசு தினம் 'துக்க நாளாக" அனுசரிக்கப்படும். 2) எல்லா ஊர்களிலும் கண்டனக் கூட்டங்கள் நடத்தல். 3) துக்க நாளின் அறிகுறியாக கறுப்புக் கொடிகள் காட்டுவது, கறுப்புச் சின்னம் அணிவது.

**குறிப்பு**

சென்னை மாநில முதலமைச்சராயிருந்த எம்.பக்தவத்சலம் தி.மு.க. துவக்கத் திட்டமிட்டிருந்த இந்தித் திணிப்பு எதிர்ப்புப் போராட்டத்தை முளையிலேயே கிள்ளிவிடத் திட்டமிட்டார். 1965 ஜனவரி 25– ஆம் தேதி நள்ளிரவில் தி.மு.க. தலைவர் சி.என்.அண்ணாதுரை கைது செய்யப்பட்டார். பின்னர் தி.மு.க.வின் முன்னணித் தலைவர்களும் கைது செய்யப்பட்டனர். தமிழ்நாடு முழுவதும் மாணவர்கள் இந்தித் திணிப்புக்கு எதிராகக் கண்டன ஊர்வலங்களை நடத்தினர். குறிப்பாக சென்னையில் அனைத்துக் கல்லூரி மாணவர்களும் நேப்பியர் பூங்காத்திடலில் கூடி, ஊர்வலமாகத் தலைமைச் செயலகம் சென்று முதலமைச்சரிடம் மனு கொடுக்க முயன்றனர். ஆனால் முதலமைச்சர் எம்.பக்தவத்சலம் மாணவர்களை சந்திக்க மறுத்தார். அதுமட்டுமல்ல மாணவர்களைக் கலைக்குமாறு போலீசுக்கு உத்தரவிட்டார். போலீசார் நடத்திய தடியடியாலும், கண்ணீர்புகை குண்டு வெடிப்பாலும் பல மாணவர்கள் காயமடைந்தனர். அதன்விளைவாக மாணவர் போராட்டம் மாநிலம் முழுவதும் காட்டுத்தீ போலப் பரவியது வன்முறை வெடித்தது. முதலமைச்சரின் அரசியல் விவேகமற்றச் செயலால் இந்தி எதிர்ப்புப் போராட்டம் கிளர்ச்சியாயிற்று.

இந்தியாவின் 15-வது குடியரசு நாள் தமிழ்நாட்டில் துக்க நாளாகக் கொண்டாடப்பட்டது. அதைத் தொடர்ந்துப் போராட்டம் தீவிரமடைந்தது. மதுரையில் மாணவர்கள் ஊர்வலமாகச் சென்றபோது தாக்கப்பட்டனர். திருச்சி சின்னச்சாமி, கோடம்பாக்கம் சிவலிங்கம், விருகம்பாக்கம் அரங்கநாதன் போன்றோர் தீக்குளித்து உயிர்த் தியாகம் செய்தனர். டாக்டர் சி.இலக்குவனார் இந்தி எதிர்ப்புப் போராட்டத்துக்கு மாணவர்களைத் தூண்டிவிட்டார் என்று குற்றம் சுமத்தப்பட்டுக் கைது செய்யப்பட்டார் (1965 ஜனவரி 1) ரயில்கள் நிறுத்தப்பட்டன. ரயில் நிலையப் பலகைகளில் உள்ள இந்தி எழுத்துக்கள் அழிக்கப்பட்டன. பேருந்துகள் கொளுத்தப்பட்டன. தந்திக் கம்பிகள் அறுக்கப்பட்டன. தண்டவாளங்கள் பெயர்க்கப்பட்டன. மேலும், சில இளைஞர்கள் உயிர்த்தியாகம் செய்தனர். திருப்பூரில் ஒரு உதவி ஆய்வாளரும் சில காவலர்களும் உயிருடன் எரிக்கப்பட்டனர். மத்திய அரசாங்கத்தின் இந்திக் கொள்கையை எதிர்த்து அமைச்சர்கள் சி.சுப்பிரமணியமும், ஓ.வி.அழகேசனும் ராஜினாமா செய்தனர்.

## 3.5.4. பிறமாநிலங்களில் இந்தி எதிர்ப்புப் போராட்டம்

குறிப்பு

இந்தி எதிர்ப்புப் போராட்டம் தமிழ் நாட்டில் மட்டுமின்றிப் பிற மாநிலங்களிலும் நடத்தப்பட்டது. மைசூரில் மாணவர்கள் இந்தித் திணிப்பைக் கண்டித்து ஊர்வலங்கள், உண்ணாவிரதம் இருந்தனர். ஆந்திராவில் ஐதராபாத், விசாகப்பட்டினம், திருப்பதி, மதனப்பள்ளி, சித்தூர், அனந்தப்பூர் போன்ற இடங்களில் மாணவ ஆர்ப்பாட்டக்காரர்கள் தடியடிக்கும், கண்ணீர்ப்புகை தாக்குதலுக்கும் இலக்காயினர். நெல்லூரில் நடைபெற்ற துப்பாக்கிச்சூட்டில் இருவர் மாண்டனர். பலர் காயமடைந்தனர். கேரளாவில் மாணவர்கள் ஊர்வலம் சென்றனர். உண்ணாவிரதம் இருந்தனர். பத்திரிக்கையாளர்கள் மறியல் செய்தனர். மேற்கு வங்கத்தில் ஒரு வார காலத்துக்கு இந்தி எதிர்ப்பு ஆர்ப்பாட்டங்கள் நடத்தப்பட்டன.

**விளைவு**

போராட்டத்தைக்கண்டு அச்சம் அடைந்த அரசு தன்நிலையில் இருந்து இறங்கி வந்தது. சர்ச்சைக்குரிய இந்திமொழி பற்றிப் பிறப்பித்த ஆணை திரும்பப் பெறப்பட்டது. இந்தித் திணிப்பு முயற்சி கைவிடப்பட்டது. பிரதமர் சாஸ்திரி நேருவின் வாக்குறுதியைப் பின்பற்றுவதென உறுதி கூறினார். இந்தி எதிர்ப்புப் போராட்டம் வெற்றிப் பெற்றது. போராட்டத்தின் விளைவால் தமிழ் நாட்டில் காங்கிரஸ் ஆட்சி மக்களின் செல்வாக்கை இழந்தது. 1967-ஆம் ஆண்டி தேர்தலில் காமராஜர் தனது சொந்தத் தொகுதியிலேயே தோற்றார். தி.மு.க. ஆட்சியைப் பிடித்தது.

## 3.6. இந்திய - பாகிஸ்தான் போர் - 1965

**கட்ச் போர் (War of Katch)**

கட்ச் பகுதி குஜராத்தில் உள்ளது. கட்சிலுள்ள ரான் (Rann of Katch) ஏழு மாதங்கள் ஆட்கள் நடமாடமுடியாத சேற்று சதுப்பு நிலப்பகுதியாக இருக்கும். அப்பகுதிக்குள் 1965 ஏப்ரல் 9-ஆம் தேதி பாகிஸ்தான் படையினர் ஊடுருவிச் சென்றனர். இந்திய எல்லைக்குள் இராணுவம் செல்லுவதற்கான பாதையைப் போட்டனர். சர்தார் காவல் சாவடி(Sardar Post) மீது வெடிகுண்டு தாக்குதல் நடத்தினர். இந்தியப்

படை எதிர்த்தாக்குதல் நடத்தியது. அதில் 34 பாகிஸ்தான் வீரர்களும், 2 இந்திய வீரர்களும் கொல்லப்பட்டனர். பின்வாங்கிய பாகிஸ்தான் படை மற்றொரு இடத்தில் இருந்த விக்கோட் சாவடி (Vigkot Post) மீது மின்னல் தாக்குதல் நடத்திக் கைப்பற்றியது. இந்திய இராணுவம் பாகிஸ்தான் ஊடுருவலை எதிர் கொண்டது.

பிரதமர் லால் பகதூர் சாஸ்திரி பாகிஸ்தானுடன் போர் நிறுத்த ஒப்பந்தம் செய்துக் கொள்ள விரும்பினார். ஆனால் பாகிஸ்தான் அதற்குத் தயாராக இல்லை. அந்தச் சமயத்தில் பிரிட்டிஷ் பிரதமர் ஹெரால்டு வில்சன் தலையீட்டால் இரு காமன்வெல்த் நாடுகளுக்கிடையேயான “கட்ச் போர்“ முடிவுக்கு வந்தது. இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்குமிடையேயான ஒரு போர் நிறுத்த ஒப்பந்தம் இலண்டனில் கையெழுத்தாயிற்று.

## 3.6.1. காஷ்மீர்ப் படையெடுப்பு

கட்ச் ஊடுருவல் பாகிஸ்தானின் திசைதிருப்பும் செயலுத்தி என்பது விரைவிலேயே வெளிப்பட்டது. கட்ச் போர் நிறுத்த ஒப்பந்தம் பேச்சு வார்த்தை நடந்து கொண்டிருக்கும்போதே பாகிஸ்தான் காஷ்மீர் மீது படையெடுப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்தது. கட்ச் போர் நிறுத்த ஒப்பந்தம் செய்துக் கொள்ளப்பட்ட உடனேயே காஷ்மீர்ப் பிரச்சனைக்கு உடனடியான இறுதித் தீர்வு காணப்பட வேண்டும் என்றார் பாகிஸ்தான் அதிபர் தளபதி அயூப்கான். கட்ச் நோயின் அறிகுறி, காஷ்மீர் தான் நோய் என்றார் அவர். பாகிஸ்தான் காஷ்மீரில் சதிவேலைகளில் இறங்கியது. பயிற்சி பெற்ற நூற்றுக்கணக்கானோர் காஷ்மீருக்குள் ஊடுருவினர். அவர்களை “முஜாகித்கள் அல்லது விடுவிப்பாளர்கள் (Liberators) என்று வர்ணித்தார் பாகிஸ்தான் வெளி விவகாரத்துறை அமைச்சராயிருந்த கல்பிகர் அலி புட்டோ. பாகிஸ்தானின் ஊடுருவல்காரர்கள் ஹஜிபீர் மற்றும் டித்வால் பகுதிகளைப் பிடித்துக் கொண்டனர். காஷ்மீரைக் கட்டாயமாகக் கைப்பற்றிக் கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில் 1965-ஆம் ஆண்டு ஆகஸ்ட் 5-ஆம் தேதி அறிவிக்கப்படாப் போரைத் துவக்கியது பாகிஸ்தான். அதுவரை தயக்கம் காட்டிய பிரதமர் சாஸ்திரி பாகிஸ்தானின் இராணுவத் தாக்குதலை முறியடிக்க இந்தியா இராணுவத்துக்கு உத்தரவிட்டார்.

தயார் நிலையிலிருந்த இந்திய இராணுவம் காஷ்மீருக்குள் விரைந்து சென்று ஊடுறுவல்காரர்களை எதிர் கொண்டது. காஷ்மீரின் எல்லைகள் மூடப்பட்டன. பாகிஸ்தான் படை சாம் (Chham) பகுதியிலிருந்த இந்திய இராணுவத் தளங்களைத் தாக்கியது (1966) செப்டம்பர் 1). இந்தியா பாகிஸ்தானுக்கு எதிரான தாக்குதலைத் தீவிரப்படுத்தியது “சல்லடை நடவடிக்கை” (Operatien Riddle) எடுக்கப்பட்டது. இந்தியப் படை இந்திய பாகிஸ்தான் எல்லையைத் தாண்டிப் பாகிஸ்தானுக்குள் நுழைந்தது. லாகூர் மற்றும் சியால்கோட் பகுதிகளில் மும்முனைத் தாக்குதலைத் துவக்கியது. இந்தியா பாகிஸ்தானுக்கிடையே ஏற்பட்ட “அறிவிக்கப்படா போர்” 1965 செப்டம்பர் 25-ஆம் தேதி வரை தொடர்ந்தது. பாகிஸ்தான் பகுதியைக் கைப்பற்றிக் கொண்டு பின் அதற்கு பதில் பாகிஸ்தான் கைப்பற்றியக் காஷ்மீர்ப் பகுதியைத் திரும்பப் பெற வேண்டும் என்பது பிரதமர் லால் பகதூர் சாஸ்திரியின் விருப்பம். இப்போரில் பலத்தச் சேதமடைந்த பாகிஸ்தான் சமரசம் செய்து கொள்ளச் சம்மதித்தது.

நிலைமை மேலும் மோசமடையாமல் தடுக்க ஐ.நா. பாதுகாப்பு அவை போரை நிறுத்துமாறு இந்தியாவையும் பாகிஸ்தானையும் கேட்டுக் கொண்டது. ஐ.நா.வின் தலைமைச் செயலர் உதாண்ட் (Uthant) மேற்கொண்ட சமரச முயற்சியின் விளைவாக இருநாடுகளுக்குமிடையே போர் நிறுத்தம் ஏற்பட்டது. 1965 செப்டம்பர் 20ஆம் தேதி ஐ.நா. பாதுகாப்பு அவை ஒரு மனதாக நிறைவேற்றிய தீர்மானம் இந்தியாவும் பாகிஸ்தானும் தங்கள் படைகளை 1965 ஆகஸ்ட் 5-ஆம் தேதி இருந்த நிலைக்குத் திரும்பச் செல்ல வேண்டும் என்று கேட்டுக் கொண்டது. இருவார இந்திய-பாகிஸ்தான் எல்லைப்போர் முடிவுக்கு வந்தது.

## 3.6.2. தாஷ்கண்ட் பிரகடனம் (Dashkent Declaration), 1966

இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்குமிடையே துவங்கியப் போர் முடிந்தது. ஆனால் போர் அபாயம் நீங்கவில்லை. பாகிஸ்தான் போர் நிறுத்த விதிகளை மீறிக் கொண்டிருந்தது. இந்தியாவுக்கு எதிராகத் துவேஷப்பிரச்சாரம் செய்தது. ரஷ்யப் பிரதமர் கோசிஜின் (Kosygin) இவ்விரு நாடுகளுக்கிடையே சமரசம் செய்ய முன்வந்தார். இந்திய

பாகிஸ்தான் பிரதமர்களை சோவியத் யூனியனில் உள்ள தாஷ்கண்ட; (Tashkent) என்ற இடத்தில் சந்தித்துப்பேச அழைப்பு விடுத்தார். அவ்வழைப்பை ஏற்று இந்தியப் பிரதமர் லால் பகதூர் சாஸ்திரியும் பாகிஸ்தான் அதிபர் அயூப் கானும் 1966 ஜனவரி 4-ஆம் தேதியிலிருந்து 10 வரை தாஷ்கண்ட்டில் பேச்சுவார்த்தை நடத்தினர். அப்பேச்சுவார்த்தையின் முடிவில் "தாஷ்கண்ட் பிரகடனம்" வெளியிடப்பட்டது. அதன் முக்கிய அம்சங்கள் வருமாறு:

இந்தியாவும் பாகிஸ்தானும் நல்லுறவை உருவாக்குவதற்கான முயற்சிகளை மேற்கொள்ளல். ஐ.நா. சாசனத்தில் கூறப்பட்டுள்ளவாறு தங்களுக்குள்ள தகராறுகளை அமைதியாகத் தீர்த்துக் கொள்ளல். இருநாட்டுப் படையினரும் 1965 ஆகஸ்டு 5-ஆம் தேதிக்கு முன்பிருந்த நிலைகளுக்குத் திரும்ப வேண்டும். அதை 1966 பிப்ரவரி 25 ஆம் தேதிக்குள் முடிக்க வேண்டும். இருதரப்பாரும் போர் நிறுத்த விதிகளைக் கடைப்பிடிக்க வேண்டும். இருநாடுகளும் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடக் கூடாது என்ற அடிப்படையில் இருதரப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். இருநாட்டு ஹை கமிஷனர்களும் அவரவர் இடங்களுக்குச் சென்று இரு நாடுகளுக்கிடையே சுமுகமான ராஜதந்திர உறவுகளை மீண்டும் தொடர வேண்டும்.

பொதுவாகத் தாஷ்கண்ட் பிரகடனத்தை இந்தியர்கள் வரவேற்றனர். எனினும், தாஷ்கண்ட் உடன்பாடு காஷ்மீர்ப் பிரச்சனை பற்றிய பாகிஸ்தான் - இந்திய நிலைகளில் எவ்வித மாற்றத்தையும் ஏற்படுத்தவில்லை. பிரதமர் சாஸ்திரி சம பகுதியைப் பெற்றுக் கொண்டு ஹாஜியூரைத் திருப்பிக் கொடுக்க சம்மதித்தார். ஆனால் பாகிஸ்தான் வசமிருந்த காஷ்மீர்ப் பகுதியை மீட்கவில்லை. எனவே, இந்தியத் தலைவர்கள் ஏமாற்றமடைந்தனர். இந்திய இராணுவ வீரர்கள் பெற்றுத்தந்த வெற்றி பறிபோய் விட்டதாகக் கருதினர். காங்கிரஸ் கட்சியில் ஒரு பகுதியினரும் சாஸ்திரியோடு இருந்த மூத்தத் தலைவர்கள் சிலரும் தாஷ்கண்ட் ஒப்பந்தத்தை ஏற்கவில்லை. நேருவுக்குப் பின் நவபாரதத்தைக் கட்டிகாக்க முற்பட்ட லால் பகதூர் சாஸ்திரி தாஷ்கண்ட் மண்ணில் 1966 ஜனவரி 11- ஆம் தேதி நள்ளிரவு ஒரு மணிக்கு மாரடைப்பால் மரணமடைந்தார்.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

குறிப்பு

9. அதிகாரப் பூர்வ மொழிச் சட்டம் எப்போது நிறைவேற்றப்பட்டது?
10. இந்தி அல்லாத மொழிப் பேசுபவர்களுக்குத் தகவல்தொடர்புக்கான முதன்மை மொழியாக ஆங்கிலத்தைத் தொடர்வது குறித்த வாக்குறுதியை நேரு எங்கே, எப்போது கொடுத்தார்?
11. தமிழகத்தில் இந்தி எதிர்ப்புப் போராட்டத்திற்கு தலைமை தாங்கிய அரசியல் கட்சி எது?
12. பாகிஸ்தான் சார்பாக தாஷ்கண்ட் பேச்சுவார்த்தையில் பங்கேற்றவர் யார்?

## 3.7. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்க

1. நேரு ஆட்சியில் 1952, 1957, மற்றும் 1962 ஆகிய மூன்றுப் பொதுத் தேர்தல்கள் நடந்தன.
2. நேருவின் கூற்றுப்படி, விவசாயம், நீர்ப்பாசனம், மின்சார உற்பத்தி, மிகப்பெரியப் பல்நோக்கு நீர் மின் திட்டங்கள் மற்றும் கனரக தொழில்கள் ஆகியவை "இந்தியாவின் நவீன கோயில்கள்" ஆகும்.
3. ஹோமி பாபா, எஸ்.எஸ். பட்நகர், மஹலானோபிஸ் மற்றும் டி.எஸ். கோத்தாரி ஆகியோர் நேருவின் காலத்தில் முக்கிய விஞ்ஞானிகளாக இருந்தனர்.
4. 1958 ஆண்டில், அறிவியல் கொள்கைத் தீர்மானம் அறிமுகப்படுத்தப்பட்டது.
5. சரத்துகள் 245-263 மத்திய-மாநில உறவைக் கையாளுகின்றன.
6. மத்திய அரசு அதிகாரங்கள், மாநில அரசு அதிகாரங்கள் மற்றும் மத்திய-மாநில அரசுகள் பயன்படுத்தும் பொதுவான அதிகாரங்கள்.
7. மீதமுள்ள அதிகாரத்தை மத்திய அரசு அனுபவிக்கிறது.
8. பிரிவு 356 மாநில அவசரநிலைப் பற்றிக் குறிப்பிடுகிறது..
9. அதிகாரப்பூர்வ மொழிச் சட்டம் 1963 ஆண்டில் நிறைவேற்றப்பட்டது.
10. ஆகஸ்ட் 7, 1959 அன்று நாடாளுமன்றத்தில் இந்தி அல்லாத மொழி பேசுபவர்களுக்கு நேரு வாக்குறுதியளித்தார்.
11. தமிழ்நாட்டில் இந்தி எதிர்ப்புப் போராட்டத்திற்கு திராவிட முன்னேற்றக் கழகம் (திமுக) தலைமைத் தாங்கியது.

குறிப்பு

12. பாகிஸ்தான் சார்பாக ஜெனரல் அயூப் கான் 1966 ஜனவரியில் சோவியத் யூனியனில் தாஷ்கண்டில் சந்தித்துத் தாஷ்கண்ட் பிரகடனத்தில் கையெழுத்திட்டனர்.

## 3.8. அத்தியாயச் சுருக்கம்

- நேரு 1947 - 1964 வரை இந்தியாவின் பிரதமராக இருந்தார்.
- அவரது பார்வை மற்றும் நோக்கம் இந்தியாவை சுதந்திர, இறையாண்மை, ஜனநாயக, மதச்சார்பற்ற மற்றும் சமூகக் குடியரசாக மாற்றியது.
- பாராளுமன்ற ஜனநாயகம், சுயாதீன நீதித்துறையை உருவாக்குதல் மற்றும் தனித்துவமான வெளியுறவுக் கொள்கையைச் செயல்படுத்துதல் ஆகியவற்றுக்கு நேரு அடித்தளம் அமைத்தார்.
- பொருளாதாரம் குறித்த நேருவின் பார்வையில் மற்றும் அறிவியல் மற்றும் தொழில்நுட்பத்திற்கான அவரது பங்களிப்புகள் எப்போதும் உன்னதமாக இருந்தன.
- இந்தியா என்பது மாநில மற்றும் யூனியன் பிரதேசங்களைக் கொண்ட ஒருங்கிணைந்த அமைப்பாகும். எனவே, மத்திய அரசாங்கத்துடனான அதன் உறவுகள் குறிப்பிடத்தக்கவை.
- இந்திய அரசியலமைப்புச் சரத்துகள் 245 - 263 வரை மத்திய-மாநில உறவுகளுடன் தொடர்புடையது.
- இந்த உறவுகள் மூன்றாக வகைப்படுத்தப்பட்டுள்ளது. சட்டமன்ற, நிர்வாக மற்றும் நிதி உறவுகள்.
- அதிகாரங்கள் மூன்றாக வகைப்படுத்தப்பட்டுள்ளன: மத்திய, மாநில மற்றும் பொது அதிகாரங்கள்.
- நேருவின் மரணத்திற்குப் பிறகு, சாஸ்திரி 1964 ஆண்டில் ஆட்சிக்கு வந்தார். அவர் 2 ஆண்டுகளுக்கும் குறைவான காலம் ஆட்சிச் செய்தார். அந்த நேரத்தில் இந்தி எதிர்ப்புப் போராட்டங்கள் மற்றும் இந்திய - பாகிஸ்தான் போர் போன்ற குறிப்பிடத்தக்க அரசியல் நிகழ்வுகள் நடந்தன.

- அரசியலமைப்பின் 15 ஆண்டுகள் நிறைவடைந்த பின்னர் 1965 ஆம் ஆண்டில் இந்தி எதிர்ப்புப் போராட்டம் வெடித்தது.
- இந்தி அல்லாத மொழிப் பேசுபவர்கள் குறிப்பாக தெற்கிலிருந்து வந்தவர்கள் இந்தியை தங்கள் அதிகாரப்பூர்வ மொழியாக ஏற்கவில்லை.
- ஜவஹர்லால் நேரு இந்திப் பேசாத மக்களுக்கு இந்தி முதன்மையான மொழியாக இருக்காது என அறிவித்தார்.
- 1963 ஆண்டில் அதிகாரப்பூர்வ மொழிச் சட்டம் நேருவின் வாக்குறுதியை உறுதி செய்கிறது.
- இருப்பினும், ஜனவரி 26, 1965 அன்று இந்தி ஒரே அதிகாரப்பூர்வ மொழியாகச் செயல்படுத்த மத்திய அரசு முடிவு செய்தது.
- இதைத் தொடர்ந்து, இந்தி அல்லாத பகுதிகளில், குறிப்பாக தமிழ்நாட்டில் தொடர்ச்சியானப் போராட்டங்கள் நடத்தப்பட்டன.
- இறுதியாக, சாஸ்திரி அரசாங்கம் தனது திட்டத்தைத் திரும்பப் பெற்றது மற்றும் ஆங்கிலத்தை இந்தியாவின் இணை அதிகாரப்பூர்வ மொழியாக அறிவித்தது.

## 3.9. முக்கியச் சொற்கள்

**அதிகாரப்பூர்வ மொழி ஆணையம்:**இந்திய அரசியலமைப்பின் 344 வது பிரிவில் கூறப்பட்டுள்ள விதிகளுக்கு இணங்க இந்திய ஜனாதிபதியால் அமைக்கப்பட்ட ஒரு ஆணையமாகும். இந்தி கமிஷன் 1955 ஜூன் 7 அன்று இந்தி மொழியின் முற்போக்கான பயன்பாடு மற்றும் ஆங்கில மொழியைப் பயன்படுத்துவதற்கான கட்டுப்பாடுகள் ஆகியவற்றிற்காக அமைக்கப்பட்டது.

**அதிகாரப்பூர்வ மொழிச் சட்டம் 1963:** மத்திய அதிகாரப்பூர்வ நோக்கங்களுக்காகவும், பாராளுமன்றத்தில் வணிக பரிவர்த்தனைக்காகவும், மத்திய மற்றும் மாநில சட்டங்களுக்காகவும், உயர் நீதிமன்றங்களில் சில நோக்கங்களுக்காகவும் பயன்படுத்தப்படக்கூடிய மொழிகளுக்கு வழங்குவதற்கான சட்டம்.

**நிதி அவசரநிலை:** சரத்து 360 நிதி அவசரநிலையைப் பற்றியது. மிக மோசமான நிதி நெருக்கடி ஏற்படும் போது இந்திய ஜனாதிபதி நிதி

குறிப்பு

அவசரநிலையை அறிவிக்க முடியும். இதுவரை இந்த அவசரநிலை இந்தியாவில் ஒருபோதும் செயல்படுத்தப்படவில்லை.

**மாநில அவசரநிலை:** சரத்து 356 மாநில அவசரநிலையைப் பற்றியது. சட்டம் ஒழுங்கு தவறும்போது ஜனாதிபதி மாநில அரசைக் கலைக்க முடியும். இந்த அவசரநிலை அதிகபட்சம் 6 மாதங்களுக்கு நடைமுறையில் இருக்கும்.

**தேசிய அவசரநிலை:** சரத்து 352 தேசிய அவசரநிலையைப் பற்றியது. இது அன்னியப் படையெடுப்பின் போதோ அல்லது உள்நாட்டில் நிலவும் அசாதாரண சூழ்நிலையின் போதோ ஜனாதிபதி இதைச் செயல்படுத்தப்படலாம். இந்திரா காந்தி 1975 யில் ஒரு முறை அவசரநிலையைப் பிரகடனப்படுத்தினார்.

## 3.10. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

### குறிகிய வினாக்கள்

1. பாராளுமன்ற ஜனநாயகம் குறித்து எழுதுக.
2. சோசலிசம் குறித்து சிறு குறிப்பு வரைக.
3. மத்திய அரசால் செயல்படுத்தப்படும் முக்கிய அதிகாரங்கள் யாவை?
4. எஞ்சிய அதிகாரங்கள் (residuary power) குறித்துக் குறிப்பு எழுதுக.
5. இந்தி மொழித் தொடர்பாக நேருவின் வாக்குறுதியைப் பற்றி சிறு குறிப்பு எழுதுக.

### விரிவான வினாக்கள்

1. நவீன இந்தியாவின் சிற்பி நேருவைப் பற்றி கட்டுரை வடிவில் விவரி.
2. அரசியலமைப்புப் படி மத்திய-மாநில அரசு உறவுகள் குறித்து பகுப்பாய்வு செய்க.
3. இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியை உன்பார்வையில் மதிப்பிடு செய்க.

## 3.11. கூடுதல் வாசிப்புகள்

Ananth V. Krishna. 2011. *India since Independence: Making Sense of Indian Politics*. New Delhi: Pearson.

பிபன் சந்திரா, மிருதுலா முகர்ஜி, ஆதித்யா முகர்ஜி. 2015.*சுதந்திரத்திற்குப் பிறகு இந்தியா,* சென்னை: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.

G. John Gilbert. 2006. *Contemporary History of India*. New Delhi: Anmol Publications Pvt. Ltd.

வெங்கடேசன்.க. 2012. *சமகால இந்திய வரலாறு 1947-2012,* ராஜபாளையம்: வி.சி.பப்ளிகேஷன்ஸ்.

Ramachandra Guha. 2008. *India after Gandhi*. London: Picador.

S.N. Sen. 2006. *History Modern India*. Delhi: New Age International PVT., LTD.

# அலகு-4

## இந்திராகாந்தி - வங்கிகள் தேசியமயமாக்கப்படல் - 1971 இந்தியா - பாகிஸ்தான் போர்- அவசரநிலை பிரகடனம்

**பாட அமைப்பு**

4.1. முன்னுரை

4.2. நோக்கங்கள்

4.3. இந்திரா காந்தி

- 4.3.1. அடுப்பங்கரை அமைச்சரவைக் குழு (Kitchen Cabinet)
- 4.3.2. ரூபாய் மதிப்புக் குறைப்பு
- 4.3.3. பசு பாதுகாப்புப் போராட்டம், 1966 நவம்பர்

4.4. 1967-ஆம் ஆண்டு பொதுத் தேர்தல்

- 4.4.1. குடியரசுத் தலைவர் தேர்தல்- 1967
- 4.4.2. நாட்டு நிர்வாகம், 1967-1970
- 4.4.3. மாநிலங்களோடு உறவு
- 4.4.4. மீண்டும் குடியரசுத் தலைவர் தேர்தல், 1969
- 4.4.5. காங்கிரஸ் பிளவு, 1969

4.5. வங்கிகள் தேசியமயமாக்கப்படல்

குறிப்பு

4.5.1. மன்னர் மானிய ஒழிப்பு, 1970

4.6. மானிய ஒழிப்பு

4.6.1. 24- வது சட்டத் திருத்தம்

4.6.2. பொதுத் தேர்தல், 1971 மற்றும் அதன் விளைவும்

4.6.3. தேர்தல் முடிவு

4.7. இந்திய - பங்ளாதேஷ் போர், 1971

4.7.1. ஆட்சியில் குழப்பம்

4.7.2. அகதிகள் பிரச்சனை

4.7.3. இந்தியாவின் பங்கு

4.7.4. முக்தி பாஹினி

4.7.5. பிரதமரின் பயணம்

4.7.6. இந்தியா-பாகிஸ்தான் போர்- 1971

4.7.7. கிழக்கு வங்காளம் மீட்கப்படல்

4.7.8. போர் நிறுத்தம்

4.7.9. போரின் விளைவுகள்

4.7.10. சிம்லா ஒப்பந்தம் (Simla Agreement), 1972

4.8. அவசர காலத்திற்கு முன்பு இருந்த சூழ்நிலைகள்

4.8.1. அலகாபாத் நீதிமன்றத் தீர்ப்பு, 1975

4.8.2. உச்சநீதி மன்றத்தில் முறையீடு

4.8.3. எதிர்க்கட்சிகளின் கோரிக்கை

4.8.4. அவசர நிலை அறிவிப்பு

4.8.5. 20 அம்சத்திட்டம் (Twenty point Programme)

4.8.6. நெருக்கடி காலத்தில் சஞ்சய் காந்தியின் திட்டம்

4.8.7. தேர்தல் அறிவிப்பு- 1977

4.9. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்

4.10. அத்தியாயச் சுருக்கம்

4.11. முக்கியச் சொற்கள்

4.12. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

4.13. கூடுதல் வாசிப்புகள்

குறிப்பு

## 4.1. முன்னுரை

நேருவின் மகளாகப் பிறந்த இந்திராப் பிரியதர்ஷினி, இளமைக்காலத்திலிருந்து ஏட்டுக்கல்வியோடு இயல்பான அரசியலையும்க் கற்றுத்தேர்ந்தார். குறிப்பாக நேரு சிறையில் இருக்கும் போது இந்திராவிற்கு எழுதியக் கடிதங்கள் அவரை அரசியலுக்கு பயன்படுத்தியது. சுதந்திர இந்தியாவில் காங்கிரஸில் பல்வேறுப் பொறுப்புகளை (மகளிர் அணித்தலைவர், பொதுச்செயலாளர் மற்றும் கட்சியின் தலைவர்) இந்திரா காந்தி வகித்தார். அதே சமயத்தில் நேருவின் அமைச்சரவையில் அவரைச் சேர்த்துக்கொள்ளவில்லை. அதுமட்டுமின்றி நேரு எந்த இடத்திலும் இந்திராவை தன்னுடைய அரசியல் வாரிசு என்று அறிவிக்கவில்லை.

நேருவின் மரணத்திற்குப் பிறகு பிரதமராகப் பொறுப்பேற்ற லால்பகதூர் சாஸ்திரி அமைச்சரவையில் தகவல்தொடர்புத் துறையில் அமைச்சராகப் பொறுப்பேற்றார். 1966-யில் லால்பகத்தூர் சாஸ்திரி மறைவிற்குப் பிறகு மிகுந்தப் போட்டிக்கிடையே பிரதமராகப் பொறுப்பேற்றார் இந்திரா. ஆரம்பக்காலத்தில் ஆட்சியிலும் கட்சியிலும் பல்வேறு சவால்களை சந்தித்த இந்திரா காந்தி அதை ஒவ்வொன்றாக அகற்றித் தன்னை மிகப்பெரிய ஆளுமைசக்தியாக மாற்றிக்கொண்டார். இந்த அத்தியாயமானது இந்திரா காந்தியின் ஆட்சி, அவர் எதிர்கொண்ட சவால்கள், காங்கிரஸ் உள்ளே ஏற்பட்டப் பிளவு மற்றும் பங்களாதேஷ் விடுதலைத் தொடர்பாக இந்திய-பாகிஸ்தானுக்கிடையே ஏற்பட்டப் போர் ஆகியவை விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

பங்களாதேஷ் விடுதலையைத் தொடர்ந்து புகழின் உச்சிக்குச் சென்ற இந்திரா காந்தி. பல்வேறு காரணங்களால் அவருடையச் செல்வாக்குச் சரியத்துவங்கியது. இறுதியில் 1975 ஆம் ஆண்டு ஜீன் மாதம் அலகாபாத் நீதி மன்றத்தின் தீர்ப்பு, 1971 ஆம் ஆண்டு இந்திராகாந்தி ரேபரலித் தொகுதியிருந்து வெற்றிப்பெற்றது செல்லாது என அறிவித்தது. இதனைத் தொடர்ந்து நாடு முழுவதும் போராட்டமும் பதட்டமும் தொடர்ந்தது. இச்சூழ்நிலையில் இந்திரா காந்தி தேசிய அவசரநிலையைப் பிரகடனப் படுத்தினார். அவரது அரசியல் எதிரிகள் கைதுச் செய்யப்பட்டனர். 1977 வரை நடைமுறையிலிருந்த அவசரநிலை இந்திராகாந்தியின் அரசியல் செல்வாக்கைப் பாதித்தது.

**குறிப்பு**

1977 ஆம் ஆண்டு துவக்கத்தில் தேர்தல் நடைப்பெறும் என இந்திரா காந்தி அறிவித்தார். தலைவர்கள் விடுதலைச் செய்யப்பட்டனர். எதிர்க்கட்சிகளின் கூட்டணித் தொகுப்பாக ஜனதா, காங்கிரஸிக்கு எதிராகத் தேர்தலில் களம் கண்டது. இந்தத் தேர்தலின் முடிவு முதல் முறையாகச் சுதந்திர இந்தியாவில் காங்கிரஸ் ஆட்சி அதிகாரத்திலிருந்து அகற்றப்பட்டது. ஜனதா கட்சிப் பெரும்பான்மையுடன் ஆட்சிக்கு வந்தது. இந்தப் பின்னணியில்தான் இந்த அத்தியாயமானது அவசர நிலை பிரகடனம் குறித்தும், 1977 ஆம் ஆண்டுத் தேர்தலைக் குறித்தும் இறுதியாக ஜனதாவின் எழுச்சியைக் குறித்தும் ஆராய்கிறது.

## 4.2. நோக்கங்கள்

இந்தப் பாடத்தைப் படித்த பிறகு, நீங்கள் கீழ்கண்டவற்றை அறிந்துக் கொள்ள முடியும்:

- சாஸ்திரி இறந்த பிறகு பிரதமர் பதவிக்கான தேர்தலைப் பற்றி அறிந்துக் கொள்ள முடியும்.
- திருமதி இந்திரா காந்தி எதிர்கொண்ட ஆரம்பச் சவால்களைப் பற்றி அறிய முடியும்.
- 1967 - ஆம் ஆண்டு தேர்தலையும் அதன் முடிவுகளையும் அறிய முடியும்.
- திருமதி காந்தி நடைமுறைப்படுத்தியச் சீர்திருத்தங்களைப் பற்றித் தெரிந்துக் கொள்ள முடியும்.
- 1969 ஜனாதிபதி தேர்தலையும் அதன் முடிவுகளையும் பற்றி அறிய முடியும்.
- 1971 - ஆம் ஆண்டு பங்களாதேஷ் விடுதலைப்போரைப் பற்றி புரிந்துக் கொள்ள முடியும்.
- தேசிய அவசரகாலத்தின் பின்னணியை அறியலாம்.
- அவசரகாலத்தில் இந்தியா அரசியலை அறிந்துக் கொள்ள இயலும் (1975-77).
- அவசரகால விளைவுகளைப் புரிந்துக் கொள்ள முடியும்.
- ஜனதா அரசாங்கத்தின் எழுச்சி மற்றும் வீழ்ச்சியை புரிந்துக் கொள்ள இயலும்.

குறிப்பு

## 4.3. இந்திரா காந்தி

சாஸ்திரியின் மரணத்தைத் தொடர்ந்து பிரதமர் பதவிக்கு காங்கிரஸில் பல தலைவர்கள் போட்டியிட்டனர். இறுதியில் இந்திரா காந்திக்கும் மொராய்தேசாய்க்கும் நேரடிப்போட்டி ஏற்பட்டது. காங்கிரஸ் தலைவரான காமராஜரும் சிண்டிகேட்டும் இந்திரா காந்தியை ஆதரித்ததால் கட்சி நாடாளுமன்ற உறுப்பினர்களிடையே நடைபெற்ற தேர்தல் இந்திரா காந்தி தேசாயயைவிட அதிக உறுப்பினர்கள் ஆதரவுப்பெற்றுப் பிரதமாராகத் தேர்வானார். இந்தியாவின் முதல் பெண் பிரதமரான திருமதி இந்திரா காந்தி கட்சியின் வழிகாட்டுதலின் பேரின் அரசை நடத்துவார் என்று கட்சித்தலைவர்கள் நம்பினர். ஆனால், பிரதமர் பதவியின் கன்னியத்தைக் காக்கும் பொருட்டு கொஞ்சம் கொஞ்சமாகச் சுதந்திரமாக செயல்படத் தொடங்கினார்.

### 4.3.1. அடுப்பங்கரை அமைச்சரவைக் குழு (Kitchen Cabinet)

1966 ஜனவரி 24-ஆம் தேதி இந்திரா காந்தி இந்தியாவின் பிரதமராகப் பொறுப்பேற்றார். பதவிக்கு வந்தபின் மூன்றாண்டுகள், அவர் அதிகாரம் போராட்டத்தை (Struggle for Power) எதிர்கொள்ள வேண்டியதாயிற்று. பலத்தப் போட்டிக்கிடையே இந்திரா காந்தியைப் பிரதமராக்கிய “சிண்டிகேட்” அவரைத் தன் கைப்பாவையாக வைத்திருக்க விரும்பியது.

பிரதமர் இந்திரா காந்தி அமைச்சரவைக்கு வெளியே அவருடைய நம்பிக்கைக்குப் பாத்திரமான சிலரிடம் அந்தரங்க ஆலோசனையைப் பெற விரும்பினார். அதற்காக அசோக மேத்தா, சி.சுப்பிரமணியம், தினேஷ் சிங் ஆகியோரைக் கொண்ட ஒரு உள் வளையத்தை (Inner Circle) உருவாக்கினார். அரசாங்கத்தின் சமூக, பொருளாதார, அரசியல் கொள்கைகள் பற்றி அவர்களுடன் கலந்தாலோசித்தார். அவர்களது ஆலோசனைகளுக்கு மதிப்பளித்தார். அவர்களுடன் விவாதித்தப் பிறகே கொள்கை முடிவுகளை அமைச்சரவைக்குக் கொண்டு சென்றார் இந்திரா காந்தி. அமைச்சரவையின் உள் வளையமாக, சக்கரத்துக்குள் சக்கரமாகச் செயல்பட்ட அக்குழு “அடுப்பாங்கரை அமைச்சரவைக் குழு” என்று அறியப்பட்டது.

## 4.3.2. ரூபாய் மதிப்புக் குறைப்பு

குறிப்பு

சில பெரிய மாநிலங்கள் பஞ்சத்தின் பிடியில் சிக்குண்டிருந்தன. உணவுப் பற்றாக்குறை பெரியப் பிரச்னையாக இருந்தது. பட்டினிச் சாவைத் தவிர்க விரும்பிய பிரதமர் இந்திரா காந்தி அமெரிக்காவின் உதவியைக் கோரத் தயங்கவில்லை. 1966 மார்ச் 28-ஆம் தேதி அவர் அமெரிக்க பயணத்தை மேற்கொண்டார். இந்தியப் பிரதமர் அமெரிக்க அதிபர் லிண்டன் ஜான்சனுடன் அவசர உணவு உதவி பற்றியும், அமெரிக்கப் பொருளாதார உதவியைப் புதுப்பிக்க வேண்டியதன் இன்றியமையாமையைப் பற்றியும் விவாதித்தார். இந்திய ரூபாயின் மதிப்பைக் குறைக்க இந்தியா இணங்கியதால் அமெரிக்கா உதவி செய்ய முன்வந்தது. உலக வங்கியும் (World Bank) சர்வதேச நிதி நிறுவனமும் (International Monetary Fund) பிரதமர் சாஸ்திரியின் ஆட்சிக் காலத்திலிருந்தே ரூபாயின் மதிப்பைக் குறைக்குமாறு (Devaluation) வற்புறுத்தி வந்தது.

ரூபாயின் மதிப்பைக் குறைப்பது முக்கியமான அரசியல் முடிவாகும். பாகிஸ்தானோடு ஏற்பட்ட இரண்டு போர்கள், கடுமையான உணவுப் பஞ்சம்,பலதரப்பட்ட ஏற்றுமதிகளுக்குத் தாராளமாக வழங்கப்பட்ட மானியங்கள் (Subsidies) இந்தியக் கருவூலத்தைக் காலியாக்கி இருந்தது. இந்தியப் பொருளாதாரம் பள்ளத்தை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது. இந்திரா காந்தி திட்டக் கமிஷன் துணைத் தலைவர் டி.என்.காட்கிலையும், நிதி அமைச்சர் அசோக் மேத்தாவையும் கலந்து ஆலோசித்தபின் ரூபாயின் மதிப்பை 57% சதவீதமாகக் குறைத்தார் (1966 ஜூன் 6). இந்திய ரூபாயின் மதிப்பைக் குறைத்து அமெரிக்க உணவு உதவியைப் பெற்றுப் பஞ்சத்தை வெற்றிக் கொண்டார் இந்திரா காந்தி.

## 4.3.3. பசு பாதுகாப்புப் போராட்டம், 1966 நவம்பர்

ஜன சங்கமும் பிற மதவாத அமைப்புகளும் பசு கொலையைத் தடுக்க வேண்டும் என்று கோரி நாடு தழுவியப் போராட்டத்தை நடத்தின. 1966 நவம்பர் 7-ம் தேதி நிர்வாண சாதுக்களின் தலைமையில் ஆயிரக்கணக்கான சூலம் ஏந்திய கிளர்ச்சிக்காரர்கள் தடை உத்தரவை

மீறி நாடாளுமன்றக் கட்டிடத்தை நோக்கிப் படையெடுத்தனர். பேருந்துகளும், கார்களும் பிற வாகனங்களும் நொறுக்கப்பட்டன. அரசாங்கக் கட்டிடங்கள் தாக்கப்பட்டன. கடைகள் சூறையாடப்பட்டன. நாடாளுமன்றக் கட்டிடத்துக்கு முன்பு நிலைமை கட்டுக்கடங்காமல் போகவே போலீசார் துப்பாக்கிச்சூடு நடத்தினர். இதில் ஒரு போலீசாரும் ஆறு சாதுக்களும் இறந்தனர். பசு பாதுகாவலர்களால் என்னைப் பணிய வைக்க முடியாது என்று கூறினார் இந்திரா காந்தி. பசு பாதுகாவலரான உள்துறை அமைச்சர் குல்சாரிலால் நந்தா கிளர்ச்சியைச் சரியாகக் கையாளவில்லை எனக் கூறி பதவியிலிருந்து நீக்கப்பட்டார். பிரதமர் இந்திரா காந்திக்கு ஒரு தலைவலி தீர்ந்தது. பசு பாதுகாப்புப் போராட்டம் ஒடுக்கப்பட்டது.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. 1966 இல் பிரதமர் பதவிக்கு இந்திரா காந்திக்கு எதிராகப் போட்டியிட்டவர் யார்?
2. அடுப்பங்கரை அமைச்சரவை உறுப்பினர்கள் யார்?
3. 1966-ஆம் ஆண்டில் திருமதி காந்தி பிரதமராக வந்தபோது காங்கிரஸ் தலைவர் யார்?

## 4.4. 1967-ஆம் ஆண்டு பொதுத் தேர்தல்

1967 பொதுத் தேர்தல் சமகால இந்திய அரசியல் வரலாற்றில் திருப்புமுனையை ஏற்படுத்திய நிகழ்ச்சியாகும். இத்தேர்தல் இந்திரா காந்திக்கும் சிண்டிகேட்டுக்குமிடையேயான போட்டிக் களமாகக் கருதப்பட்டது. இந்திரா காந்தி தன் கணவர் பெரோஸ் காந்தி போட்டியிட்டு வென்ற உத்திரப்பிரதேசத்திலுள்ள ரேபரேலி நாடாளுமன்றத் தொகுதியில் போட்டியிட்டார். நாடு முழுவதும் சூறாவளி சுற்றுப் பயணம் செய்தார். சிண்டிகேட் தலைவர்களும் தங்கள் ஆதரவாளர்களுடன் பெருவாரியான இடங்களில் வெற்றிபெறப் பாடுபட்டனர்.

சுதந்திர இந்தியாவின் நான்காவது பொதுத் தேர்தல்முடிவுகள் காங்கிரஸ் கோட்டையில் மீது இடி விழுந்ததுப் போலாயிற்று. அக்கட்சிக்கு 520 உறுப்பினர்களைக் கொண்ட மக்களவையில் 281 இடங்களே கிடைத்தன. 1962 தேர்தலில் அக்கட்சி 364 இடங்களைப்

குறிப்பு

பெற்றது. காங்கிரஸ் உத்திரப் பிரதேசம், பீகார், மேற்கு வங்காளம், ஒரிசா, தமிழ்நாடு, கேரளா, ராஜஸ்தான், பஞ்சாப் ஆகிய எட்டு மாநிலங்களிலும் டில்லி, மணிப்பூர் ஆகிய இரண்டு யூனியன் பகுதிகளிலும் தோல்வியைத் தழுவியது.

இந்திரா காந்தி ரேபரேலி தொகுதியில் போட்டியிட்டு அமோக வெற்றி பெற்றார். ஆனால் பல காங்கிரஸ் முன்னணித் தலைவர்கள் இத்தேர்தலில் தோற்றனர். குறிப்பாக எஸ்.கே.பட்டீல், அதுல்ய கோஷ், காமராஜர், சி.சுப்பிரமணியம் போன்றோர் கூட வெற்றிப் பெறவில்லை. உட்கட்சி எதிரிகள் வீழ்ந்ததால் இந்திரா காந்தியின் கரம் ஓங்கியது. சுருங்கக் கூறின், 1967 தேர்தல் காங்கிரசுக்குத் தோல்வி. ஆனால் இந்திரா காந்திக்கு வெற்றி. ரூபாய் மதிப்புக் குறைப்பு, பலவீனமான பொருளாதாரக் கொள்கை, மோசமான வளர்ச்சித் திட்ட நிறைவேற்றம், விலைவாசி உயர்வு, நுகர்வோர் பொருள்கள் கிடைக்காமை, மொழிப்போராட்டங்கள், பசுவதைத் தடுப்புப் போராட்டம், தேர்தலுக்கு முன் கட்டவிழ்த்து விடப்பட்ட வன்முறை நிகழ்ச்சிகள், வேட்பாளர் தேர்வு, உட்கட்சிப் பூசல் ஆகியவை காங்கிரஸின் சரிவுக்கான காரணங்களாகும்.

## 4.4.1. குடியரசுத் தலைவர் தேர்தல்- 1967

1967 இறுதியில் குடியரசுத் தலைவர் டாக்டர் எஸ்.ராதாகிருஷ்ணனின் பதவிக்காலம் முடிய இருந்ததால் அப்பதவிக்கான தேர்தல் நடத்த வேண்டிருந்தது. காங்கிரஸ் நாடாளுமன்றத்திலும் பல மாநில சட்டப் பேரவைகளிலும் பெரும்பான்மை பலத்தை இழந்ததால் தேர்வாளர் குழு (Electoral College)-வில் அதற்கு இரண்டு சதவிகிதப் பெரும்பான்மையே இருந்தது. அதனால் ஊக்கம் பெற்ற எதிர்க்கட்சிகள் உச்ச நீதிமன்ற நீதிபதி கே.சுப்பராவை வேட்பாளராக அறிவித்தனர். இந்திரா காந்தி துணைக் குடியரசுத் தலைவராயிருந்த டாக்டர் சாகிர் உசைன்(Dr.Zakir Hussein) காங்கிரஸ் வேட்பாளராக இருக்க வேண்டும் என்றார்.

நாடாளுமன்ற காங்கிரஸ் கட்சி இந்திராகாந்தியின் விருப்பத்தை ஏற்றது. அதன்படி சாகிர் உசைன் குடியரசுத் தலைவராகவும், வி.வி.கிரி துணைக் குடியரசுத் தலைவராகவும் இருக்க வேண்டுமென்று முடிவு செய்தது. 1967 மே மாதம் நடைபெற்ற தேர்தலில் அவ்விருவரும்

வெற்றிப் பெற்றனர். சமயம் சாராக் கொள்கையின் அடிப்படையில் கம்யூனிஸ்டுகளும், சுயேச்சை இடதுசாரிகளும் ஆதரித்ததால் சாகிர் உசைன் ஏழு விழுக்காடு அதிக வாக்குகள் பெற்று வெற்றிப் பெற்றார். இந்திரா காந்தியின் செல்வாக்கு உயர்ந்தது. சிண்டிகேட்டின் பிடி மேலும் தளர்ந்தது.

## 4.4.2. நாட்டு நிர்வாகம், 1967-1970

**ஆட்சி மொழிகள் திருத்தச் சட்டம்- 1967**

நேருவின் ஆட்சிக் காலத்திலிருந்து ஆட்சி மொழிப் பிரச்சனை, உணர்ச்சிப் பிரச்சனையாக இருந்து வந்தது. இந்தித் திணிப்பு எதிர்ப்பின் விளைவாக நேரு இந்திப் பேசாத மக்கள்தான் எப்போது இந்தி ஆட்சி மொழியாக வேண்டும் என்பதைத் தீர்மானிக்க வேண்டும் என்று நாடாளுமன்றத்தில் உறுதியளித்தார் (1959 ஆகஸ்டு 6) அதன்பின் ஆங்கிலம் 1965 ஜனவரிக்குப் பின்னரும் ஆட்சி மொழியாக இருக்கும் என்பதை உறுதிசெய்ய ஆட்சிமொழிகள் சட்டத்தை (Official Languages Act, 1963) நிறைவேற்றினார். இந்திரா காந்தியின் ஆட்சிக் காலத்தில் 1967 டிசம்பர் மாதம் ஆட்சி மொழிகள் திருத்தச் சட்டம் (Official Languages Amendment Act) நிறைவேற்றப்பட்டது. அச்சட்டம் இந்திப் பேசாத மக்களுக்கு நேரு கொடுத்த வாக்குறுதிக்குச் சட்ட அங்கீகாரம் அளித்தது. மத்தியில் இருமொழி ஆட்சி மொழி-இந்தி, ஆங்கிலம்-உறுதி செய்யப்பட்டது. அதேபோன்று இந்திப் பேசாத மாநிலங்களுக்கிடையே, அம்மாநிலங்களுக்கும் மத்திய அரசாங்கத்துக்குமிடையே ஆங்கிலம் தொடர்பு மொழியாக நீடித்தது. சுருங்கக்கூறின், இந்திப் பேசாத மக்கள் விரும்பும்வரை இந்தியும் ஆங்கிலமும் ஆட்சி மொழிகளாக இருக்கும். இந்திரா காந்தி ஆட்சி மொழிகள் திருத்தச் சட்டத்தின் மூலம் மொழிப் பிரச்சனைக்கு முற்றுப்புள்ளி வைத்தார்.

## 4.4.3. மாநிலங்களோடு உறவு

முதன் முறையாக மத்திய-மாநில உறவுகள் பற்றிய விரிசல்கள் தோன்றின. மாநிலங்கள் அதிக அதிகாரங்கள் கோரின. தமிழ் நாடு அரசாங்கம் மத்திய-மாநில உறவுகள் பற்றிப் பரிசீலிக்க பி.வி.ராஜமன்னார்

கமிட்டியை நியமித்தது. மார்க்சிய கம்யூனிஸ்ட் கட்சி ஆட்சிசெய்த கேரள அரசாங்கம் மத்திய பாதுகாப்புப் படை (Central Reserve Police) மாநில அரசாங்கத்தின் சம்மதமின்றி அனுப்பப் படுவதை ஆட்சேபித்தது. மத்திய காங்கிரஸ் அரசாங்கத்துக்கும் காங்கிரஸல்லாத மாநில அரசாங்கங்களுக்கு மிடையேயான இடைவெளி அதிகரிக்கலாயிற்று. இந்திரா காந்தி காங்கிரசல்லாத மாநில அரசாங்கங்களைக் கவிழ்க்கத் தயங்கவில்லை. உத்திரப் பிரதேச, ராஜஸ்தான் அரசாங்கங்கள் கலைக்கப்பட்டன. கட்சி மாறல் "ஆயா ராம், காயா ராம்" கலாச்சாரம் அரசியல் நடத்தை ஆயிற்று. ஜனநாயகம் கேலிக் கூத்தாயிற்று.

### 4.4.4. மீண்டும் குடியரசுத் தலைவர் தேர்தல், 1969

1969 மே 3-ஆம் தேதி இந்தியக் குடியரசுத் தலைவர் சாகீர் உசைன் மாரடைப்பால் காலமானார். புதிய குடியரசுத் தலைவரைத் தேர்ந்தெடுப்பதற்கு மீண்டும் இந்திரா காந்தியும் சிண்டிகேட்டும் பலப் பரீட்சையில் இறங்கின. காங்கிரஸ் காரியக் கமிட்டி மக்களவை சபாநாயகர் சஞ்சீவ ரெட்டியை அதிகாரப்பூர்வமான வேட்பாளராக அறிவிக்க விரும்பியது. இந்திரா காந்தி துணைக் குடியரசுத் தலைவர் வி.வி.கிரி குடியரசுத் தலைவராக வேண்டும் என்பதில் ஆர்வம் காட்டினார். எனினும் காங்கிரஸ் காரியக் கமிட்டி சஞ்சீவ ரெட்டியை அதிகாரப்பூர்வமான வேட்பாளராக அறிவித்தது.

அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் 1969-ஆம் ஆண்டு மே மாதம் பெங்களூரில் கூடியது. வி.வி.கிரி குடியரசுத் தலைவர் தேர்தலில் சஞ்சீவ ரெட்டிக்கு எதிராகப் போட்டியிடப் போவதாக அறிவித்திருந்தார். அவருக்கு நாடாளுமன்ற இடதுசாரி உறுப்பினர்கள் ஆதரவளிக்க முன்வந்தனர். சிண்டிகேட். ஜன சங்கம் மற்றும் சுதந்திரம் வலதுசாரிக் கட்சிகளின் ஆதரவைக் கோரியது. சிண்டி கேட்டின் அந்நடவடிக்கை சமயம் சார்பின்மைக் கொள்கைக்கும் சோஷலிசக் கொள்கைக்கும் விரோதமானது என்று கருதினார் இந்திரா காந்தி. எனவே, காங்கிரஸ் நாடாளுமன்ற மற்றும் மாநில சட்டப் பேரவை உறுப்பினர்கள் குடியரசுத் தலைவர் தேர்தலில் தங்கள் மனச்சாட்சிப்படி வாக்களிக்கலாம் என்று அறிவித்தார். திரைக்குப் பின்னால் இந்திரா காந்தி காங்கிரஸின் அதிகாரப்பூர்வமான வேட்பாளரான சஞ்சீவ ரெட்டிக்கு எதிராகவும்

வி.வி.கிரிக்கு ஆதரவாகவும் செயல்பட்டார். வி.வி.கிரி வெற்றிப் பெற்றார் (ஆகஸ்ட் 20).

குறிப்பு

## 4.4.5. காங்கிரஸ் பிளவு, 1969

காங்கிரஸ் கட்சிக் கட்டுப்பாட்டை மீறி குடியரசுத் தலைவர் தேர்தலில் அதிகாரப்பூர்வமான வேட்பாளர் தோற்பதற்குக் காரணமாக இருந்த இந்திரா காந்தி மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று அறுபது நாடாளுமன்ற காங்கிரஸ் உறுப்பினர்கள் கோரினர். காங்கிரஸ் தலைவர் ஜன சங்கம் மற்றும் சுதந்திரா கட்சிகளுடன் இரகசியப் பேச்சு வார்த்தை நடத்தியது. கட்சி விதிகளை மீறிய செயல் என்று இந்திரா காந்தி ஆதரவாளர்களான “இளம் துருக்கியர்”(Young Turks) கூறினர். கம்யூனிஸ்ட் கட்சிகள் இந்திரா காந்தியின் தலைமையிலான முற்போக்கு அரசாங்கத்தை ஆதரிக்க முன்வந்தது. 42 கம்யூனிஸ்ட் நாடாளுமன்ற உறுப்பினர்களோடு 22 சுயேச்சை உறுப்பினர்களும் சேர்ந்துக் கொண்டு இந்திரா காந்தியை ஆதரித்தனர். பெரும்பான்மையான காங்கிரஸ் நாடாளுமன்ற உறுப்பினர்களும் இந்திரா காந்தியின் பக்கம் இருந்தனர். இந்திரா காந்தி ஆதரவாளர்கள் புதிய காரியக் கமிட்டியைத் தேர்ந்தெடுப்பதற்காக அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியை அவசரமாகக் கூட்ட வேண்டுமென்று கையெழுத்து சேகரிக்கும் வேட்டையில் இறங்கினர். சிண்டிகேட் இந்திரா காந்தியைக் காங்கிரசிலிருந்து வெளியேற்றியது (1969 நவம்பர் 12). 1969-ஆம் ஆண்டு 22 மற்றும் 23 தேதிகளில் புதுடெல்லியில் சி.சுப்பிரமணியம் தலைமையில் கூட்டப்பட்ட போட்டி அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் 801 உறுப்பினர்களில் 495 பேர் கலந்துக் கொண்டனர். 429 காங்கிரஸ் நாடாளுமன்ற உறுப்பினர்களில் 310 பேர் பங்கேற்றனர். நிஜலிங்கப்பா காங்கிரஸ் தலைவர் பதவியிலிருந்து நீக்கப்பட்டதாக அறிவிக்கப்பட்டது. சி.சுப்பிரமணியம் காங்கிரசின் தற்காலிகத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். சில வாரங்களில் ஜெகஜீவன் ராம் காங்கிரஸ் தலைவரானார். காங்கிரஸ் இரண்டாகப் பிளவுபட்டது. இந்திரா காங்கிரஸ் காங்கிரஸ் (ஆர்) என்றும் அமைப்பு, பழைய அல்லது ஸ்தாபன காங்கிரஸ் (Congress(O) என்றும் இருவேறு கட்சிகளாயின.

காங்கிரஸ் பிளவுபட்டதன் விளைவாக இந்திரா காந்தி நாடாளுமன்றத்தின் இரு அவைகளிலும் பெரும்பான்மை பலத்தை இழந்தார். தனது பிரதமர் பதவியைத் தக்க வைத்துக் கொள்வதற்காக அவர் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி, திராவிட முன்னேற்றக் கழகம், சுயேச்சைகள் ஆகியோரின் ஆதரவைப் பெற்றார்.

## 4.5. வங்கிகள் தேசியமயமாக்கப்படல்

1967 அக்டோபர் 25 - ஆம் தேதி நடைபெற்ற அமைச்சரவைக் குழுக் கூட்டத்தில் பிரதமர் இந்திரா காந்தி வங்கிகளைத் தேசிய மயமாக்கும் சோஷலிசத் திட்டத்தைக் கொண்டு வந்தார். அத்திட்டத்தை ஜெகஜீவன்ராம், சவான், சுவரன் சிங் ஆகியோர் ஆதரித்தனர். ஆனால் மொரார்ஜி தேசாய், சத்ய நாராயண் சின்ஹா, சென்னா ரெட்டி ஆகியோர் கடுமையாக எதிர்த்தனர். தன்னை நிலைப்படுத்திக் கொள்வதற்குமுன் மொரார்ஜி தேசாயையும் அவரது ஆதரவாளர்களையும் விரோதித்துக் கொள்ள விரும்பாத இந்திரா காந்தி வங்கிகளை தேசியமயமாக்கும் திட்டத்தை வலியுறுத்தவில்லை. மாறாக, மொரார்ஜி தேசாயின் வங்கிகளின் மீதான “சமூகக் கட்டுப்பாடு (Social Control of The Banks) பற்றியத் திட்டத்தை ஏற்றுக் கொண்டார். பின்னர் பெங்களூர் காங்கிரஸ் கூட்டத்தின்போது (1969 ஜூலை 30) மொரார்ஜி தேசாயை நிதி அமைச்சர் பதவியிலிருந்து நீக்கிவிட்டு, நிதி இலாகா பொறுப்பை அவரே எடுத்துக் கொண்டு, பொதுமக்கள் போட்ட வைப்புத் தொகை ஐம்பது கோடிக்குமேல் உள்ள 14 பெரிய வங்கிகளைத் தேசியமயமாக்கினார். அதற்கான அவசரச் சட்டம் பிறப்பிக்கப்பட்டது. அந்த அவசரச் சட்டத்தில் தற்காலிகக் குடியரசுத் தலைவராக இருந்த வி.வி.கிரி கையொப்பமிட்டார் என்பது குறிப்பிடத்தக்கது. இந்திரா காந்தி வங்கிகளை தேசியமயமாக்கியது மக்களின் அமோக ஆதரவைப் பெற்றது.

குறிப்பு

## 4.5.1. மன்னர் மானிய ஒழிப்பு, 1970

**“இளம் துருக்கியர்”**

இந்திரா காந்தி பதினான்கு வங்கிகளை அரசுடைமை ஆக்கியப் பின்னர் மன்னர் மானிய ஒழிப்பில் (Abolition of Privy Purses) தீவிரக் கவனம் செலுத்தினார். 1969- ஆம் ஆண்டு நவம்பர் மாதம் இந்தியத் தேசியக் காங்கிரஸ் பிளவுபட்டபின் காங்கிரஸிலிருந்த “இளம் துருக்கியர்” (Young Turks) மன்னர் மானியத்தை ஒழித்தேயாக வேண்டும் என்பதில் குறியாக இருந்தனர். இளம் துருக்கியர் ஒன்று சேர்ந்து 1967 ஜூன் மாதம் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கூட்டத்தில் அரசாங்கம் மன்னர்களுக்கு அளித்து வந்த மானியத்தையும், சிறப்புச் சலுகைகளையும் உடனடியாக நிறுத்த வேண்டுமென்று ஒரு “திடீர்த் தீர்மானத்தை”(Snap Resolution) கொண்டு வந்து நிறைவேற்றிவிட்டனர். மொரார்ஜி தேசாய் அத்தீர்மானத்தை எதிர்த்து வாக்களித்தார். இந்திரா காந்தி அக்கூட்டத்தில் கலந்துக் கொள்ளவில்லை.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

4. நான்காவது பொதுத் தேர்தல் எப்போது நடைபெற்றது?
5. நான்காவது பொதுத் தேர்தலில் (1967) தோல்வியடைந்த முக்கியமான சிண்டிகேட் தலைவர்கள் யார்?
6. வங்கிகள் தேசியமயமாக்கலுக்கு யார் காரணம், எந்த ஆண்டு நடந்தது?
7. காங்கிரஸ் எப்போது பிரிந்தது, அதன் பிளவுகளின் பெயர்கள் என்ன?

## 4.6. மானிய ஒழிப்பு

மன்னர் மானிய ஒழிப்புத் தீர்மானத்தை அடுத்து இந்திரா காந்தி மன்னர்களுடன் பேசி இப்பிரச்னைக்குத் தீர்வுகாண விரும்பினார். உள்துறை அமைச்சர் எஸ்.பி.சவான் “மன்னர் ஒருங்கமைப்பு”டன் (Concord of Princes) பேச்சு வார்த்தை நடத்தினார். மன்னர்கள் சார்பாக தரங்கதாரா மகாராஜா பேச்சு வார்த்தையில் கலந்துக் கொண்டார். மன்னர் மானியத்தைப் படிப்படியாகக் குறைத்துப் பத்தாண்டுகளில்

நிறுத்தி விடுவதாகவும், வருவாய் குறைந்துள்ள மன்னர்களுக்கு இழப்பீட்டுத் தொகையை அதிகரித்துக் கொடுப்பதாகவும் கூறினார் சவான். மன்னர் மானியம் கருணைக் கொடை அல்ல என்றும், பரஸ்பர நம்பிக்கையோடு இந்திய அரசிடம் ஒப்படைத்த மாநிலங்களுக்கு இழப்பீடாகக் கொடுக்கப்படும் காணிக்கையாகும் என்றும் மன்னர்கள் தரப்பில் வாதிடப்பட்டது. அரசியல் சட்டப் பாதுகாப்பு இருக்கிறது என்ற தைரியத்தில் அவர்கள் தங்களது கோரிக்கைகளில் பிடிவாதமாக இருந்தனர். பேச்சுவார்த்தை தோல்வியில் முடிந்தது.

## 4.6.1. 24- வது சட்டத் திருத்தம்

பேச்சு வார்த்தையால் சாதிக்க முடியாததை அரசியலமைப்புச் சட்டத் திருத்தத்தின் மூலம் செய்து முடிக்கத் துணிந்தார் இந்திரா காந்தி. 1970 ஆகஸ்டு மாதம் மன்னர் மானிய ஒழிப்பு மசோதா மக்களவையில் கொண்டுவரப்பட்டது. செப்டம்பர் 2-தேதியில் நடந்த 24-வது சட்டத் திருத்த மசோதா மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மையுடன் நிறைவேற்றப்பட்டது. ஆனால், அம்மசோதா மாநிலங்கள் அவையில் ஒரு வாக்கு வித்தியாசத்தில் தோல்வியடைந்தது. அன்று மாலையே அமைச்சரவைக் குழுக் கூட்டத்தை அவசரமாகக் கூட்டினார் இந்திரா காந்தி. குடியரசுத் தலைவர் மன்னர்களுக்கு அளிக்கப்பட்டு வந்த அங்கீகாரம் விலக்கிக் கொள்ளப்படுவதாக அறிவித்தார். மன்னர்கள் மானியம் பெரும் உரிமையை இழந்தனர்.

## 4.6.2. பொதுத் தேர்தல், 1971 மற்றும் அதன் விளைவும்

**மக்களவைக் கலைப்பு**

குடியரசுத் தலைவரின் நிர்வாக உத்தரவு மூலம் மன்னர் மானியத்தை ஒழித்தது சட்ட நெருக்கடியை ஏற்படுத்தியது. குடியரசுத் தலைவரின் நடவடிக்கை சட்டப்படி செல்லத்தக்கதல்ல (ultra vires) என்று கூறி தள்ளுபடி செய்தது உச்ச நீதிமன்றம். அதுமட்டுமல்ல, உச்ச நீதிமன்றத்தின் பரிசீலனையிலிருந்து குடியரசுத் தலைவர் முழுக் காப்புரிமைப் பெற முடியாது என்றும் உச்ச நீதி மன்றத் தீர்ப்பில்

குறிப்பிடப்பட்டிருந்தது. உச்ச நீதிமன்றத் தீர்ப்பால் இந்திரா காந்தியின் சிறுபான்மை அரசுக்குப் பின்னடைவு ஏற்பட்டது. தன் வழக்கை மக்கள் மன்றத்துக்கு எடுத்துச் செல்ல முடிவு செய்தார். எனவே, குடியரசுத் தலைவரைச் சந்தித்து நாடாளுமன்றத்தைக் கலைத்துவிட்டு மக்களவைத் தேர்தலை 1971 பிப்ரவரி மாதம் நடத்துவதென்று அறிவிக்குமாறு ஆலோசனையைக் கூறினார் இந்திரா காந்தி (1970 டிசம்பர் 27). அவ்வாறே அறிவித்தார் குடியரசுத் தலைவர் வி.வி.கிரி.

மக்களவைக் கலைக்கப்பட்டதால் 1972-ஆம் ஆண்டில் நடைபெற வேண்டியப் பொதுத்தேர்தல் முன்கூட்டியே நடத்தப்பட்டது. நாடாளுமன்றத்தில் பெரும்பான்மை பலத்தைப் பெறமுடியாத இந்திரா காந்தி பொதுத் தேர்தலில் மக்களின் பேராதரவைப் பெற்றுக் கட்சியிலும் ஆட்சியிலும் தன்னை நிலைநிறுத்திக் கொள்ள அனைத்து முயற்சிகளையும் மேற்கொண்டார். பிரதமர் இந்திரா காந்தி கொண்டு வந்த முற்போக்குத் திட்டங்களான வங்கிகளைத் தேசியமயமாக்கல், மன்னர் மானிய ஒழிப்பு நடவடிக்கைகள் மக்களின் பேராதரவைப் பெற்றன. தேர்தல் பிரச்சாரத்தில் வறுமை ஒழிப்பு" (புாயசடிை ர்யவயழ) கோஷத்தை எழுப்பினார் இந்திரா காந்தி. அரசாங்க அதிகாரத்தைக் கொண்டு மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தி, நியாயமான சமுதாயத்தை அமைத்துச் சாதாரண மக்களின் விருப்பங்களையும், எதிர்பார்ப்புகளையும் நிறைவேற்றப் போவதாக உறுதியளித்தார்.

## 4.6.3. தேர்தல் முடிவு

சமகால இந்தியாவின் ஐந்தாவது பொதுத்தேர்தலில் இந்திரா காந்தி மகத்தான வெற்றிப் பெற்றார். இந்திரா காங்கிரஸ் நாடாளுமன்ற மக்களவையின் 523 இடங்களில் 352 இடங்களைக் கைப்பற்றியது. இவ்வெற்றி மக்களவையில் மூன்றில் இரண்டு பங்கு இடங்களைப் பெற்றுத் தந்தது. எனவே இந்திரா காந்தி பிற கட்சிகளின் தயவை நாட வேண்டியதில்லை. 1967-ஆம் ஆண்டில் தேர்தலில் பிளவு படாத காங்கிரஸ் 40.73 விழுக்காடு வாக்குகளைப் பெற்றது. பிளவுபட்டபின் இந்திரா காங்கிரஸ் இத்தேர்தலில் 43.6 விழுக்காடு வாக்குகளைப் பெற்றுப் புதிய சாதனைப் புரிந்தது.

## 4.7. இந்திய - பங்ளாதேஷ் போர், 1971

குறிப்பு

**பங்ளாதேஷ் பிரச்சனை**

1947-ஆம் ஆண்டில் இந்தியப் பிரிவினையால் உருவாக்கப்பட்ட பாகிஸ்தான் இருவேறு பகுதிகளாக இருந்தது. மேற்கு பாகிஸ்தான் மேற்கு பஞ்சாப், சிந்த், பலுசிஸ்தான் ஆகிய பகுதிகளைக் கொண்டது. கிழக்கு பாகிஸ்தான் கிழக்கு வங்காளத்தை உள்ளடக்கியது, இந்தியாவின் இவ்விரு பாகிஸ்தான் பகுதிகளுக்கும் இடைப்பட்ட தூரம் ஆயிரம் மைல்கள். பாகிஸ்தான் சமயம் சார்ந்த நாடாக (Theocratic State) உருவாக்கப்பட்டதால் இஸ்லாம் பாகிஸ்தானின் பொது மதமாக இருந்தது. ஆனால் கலாச்சாரப் பின்னணி பாகிஸ்தானின் இரு பகுதிகளையும் வேறுபடுத்துவதாக அமைந்தது. அதாவது பாகிஸ்தானியர் அரசியலமைப்பால், மதத்தால் ஒன்றுபட்டுக் கலாச்சாரத்தால் வேறுபட்டிருந்தனர். அதுமட்டுமல்ல மேற்கு-கிழக்கு பாகிஸ்தான் பகுதிகளுக்கிடையே தகவல் தொடர்பும், போக்குவரத்தும் பெருந்தடைகளாக இருந்தன. மேற்கு பாகிஸ்தானிலிருந்து இந்திய துணைக்கண்டத்தைச் சுற்றிக் கொண்டு கிழக்கு பாகிஸ்தானுக்கு கப்பலில் பயணம் செய்ய 20 நாட்கள் ஆகும். வரலாறு, மொழி, கலாச்சாரம் ஆகியவை பாகிஸ்தானின் இரு பகுதிகளுக்குமிடையேயான மனப்பான்மை தூரத்தை (Psychological Distance) அதிகரிப்பதாய் இருந்தன. இரு தலைகளைக் கொண்ட பாகிஸ்தான் ஒரு ‘புவியியல் அபத்தம்’ (Geographical Aberration) ஆகும். யாவற்றுக்கும் மேலாக மேற்கு பாகிஸ்தானை மையமாகக் கொண்ட இராணுவ சர்வாதிகாரம் கிழக்கு பாகிஸ்தானைக் கொத்தடிமையாகக் கருதி அப்பகுதி மக்களின் நலனைப் புறக்கணித்து வந்தது. இப்புறக்கணிப்பு பங்ளாதேஷ் பிரச்சனையாக உருவெடுத்தது.

### 4.7.1. ஆட்சியில் குழப்பம்

1969 மார்ச் மாதம் பாகிஸ்தானில் ஆயுப் கானின் ஆட்சியைக் கவிழ்த்துவிட்டு அதிபரானார் தளபதி யாஹ்யா கான் (General Yahya Khan). 1970 டிசம்பர் மாதம் பாகிஸ்தானில் பொதுத் தேர்தல்

நடைபெறும் என்று அறிவித்தார். அதுவே பாகிஸ்தானில் நடத்தப்பட்ட முதல் தேர்தல் ஆகும். இத்தேர்தலில் மேற்கு பாகிஸ்தானில் சுல்பிகர் அலி புட்டோ (Zulfigar Ali Bhutto)-வின் தலைமையிலான பாகிஸ்தான் மக்கள் கட்சி (Pakistan People'sParty) வெற்றிப் பெற்றது. கிழக்கு பாகிஸ்தானில் நடைபெற்ற தேர்தலில் ஷேக் முஜிபுர் ரஹ்மான் (Sheikh Mujibur Rehuman) தலைமையில் போட்டியிட்ட அவாமி லீக் (Awami League) 99% சதவிகித இடங்களைக் கைப்பற்றியது. அதுமட்டுமல்ல. அவாமி லீக் பாகிஸ்தானின் தேசியச் சபையில் (National Assembly) பெரும்பான்மை பலம் பெற்றக் கட்சியாயிற்று. முஜிபுர் ரஹ்மானுக்கு பாகிஸ்தான் பிரதமராகும் வாய்ப்பு ஏற்பட்டது.

தேர்தலின் போது வாக்குறுதி கொடுத்த ஆறு அம்சத்திட்டத்தை (Six-point charter) நிறைவேற்றப் போவதாக அறிவித்தார் முஜிபுர் ரஹ்மான். கிழக்கு-மேற்கு பாகிஸ்தான் கூட்டமைப்பு (Confederation) ஏற்பட வேண்டும் என்றார். பாகிஸ்தானின் மக்கள் தொகையில் 60 விழுக்காட்டினர் கிழக்கு பாகிஸ்தானில் இருந்தாலும் பாகிஸ்தான் இராணுவத்தில் 80 விழுக்காட்டினர் மேற்கு பாகிஸ்தானிலிருந்து தேர்வு செய்யப்பட்டனர். பாகிஸ்தான் இராணுவத்திலும் அதிகாரவர்க்கத்திலும் கிழக்கு பாகிஸ்தானுக்கு உரிய பங்கு வேண்டும் என்று கோரினார். கிழக்கு பாகிஸ்தான் மேற்கு பாகிஸ்தானின் சர்வாதிகாரத்திலிருந்தும் சுரண்டலிலிருந்தும் விடுபட வேண்டும் என்றார். யாவற்றுக்கும் மேலாக கிழக்கு பாகிஸ்தானைப் பங்ளாதேஷ் என்று பெயர் மாற்றம் செய்தார்.

யாஹ்யா கானும், புட்டோவும் தேர்தல் முடிவாலும் முஜியுர் ரஹ்மானின் போக்காலும் அதிர்ச்சி அடைந்தனர். இருவரும் ஒன்று சேர்ந்து முஜிபுர் ரஹ்மான் பாகிஸ்தான் ஆட்சியைப் பிடிப்பதைத் தடுக்க முடிவு செய்தனர். முஜிபுர் ரஹ்மான் பிரிவினைவாதி என்று கூறி கைதுச் செய்யப்பட்டு மேற்கு பாகிஸ்தானுக்குக் கொண்டு செல்லப்பட்டார். 1971-ஆம் ஆண்டில் அவாமி லீக் தடைசெய்யப்பட்டது. கிழக்கு பாகிஸ்தானில் இராணுவ அராஜக ஆட்சிக் கட்டவிழ்த்து விடப்பட்டது. கிழக்கு பாகிஸ்தானுக்குள் நுழைந்த 40,000 இராணுவத்தினர் பயங்கர ஆட்சியைத் (Reign of Terror) துவக்கினர். இராணுவ ஆட்சியை எதிர்த்தோர் கொன்று குவிக்கப்பட்டனர். பெண்கள் கற்பழிக்கப்பட்டனர். சொத்துக்கள் சூரையாடப்பட்டன. பத்திரிகைகள் தடைச் செய்யப்பட்டன.

பேச்சுச் சுதந்திரம் பறிக்கப்பட்டது. பல்லாயிரக்கணக்கானோர் படுகொலைச் செய்யப்பட்டனர். ஆறு மாதங்கள் நடைபெற்ற அராஜக ஆட்சியின் விளைவாகப் பங்ளாதேஷ் கிளர்ச்சிக் காடாயிற்று. பாகிஸ்தானுக்கு எதிர்ப்பு இயக்கம் தோன்றியது. சுருங்கக்கூறின் தளபதி யாஹ்யா கானின் இராணுவத் தீர்ப்பு பாகிஸ்தானின் உள்நாட்டுப்போரைத் (Civil War) தோற்றுவித்தது.

## 4.7.2. அகதிகள் பிரச்சனை

இராணுவ அராஜக ஆட்சி பங்ளாதேஷில் தோற்றுவித்த உள்நாட்டுப் போரின் விளைவாகப் பல்லாயிரக் கணக்கான அகதிகள் இந்தியாவுக்குள் வரத்துவங்கினர். சுவரன் சிங் போன்றவர்கள் அகதிகளின் வருகையைத் தடுக்க இந்திய-பங்ளாதேஷ் எல்லையை மூடிவிட வேண்டும் என்றனர். ஆனால் பிரதமர் இந்திரா காந்தி அக்கோரிக்கையை மனிதாபிமான அடிப்படையில் மறுத்துவிட்டார்.

இந்தியாவுக்குள் வந்த எட்டு மில்லியன் அகதிகளில் பெரும்பான்மையோர் இந்துக்கள். அவர்கள் மீது மேற்கு வங்காளிகளுக்கு அனுதாபம் இருந்ததில் வியப்பில்லை. எனினும் அகதிகள் பிரச்னை முன்னமேயே பலவீனப்பட்டிருந்த இந்தியப் பொருளாதார நிலையை மேலும் மோசமாக்கியது. அது பல சமூக, அரசியல் சிக்கல்களையும் தோற்றுவிக்கக்கூடும் என்று அஞ்சப்பட்டது. எனவே இந்திய அரசாங்கம் புதுடெல்லியிலிருந்த வெளிநாட்டுத் தூதுவர்களிடம் அகதிகள் பிரச்சனையின் பரிமாணங்கள் பற்றி எடுத்துரைத்தது. அமைச்சர் குழுக்கள் வெளி நாடுகளுக்குப் பயணம் செய்து பங்ளாதேஷ் பிரச்சனையால் இந்தியாவுக்கு ஏற்பட்ட நெருக்கடி பற்றிக் கூறினர். கிழக்கு பாகிஸ்தான் பிரச்சனைக்கு அரசியல் தீர்வு காணும்போது அகதிகள் பிரச்சனைக்கும் பரிகாரம் காண வேண்டும் என்று வலியுறுத்தப்பட்டது. ஐ.நா.பொதுச் செயலர் இவ்விவகாரத்தில் தலையிட்டுத் தீர்வுகாண வேண்டுமென்று கேட்டுக் கொள்ளப்பட்டார்.

குறிப்பு

## 4.7.3. இந்தியாவின் பங்கு

**'நாடோடி அரசாங்கம்"**

கிழக்கு பாகிஸ்தானிலிருந்து அகதிகள் மேற்கு வங்காளம் நோக்கி வரத்துவங்கியதிலிருந்து இந்தியாவின் பங்கு தவிர்க்க முடியாததாயிற்று. இந்தியாவுக்கு வந்த அகதிகளோடு முஜிபுர் ரஹ்மானோடு போராடிய அரசியல் தலைவர்களும் தப்பித்து வந்தனர். அப்படி வந்தவர்கள் தாஜுதீன் அகமது (Tajuddin Ahmad) தலைமையில் கல்கத்தாவில் 'நாடோடி அரசாங்கம்" (Government in exile) அமைத்தனர். பாகிஸ்தான் இராணுவத்துக்கு எதிராகக் கிளர்ச்சிச் செய்த கிழக்கு பாகிஸ்தான் இராணுவத்தினரும், கிழக்கு வங்காளத் துப்பாக்கிப் படையினரும், போலீசாரும் இந்தியாவுக்கு வந்த பங்ளாதேஷ் போராளிகளுக்கு இராணுவப் பயிற்சி அளித்தனர்.

## 4.7.4. முக்தி பாஹினி

பங்ளாதேஷ் போராளிகள் முக்தி பாஹினி (Mukti Bahini) என்ற அமைப்பை ஏற்படுத்தினர். அகதிகளாக வந்த மாணவர்கள் அவ்வமைப்பில் தொண்டர்களாகச் சேர்க்கப்பட்டனர். அவர்களுக்கெல்லாம் அகதிகளாக வந்த இராணுவத்தினர் போர்ப் பயிற்சி அளித்தனர். முக்தி பாஹினிப் போராளிகள் பயிற்சி பெறவும், படைக்கலன்கள் பெறவும் இந்தியா உதவியது. இப்பயிற்சியும், உதவியும் நாகர்களும் மீஸோக்களும் இந்தியாவுக்கு எதிராகக் கிளர்ச்சிச் செய்தபோது அவர்களுக்குப் பாகிஸ்தான் செய்த உதவியைப் போன்றது என்று கூறியுள்ளார் குல்தீப் நயார். முக்தி பாஹினிப் போராளிகள் கிழக்கு பாகிஸ்தான் கிராமங்களுக்குள் ஊடுருவிச் சென்று பாகிஸ்தான் படையினருக்கு எதிராகக் கொரில்லாப் போரில் ஈடுபட்டனர். பங்ளாதேஷ் விடுதலைப் போராட்டம் தீவிரமடைந்தது.

## 4.7.5. பிரதமரின் பயணம்

பங்ளாதேஷ் பிரச்சனைக்கு விரைவில் தீர்வுகாண வேண்டியதன் அவசியத்தையும் அவசரத்தையும் விளக்கிக் கூறுவதற்காகப் பிரதமர்

**குறிப்பு**

இந்திரா காந்தி 1971 அக்டோபர், நவம்பர் மாதங்களில் ஆஸ்திரியா, பெல்ஜியம், பிரிட்டன், பிரான்ஸ், மேற்கு ஜெர்மனி, அமெரிக்கா ஆகிய நாடுகளுக்குப் பயணம் செய்தார். பிரிட்டனும், பிரான்சும் இந்தியாவுக்கு ஓரளவு ஆதரவாக இருந்தன. பொதுவாக ஐரோப்பிய நாடுகள் அகதிகள் பிரச்சனையை எதிர்கொண்ட இந்தியாவுக்கு அனுதாபம் தெரிவித்துப் பொருளுதவி செய்யவும் முன்வந்தன. எனினும், பங்ளாதேஷ் பிரச்சனைக்குத் தீர்வு காண்பதில் முன்னெச்சரிக்கையாக இருந்தன. அமெரிக்க அதிபர் ரிச்சர்ட் நிக்சனின் அணுகுமுறை இந்தியாவுக்கு உற்சாகமளிப்பதாக இல்லை. சுருங்கக் கூறின் உலக நாடுகள் இந்தியா பொறுமையாக இருந்து. ஐ.நா. பார்வையாளர்களின் துணையுடன் பங்ளாதேஷ் பிரச்சனைக்கு அமைதித் தீர்வு காண வேண்டுமென்று ஆலோசனையைக் கூறின.

## 4.7.6. இந்தியா-பாகிஸ்தான் போர்- 1971

கிழக்கு பாகிஸ்தானின் கிராமங்களிலெல்லாம் ஊடுருவியிருந்த முக்தி பாஹினியினர் பாகிஸ்தான் ராணுவத்துக்கு எதிரான தாக்குதலைத் தீவிரப்படுத்தினர். துறைமுகங்கள் முற்றுகையிடப்பட்டன. மேற்கு பாகிஸ்தானிலிருந்து கிழக்கு பாகிஸ்தானுக்கு ராணுவத் தளவாடங்களும் படைவீரர்களும் கொண்டு வரப்படுவது முடக்கப்பட்டது. கிழக்கு பாகிஸ்தானில் விடுதலைப் போராட்டம் கட்டுக்கடங்காமல் போகவே பாகிஸ்தான் அதிபர் யாஹ்யா கான் இந்தியாவின் மேற்கெல்லையில் 1971 டிசம்பர் 3 அன்றே இராணுவத் தாக்குதலைத் துவக்கினார். பாகிஸ்தான் விமானப்படை எட்டு இந்திய விமானத் தளங்களைத் தாக்கிற்று. அத்தாக்குதலைத் தொடர்ந்து பாகிஸ்தான் ராணுவத்தினர் மேற்கெல்லையைக் கடந்து காஷ்மீருக்குள் நுழைந்தனர். அவர்கள் இந்திய ராணுவத்தால் தடுத்து நிறுத்தப்பட்டனர்.

## 4.7.7. கிழக்கு வங்காளம் மீட்கப்படல்

பாகிஸ்தானின் முன்கூட்டியே மேற்கொள்ளப்பட்டத் தாக்குதலை (Pre-emptive Attack) அறிந்த பிரதமர் இந்திரா காந்தி கிழக்கு வங்காளத்தை முழுமையாக மீட்குமாறு டிசம்பர் 4 தேதி அன்றே இந்திய

இராணுவத்துக்கு இரகசிய உத்திரவிட்டார். இந்திய இராணுவம் முக்தி பாஹினி கொரில்லா போராளிகளின் பக்கபலத்தோடு கிழக்கு பாகிஸ்தான் தலைநகர் டாக்காவை நோக்கி முன்னேறியது. அமெரிக்கா கிழக்கு வங்காளத்துக்கு அளித்துவந்தப் பொருளாதார மற்றும் இராணுவ உதவியை நிறுத்தியது. ஆனால் அவ்வுதவியைப் பாகிஸ்தானுக்குத் தொடர்ந்து கொடுத்து வந்தது. அதுமட்டுமல்ல அமெரிக்கா அதன் வலிமை வாய்ந்த ஏழாவது கடற்படையை (Seventh Fleet) டிசம்பர் 9 தேதியில் வங்காள விரிகுடாவுக்கு அனுப்பியது. சோவியத் யூனியன் அதன் கப்பல் படையை விளாடிவாஸ்டாக் (Vladiviostok) கிலிருந்து வங்காள விரிகுடாவுக்கு அனுப்பியது. அதனை நெறிப்படுத்த ஒரு மூத்த ரஷ்ய அமைச்சர் டிசம்பர் 12 தேதி இந்தியாவுக்கு வந்தார். இந்திய விவகாரத்தில் அமெரிக்காவோ சீனாவோ குறுக்கிட்டால் இந்நாடுகள் தண்டிக்கப்படும் என்று ரஷ்யா இந்தியாவுக்கு உறுதி கூறியது.

## 4.7.8. போர் நிறுத்தம்

அமெரிக்காவின் ஏழாவது கடற்படை வங்காள விரிகுடாவை வந்தடையுமுன் போரை முடிவுக்கு கொண்டுவரத் தீர்மானித்தது இந்தியா. இரண்டு வாரங்கள் நடைபெற்ற இந்திய-பாகிஸ்தான் போரின் பெரும்பகுதி கிழக்குப் பாகிஸ்தானில் நிகழ்ந்தது. இந்தியப் படையினர் எளிதாகத் துறைமுகங்களைக் கைப்பற்றி பாகிஸ்தான் இராணுவ அமைப்புகளை அழித்தனர். பாகிஸ்தான் இராணுவம் சுற்றி வளைக்கப்பட்டது. இந்தியத் தளபதி மனேக்ஷா (General Maneck Shah) பாகிஸ்தான் இராணுவம் சரணடைய வேண்டும் என்று டிசம்பர் 13 அன்று இறுதி எச்சரிக்கை (Ultimatum) விடுத்தார். 1971 டிசம்பர் 16 ஆம் தேதி பாகிஸ்தான் இராணுவம் இந்திய இராணுவத்திடம் சரணடைந்தது. அடுத்த நாளே டிசம்பர் 17 இந்தியா தன்னிச்சையாகப் போர் நிறுத்த அறிவிப்பைச் செய்தது அமெரிக்காவின் ஏழாவது கடற்படை வங்காள விரிகுடாவுக்கு வருமுன்னரே இன அழிவுப்போர் (Genocidal War) முடிவுக்கு வந்தது. சுதந்திர பங்ளாதேஷைப் பல நாடுகள் அங்கீகரித்தன. இந்தியத் துணைக் கண்டத்தில் மற்றொரு புதிய சுதந்திர நாடான பங்ளாதேஷ் தோன்றியது.

குறிப்பு

இந்தியா-பாகிஸ்தான் போரின்போது 90,000 பாகிஸ்தான் போர் வீரர்கள் போர்க்கைதிகள் (Prisoners of War) ஆயினர். மேலும், பாகிஸ்தானின் சிந்துப் பகுதியில் கட்ச் ரான் (Rann of Katch) உள்ளிட்ட 5,000 சதுர கிலோ மீட்டர் பரப்புள்ள நிலத்தை இந்திய இராணுவம் கைப்பற்றியது. மேலும்,பஞ்சாப்-ஜம்மு மற்றும் காஷ்மீர் முனையில் 2,500 சதுர கிலோ மீட்டர் பகுதியும் இந்தியா வசமாயிற்று. ஸ்ரீநகரிலே பாதையை எதிர் நோக்கியிருந்த 32 இராணுவச் சாவடிகளும் வீழ்ந்தன. இந்தியா ஜம்மு-காஷ்மீரில் சம்ப் (Chamb) பகுதியில் 150 சதுர கிலோ மீட்டர் நிலத்தையும், பஞ்சாப் எல்லையில் சிறு பகுதியையும் இழந்தது. அதோடு 40 போர் விமானங்களையும், 66 டாங்குகளையும், ஒரு போர்க்கப்பலையும் இந்தியா இழக்க நேரிட்டது. இப்போரில் மொத்தம் 10,633 இந்திய இராணுவ அதிகாரிகள் மற்றும் படைவீரர்கள் கொல்லப்பட்டனர், காயமடைந்தனர் அல்லது காணாமல் போயினர். இந்தியா லாகூரை எளிதில் கைப்பற்றக்கூடிய நிலையிலிருந்தும் தன்னிச்சையாகப் போர் நிறுத்தம் செய்தது.

## 4.7.9. போரின் விளைவுகள்

1971 டிசம்பர் 3-ஆம் தேதி துவங்கிய இந்திய-பாகிஸ்தான் போர் டிசம்பர் 16-ஆம் தேதி முடிவுக்கு வந்தது. இவ்விருவாரப் போரின் முடிவில் பங்களாதேஷிலிருந்த பாகிஸ்தான் படைத் தலைவர் தளபதி நியாசி (Niazi) இந்தியப்படையின் லெப்டினன்ட் தளபதி ஜே.எஸ்.அரோரா (J.S. Arora)விடம் சரணடைந்தார். இந்தியா போர் நிறுத்தம் செய்வதாக அறிவித்தது. போரில் வெற்றிவாகைச் சூடிய பிரதமர் இந்திரா காந்தி சமநிலை இழக்காமல் அரசியல் விவேகத்துடன் தோல்வியுற்ற பாகிஸ்தானுடன் சமாதான சகவாழ்வுத் தொடர்புக் கொள்ளவே விரும்பினார். எனவே 1971 டிசம்பர் 31-ஆம் தேதி இந்தியாவும் பாகிஸ்தானும் நேரடிப் பேச்சுவார்த்தையைத் துவக்கி இருநாடுகளுக்கிடையே உள்ள பிரச்சனைகளை அமைதியாகத் தீர்த்துக் கொள்வதுதான் ஒரே வழி என்பதை வலியுறுத்தினார். 1972 ஜனவரி மாதம் போர்க் கைதிகள் பற்றிப் பாரதப் பிரதமருடன் பேச்சுவார்த்தை நடத்துவதற்கு இந்தியா செல்லப்போவதாக அறிவித்தார் பாகிஸ்தான் அதிபர் புட்டோ. 1972 ஏப்ரல் 4-ஆம் தேதி இந்தியாவும் பாகிஸ்தானும்

நேரடியாகத் தொடர்புக் கொண்டிருப்பதாகத் தெரிவித்தார் இந்திரா காந்தி. அவ்வறிவிப்பைத் தொடர்ந்து இந்நாடுகளின் தூதுவர்கள் முன்னிலையில் மூரே (Muree) யில் பேச்சுவார்த்தை நடந்தது. அதையடுத்து இந்தியப் பிரதமர் இந்திரா காந்தியும், பாகிஸ்தான் பிரதமர் புட்டோவும் 1972 ஜூன் 28 ஆம் தேதி சிம்லாவில் சந்தித்துப் பேசினர்.

### 4.7.10. சிம்லா ஒப்பந்தம் (Simla Agreement), 1972

சிம்லா உச்சமாநாட்டில் (The Simla Summit) இந்தியா பாகிஸ்தான் பிரதமர்கள் இந்திரா காந்தியும் சுல்பிகர் அலி புட்டோவும் இருதரப்புப் பேச்சுவார்த்தை நடத்தினர் (1972 ஜூன் 28 லிருந்து ஜூலை 3-வரை). அதன் விளைவாக இந்தியா பாகிஸ்தான் அரசாங்கங்களுக்கிடையே சிம்லா உடன்பாடு (The Simla Agreement) ஏற்பட்டது. இவ்வுடன்பாட்டின் சிறப்பு அம்சங்களாவன: 1. இந்தியாவும் பாகிஸ்தானும் மோதலைத் தவிர்த்து நிலையான அமைதித் தொடர்பு கொள்ளல். 2. இரு நாடுகளுக்கிடையேயான மாறுபாடுகளை இருதரப்புப் பேச்சுவார்த்தையின் மூலம் சமாதானமாகத் தீர்த்துக் கொள்ளல். 3. பிரச்சனைகளுக்கு இறுதித் தீர்வு காண்பதற்கு முன் எந்த ஒரு நாடும் இருநாட்டு நட்புறவு பாதிக்கப்படக் கூடிய நடவடிக்கையில் ஈடுபடக்கூடாது. 4. இரு நாடுகளும் சமாதான சகவாழ்வு, நாட்டின் இறையுரிமை, மற்றும் எல்லையுரிமைக் கொள்கைகளை மதித்து உள்நாட்டு விவகாரங்களில் தலையிடாமல் இருத்தல். 5. அதிகாரப்பூர்வமான தகவல்களைப் பறிமாறிக்கொண்டு, விரோதத்தை வளர்க்கக்கூடிய பொய்ப் பிரச்சாரத்தைத் தடுத்தல். 6. இரு நாடுகளும் தங்களது துருப்புக்களை முப்பது நாட்களுக்குள் தங்களது "சர்வதேச எல்லை"(International Border)-க்குத் திரும்ப அழைத்துக் கொள்ளல். ஜம்மு-காஷ்மீரைப் பொறுத்தவரை 1971 டிசம்பர் 17 - ஆம் தேதியில் செய்து கொள்ளப்பட்ட போர் ஒப்பந்தப்படி "நடைமுறை எல்லைக் கட்டுப்பாடு"(Line of Actual Control) கோடாக இருக்கும்.

## 4.8. அவசர காலத்திற்கு முன்பு இருந்த சூழ்நிலைகள்

1971 ஆம் ஆண்டு பொதுத்தேர்தலும் இரண்டாவது இந்திய-பாகிஸ்தான் போரும் இந்திரா காந்தியைப் புகழின் உச்சத்திற்கு எடுத்துச்

சென்றது. ஆயினும் இது நீண்ட நாட்களுக்கு நீடிக்கவில்லை. அவரது ஆட்சிக்கு எதிரான அதிருப்தி அலை தேச முழுவதும் பரவத் துவங்கியது. அதற்கு முக்கியக் காரணம் பொருளாதார வீழ்ச்சியும் சட்ட ஒழுங்கு சீர்கேடும் மற்றும் நிர்வாகத்தில் ஏற்பட்ட ஊழலும். வறுமையை ஒழிப்பதாக 1971 ஆம் ஆண்டு தேர்தலில் வாக்குறுதி அளித்த இந்திரா காந்தி அதனை முழுமையாகக் காப்பாற்ற முடியவில்லை. காரணம் பங்களாதேஷ் விடுதலைத் தொடர்பாக ஏற்பட்டப் போரும், அங்கு இருந்து வந்த லட்சக்கணக்கான அகதிகளுக்கு மறுவாழ்வுக் கொடுப்பதும் இந்தியாவிற்குக் இக்கட்டானது. அதே சமயத்தில் நாட்டில் பலப்பகுதிகளில் வேலை நிறுத்தம் நிகழ்ந்தது. குறிப்பாக, 1974 ஆம் ஆண்டு இரயில்வே துறையில் ஏற்பட்ட வேலை நிறுத்தம் அரசை வெகுவாகப் பாதித்தது.

1974-75 ஆம் ஆண்டு வாக்கில் சட்டம் ஒழுங்கு சீர்கேடு அடையத் தொடங்கியது. குறிப்பாக, குஜராத் மாநிலத்தில் மாணவர்கள் நடத்தியப் போராட்டம் மாநிலம் முழுவதும் பரவி, அங்கு ஆட்சியிலிருந்த காங்கிரஸ் அரசை அகற்றச் செய்தது. இத்தகையப் போராட்டத்தின் தாக்கம் பிற மாநிலங்களிலும் பரவத் துவங்கியது. குறிப்பாக, இந்தப் போராட்டத்தை பீகாரில் முன்னெடுத்தவர் ஜெயப்பிரகாஷ் நராயணன். குஜராத்தில் ஏற்பட்ட மாற்றங்கள் பீகாரிலும் ஏற்படும் என்று அறிவித்தார். இவரது போராட்டதிற்கு இளைஞர்கள் ஆதர்வு அளித்தனர். நாடு முழுவதும் அமைதியின்மை ஏற்பட்டது. இத்தகைய சூழ்நிலையில்தான் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த அலகாபாத் நீதி மன்றத் தீர்ப்பு வெளியானது.

## 4.8.1. அலகாபாத் நீதிமன்றத் தீர்ப்பு, 1975

1975 ஜுன் மாதம் 12-ஆம் தேதி இந்தியப் பிரதமர் இந்திரா காந்தி நாடாளுமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டது செல்லாது என்று அலகாபாத் உயர் நீதிமன்றம் தீர்ப்பளித்தது. காரணம் 1971-ஆம் ஆண்டில் நடைபெற்ற நாடாளுமன்றத் தேர்தலில் இந்திரா காந்தி நியாயமற்ற நடவடிக்கைகளைக் (Unfair Practices) கையாண்டுத் தேர்தலில் வெற்றிப் பெற்றதாக ராஜ் நாராயண் வழக்கு தொடுத்தார். அவ்வழக்கை விசாரித்த நீதிபதி சின்ஹா 1) இந்திரா காந்தியின் தேர்தல்

செல்லாது 2) அவர் அடுத்த ஆறு ஆண்டுகளுக்குத் தேர்தலில் போட்டியிடக் கூடாது 3) அத்தீர்ப்பை எதிர்த்து இருபது நாட்களுக்குள் மேல் முறையீடு செய்யலாம் என்று தீர்ப்பளித்தார்.

## 4.8.2. உச்சநீதி மன்றத்தில் முறையீடு

இந்திரா காந்தி அலகாபாத் உயர்நீதிமன்றத் தீர்ப்பை எதிர்த்து உச்ச நீதிமன்றத்தில் மேல் முறையீடு செய்தார். இந்திரா காந்தி சார்பாக பம்பாயின் பிரபல வழக்கறிஞர் நானி பல்கிவாலா வழக்கை நடத்தினார். கோடை விடுமுறைக்கால உச்ச நீதிமன்ற நீதிபதி கே.ஆர். கிருஷ்ணய்யர் வழக்கை விசாரித்து 1975 ஜுன் 22-ஆம் தேதி திங்கள் கிழமை பின்வருமாறு தீர்ப்பு வழங்கினார். 1) அலகாபாத் உயர்நீதிமன்ற தீர்ப்புக்கு பகுதித் தடை விதித்தது (a Partial stay order) 2) உச்சநீதிமன்றத்தின் முழுக்கூட்டம் (Full Bench) மேல்முறையீட்டை விசாரித்து இறுதித் தீர்ப்பு வழங்கும் வரை இந்திரா காந்தி பிரதமராக நீடிக்கலாம் 3) அவ்வாறு பதவியில் நீடிக்கும் காலத்தில் அவர் நாடாளுமன்றக் கூட்டத்தில் கலந்துக் கொள்ளலாம். ஆனால் வாக்களிக்கவோ ஊதியம் பெறவோ கூடாது. உச்ச நீதிமன்றத்தின் சர்ச்சைக்குரிய தீர்ப்பு நாட்டில் மிகுந்த பரபரப்பை ஏற்படுத்தியது.

## 4.8.3. எதிர்க்கட்சிகளின் கோரிக்கை

உச்ச நீதிமன்றத்தின் இறுதித் தீர்ப்புக்குக் காத்திராமல் எதிர்க்கட்சித் தலைவர்கள் இந்திரா காந்தி பதவி விலக வேண்டும் என்று குரல் எழுப்பினர். குடியரசுத் தலைவர் பக்ருதீன் அலி அகமது மாளிகை முன் அமர்ந்து தர்ணா செய்தனர். உச்ச நீதிமன்றத் தீர்ப்பு வெளியான பின் 1975 ஜுன் 25-ஆம் தேதி டெல்லி ராம் லீலா மைதானத்தில் நடைபெற்ற பிரமாண்டமானப் பொதுக் கூட்டத்தில் பேசிய ஜெயப்பிரகாஷ் நாராயண் இந்திரா காந்தி பதவி விலகாமையைக் கடுமையாகக் கண்டித்தார். இராணுவத்தினரையும் போலீசாரையும் சட்ட விரோதமான உத்தரவுகளுக்குக் கீழ்ப்பணிய வேண்டாம் என்று கேட்டுக் கொண்டார். “முழுப்புரட்சியே நமது கோஷம் எதிர்காலம் நமதே” என்று முழங்கினார். முழுப் புரட்சியின் செயல் திட்டத்தையும் அறிவித்தார்.

## 4.8.4. அவசர நிலை அறிவிப்பு

பிரதமர் இந்திரா காந்தி நாட்டின் அரசியல் நிலைமை கட்டுக்கடங்காமல் போய் உள்நாட்டுப் போரில் முடிந்து விடுமோ என்று அஞ்சினார். எதிர்க்கட்சிகளின் சூழ்ச்சி வலையிலிருந்து தப்ப முடிவு செய்தார். மேற்கு வங்காள முதலமைச்சரும் சட்ட வல்லுநருமான சித்தார்த் சங்கர் ரேயின் ஆலோசனையின் பேரில் அரசியலமைப்புச் சட்டத்தின் 352-வது சரத்தின் படி உள்நாட்டு அவசர நிலை அறிவிப்புச் செய்ய முடிவு செய்தார். 1975 ஜுன் மாதம் 25-ஆம் தேதி இரவு எட்டு மணிக்குப் பிரதமர் இந்திரா காந்தியும் சித்தார்த் சங்கர் ரேயும் குடியரசுத் தலைவரைச் சந்தித்து நிலைமையை விளக்கினர். அன்று நள்ளிரவுக்கு முன் குடியரசுத் தலைவர் பக்ருதீன் அலி அகமது அவசர நிலை அறிவிப்பில் கையொப்பமிட்டார். அமைச்சரவையின் ஒப்புதலின்றிப் பிரதமரின் ஆலோசனையின் பேரில் குடியரசுத் தலைவர் நெருக்கடி நிலைப் பிரகடனத்துக்குச் சம்மதித்தார். உள் நாட்டு குழப்பங்களால் இந்தியாவின் பாதுகாப்புக்கு ஆபத்து வந்து விட்டதாகக் கூறி ஜுன் 26 நாளில் நெருக்கடி நிலை அறிவிக்கப்பட்டது.

## 4.8.5. 20 அம்சத்திட்டம் (Twenty point Programme)

நெருக்கடி நிலை நடைமுறைக்கு வந்த நான்கு நாட்களுக்குப் பிறகு 1975 ஜுலை முதல் தேதி பிரதமர் இந்திரா காந்தி 20 அம்சப் பொருளாதாரச் சமூகத் திட்டத்தை அறிவித்தார். அத்திட்டத்தின்படி 1. அத்தியாவசியப் பொருள்களின் விலையைக் குறைத்து அவற்றின் விநியோகத்தைச் சீரமைத்தல். 2. அரசாங்கச் செலவைச் சிக்கனப்படுத்தல். 3. நிலக்குறிப்பேடுகளைச் (Land Records) சேகரித்தல், விவசாய உச்சவரம்புச் சட்டத்தைச் செயல்படுத்தல், உபரி நிலத்தை வினியோகித்தல். 4.நிலமற்றோருக்கும், பலவீனப்பகுதியினருக்கும் வீட்டு மனைப்பட்டா வழங்கல். 5. அடிமைத் தொழிலாளர் (Bonded Labour) முறையைச் சட்ட விரோதமாக்கல். 6. கிராமக் கடனை ஒழித்தல்; நிலமற்றோர், உழைப்பாளிகள், சிறுவிவசாயிகள் மற்றும் கைவினைஞர்களின் கடன்களுக்குத் தவணை (Moratorium) அளித்தல்.

7. குறைந்தபட்ச விவசாயக்கூலி பற்றியச் சட்டங்களை மதிப்பீடுச் செய்தல். 8. 5 மில்லியன் ஹெக்டேர் உபரி நிலத்துக்கு நீர்ப்பாசன வசதியை விரிவுபடுத்தல், நிலத்தடி நீரைப் பயன்படுத்துவதற்கான திட்டத்தைத் தயாரித்தல். 9. மின்சார உற்பத்தியை அதிகரித்தல். 10. கைத்தறித் துறையை வளர்த்தல்; மக்களுக்கு கிடைக்கக் கூடிய துணியின் தரத்தை உயர்த்தல். 11. நகர்ப்புறத்தைச் சமுதாயமயமாக்கல் (Socialisation); காலி மனைக்கு உச்சவரம்பு நிர்ணயித்தல். 12. ஆடம்பரப் பொருள்கள் நுகர்வு பற்றிய மதிப்பீடு செய்தல், வரி ஏய்ப்பைத் தடுத்தல், பொருளாதாரக் குற்றங்களை கடுமையாகத் தண்டித்தல். 13. கடத்தல்காரர்களின் சொத்துக்களைப் பறிமுதல் செய்வதற்கான சிறப்புச் சட்டத்தை இயற்றல். 14. தொழில் முதலீடுச் செய்வதற்கான நடைமுறை விதிகளைத் தளர்த்தல், இறக்குமதி உரிமைகளைத் தவறாகப் பயன்படுத்துவோர் மீது நடவடிக்கை எடுத்தல். 15. தொழிலாளர் அமைப்புகளுக்குப் புதிய திட்டங்களைத் தயாரித்தல். 16. சாலைப் போக்குவரத்து, தேசியப் பெர்மிட் திட்டங்கள் கொண்டு வரல். 17. மத்தியதர வகுப்பாருக்கு வருமான வரிச்சலுகை அளித்தல். 18. விடுதிவாழ் மாணவர்களுக்குக் கட்டுப்பாட்டு விலையில் அத்தியாவசியப் பொருள்கள் வழங்கல். 19. மாணவர்களுக்குக் கட்டுப்பாட்டு விலையில் புத்தகங்கள் மற்றும் எழுது பொருள்கள் வழங்கல். 20. பின்தங்கிய பலவீனப் பிரிவினரின் வேலை வாய்ப்புகளை அதிகரிக்கும் வகையில் தொழில் பயில்வோர் பயிற்சித் திட்டம் தயாரித்தல்.

### 4.8.6. நெருக்கடி காலத்தில் சஞ்சய் காந்தியின் திட்டம்

1976 ஜனவரி மாதம் நெருக்கடி நிலை தீவிரமடைந்த போது சஞ்சய் காந்தி 5 அம்சத்திட்டத்தை (Five-Point Programme) அறிவித்தார். 1) குடும்பக் கட்டுப்பாடு 2) மரம் நடுதல் 3) வரதட்சனை ஒழிப்பு 4) ஒருவர் இன்னொருவருக்குக் கற்பித்தல் 5)சாதிமுறையை ஒழித்தல். இவரது இத்திட்டத்தில் தவறில்லை. ஆனால் அத்திட்டத்தைச் செயல்படுத்தியதில் பல தவறுகள் ஏற்பட்டன. நல்ல திட்டம் மோசமாக நடைமுறைப்படுத்தப்பட்டால் என்னவாகும் என்பதற்கு சஞ்சய் காந்தியின்

5 அம்சத்திட்டம் முன்னுதாரணமாகும். குறிப்பாக இரண்டு செயல் திட்டங்கள் மோசமான எதிர் விளைவுகளைக் கொடுத்தன.

**குறிப்பு**

## 4.8.7. தேர்தல் அறிவிப்பு- 1977

1976 மத்தியில் இந்திரா காந்தியின் நெருக்கடிக்கால அடக்குமுறை உச்சகட்டத்தை எட்டியது. மக்களால் பெரிதும் மதிக்கப்பட்டத் தலைவர்கள் கைது செய்யப்பட்டுச் சிறையிலடைக்கப்பட்டதும், ஜனநாயகம் முடக்கப்பட்டதும், சஞ்சய் காந்தியின் அத்துமீறல் நடவடிக்கைகளும் இந்திரா காந்தியின் ஆட்சியின் மீது அவநம்பிக்கையை ஏற்படுத்தின. இந்திரா காந்தி மக்களிடையே செல்வாக்கு இழக்கத் துவங்கினார். நாடாளுமன்றத்தின் ஆயுட்காலத்தை மேலும் ஓராண்டுக்கு நீடிக்கப்பட்டது பிரதமரின் சர்வாதிகார ஆட்சியை நீடிப்பதற்கான சூழ்ச்சியாகக் கருதப்பட்டது. மேலை நாடுகள் அனைத்தும் நெருக்கடி நிலையை வெளிப்படையாகக் கண்டித்தன. நெருக்கடி நிலையை நீக்கக் கோரி மத்திய விவசாய அமைச்சர் ஜெகஜீவன் ராம் பதவியை ராஜினாமா செய்தார். அவரைத் தொடர்ந்து எச்.என்.பகுகுணாவும், நந்தினி சத்பதியும் காங்கிரஸில் இருந்து விலகினர். ஜெகஜீவன் ராம் தலைமையில் ஜனநாயகக் காங்கிரஸ் (Congress Democracy) துவக்கப்பட்டது. 1977 ஜனவரி 18-ஆம் தேதி பொதுத் தேர்தல் நடத்தப்படும் என்று அறிவித்தார். நெருக்கடி நிலையை நீக்காமல் தேர்தலை நடத்துவதென்ற பிரதமர் இந்திரா காந்தியின் அறிவிப்பு எதிர்க்கட்சித் தலைவர்களுக்கு எதிர்பாரா அதிர்ச்சியையும், வியப்பையும், திகைப்பையும் ஏற்படுத்தியது. 1977 மார்ச் 21-ஆம் தேதி நடைபெற்ற பொதுத் தேர்தல் சமகால இந்திய வரலாற்றில் மற்றொரு திருப்பு முனையை ஏற்படுத்தியது.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

8. அகில இந்திய ரயில்வே வேலைநிறுத்தம் எப்போது நடைப்பெற்றது?
9. இந்திரா காந்தியின் 1971 ஆம் ஆண்டு வெற்றிக்கு எதிராக வழக்குத் தொடுத்தவர் யார்?
10. அவசரநிலை வருவதற்குக் காரணமான அலாகபாத் நீதிமன்றத் தீர்ப்பை வழங்கிய நீதிபதி யார்?

11. அவசரநிலை அறிவிக்கப்பட்டப் போது இந்தியாவின் ஜனாதிபதி யார்?
12. 42 வது திருத்தம் எப்போது நிறைவேற்றப்பட்டது?

**குறிப்பு**

## 4.9. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்

1. மொராஜி தேசாய் இந்திரா காந்திக்கு எதிராக 1966- ஆம் ஆண்டில் பிரதமர் பதவிக்குப் போட்டியிட்டார்.
2. தினேஷ் சிங், நந்தினி சத்பதி, உர்ணா சங்கர் தீட்சித், டி.பி. மிஸ்ரா, சி. சுப்பிரமணியம், அசோகா மேத்தா, மற்றும் ஃபக்ருதீன் அலி அகமது ஆகியோர் அடுப்பங்கரை அமைச்சரவையில் உறுப்பினர்களாக இருந்தனர்.
3.1966-ஆம் ஆண்டில் திருமதி காந்தி பிரதமராக வந்தபோது கே.காமராஜ் காங்கிரஸ் தலைவராக இருந்தார்.
4. நான்காவது பொதுத் தேர்தல் 1967 இல் நடைபெற்றது.
5.காமராஜ், எஸ்.கே. பாட்டீல், அதுல்யா கோஷ், மற்றும் சி.சுப்பிரமணியம் ஆகியோர் நான்காவது பொதுத் தேர்தலில் தோல்வியடைந்த முக்கியமான சிண்டிகேட் தலைவர்கள்.
6. இந்திரா காந்தி 1969 இல் வங்கித் தேசியமயமாக்கலுக்குக் காரணமாக இருந்தார்.
7. 1969 இல், காங்கிரஸ் பிளவுபட்டது. இந்திரா காந்தியின் காங்கிரஸ், காங்கிரஸ் ஆர் (கோரிக்கையாளர்) என்றும் சிண்டிகேட் காங்கிரஸ், காங்கிரஸ் ஓ (அமைப்பு) என்றும் அழைக்கப்பட்டது.
8. அகில இந்திய ரயில்வே வேலைநிறுத்தம் மே 1974 இல் நடைபெற்றது. வேலைநிறுத்தம் 22 நாட்கள் நீடித்தது.
9. ராஜ் நரேன் இந்திரா காந்திக்கு எதிராக தேர்தல் வழக்கைத் தாக்கல் செய்தார்.
10. நீதிபதி சின்ஹா
11. அவசரநிலை அறிவிக்கப்பட்டப்போது ஃபக்ருதீன் அலி அகமது இந்தியாவின் ஜனாதிபதியாக இருந்தார்.
12. 1976 ஆண்டில், 42-வது திருத்தம் நிறைவேற்றப்பட்டது. இது சிறிய அரசியலமைப்பு என்று அழைக்கப்படுகிறது.

## 4.10. அத்தியாயச் சுருக்கம்

குறிப்பு

- லால் பகதூர் சாஸ்திரி இறந்த பின்னர் 1966 - ஆம் ஆண்டில் இந்திரா காந்தி இந்தியாவின் பிரதமரானார்.
- ஆரம்ப நாட்களில், அவர் சிண்டிகேட் தலைவர்கள் மற்றும் பொது மக்களிடமிருந்து பல சவால்களை எதிர்கொண்டார்.
- 1967 தேர்தல் திருமதி காந்தியின் கரங்களைப் பலப்படுத்தியது மற்றும் அவரது அரசியல் எதிரிகளில் பெரும்பாலோர் தோற்றனர்.
- தேர்தலுக்குப் பிறகு, திருமதி காந்தி படிப்படியாகக் கட்சியிலும் ஆட்சியிலும் தன்னை வழுப்படுத்திக் கொண்டார்.
- அதேசமயத்தில், 1969 இல், இந்திய ஜனாதிபதி ஜாகிர் ஹுசைன் காலமானார், அடுத்த ஜனாதிபதி தேர்தலுக்கு நாடு தயாரானது.
- காங்கிரஸின் அதிகாரப்பூர்வ வேட்பாளர் நீலம் சஞ்சீவ் ரெட்டிக்கு எதிராக இந்திரா காந்தி மறைமுகமாகச் செயல்பட்டார். இதன் விளைவாக, வி.வி. கிரி இந்தத் தேர்தலில் வெற்றிப் பெற்றார்.
- இதைத் தொடர்ந்து, காங்கிரஸ் இரண்டாகப் பிளவுப்பட்டது. இந்திராவின் காங்கிரஸ், காங்கிரஸ் ஆர் என்றும் அவரது எதிர்ப்பாளரை காங்கிரஸ் ஓ என்றும் அழைத்தனர்.
- இந்திரா காந்தி வங்கித் தேசியமயமாக்கல் மற்றும் மன்னர் மானிய ஒழித்தல் உள்ளிட்ட சில முக்கியமான முடிவுகளை எடுத்தார். இதன் விளைவாக அவருக்கு வலுவான ஆதரவு கிடைத்தது.
- ஐந்தாவது பொதுத் தேர்தல் 1971 இல் நடைபெற்றது, இந்தத் தேர்தலில், காங்கிரஸ் அமோக வெற்றிப் பெற்றது. அவரது எதிரிகளில் பெரும்பாலோர் தோல்வியைத்தழுவினர்.
- 1971 இந்திய - பாகிஸ்தான் போரில், இந்திய இராணுவம் பாகிஸ்தான் படைகளைத் தோற்கடித்தது மட்டுமல்லாமல், 95,000 பாகிஸ்தான் வீரர்களும் கைதுச் செய்யப்பட்டனர். இந்த யுத்தம் இந்திரா காந்தியின் பெயர்களையும் புகழையும் உயர்த்தியது.
- சுதந்திர இந்தியாவில் 25 ஆண்டுகளுக்குப் பிறகு முதல் முறையாக தேசிய அவசரநிலைப் பிரகடனம் நடைமுறைப்படுத்தப்பட்டது.
- இந்திரா காந்திக்கு எதிராக அலகாபாத் உயர்நீதிமன்றம் தீர்ப்பை வழங்கிய பின்னர் 1975-ல் நிலவிய அரசியல் அமைதியின்மையைக்

கட்டுப்படுத்த திருமதி காந்தியால் 1975 ல் அவசரநிலை அறிவிக்கப்பட்டது.

- 1972 முதல், நாடு முழுவதும் அமைதியின்மை நிலவியது; குறிப்பாக 1974 ல் ரயில்வே வேலைநிறுத்தங்கள், 1973 ல் உத்தரபிரதேசத்தில் சட்டம் ஒழுங்கு சீர்கேடு, குஜராத் மற்றும் பீகாரில் அமைதியின்மை ஆகியவை தேசிய அவசரநிலைக்குத் தூண்டுதலாக இருந்தன.
- அவசர காலங்களில், இந்திரா காந்தியின் அரசியல் எதிரிகள் அனைவரும் சிறையில் அடைக்கப்பட்டனர் மற்றும் காங்கிரஸ் அல்லாத அரசாங்கங்கள் கலைக்கப்பட்டன. பத்திரிகைகள் கடுமையான தணிக்கைக்கு உட்பட்டன.
- இந்திரா மக்களை ஈர்க்கும் 20 அம்சத் திட்டத்தை அறிவித்தார்.
- அவசரநிலைக் குறித்து மக்கள் ஆதரவையும் எதிர்ப்பையும் வெளிப்படுத்தினர்.
- 1977-ஆண்டின் தொடக்கத்தில், அவசரகால நிலைத் திரும்பப் பெறப்பட்டுத் தலைவர்கள் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டனர். ஆறாவது பொதுத் தேர்தல் சுதந்திரமாகவும் நியாயமாகவும் நடத்தப்பட்டது.
- காங்கிரஸ் முதல் முறையாகத் தோல்வி அடைந்து ஆட்சி அதிகாரத்திலிருந்து அகற்றப்பட்டது. எதிர்க்கட்சித் தலைவர்களின் புதிய அரசியல் கூட்டணி (ஜனதா) ஆட்சிக்கு வந்தது. மொரார்ஜி தேசாய் முதல் காங்கிரஸ் அல்லாத பிரதமரானார்.

## 4.11. முக்கியச் சொற்கள்

**ஆட்சிமன்றக் குழு (சிண்டிகேட்):** ஒரு கட்சியையோ அல்லது நிருவனத்தையோ வழிநடத்துவதற்காக அமைக்கப்படும் உயர்மட்ட அளவிலானக் குழுவே ஆட்சிமன்றக்குழு என்று அழைக்கப்படுகிறது. 1963 ஆம் ஆண்டின் இறுதியில், காங்கிரஸ் தலைவர்கள் கே.காமராஜ் (சென்னை மாகாண முன்னாள் முதல்வர்), சஞ்சிவ் ரெட்டி (ஆந்திர தலைவர்), நிஜலிங்கப்பா (மைசூர் முதல்வர்), வங்காள காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் அதுல்யா கோஷ் மற்றும் மகாராஷ்டிரா தலைவர் எஸ்.கே. பாட்டீல் ஆகியோர் உறுப்பினராக இருந்தனர். இந்த

ஆட்சிமன்றக்குழு நேருக்குப்பின் சாஸ்திரிக்கு பின்னும் பிரதமரைத் தேர்ந்தெடுப்பதில் முக்கியப்பங்காற்றியது.

குறிப்பு

**அடுப்பங்கரை அமைச்சரவை:** அடுப்பங்கரை அமைச்சரவை என்பது இந்திராவின் அரசியல் எதிரிகளால் பயன்படுத்தப்பட்ட ஒரு சொல், இந்தக் குழு அதிகாரப்பூர்வமாக அல்லது அதிகாரப்பூர்வமற்ற முறையில் ஆட்சியாளர்களுடன் நெருங்கியத் தொடர்புக்கொண்டிருந்தது. இந்திரா காந்தியின் காலத்தில், அவர் தனது சக அமைச்சர்களான தினேஷ் சிங், ஐ.கே. குஜ்ரால், நந்தினி சத்பதி, உர்ணா சங்கர் தீட்சித், டி.பி. மிஸ்ரா, சி.சுப்பிரமணியம், அசோகா மேத்தா, மற்றும் ஃபக்ருதீன் அலி அகமது ஆகியோர் இந்தக் குழுவில் உறுப்பினராக இருந்தனர். இந்திரா காந்தி எந்த முடிவையும் அமைச்சரவைக்கு எடுத்துச் செல்லும்முன் இக்குழுவோடுக் கலந்துதுரையாடுவார்.

**மன்னர் மானிய ஒழிப்பு:** இந்திய சமஸ்தான அரசுகளை இந்தியாவுடன் இணைக்கும் போது அத்தகைய சமஸ்தானத்திற்கு பல்வேறு சலுகைகளயும் மற்றும் நிதிவுதவியும் அரசாங்கம் வழங்குமென படேல் உறுதியழித்தார். இந்த உறுதிமொழி தொடர்ந்து நடைமுறைப்படுத்தப்பட்டது. ஆயினும் இந்திரா காந்தி ஆட்சிகாலத்தில் இச்சலுகை முற்றிலுமாக ரத்துச் செய்யப்பட்டது.

**இளம் துருக்கியர்கள்:** இந்திரா காந்தியின் காலத்தில், சோசலிசச் சித்தாந்தத்தைக் கடுமையாக நம்பிய காங்கிரஸ் தலைவர்கள் குழு இளம் துருக்கியர்கள் என்று அழைக்கப்பட்டது. ஜக்ஜீவன் ராம், சந்திர சேகர் போன்ற தலைவர்கள் இந்தக் குழுவில் தீவிர உறுப்பினர்களாக இருந்தனர்.

**கரிபி ஹாட்டோ (வறுமை ஒழிப்பு):** இந்திரா காந்தியின் 1971 ஆம் ஆண்டு தேர்தல் பிரச்சாரத்தில் முக்கியம்சமாக வறுமை ஒழிப்பு.

**அவாமி லீக்:** இது பங்களாதேஷின் ஒரு முக்கிய அரசியல் கட்சி. இந்த கட்சி, ஷேக் முஜிபுர் ரஹ்மான் தலைமையில், மத்திய மேற்கு பாகிஸ்தானுக்கு எதிராக இயக்கத்தை முன்னெடுத்தது. 1970 ல் நடைபெற்ற பொதுத் தேர்தலில் இக்கட்சி பாகிஸ்தானில் ஏராளமான இடங்களை வென்ற போதிலும், மேற்கு பாகிஸ்தானின் தலைவர்கள் அவாமி லீக்கிற்கும் அதன் தலைவருக்கும் எதிராகச் செயல்பட்டனர். பங்களாதேஷ் சுதந்திரமான பிறகு, அவாமி லீக் முதல் ஆளும் கட்சியாக மாறியது.

**முக்தி பாஹினி:** பங்களாதேஷ் கொரிலாப் படைகள் என்றும் அழைக்கப்படுகிறது, இது விடுதலைப் போரின்போது பங்களாதேஷ் இராணுவம், துணை ராணுவம் மற்றும் பொதுமக்கள் அடங்கிய கெரில்லா எதிர்ப்பு இயக்கமாகும். இது 1971 ல் கிழக்கு பாகிஸ்தானை பங்களாதேஷாக மாற்றியதில் முக்கியப்பங்காற்றியது.

**மிசா:** இது 1971 ல் இந்திய நாடாளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்ட ஒரு சர்ச்சைக்குரிய சட்டமாகும். இது அரசாங்கத்திற்கு எல்லையில்லா அதிகாரங்களை வழங்கி தங்களுடைய எதிரிகளை கைதுச்செய்வதற்குப் பயன்பட்டது. இந்தச் சட்டத்தைப் பயன்படுத்தி அவசரகாலத்தில் இந்திராவின் அரசியல் எதிரிகள் கைதுச்செய்யப்பட்டனர்.

## 4.12. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

**குறுகிய வினாக்கள்**

1. திருமதி காந்தியின் ஆரம்ப ஆட்சிக்காலத்தில் உணவு நெருக்கடி குறித்து எழுதுக.
2. ரூபாய் மதிப்புக் குறைப்புக் குறித்து இந்திரா காந்தி மேற்கொண்ட நடவடிக்கை பற்றி எழுதுக.
3. 1969 ஆண்டில் காங்கிரஸில் ஏற்பட்டப் பிளவு குறித்து சிறு குறிப்பு வரையறு.
4. 1967 - ஆம் ஆண்டில் நடந்த நான்காவது பொதுத் தேர்தலைப் பற்றி கூறுக.
5. இரண்டாவது இந்திய-பாகிஸ்தான் போர்களில் சீனாவின் நிலைப்பாடு குறித்து எழுதுக.
6. தேசிய அவசரநிலைப் பிரகடனத்திற்கான காரணங்கள் குறித்து எழுதுக.

**நெடு வினாக்கள்**

1. இந்திரா காந்தி எதிர்கொண்ட ஆரம்பகாலச் சவால்கள் குறித்துக் கட்டுரை எழுதுக.
2. திருமதி காந்தியின் இடதுசாரி சித்தாந்தத்தைப் பகுப்பாய்வு செய்க.
3. 1971 இல் நடைபெற்ற ஐந்தாவது பொதுத் தேர்தலைப் பற்றி விளக்குக.

4. தேசிய அவசரநிலை மற்றும் அதன் விளைவுகளை பகுப்பாய்வு செய்க.

குறிப்பு

## 4.13. கூடுதல் வாசிப்புகள்

Ananth V. Krishna. 2011. *India since Independence: Making Sense of Indian Politics*. New Delhi: Pearson.

Barbara A. Somervill. 2007. *Indira Gandhi: Political Leader in India.* Minneapolis: Compass point books.

பிபன் சந்திரா, மிருதுலா முகர்ஜி, ஆதித்யா முகர்ஜி. 2015.*சுதந்திரத்திற்குப் பிறகு இந்தியா,* சென்னை: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.

வெங்கடேசன்.க. 2012. *சமகால இந்திய வரலாறு 1947-2012,* ராஜபாளையம்: வி.சி.பப்ளிகேஷன்ஸ்.

G. John Gilbert. 2006. *Contemporary History of India.* New Delhi: Anmol Publications Pvt. Ltd.

Ramachandra Guha. 2008. *India after Gandhi*. London: Picador.

# அலகு-5

## ஜனதா கட்சித் தோற்றம் - மொரார்ஜி தேசாய்- சரண்சிங்- - பொதுத் தேர்தல், 1980-நீல நட்சத்திர நடவடிக்கை

**பாட அமைப்பு**

5.1. முன்னுரை

5.2. நோக்கங்கள்

5.3. ஜனதா கட்சியின் எழுச்சி

5.3.1. எழுச்சிக்கான பின்னணி

5.3.2. ஜனதா கட்சியின் தோற்றம்

5.3.3. தேர்தல் முடிவுகள்

5.4. பிரதமர் மொரார்ஜி தேசாய்

5.4.1. ஜனதா நிர்வாகம்

5.4.2. மாநிலச் சட்டப் பேரவைகள் கலைப்பு

5.4.3. சுருள் திட்டம் (Rolling Plan)

5.4.4. இந்திரா காந்திக்கு எதிரான நடவடிக்கைகள்

5.4.5. ஷா கமிஷன் விசாரணை (Shaw Commission Enquiry)

5.4.6. விசாரணை வலைகள்

5.4.7. காலப் பெட்டகம் (Time Capsule)

5.4.8. இந்திரா காந்தியின் மீண்டும் அரசியல் பிரவேசம்

5.4.9. ஜனதா வீழ்ச்சி

5.5. சரண்சிங் எழுச்சியும்-வீழ்ச்சியும்

5.6.பொதுத் தேர்தல், 1980

5.6.1அஸ்ஸாம் அகதிகள் பிரச்சனை

5.7. நீல நட்சத்திர நடவடிக்கை (Operation Blue Star)

5.7.1. ஆனந்பூர் சாகிப் தீர்மானங்கள்

5.7.2. அகாலிவுடன் பேச்சுவார்த்தை

5.7.3. ஜர்னைல் சிங் பிந்தரன்வாலே

5.7.4. காலிஸ்தான் கோரிக்கை

5.7.5. அமைதின்மை

5.7.6. நீல நட்சத்திர நடவடிக்கை

5.7.7.பிரதமர் படுக்கொலை

5.8. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்

5.9. அத்தியாயச் சுருக்கம்

5.10. முக்கியச் சொற்கள்

5.11. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

5.12. கூடுதல் வாசிப்புகள்

## 5.1. முன்னுரை

பங்களாதேஷ் விடுதலையைத் தொடர்ந்து புகழின் உச்சிக்குச் சென்ற இந்திரா காந்தி. பல்வேறு காரணங்களால் அவருடையச் செல்வாக்குச் சரியத்துவங்கியது. இறுதியில் 1975 ஆம் ஆண்டு ஜீன் மாதம் அலகாபாத் நீதி மன்றத்தின் தீர்ப்பு, 1971 ஆம் ஆண்டு

இந்திராகாந்தி ரேபரலித் தொகுதியிருந்து வெற்றிப்பெற்றது செல்லாது என அறிவித்தது. இதனைத் தொடர்ந்து நாடு முழுவதும் போராட்டமும் பதட்டமும் தொடர்ந்தது. இச்சூழ்நிலையில் இந்திரா காந்தி தேசிய அவசரநிலையைப் பிரகடனப் படுத்தினார். அவரது அரசியல் எதிரிகள் கைதுச் செய்யப்பட்டனர். 1977 வரை நடைமுறையிலிருந்த அவசரநிலை இந்திராகாந்தியின் அரசியல் செல்வாக்கைப் பாதித்தது.

1977 ஆம் ஆண்டு துவக்கத்தில் தேர்தல் நடைப்பெறும் என இந்திரா காந்தி அறிவித்தார். தலைவர்கள் விடுதலைச் செய்யப்பட்டனர். எதிர்க்கட்சிகளின் கூட்டணித் தொகுப்பாக ஜனதா, காங்கிரஸிக்கு எதிராகத் தேர்தலில் களம் கண்டது. இந்தத் தேர்தலின் முடிவு முதல் முறையாகச் சுதந்திர இந்தியாவில் காங்கிரஸ் ஆட்சி அதிகாரத்திலிருந்து அகற்றப்பட்டது. ஜனதா கட்சிப் பெரும்பான்மையுடன் ஆட்சிக்கு வந்தது. இந்தப் பின்னணியில்தான் இந்த அத்தியாயமானது அவசர நிலை பிரகடனம் குறித்தும், 1977 ஆம் ஆண்டுத் தேர்தலைக் குறித்தும் இறுதியாக ஜனதாவின் எழுச்சியைக் குறித்தும் ஆராய்கிறது.

அவசரநிலையும், அதன் விளைவுகளும் இந்திரா காந்திக்கு மிகப்பெரியப் படிப்பினைக் கொடுத்தது. மேலும், அவசரகாலத்தில் நடந்த தவறுகளுக்காக மக்களிடம் நிபந்தனையற்ற மன்னிப்புக் கோரினார். இந்திரா காந்தியின் இத்தகைய செயலும், ஜனதா அரசாங்கத்தின் பழிவாங்கும் மனப்பான்மையும் திருமதி காந்திக்கு மக்களிடையே அனுதாபத்தை ஏற்படுத்தியது. இதன் காரணமாக 1980- ஆம் ஆண்டு நடைப்பெற்ற ஆறாவதுப் பொதுத்தேர்தலில் வெற்றிப்பெற்று மீண்டும் பிரதமராகப் பொறுப்பேற்றார். ஆனால், இக்காலம் இந்திராகாந்திக்கு சோதனைமிகுந்ததாக இருந்தது. இந்திரா காந்தியின் இளைய மகனும், அவருடைய அரசியல் வாரிசு என்றும் கருதப்பட்டவருமான சஞ்சய் விமான விபத்தில் அகாலமரணம் அடைந்தார். அசாம் கிளர்ச்சியும், பஞ்சாப் தீவிரவாதமும் இந்திராவிற்கு மிகப்பெரியச் சவாலாக அமைந்தது. இறுதியில் தீவிரவாதத்திற்கு விலைமதிப்பற்றத் தனது உயிரைத் தியாகம் செய்தார்.

இந்திராவிற்குப் பிறகு பிரதமராகப் பொறுப்பேற்ற ராஜீவ் காந்தி ஏழாவது பொதுத் தேர்தலில் பெற்ற மிகப்பெரிய வரலாற்றின் வெற்றியோடு தனது ஆட்சியைத்தொடர்ந்தார். இந்தியாவை 21-ஆம் நூற்றாண்டுக்கு அழைத்து செல்வதற்கான தன்னுடைய நீண்டக்கால

சிந்தனையை வெளிட்டார். மேலும், அவரால் அறிமுகப்படுத்தப்பட்ட புதிய கல்விக்கொள்கைச் சமூகத்தில் ஆக்கப்பூர்வமான மாற்றத்தை ஏற்படுத்தியது. ஆயினும், இவரது ஆட்சியின் இறுதியில் இவருக்கு எதிராக வைக்கப்பட்ட ஊழல் குற்றச்சாட்டுகள் வீழ்ச்சியை நோக்கி அழைத்துச் சென்றது. இதன் அடிப்படையில் இந்த அத்தியாயமானது இந்திராவின் இரண்டாவது ஆட்சிவரை (1980-84) குறித்தும், ராஜீவ் காந்தியின் நிர்வாகமுறைக்குறித்தும், புதியக்கல்விக்கொள்கைக் குறித்தும் விரிவாக விவாதிக்கிறது.

## 5.2. நோக்கங்கள்

இந்தப் பாடத்தைப் படித்த பிறகு, நீங்கள் கீழ்க் கண்டவற்றை அறிந்துக் கொள்ள முடியும்:

- ஜனதா அரசாங்கத்தின் எழுச்சி மற்றும் வீழ்ச்சியை புரிந்துக் கொள்ள இயலும்.
- இந்திரா காந்தியின் மறுப்பிரவேசம் குறித்து அறிந்துக் கொள்ள இயலும்.
- நீல நட்சத்திர நடவடிக்கை மற்றும் அதன் தாக்கத்தைப் பற்றி தெரிந்துக் கொள்ள முடியும்.

## 5.3. ஜனதா கட்சியின் எழுச்சி

1977-ஆம் ஆண்டு சமகால இந்திய வரலாற்றில் திருப்பு முனையை ஏற்படுத்திய ஆண்டாகும். அந்த ஆண்டில் நாடாளுமன்ற மக்களவைக்கு நடைபெற்ற தேர்தலில் காங்கிரஸ் வீழ்ச்சி அடைந்து ஜனதா கட்சி எழுச்சிப் பெற்று ஆட்சி அமைத்தது. ஜனதா கட்சியின் எழுச்சி, 1) இந்தியாவின் நெருக்கடி நிலையை முடிவுக்குக் கொண்டு வந்தது 2) நாடாளுமன்ற ஜனநாயகத்தைப் புதுப்பித்துப் புத்துயிர் அளித்தது 3) நேரு-காந்தி குடும்ப ஆட்சியை முடிவுக்குக் கொண்டு வந்தது.

## 5.3.1. எழுச்சிக்கான பின்னணி

ஜனதா கட்சி ஒரு தெளிவானக் குறிக்கோளையோ, கொள்கையையோ, திட்டத்தையோ, அமைப்பையோ கொண்ட அரசியல் கட்சி அல்ல. மாறாக, அது பல குறிக்கோள்களையும், கொள்கைகளையும், திட்டங்களையும், அமைப்புகளையும் கொண்ட பல கட்சிகளின் இணைப்பாகும்.

## 5.3.2. ஜனதா கட்சியின் தோற்றம்

1977 ஜனவரி 18-ஆம் தேதி பொதுத் தேர்தல் நடத்தப்படுவதைப் பற்றி அறிவிக்கப்பட்டதேயன்றி நெருக்கடி நிலை விலக்கிக் கொள்ளப்படவில்லை. தேர்தலைச் சந்திக்க இரண்டு மாதகால அவகாசம்கூட இல்லை. கட்சித் தொண்டர்கள் சிறையிலிருந்து விடுதலைச் செய்யப்படவில்லை. விடுதலை செய்யப்பட்டத் தலைவர்களும் நெருக்கடி நீக்கம் “கண் துடைப்புச் செயல்” என்றே கருதினர். எனினும் அவர்கள் தயக்கத்தைக் கைவிட்டுத் துணிந்து செயல்படத் துவங்கினர். “சிறையில் பிறந்த கட்சி”க்கு முறையான வடிவம் கொடுக்கப்பட்டது. மொரார்ஜி தேசாய் தலைவராகவும், சரண் சிங் துணைத் தலைவராகவும் புதியதாக உருவாக்கப்பட்ட ஜனதா கட்சி (Janata Party) க்குப் பொறுப்பேற்றனர். ஜன சங்கம், ஸ்தாபன காங்கிரஸ், சோஷலிஸ்ட் கட்சித் தலைவர்கள் பொதுச் செயலாளர்கள் ஆனார்கள். பின்னர் 1977 மே மாதம் முதல் தேதி எஸ். சந்திரசேகரைத் தலைவராகக் கொண்ட ஜனதா கட்சி அதிகார பூர்வமாக அறிவிக்கப்பட்டது.

## 5.3.3. தேர்தல் முடிவுகள்

1977 தேர்தலின் ஜனதா கட்சியும் அதன் தோழமைக் கட்சிகளும் போட்டியிட்ட 493 இடங்களில் 270 இடங்களைக் கைப்பற்றின. வாக்களித்தோரில் 43 விழுக்காடு இடங்கள் இவற்றுக்குக் கிடைத்தன. இத்தேர்தலில் இந்திரா காங்கிரஸ் படுதோல்வி அடைந்தது. அக்கட்சியால் மொத்தம் 35 விழுக்காடு இடங்களில் மட்டுமே

வெற்றிப்பெற முடிந்தது. காங்கிரஸ் சார்பாகப் போட்டியிட்ட 49 அமைச்சர்களில் 15 பேர் மட்டுமே வெற்றிப் பெற்றனர்.

ரேபரேலியில் போட்டியிட்ட இந்திரா காந்தி, ராஜ் நாராயணிடம் தோற்றுப் போனார். அதேபோன்று அமேதி தொகுதியில் சஞ்சய் காந்தி தோற்றார். புதிய நாடாளுமன்றத்தில் பாதி இடங்களைப் பிடித்த ஜனதா கட்சிக் கூட்டணி ஜெகஜீவன் ராமின் ஜனநாயகக் காங்கிரஸ் மற்றும் மார்க்சிய கம்யூனிஸ்ட் கட்சியின் ஆதரவோடு ஆட்சியை அமைப்பதற்குப் போதியப் பலத்தைப் பெற்றது.

## 5.4. பிரதமர் மொரார்ஜி தேசாய்

தேர்தல் முடிவைத் தொடர்ந்து ஜனதா கட்சினரால் ஒரு மனதாக மொரார்ஜி தேசாய் பிரதமப் பதவிக்கு தேர்ந்தெடுக்கப்பட்டார். மொரார்ஜி தேசாய் பிரதமர் பொறுப்பேற்று அரசாங்கத்தை அமைக்குமாறு குடியரசு தலைவரால் அழைக்கப்பட்டார். 1977 மார்ச் 23-ஆம் தேதி பிற்பகல் மொரார்ஜி தேசாய்க்கு ராஷ்டிரபதி பவனில் பிரதமர் பதவிப் பிரமாணம் செய்து வைக்கப்பட்டது. தேசாய் இந்தியாவின் நான்காவது பிரதமராகப் பொறுப்பேற்றார். பிரதமர் மொரார்ஜி தேசாய் ஜனதா கட்சியின் தேர்தல் பிரகடன வாக்குறுதிகளை நிறைவேற்றத் தயாரானார். 81 வயதான மொரார்ஜி தேசாய் காங்கிரஸ் அல்லா முதல் பிரதமராகப் பொறுப்பேற்றார்.

### 5.4.1. ஜனதா நிர்வாகம்

**ஜனநாயக முறையை மீட்டெடுத்தல்**

சமகால இந்திய வரலாற்றில் முதல் காங்கிரஸல்லாத ஜனதா அரசாங்கத்தின் முதல் முக்கியப் பணி நெருக்கடிக்கால யதேச்சதிகார ஆட்சி முறையை அகற்றி மக்கள் ஜனநாயக முறையை மீட்டதாகும். 1977 மார்ச் 27-ம் தேதி 1971ல் பிறப்பிக்கப்பட்ட வெளி நெருக்கடி (External Emergency) நீக்கப்பட்டது. மக்களின் அடிப்படை உரிமைகள் முழுமையாக மீட்கப்பட்டன. அரசியலமைப்புச் சட்டத்தின் கட்டமைப்பைக் குழைத்த 42வது சட்டத்திருத்தம் 44வது சட்டத் திருத்தத்தின் மூலம் ரத்துச் செய்யப்பட்டது. மத்திய மாநிலச் சட்டங்களின் ‘சட்டத்

தகுதி'யைத் தீர்மானிக்கும் உரிமை உச்ச நீதிமன்றத்துக்கு மீண்டும் வழங்கப்பட்டது. நெருக்கடி காலத்தில் அரசாங்க ஊழியர்களுக்கு இழைக்கப்பட்ட அநீதி நிவர்த்திக்கப்பட்டது. பத்திரிக்கைச் சுதந்திரம் பாதுகாக்கப்பட்டது. நாடாளுமன்ற நடவடிக்கைகள் பற்றிய அறிக்கைகளை வெளியிடுவதற்கு விதிக்கப்பட்ட தடை விலக்கிக் கொள்ளப்பட்டது. அகில இந்திய வானொலி மற்றும் தூர்தர்ஷன் சுதந்திரமாகச் செயல்படுவதற்கான வழிவகைகளைப் பரிந்துரைக்க வர்க்கீஸ் குழு (Verghese Committee) அமைக்கப்பட்டு அதன் அறிக்கையின் மீது பிரசார் பாரதி மசோதா அறிமுகப்படுத்தப்பட்டது. சுருங்கக்கூறின் நெருக்கடிகால யதேச்சதிகார அத்துமீறல்களை அகற்றி மீண்டும் முழு மக்களாட்சி முறையை மீட்டது ஜனதா ஆட்சியின் மகத்தானச் சாதனையாகும்.

## 5.4.2. மாநிலச் சட்டப் பேரவைகள் கலைப்பு

ஜனதா கட்சி ஆட்சிக்கு வந்த ஒரு மாதத்துக்குள் 1977-ஆம் ஆண்டு தேர்தலில் காங்கிரஸ் தோல்வி கண்ட 9 மாநிலங்களின் சட்டப் பேரவைகளைக் கலைப்பதற்கான முயற்சியை மேற்கொண்டது. இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் 356 சரத்துப்படி 9 சட்டப் பேரவைகளைக் கலைத்து விடுமாறு பிரதமர் மொரார்ஜி தேசாய் பொறுப்புக் குடியரசு தலைவர் ஜாட்டியைக் கேட்டுக்கொண்டார். 1977 ஏப்ரல் 30 ஆம் தேதி 9 மாநிலச் சட்டமன்றப் பேரவைகள் (பஞ்சாப் அரியானா, இமாச்சல பிரதேசம், உத்திர பிரதேசம், பீகார், மத்தியப் பிரதேசம், ராஜஸ்தான், ஒரிசா, மேற்கு வங்காளம்) கலைக்கப்பட்டு, அம்மாநிலங்கள் குடியரசு தலைவரின் ஆட்சியின் கீழ்க் கொண்டு வரப்பட்டன.

நாடாளுமன்றத் தேர்தலில் தோற்ற 9 சட்டப் பேரவைகளும் மக்களின் நம்பிக்கையை இழந்துவிட்டது என்ற காரணத்தைக் காட்டி அச்சட்டப்பேரவைகளைக் கலைத்த ஜனதா அரசாங்கத்தின் செயல் சர்ச்சைக்குள்ளானது. அந்நடவடிக்கையின் அரசியலமைப்புச் சட்டம் மற்றும் அரசியல் விளைவுகள் பற்றி விவாதிக்கப்பட்டது. நாடாளுமன்றத் தேர்தல் முடிவை அளவுகோலாகக் கொண்டு மாநில சட்டப்பேரவையைக் கலைப்பது "விசித்திரமானக்கொள்கை" (Strange Doctrine) ஆகும் என்று கருதுகிறார் முன்னாள் குடியரசு தலைவர் ஆர்.வெங்கட்ராமன். ஜனதா

அரசாங்கத்தின் நடவடிக்கை அரசியலமைப்புச் சட்டத்தின் 356-வது சரத்தைத் தவறாகப் பயன்படுத்தியதற்கான வெளிப்படையான சட்டமீறலாகும். இச்செயல் ஜனநாயக விரோதமானது. அரசியலமைப்புச் சட்ட உணர்வுக்கு எதிர்மறையானது. ஜனதா அரசாங்கம் 9 மாநில சட்டப் பேரவைகளை ஒட்டுமொத்தமாகக் கலைத்தது அரசியல் உள்நோக்கம் கொண்டது. ஏனெனில் ஜனதா கட்சிக்கு நாடாளுமன்ற மக்களவையில் பெரும்பான்மை பலம் இருந்ததேயன்றி மாநிலங்கள் அவையில் இல்லை. எனவே, வரவிருந்த குடியரசு தலைவர் தேர்தலில் ஜனதா கட்சியின் வேட்பாளர் வெற்றிப் பெற வாய்ப்பில்லை. ஜனதா கட்சிக் கலைக்கப்பட்டச் சட்டப் பேரவைகளைக் கைப்பற்றி அவைகளின் கூடுதலான ஆதரவுடன் அதன் வேட்பாளரின் வெற்றி வாய்ப்பை உறுதிச் செய்யும் உள்நோக்கத்துடன் சட்டப் பேரவைக் கலைப்பு நடவடிக்கை எடுக்கப்பட்டது. ஜனதா கட்சி எதிர்பார்த்ததைப் போன்றே கலைக்கப்பட்ட மாநிலங்களைக் கைப்பற்றி ஜனதா கட்சி வேட்பாளரான சஞ்சீவ் ரெட்டியை வெற்றிப் பெறச் செய்தது.

## 5.4.3. சுருள் திட்டம் (Rolling Plan)

ஒன்பது மாநிலங்கள் சட்டப் பேரவைகளைக் கலைத்தப் பின் நேருவின் திட்டமிட்டப் பொருளாதார முறையில் அடிப்படை மாற்றத்தை ஏற்படுத்த முற்பட்டது ஜனதா அரசாங்கம். ஐந்தாண்டுத் திட்டத்துக்குப் பதில் “சுருள் திட்டத்”தைக் கொண்டு வந்தது. ஐந்தாண்டுத் திட்ட வடிவத்தை வைத்துக் கொண்டு அதன் உள்ளீட்டை மாற்றுவதே சுருள் திட்டத்தின் நோக்கமாகும். சுருள் திட்டம் ஆண்டுத் திட்டமாகும். அரசாங்கத்துறை வாரியாக செயல் நிறைவேற்றத்துக்கு ஏற்றவாறு திட்ட இலக்குகள், பொருள் ஆதாரங்கள் போன்றவை ஒவ்வொரு ஆண்டும் மாற்றி அமைக்கப்படும். வறுமை ஒழிப்பு, வேலை வாய்ப்பை அதிகரித்தல், வருமான ஏற்றத்தாழ்வைக் குறைத்தல் ஆகியவற்றைக் குறிக்கோளாகக் கொண்டு ஆண்டு இலக்குகளை நிர்ணயிப்பதே சுருள் திட்டத்தின் சாரமாகும். அதற்கேற்ப 1978-79 ஆம் ஆண்டுக்கான திட்ட வழிகாட்டு விதிகள் (Plan Guidelines) தயாரிக்கப்பட்டன (1977 செப்டம்பர் 10). அதற்கேற்ப விவசாயத்துக்கு முன்னுரிமை கொடுத்துச் சுருள் திட்டத்தைத் தயாரித்துச் செயல்படுத்துமாறு மாநில

அரசாங்கங்கள் ரூ.1,16,240 கோடி முதலீட்டுக்கான 1978-1983 ஆண்டுக்கான ஐந்தாண்டுத் திட்டமும் தயாரிக்கப்பட்டது.

குறிப்பு

## 5.4.4. இந்திரா காந்திக்கு எதிரான நடவடிக்கைகள்

1977 அக்டோபர் 3-ஆம் தேதி இரவு இந்திரா காந்தி மத்தியப் புலனாய்வுத் துறையினரால் கைதுச் செய்யப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டார். மறுநாள் காலை நாடாளுமன்ற வீதியிலுள்ள மாஜிஸ்ட்ரேட் நீதிமன்றத்தில் ஆஜர் செய்யப்பட்டார். இந்திரா காந்தி தேர்தலின்போது அரசாங்க ஜீப்புகளைப் பயன்படுத்தினார் என்றும், ஒரு பிரெஞ்சு எண்ணைக் கம்பெனியோடு சட்டப்புறம்பாக வர்த்தக ஒப்பந்தம் செய்துக் கொண்டார் என்றும் அவர் மீது குற்றங்கள் சுமத்தப்பட்டன. வழக்கை விசாரித்த மாஜிஸ்ட்ரேட் குற்றச்சாட்டுக்களை நிரூபிப்பதற்கான ஆதாரங்கள் இல்லை என்று கூறி இந்திரா காந்தியை நிபந்தனையின்றி விடுதலை செய்தார்.

இந்திரா காந்தியின் விடுதலை ஜனதா அரசாங்கத்தின் மீது விழுந்த இடி போலாயிற்று. நீதி வழங்குவதாக நினைத்துக் கொண்டு இந்திரா காந்தியைப் பழிவாங்கியமைக்காக ஜனதா அரசாங்கம் கடும் கண்டனத்துக்குள்ளாயிற்று. இந்திரா காந்தியின் “அரசியல் கைது” பற்றிய உள்நாட்டு, வெளிநாட்டுப் பத்திரிக்கைகள் குறைக் கூறின. அந்த முடிவு ஜனதா அரசாங்கத்தின் நம்பகத்தன்மையைக் குறைத்துவிட்டது. இத்திடீர் கைதும் விடுதலையும் இந்திரா காந்தி அரசியல் புத்துயிர் பெறக் காரணமாக இருந்தது. இந்தியா முழுவதும் “இந்திரா அனுதாப அலை” வீசத் துவங்கியது.

## 5.4.5. ஷா கமிஷன் விசாரணை (Shaw Commission Enquiry)

ஜனதா அரசாங்கம் பதவிக்கு வந்த இரண்டு வாரங்களுக்குள் 1977 ஏப்ரல் 7ஆம் தேதி ஷா கமிஷன் பற்றி அறிவித்தது. 1952 விசாரணைக் கமிஷன் சட்டத்தின் (Commission of Enquiry Act, 1952) 3-வது பிரிவின்படி இக்கமிஷன் அமைக்கப்பட்டது. இந்த கமிஷன் தலைவராக ஓய்வு பெற்ற உச்ச நீதிமன்றத் தலைமை நீதிபதி ஜே.சி.ஷா (J.C.Shah) நியமிக்கப்பட்டார். நெருக்கடிக் காலத்தில்

நிகழ்த்தப்பட்டதாகக் கூறப்பட்ட அத்துமீறல்கள் அனைத்தையும் விசாரித்து அதன் அறிக்கையை ஆறு மாதங்களுக்குள் சமர்ப்பிக்க வேண்டுமென்று ஷா கமிஷன் கேட்டுக் கொள்ளப்பட்டது.

ஷா கமிஷன் அதன் விசாரணையைப் புது டெல்லியில் உள்ள பாட்டியாலா (Patiala House) இல்லத்தில் செப்டம்பர் 30 அன்று துவங்கியது. மக்கள் மன்றம் போல் செயல்பட்ட ஷா கமிஷன் விசாரணைக்கு மிகப் பெரிய விளம்பரம் கொடுக்கப்பட்டது. சாட்சிகள் குறுக்கு விசாரணை செய்யப்படக் கூடாது என்று நீதிபதி உத்தரவிட்டதால் இந்திரா காந்தியின் மீது சரமாரியானக் குற்றச்சாட்டுக்கள் சுமத்தப்பட்டன. அவர் பதினோறு வழக்குகளில் சம்மந்தப்படுத்தப்பட்டார். இந்திரா காந்தி 1977 நவம்பர் மாதமும் 1978 ஜனவரி மாதமும் விசாரிக்கப்பட்டார். அதன்பின் அவரை டெல்லி மேஜிஸ்ட்ரேட் நீதிமன்றத்தில் மேல் விசாரணை செய்யுமாறு உத்தரவிட்டார் நீதிபதி ஷா.

## 5.4.6. விசாரணை வலைகள்

இந்திரா காந்திக்கு எதிராகப் பல விசாரணைக் கமிஷன்கள் அமைக்கப்பட்டன. முன்னாள் பிரதமர் இந்திரா காந்தியை விசாரணை வலைகளுக்குள் சிக்க வைப்பதற்காக ஜனதா அரசாங்கம் முனைப்புடன் செயல்பட்டது. கே.கே.தாஸ், நீதிபதி குரோவர், நீதிபதி மத்தூர், செல்லப்பா, ஜகன் மோகன் ரெட்டி ஆகியோரின் தலைமையில் பல்வேறு விசாரணைக் கமிஷன்கள் நியமிக்கப்பட்டன. நெருக்கடிக் காலத்துக்கு முன்பு நடந்த நகர்வாலா வழக்குப் புதுப்பிக்கப்பட்டு ஜகன்மோகன் ரெட்டியால் விசாரிக்கப்பட்டது. இந்திரா காந்தி நகர்வாலா சிறையில் இருந்ததோடு சம்மந்தப்படுத்தப்பட்டார். ஆனால் வழக்குத் தோற்றது. இந்திரா காந்தி நிரபராதி என்று தீர்ப்பளிக்கப்பட்டது. அதேபோன்று 1975-ல் ரயில் நிலையத்தில் நிகழ்ந்த வெடி விபத்தில் கொல்லப்பட்ட முன்னாள் அமைச்சர் எல்.என்.மிஸ்ரா பற்றிய கொலை வழக்கிலும் இந்திரா காந்தியைத் தொடர்புபடுத்தப்பட்டார். அந்த முயற்சியும் வெற்றிப் பெறவில்லை. இந்திரா காந்தியின் மீது தொடரப்பட்ட வழக்குகளில் மிகவும் அற்பத்தனமான வழக்கு அவர் நான்கு கோழிகளையும் இரண்டு கோழி முட்டைகளையும் திருடிவிட்டார் என்பதாகும். அந்த வழக்கை

திரிகா கமிஷன் (Trikha Commission) விசாரித்தது. அவ்வழக்கு மணிப்பூரில் நடந்ததால் இந்திரா காந்தி அடிக்கடி மணிப்பூர் சென்றுவர வேண்டியதாயிற்று. ஜனதா அரசாங்கத்தின் தாறுமாறான செயல் பொதுமக்களிடையே வெறுப்பைத் தோற்றுவித்தது.

## 5.4.7. காலப் பெட்டகம் (Time Capsule)

இந்திரா காந்தியைத் தொடர்ந்து துன்புறுத்துவதற்காக ஜனதா அரசாங்கம் மேற்கொண்ட மற்றொரு முயற்சி காலப் பெட்டகத்தைத் தோண்டி எடுத்ததாகும். இந்திரா காந்தியின் ஆட்சிக் காலத்தில் 1973 ஆகஸ்டு 15-ஆம் தேதி டெல்லி செங்கோட்டைச் சுவர்களுக்கு வெளியே ஒரு காலப் பெட்டகம் புதைக்கப்பட்டது. அப்போது வாஜ்பாய், அத்வானி உள்ளிட்ட 22 நாடாளுமன்ற உறுப்பினர்கள் அப்பெட்டகத்தை அகழ்ந்தெடுக்க முயன்றனர். பின்னர் ஜனதா கட்சி ஆட்சிப் பொறுப்பேற்றப் பின்னர் தி.மு.க.-விலிருந்து ஜனதா கட்சிக்கு மாறிய இரா.செழியன் காலப் பெட்டகப் பிரச்சனையை நாடாளுமன்றத்தில் எழுப்பினார். அப்பெட்டகத்தில் நேரு மற்றும் இந்திரா காந்தியின் சாதனைகள் மிகைப்படுத்தி எழுதப்பட்டுள்ளதாகவும், வரலாறு திரித்து எழுதப்பட்டதாகவும், தவறுகள் பல உள்ளதாகவும் கூறினர்.

1977 டிசம்பர் 8 ஆம் தேதி காலப் பெட்டகம் தோண்டி எடுக்கப்பட்டது. அப்பெட்டகத்தில் பல மொழிகளில் எழுதப்பட்ட இந்திய அரசியலமைப்புச் சட்டம், இரண்டு நாணயங்கள், விஜயந்தா டாங்குகளின் மாதிரிகள், 10,000 வார்த்தைகளில் எழுதப்பட்ட வரலாறு காணப்பட்டன. அந்த வரலாற்றை இந்திய வரலாற்று ஆய்வு மன்றத்தின் (Indian Council of Historical Research) சார்பாகச் சென்னை கிறித்துவக் கல்லூரி வரலாற்றுப் பேராசிரியர் டாக்டர் எஸ்.கிருஷ்ணசுவாமி எழுதியிருந்தார். காலப் பெட்டக வரலாற்றில் சுதந்திர இந்தியாவின் சாதனைகள் கால வரிசைப்படி எழுதப்பட்டிருந்தது. ஜனதா தலைவர்கள் நாடாளுமன்றத்துக்கு உள்ளேயும், வெளியேயும், உரக்கப் பிரச்சாரம் செய்ததைப் போன்று அந்த வரலாற்றில் நேருவோ, இந்திரா காந்தியோ ஒருதலைப் பட்சமாகப் புகழ்ந்து எழுதப்படவில்லை என்பது தெரியவந்தது. குஷ்வந்த் சிங் குறிப்பிட்டுள்ளதைப் போன்று ஜனதா தலைவர் மலையைப் புரட்டி எலியைப் பிடித்தனர்.

**குறிப்பு**

## 5.4.8. இந்திரா காந்தியின் மீண்டும் அரசியல் பிரவேசம்

ஷா கமிஷன் முன் முன்னாள் அமைச்சர்கள் ஒப்புதல் வாக்குமூலம் கொடுத்ததால் இந்திரா காந்தி காங்கிரஸ் காரியக் கமிட்டியிலிருந்து1977 டிசம்பர் 18 நாளில் ராஜினாமா செய்தார். டிசம்பர் 21 நாளில் இந்திரா காந்தியின் ஆதரவாளர்கள் போட்டிக் காங்கிரஸ் கூட்டத்தை நடத்தப் போவதாக அறிவித்தனர். காங்கிரஸ் தலைவர் பிரமானந்த ரெட்டி இந்திரா காந்தியைக் காங்கிரஸ் கட்சியிலிருந்து நீக்கினார். 1978 ஜனவரி 3-ம் தேதி கூட்டப்பட்டப் போட்டிக் காங்கிரஸ் கூட்டத்தில் இந்திரா காந்தி தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். காங்கிரஸ் மீண்டும் பிளவுபட்டது. இந்திரா காந்தியைத் தலைவராகக் கொண்ட காங்கிரஸ் இந்திரா காங்கிரஸ் (Congress I) என்று அமைக்கப்பட்டது. தேர்தல் கமிஷன் “கை” சின்னத்தை இந்திரா காங்கிரசுக்கு வழங்கி அதைத் தேசியக் கட்சியாக அங்கீகரித்தது. இந்திரா காந்திக்குக் கைச்சின்னம் கைகொடுத்தது.

இந்திரா காந்தி 1978 அக்டோபர் 6-ஆம் நாள் கர்நாடகத்தில் உள்ள சிக்மகளூர் நாடாளுமன்றத் தொகுதியில் மனுதாக்கல் செய்தார். 1978 நவம்பர் 5-ஆம் தேதி நடைபெற்ற தேர்தலில் இந்திரா காந்தி அவரை எதிர்த்த வீரேந்திர பட்டீலை விட 70,000 வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றிப் பெற்றார். புதிய சாதனை படைத்தார். “வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இந்த வெற்றி இந்திய அரசியல் சூழ்நிலையில் மகத்தான தாக்கத்தை ஏற்படுத்தியது” என்று குறிப்பிட்டுள்ளார் பூபுல் ஜெபகர்.

## 5.4.9. ஜனதா வீழ்ச்சி

இந்திரா காந்தியின் அரசியல் வாழ்வை அழிக்கும் முயற்சியில் ஜனதா கட்சி தன்னைத் தானே அழித்துக் கொண்டது. குறிப்பாக, உள்துறை அமைச்சர் சரண்சிங் மொரார்ஜி தேசாயின் மகன் காந்தி தேசாய் (Gandhi Desai) தவறான, முறைகேடான, சட்டவிரோத நடவடிக்கைகளில் ஈடுபடுவதாகவும், மகனின் முறைகேடுகளுக்குத் தந்தை பாதுகாப்பு அளிப்பதாகவும், காந்தி தேசாய்க்கு எதிராகக் கூறப்படும்

குற்றச்சாட்டுக்களை விசாரிக்க வேண்டுமென்று வெளிப்படையாகக் கூறிவந்தார். அதுமட்டுமல்ல. சரண் சிங்கும் அவரது ஆதரவாளர்களும் ஜனதாக் கட்சியின் பிரதான பங்காளிகளில் ஒன்றான ஜன சங்கம் தீவிர மதவாத அமைப்பான ராஷ்ட்ரீய சுவயம் சேவக் சங்கத்தோடு நெருங்கியத் தொடர்புக் கொண்டிருப்பதை வன்மையாகக் கண்டித்தனர்.

இந்திரா காந்தியும், சஞ்சய் காந்தியும் ஜனதா கட்சியை உடைப்பதற்கான வியூகத்தை வகுத்தனர். இந்திரா காந்தி, சஞ்சய் காந்தி மூலம் ராஜ் நாராயணுடன் தொடர்புக் கொண்டார். சஞ்சய் காந்தி ராஜ் நாராயணுடன் சரண் சிங் பிரதமராவதற்கான வழிவகைகளைக் கூறி, அவ்வாறு அவர் பிரதமராவதற்கு இந்திரா காங்கிரஸ் ஆதரவளிக்கும் என்று உறுதியையும் அளித்தார்.

1979 ஜூலை 11-ஆம் தேதி மக்களவையில் எதிர்க்கட்சித் தலைவர் ஒய்.பி.சவாண் ஜனதா அரசாங்கத்துக்கு எதிராக நம்பிக்கையில்லாத் தீர்மானத்தைக் கொண்டு வந்தார். மொரார்ஜி தேசாய் மக்களவையில் பெரும்பான்மை பலம் இழந்தார். நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை எதிர்கொள்ள முடியாத மொரார்ஜி தேசாய் 1979 ஜூலை 15-ஆம் தேதி பிரதமர் பதவியை ராஜினாமா செய்தார்.

## 5.5. சரண்சிங் எழுச்சியும்-வீழ்ச்சியும்

மொரார்ஜி தேசாய் பிரதமர் பதவியிலிருந்து விலகியதால் குழப்பமான அரசியல் சூழ்நிலை ஏற்பட்டது. காங்கிரஸ் ஆதரவோடு பிரதமர் பதவிக்கு உரிமை கோரினார் சரண் சிங். குடியரசு தலைவர் நீலம் சஞ்சீவ ரெட்டி சரண்சிங்கை அரசாங்கம் அமைக்குமாறு அழைத்தார். ஆட்சிப் பொறுப்பேற்ற ஒரு மாதத்திற்குள் மக்களவையின் நம்பிக்கை வாக்கெடுப்பைப் பெறவேண்டும் என்ற நிபந்தனையோடு சரண் சிங்குக்குப் பிரதமர் பதவிப் பிரமாணம் செய்து வைத்தார் குடியரசு தலைவர். சரண் சிங்கின் நெடுநாளான கனவு நனவாயிற்று. இந்திரா காங்கிரசின் வெளி ஆதரவுடன் சரண் சிங் பிரதமரானவுடன், ஒ.பி.சவாணைத் துணைப் பிரதமராக்கினார். பாராளுமன்றத்தில் நம்பிக்கை வாக்கெடுப்பில் வெற்றிப்பெற்றவுடன் காங்கிரஸை உடைத்து இந்திரா காந்தியைத் தனிமைப்படுத்தித் தாம் நிரந்தரப் பிரதமராக ஆக வேண்டும் என்று கருதினார். அதே சமயதில் அரசியல் சூழ்நிலையை நன்கு அறிந்த

இந்திரா காந்தி சரண் சிங்கிற்கு அளித்து வந்த ஆதரவை விலக்கிக் கொண்டார். சரண் சிங் வேறு வழியின்றி குடியரசு தலைவரைச் சந்தித்து மக்களவையைக் கலைத்து விடுமாறு கேட்டுக் கொண்டு பிரதமர் பதவியை ராஜினாமா செய்தார். இவ்வாறாக மூன்றாண்டுகளுக்குக் குறைவாகவும், இரண்டு பிரதமர்களையும் கண்ட ஜனதா அரசாங்கம் வீழ்ச்சியை முழுமையாகச் சந்தித்தது.

## 5.6.பொதுத் தேர்தல், 1980

1980 ஜனவரி 3 ஆம் தேதி நடைபெற்ற நாடாளுமன்றத் தேர்தலில் 196 மில்லியன் வாக்காளர்கள் வாக்களித்தனர். இந்திரா காங்கிரஸ் மகத்தான வெற்றிப் பெற்றது. இந்திரா காந்தி போட்டியிட்ட ரேபரேலி மற்றும் மேடக் (ஆந்திரா) ஆகிய இரு தொகுதிகளிலும் வெற்றிப் பெற்றார். சஞ்சய் காந்தி அமேதி தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்திரா காங்கிரசுக்கு மக்களவையில் 542 இடங்களில் 351 இடங்கள் கிடைத்தன. இந்திரா காங்கிரஸுக்கு மூன்றில் இரண்டு பங்குக்கு மேல் பெரும்பான்மை பலம் கிடைத்தது. 1977 தேர்தலில் நெருக்கடி கால அத்துமீறல்களுக்கு எதிராக மக்கள் வாக்களித்ததால் ஜனதா கட்சி வெற்றிப் பெற்றது. 1980-தேர்தலில் மக்கள் ஜனதா அரசாங்கத்தின் செயல்படாமைக்கு எதிராக வாக்களித்தமையால் இந்திரா காங்கிரஸ் வெற்றிப் பெற்றது.

### இழப்பு

சஞ்சய் காந்தி 1980 ஜூன் 23 ஆம் தேதி விமான விபத்தில் அகால மரணமடைந்தார். சஞ்சய் காந்தியின் மரணம் இந்திரா காந்தியை நிலைகுலையச் செய்தது. இது இந்திரா காந்திக்கு முதல் பின்னடைவாகக் கருதப்படுகிறது. இந்திரா காந்திக்கு பிறகு ஆட்சி அரியணையைக் கைப்பற்றுவார் என்று எதிர்பார்க்கப்பட்ட சஞ்சையின் எதிர்பாராத மரணம் அரசியல்ரீதியில் திருமதி இந்திரா காந்திக்கு பேரிழப்பாகக் கருதபட்டது. இந்திரா காந்தி அரசாங்க அதிகாரத்தைத் தக்க வைத்துக் கொள்வதற்காகவும், தனது குடும்ப அரசியல் வாரிசுரிமையை நிலைநாட்டிக் கொள்வதற்காகவும் சஞ்சய் காந்திக்குப் பதில் ராஜீவ் காந்தியை அரசியலில் ஈடுபடுத்தத் தீர்மானித்தார்.

## 5.6.1 அஸ்ஸாம் அகதிகள் பிரச்சனை

**குறிப்பு**

அஸ்ஸாமில் இருவகை அகதிகள் இருந்தன: 1) இந்தியப் பிரிவினையின் போது கிழக்கு பாகிஸ்தானிலிருந்து வெளியேறி வந்து அஸ்ஸாமில் குடியேறியோர். இவர்களில் மிகப் பெரும்பான்மையோர் இந்துக்கள். இவர்கள் இந்தியக் குடியுரிமைப் பெற்றனர். 2) பங்ளாதேஷ் போரின் போது தப்பி வந்து அஸ்ஸாமில் குடியேறியோர். இவர்களில் மிகப் பெரும்பான்மையோர் முஸ்லீம்கள். அஸ்ஸாமின் மண்ணின் மைந்தர்கள், இந்துக்கள் உட்பட வெளியிலிருந்து வந்து குடியேறியோர் அனைவரையும் "அன்னியர்"களாகக் (Aliens) கருதினர். அஸ்ஸாமில் 8 மில்லியன் அகதிகள் இருந்ததாகவும், அவர்களில் 5 மில்லியன் பேர் சட்டப்புறம்பாகக் குடியேறியோர் (Illegal Immigrants) என்றும் கூறப்பட்டது. சட்டப்புறம்பான அகதிகள் தங்களது வேலை வாய்ப்புகளைப் பறித்துக் கொள்வதாக அஸ்ஸாமியர் நினைத்தனர். அகதிகளால் தங்களது கல்வி மற்றும் வேலை வாய்ப்புகள் பெரிதும் பாதிக்கப்படுவதாக அஞ்சிய அஸ்ஸாம் மாணவர் அகில - அஸ்ஸாம் மாணவர் ஒன்றியம் (All - Assam Students Union) என்ற அமைப்பை ஏற்படுத்திப் போராட்டத்தைத் துவங்கினர். அஸ்ஸாம் போராட்டக்களமாயிற்று.

பிரதமர் இந்திரா காந்தி அஸ்ஸாம் சட்டப் பேரவையைக் கலைத்து, சிவில் உரிமைகளைத் தடைச் செய்து, ஒழுங்கு நடவடிக்கை எடுத்து, இராணுவத்தின் துணைக் கொண்டு அஸ்ஸாம் அகதிகள் எதிர்ப்புப் போராட்டத்தை முறியடித்தார். அஸ்ஸாம் "கலவரப் பகுதி" என்று அறிவிக்கப்பட்டது. அம்மாநிலம் குடியரசு தலைவர் ஆட்சியின் கீழ்க் கொண்டு வரப்பட்டது (1982 மார்ச்). 1983 பிப்ரவரி மாதத்தில் நடத்தப்பட்டத் தேர்தலை அகில அஸ்ஸாம் மாணவர் ஒன்றியமும் பிற எதிர்க்கட்சிகளும் புறக்கணித்தன. எனினும் தேர்தல் துப்பாக்கி முனையில் நடத்தப்பட்டது. காங்கிரஸ் வேட்பாளர்கள் இராணுவப் பாதுகாப்போடுப் பிரச்சாரம் செய்தனர். அஸ்ஸாம் தேர்தலில் இந்திரா காங்கிரஸ் மகத்தான வெற்றிப் பெற்றது. ஆனால் அஸ்ஸாம் அகதிகள் பிரச்சனையைத் தீர்ப்பதில் இந்திரா காந்தி அரசாங்கம் தோல்வி அடைந்தது. இந்திய இராணுவத்தோடு நேரடியாக மோத முடியாத

அஸ்ஸாம் தேசியவாதிகள் அகதிகள் முகாம்களைத் தாக்கினர். அக்கலவரத்தின் போது ஆண்கள், பெண்கள், குழந்தைகள் என்று வேறுபாடின்றி அகதிகள் கொன்றுக் குவிக்கப்பட்டனர். கிராமங்கள் எல்லாம் தரைமட்டமாக்கப்பட்டன. 50,000 பேர் வீடிழந்தனர். ‘நெல்லி’ என்ற சிற்றூரில் நடந்தப் படுகொலை (Nellie Masscare) இந்தியப் பிரிவினையின் போது நடைபெற்ற இனப் படுகொலையை நினைவூட்டுவதாக இருந்தது. “நெல்லிப் படுகொலை” சமகால இந்திய வரலாற்றின் இரத்தக் கரைப் படிந்த நிகழ்ச்சி ஆகும்.

## 5.7. நீல நட்சத்திர நடவடிக்கை (Operation Blue Star)

**சுதந்திரத்திற்கு பின் பஞ்சாப்**

இந்தியா சுதந்திரம் பெற்ற பின்னர் சீக்கியர்கள் இந்திய ஒன்றியத்துக்குட்பட்டு சுயாட்சியுடன் கூடிய பஞ்சாபி சுபா (Punjabi Suba) கேட்டுப் போராடத் துவங்கினர். 1953-ல் மாநிலங்கள் மறுசீரமைப்புக் குழு அமைக்கப்பட்டப் பின் சீக்கியரது பஞ்சாபி சுபா கோரிக்கைப் போராட்டமாக உருவெடுத்தது. சீக்கியர் பஞ்சாபி மொழியோடு சீக்கியச் சமயத்தையும் கலந்துக் கேட்டத் தனி மாநிலக் கோரிக்கையை நேரு நிராகரித்தார். நேரு நிராகரித்த பஞ்சாபி சுபா கோரிக்கையை 1966-ஆம் ஆண்டில் இந்திரா காந்தி ஏற்றார். இந்திப் பேசும் அரியானா மற்றும் இமாச்சலப் பிரதேசத்தைத் தனி மாநிலங்களாக்கிச் சீக்கியர் பெரும்பான்மையினராயிருந்த பஞ்சாப் தனி மாநிலமாக உருவாக்கப்பட்டது. தர்பாரா சிங் (Darbara Singh) பஞ்சாப் முதலமைச்சரானார். ஆனால் அகாலிகள் அரியானாவின் பகுதியான சண்டிகர் பஞ்சாபின் தனித் தலைநகராக வேண்டும் என்றும், ரவி மற்றும் பீயாஸ் நதிகளின் நீர் பஞ்சாப், அரியானா, ராஜஸ்தான் மாநிலங்களிடையே பகிர்ந்தளிக்கப் படவேண்டும் என்று கோரி தங்கள் போராட்டத்தைத் தீவிரப்படுத்தினர். 1969 அக்டோபர் மாதம் இப்பிரச்சனையை முன்வைத்துச் சீக்கியத் தலைவர்களின் ஒருவர் தர்ஷன் சிங் பெருமான் (Darshan Singh Pheruman) உண்ணாவிரதமிருந்து உயிர் நீத்தார். சண்டிகரைப் பஞ்சாபுக்குக் கொடுத்துவிட்டு, பஞ்சாபின் ஒரு பகுதியை சண்டிகருக்குக் கொடுக்க

முன்வந்த இந்திரா காந்தியின் சமரசத் திட்டத்தை அகாலிகள் ஏற்கவில்லை. மாறாக ஆனந்பூர் சாகிப் தீர்மானங்களை நிறைவேற்றினர்.

குறிப்பு

## 5.7.1. ஆனந்பூர் சாகிப் தீர்மானங்கள்

பிரதமர் இந்திரா காந்தியின் சமரசத் திட்டத்தை ஏற்றுக் கொள்ளாத அகாலிகள் 1973 அக்டோபர் மாதம் ஆனந்பூர் சாகிப் என்ற இடத்தில் கூடி தங்கள் கோரிக்கைகளுக்கு வடிவம் கொடுத்து சில தீர்மானங்களை நிறைவேற்றினர். இவை 'ஆனந்பூர் சாகிப் தீர்மானங்கள்' என்று அழைக்கப்பட்டது. இத்தீர்மானங்களில் எழுப்பப்பட்ட முக்கியக் கோரிக்கைகளாவன: 1) அமிர்தசரஸ் நகருக்கு ரோமிலுள்ள வாட்டிகன் நகர (Vatican City) அந்தஸ்து கொடுக்க வேண்டும். 2) சீக்கியர்கள் இந்தியன் ஏர்லைன்ஸ் விமானங்களில் பயணம் செய்யும் போது கிர்ப்பான் என்ற குறுங்கத்தியை உடன் கொண்டு செல்ல அனுமதிக்க வேண்டும். 3) அகில இந்தியத் குருதுவாரச் சட்டம் இயற்றப்பட வேண்டும். 4) பொற்கோயில் வளாகத்திற்குள் ஹர்மந்திர் வானொலி நிலையம் அமைக்கப்பட வேண்டும். 5) சண்டிகர் சீக்கியரிடம் ஒப்படைக்கப்பட வேண்டும். 6) பஞ்சாபி மொழி பேசப்படும் பகுதிகள் பஞ்சாபுடன் இணைக்கப்பட வேண்டும். 7) வெளிநாட்டு விவகாரம், நாட்டுப் பாதுகாப்பு, நாணயச் செலாவணி, செய்தித் தொடர்பு ஆகிய மத்தியத் துறைகள் தவிர எஞ்சிய அதிகாரங்கள் மாநிலங்களுக்கு மாற்றப்பட வேண்டும். மத்திய-மாநில உறவுகள் மறுபரிசீலனைச் செய்யப்பட வேண்டும். 8) விவசாயத் தலைக்கட்டு வேலைகளைப் பற்றிய கட்டுப்பாடு தொடர்ந்துச் சீக்கியரிடமே இருக்க வேண்டும். 9) பக்ரா அணை நிர்வாகப் பொறுப்பு பஞ்சாபுக்கு மாற்றப்பட வேண்டும். 10) சீக்கியர்களுக்கு இராணுவத்தில் ஒதுக்கப்பட்ட விகிதாச்சாரம் தொடர்ந்து நீடிக்க வேண்டும். அகாலிகள் ஆனந்தபூர் சாகிப் தீர்மானங்களை சூழ்நிலைகளுக்கேற்பக் கூட்டிக் குறைத்து, பெருக்கி வகுத்துப் போராடி வந்தனர்.

## 5.7.2. அகாலிவுடன் பேச்சுவார்த்தை

அகாலிப் போராட்டத்துக்குப் பேச்சுவார்த்தை மூலம் அமைதித் தீர்வு காணும் முயற்சியில் தொடர்ந்து ஈடுபட்டார் பிரதமர் இந்திரா

காந்தி. 1981 அக்டோபர் முதல் 1984 மே மாதம் வரை 26 முறை சமரச விவாதக் கூட்டங்கள் நடைபெற்றன. இக்கூட்டங்களில் "அகாலி மும்மூர்த்திகள்" பங்கேற்றனர். 1983 ஜனவரி 21ம் தேதி இந்திரா காந்தி அகாலிகள் கோரிக்கைகள் பற்றி எதிர்க் கட்சித் தலைவர்களுடன் கலந்துப் பேசினார். அதன்பின் ஆனந்பூர் சாகிப் தீர்மானங்களில் சிலவற்றை பிப்ரவரி 27 தேதி அன்று ஏற்பதாக அறிவித்தார். அகாலித் தலைவர்கள் பேச்சுவார்த்தைகளில் கலந்துக் கொண்டே போராட்டத்தையும் தீவிரப்படுத்தி வந்தனர். பிரதமர் இந்திரா காந்தி பஞ்சாப் பிரச்சனையைத் தீர்ப்பதில் மிருதுவான அணுகுமுறையைக் கையாள்வதாகவும், 1971ல் பங்களாதேஷ் போரில் காட்டிய உறுதியைத் தேச ஒருமைப்பாட்டுக்கு ஏற்பட்ட அச்சுறுத்தலை அடக்குவதில் காட்டவில்லை என்றும் கடுமையாக விமர்சிக்கப்பட்டார். அகாலிகளின் தீவிரவாதமும் பிந்தரன்வாலேயின் பயங்கரவாதமும் ஒருங்கிணைந்தன. பஞ்சாப் வெடிமருந்துக் கிடங்காயிற்று.

## 5.7.3. ஜர்னைல் சிங் பிந்தரன்வாலே

பிந்தரன்வாலே கிராமத்துப் பூசாரியாக இருந்து பஞ்சாப் பயங்கரவாதியானார். இவர் தனது 30வது வயதில் (1977) தம்தாமி தக்சல் (Damdami Taksal) என்ற சீக்கியத் தீவிரவாத மதப்பிரிவின் தலைவரானார். தீவிரவாதி பிந்தரன்வாலே "தம்தாமி தக்சல்" அமைப்பைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு செல்வாக்கைப் பெருக்கிக் கொண்டார். பஞ்சாபில் அகாலிதள - ஜனசங்கக் கூட்டணி ஆட்சியின் போது சீக்கியச் சமயத்துக்கு முரண்பட்டதாகக் கருதப்பட்ட நிரன்காரிகள் (Nirankaris) மீது தனது முதல் வன்முறைத் தாக்குதலைத் தொடுத்தார் பிந்தரன்வாலே (1978 ஏப்ரல்). அப்போது துவக்கப்பட்ட தால் கல்சா (Dal Khalsa) என்ற தீவிரவாத அமைப்பும் இவருடன் இணைந்தது. அகாலி அரசியலும் இத்துடன் கலந்தது. மதமும் அரசியலும் பிந்தரன்வாலே பயங்கரவாத நாணயத்தின் இரு பக்கங்களாயின.

குறிப்பு

## 5.7.4. காலிஸ்தான் கோரிக்கை

வெளிநாடுகளில் வாழ்ந்த சீக்கியர்கள் தான் முதலில் காலிஸ்தான் (Khalistan) கோரிக்கையை எழுப்பினர். இந்தியாவில் சீக்கியர்களுக்கான இறையாண்மையுடைய (Sovereignty) தனிச் சுதந்திர நாடு, உருவாக்கப்பட வேண்டுமென்பதே காலிஸ்தான் கோரிக்கையின் கருப்பொருளாகும். 1980-ம் ஆண்டில் டாக்டர் ஜகித் சிங் சௌகான் (Dr.Jagit Singh Chouhan) என்ற சீக்கியர் லண்டனில் அவரது தலைமையில் காலிஸ்தான் தேசியக் கவுன்சில் (National Council of Khalistan) என்ற அமைப்பை உருவாக்கிக் காலிஸ்தான் இயக்கத்தை வெளிநாடுகளில் பரப்பினார். இவரைப் போன்றே அமெரிக்காவில் கங்கா சிங் தில்லான் (Ganga Singh Dillon) வாஷிங்டனில் அவரது தலைமையில் “நான்கானா சாகிப் நிறுவனம்” (Nankana Sahib Foundation) என்ற அமைப்பைத் தோற்றுவித்து காலிஸ்தான் கோரிக்கைக்கு ஆதரவு திரட்டினார். இந்த அமைப்புகள் அனைத்தும் இந்தியாவில் காலிஸ்தான் ஆதரவாளர்களுக்கு நிதியையும் போர்த் தளவாடங்களையும் அனுப்பி உதவின. வெளிநாட்டு வாழ் சீக்கியர்களின் ஆதரவாலும், உதவியாலும் வெகுவாக ஊக்குவிக்கப்பட்ட பிந்தரன்வாலே பஞ்சாபில் வாழ்ந்த இந்துக்களை விரட்டிவிட்டு, அரியானா, ராஜஸ்தான், உத்திரப் பிரதேசம், பீகார் ஆகிய மாநிலங்களில் குடியேறி வாழ்ந்து வந்த சீக்கியர்களைப் பஞ்சாப்புக்குக் குடியிறக்கி, சுதந்திர காலிஸ்தானை உருவாக்கத் திட்டமிட்டார். பயங்கரவாதத்தின் மூலம் இத்திட்டத்தைச் செயல்படுத்தத் துவங்கினார்.

## 5.7.5. அமைதின்மை

பிந்தரன்வாலே கட்டவிழ்த்துவிட்டப் பயங்கரவாதம் பஞ்சாப்பைக் கிளர்ச்சிக் காடாக்கிற்று. பிந்தரன்வாலே பயங்கரப் போராளியானார். துப்பாக்கி ஏந்திய பாதுகாப்பாளர்கள் புடைசூழப் பகிரங்கமாகப் பவனி வந்தார் காங்கிரஸுடன் தனக்கிருந்த உறவை முறித்துக் கொண்டார் காலிஸ்தான் கோரிக்கையை உரக்க எழுப்பினார். 1982-ம் ஆண்டுத் துவக்கத்தில் ஏற்பட்ட இந்து - சீக்கிய இனக் கலவரத்தில் பலர்

இறந்தனர். தால் கல்சாவும், காலிஸ்தான் தேசியக் கவுன்சிலும் தடைச் செய்யப்பட்டன. பயங்கரவாதிகள் படுகொலைப் படலத்தில் இறங்கினர். கொலைப் பட்டியல் (Hit List) வெளியிடப்பட்டுக் கொலைகள் செய்யப்பட்டன. அகாலித் தலைவர்கள் பயங்கரவாதப் படுகொலைகளைக் கண்டிப்பதற்குப் பதிலாக அரசாங்கத்துக்கு எதிராக தர்மயுத்தம் துவங்கினர். ஆகஸ்ட் 4 தேதியில் டெல்லியிலிருந்து அமிர்தசரஸ் வழியாக ஸ்ரீநகர் சென்ற இந்தியன் ஏர்லைன்ஸ் விமானம் கடத்தப்பட்டது. இரண்டு வாரங்களுக்குப் பின் ராஜஸ்தான் ஜோத்பூரிலிருந்து டெல்லி சென்ற விமானம் கடத்தப்பட்டது. ஜலந்தரில் சுற்றுப் பயணம் மேற்கொண்டிருந்த முன்னாள் முதலமைச்சர் தர்பாரா சிங் வெடிகுண்டுத் தாக்குதலிலிருந்து தப்பினார். பொற்கோயிலுக்கருகே நடந்த தசரா ஊர்வலம் குண்டுகள் வீசித் தாக்கப்பட்டது. அடுத்த இரண்டு ஆண்டுகளில் (1983 - 84) பஞ்சாப் கிளர்ச்சிக் காடாயிற்று. குண்டு வெடிப்புகள், கொலைகள், கொள்ளைகள் அன்றாட நிகழ்ச்சிகளாயின. பொற்கோயிலில் பிரார்த்தனைச் செய்து விட்டுத் திரும்பிய போலீஸ் உயர் அதிகாரி ஏ.எஸ்.அட்வால் 1983 ஏப்ரல் 25 அன்று பட்டப் பகலில் சுட்டுக் கொல்லப்பட்டது நாட்டை அதிர்ச்சியில் ஆழ்த்தியது.

1984-ம் ஆண்டில் பஞ்சாப் பயங்கரவாதம் உச்சக் கட்டத்தை எட்டியது. மாநிலத்தில் தொடர்ச்சியான குண்டுவெடிப்பு நிகழ்ச்சிகள் நடந்தன. மத்திய அரசாங்க அதிகாரிகளும் அலுவலகங்களும் குறிவைத்துத் தாக்கப்பட்டன. ஜனவரி 28 தேதி இரயில் நிலையங்களுக்குத் தீ வைக்கப்பட்டது. பிப்ரவரி 21 தேதி இந்து கோயில்கள் சேதப்படுத்தப்பட்டன; பலர் கொல்லப்பட்டனர். மார்ச் 9 மற்றும் 27 தேதிகளில் பிரபல அரசியல் தலைவர்கள் தாக்கப்பட்டனர். வங்கிகள் கொள்ளையடிக்கப்பட்டன. ஏப்ரல் 1 தேதி அன்று பெரோஸ்பூரில் கல்லூரி முதல்வர் சுட்டுக் கொல்லப்பட்டார். அடுத்த நாள் முன்னாள் சட்டமன்ற உறுப்பினரும், மாவட்ட பாஜக தலைவருமான ஹர்பன்ஸ் லால் கன்னா சுட்டுக் கொல்லப்பட்டார். ஏப்ரல் 13 தேதியில் பிந்தரன்வாலே ஆதரவாளர்களுக்கும் லோங்கோவால் ஆதரவாளர்களுக்குமிடையே மோதல் ஏற்பட்டதால் இரு தலைவர்களுக்கிடையே விரிசல் ஏற்பட்டது. பஞ்சாப் போலீஸ் செயலிழந்தது. மே 3 தேதி மத்திய போலீஸ் படையினர் (CRPF) மோகா குருதுவாராவில் ஒளிந்திருந்த பயங்கரவாதிகளை விரட்டியடித்து

**குறிப்பு**

ஆயுதங்களைக் கைப்பற்றினர். பிந்தரன்வாலே பொற்கோயிலுக்குள் ஏராளமான ஆயுதங்களைக் குவித்து வைத்துக் கொண்டு ஒரு இணை அரசாங்கத்தை (Parallal Government) நடத்திக் கொண்டிருந்தார். பஞ்சாபில் சட்டம் ஒழுங்கு முற்றிலும் சீர்கெட்டது. மத்திய அரசாங்கம் அகாலித் தலைவர்களுடன் நடத்தியப் பேச்சுவார்த்தைகள் அனைத்தும் தோல்வியடைந்ததால் பஞ்சாப் பயங்கரவாதத்தை முறியடிக்க இராணுவ நடவடிக்கை எடுப்பதைத் தவிர வேறு வழியில்லை என்ற சூழ்நிலை உருவாயிற்று.

### 5.7.6. நீல நட்சத்திர நடவடிக்கை

பிந்தரன்வாலேயின் பிரிவினை பயங்கரவாதம் உச்சகட்டத்தை எட்டியப் போது, 1983 அக்டோபர் 6-ம் தேதி பஞ்சாப்பில் குடியரசுத் தலைவர் ஆட்சி பிரகடனப்படுத்தப்பட்டது. பஞ்சாப் கலவரப் பகுதியாக அறிவிக்கப்பட்டது. அக்டோபர் 15 நாளில் இராணுவப் படைகள் சிறப்பதிகாரங்கள் அவசரச் சட்டம் (Armed Forces Special Powers Ordinance) நடைமுறைப்படுத்தப்பட்டது. இவற்றையும் மீறி பயங்கரவாதம் மேலும் மோசமாகப் பரவியது. சமரசப்பேச்சுக் கதவுகள் அனைத்தும் அடைக்கப்பட்டுவிட்டன. எனவே, 1984 மே 25-ம் தேதி பிரதமர் இந்திரா காந்தி இராணுவ நடவடிக்கை எடுக்க முடிவு செய்தார். அவர் நாட்டு மக்களுக்கு வானொலி - தொலைக்காட்சி மூலம் நிகழ்த்திய உரையில் பஞ்சாபியர் இரத்தம் சிந்துவதை நிறுத்தி வெறுப்பைக் கைவிட வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

1984 ஜூன் 3-ம் தேதி இந்திய இராணுவம் பஞ்சாபுக்குள் நுழைந்தது. பயங்கரவாதிகளின் புகலிடங்கள் என்று சந்தேகப்பட்ட இடங்களை இராணுவத்தினர் சூழ்ந்துக் கொண்டனர். 35 குருதுவாராக்கள் முற்றுகையிடப்பட்டன. பொற்கோயிலுக்கு வெளியே நிலைமையைக் கட்டுக்குள் கொண்டுவரப்பட்டது. அதன்பின் பொற்கோயில் இராணுவத்தினரால் சுற்றி வளைக்கப்பட்டது. கோயிலுக்குள்ளிருந்த பயங்கரவாதிகள் சரணடைந்து விடுமாறு எச்சரிக்கப்பட்டனர். எச்சரிக்கைப் பயனின்றிப் போகவே இராணுவத்தின் சிறப்புப் படையினர் (Cammandos) 1984 ஜூன் 5-ம் தேதி இரவு பொற்கோவிலுக்குள் நுழைந்தனர். இராணுவத்தினருக்கும், சீக்கியப் போராளிகளுக்குமிடையே நடைபெற்ற

24 மணி நேரச் சண்டையில் பிந்தரன்வாலேயும் அவரது சகாக்களும் கொல்லப்பட்டனர். இத்துப்பாக்கிச் சண்டையின் போது பக்தர்கள் பலரும் உயிரிழந்தனர். “நீல நட்சத்திர நடவடிக்கை” என்பது இராணுவத் திடீர்த் தாக்குதலுக்குக் கொடுக்கப்பட்டக் குறியீட்டுப் பெயராகும் (Code Name). பஞ்சாப் பயங்கரவாதம் முறியடிக்கப்பட்டது.

## 5.7.7. பிரதமர் படுக்கொலை

நீல நட்சத்திர நடவடிக்கை எடுக்கப்பட்ட சில மாதங்களுக்குப் பின்னர் இந்திரா காந்தி தன் பாதுகாப்பு முன்னெச்சரிக்கைகளைப் பொருட்படுத்தாமல் தீவிர தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபட்டார். 1984 அக்டோபர் 30 ஆம் தேதி பிரச்சாரத்தை முடித்துக் கொண்டு புதுடெல்லி திரும்பினார். இந்திரா காந்தியின் சீக்கிய மெய்க்காப்பாளர்களை மாற்றிவிட வேண்டும் என்று மூத்த அதிகாரிகள் ஆலோசனைக் கூறினார்கள். இந்திரா காந்தி அத்திட்டத்தை ஏற்கவில்லை. ஒரு சீக்கிய மெய்க்காப்பாளருடன் மற்றொரு சீக்கியரல்லாதவரை நியமிக்க வேண்டும் என்ற மாற்றுத் திட்டம் செயல்படுத்தப்படவில்லை.

1984 அக்டோபர் 31 ஆம் தேதி காலை நடிகர் பீட்டர் உஸ்டிநோ (Peter Ustinov)வுக்குத் தொலைக்காட்சிப் பேட்டிக்காக இந்திரா காந்தி வீட்டிலிருந்து அருகாமையிலிருந்த பிரதமர் அலுவலகத்துக்கு வந்துக் கொண்டிருந்தார். அப்போது இந்திரா காந்தியின் மெய்க்காப்பாளர்களான பியன்ட்சிங் (Beant Singh)க்கும், சத்வந்த் சிங் (Satwant Singh)கும் அவர் மீது சராமாரியாகச் சுட்டனர். சல்லடைக் கண்களாகத் துளைக்கப்பட்ட இந்திரா காந்தி அந்த இடத்திலேயே மாண்டார். இந்திரா காந்தி நன்கு திட்டமிடப்பட்டுக் கொல்லப்பட்டார். கொலை நடைபெற்ற அன்று இந்திரா காந்தி குண்டு துளைக்காத கவசத்தை அணியவில்லை என்பதைக் கொலையாளிகள் அறிந்திருந்தனர்.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. 1977 இல் எந்த அரசியல் கட்சிகள் ஜனதாவுடன் இணைந்தன?
2. காங்கிரஸ் கட்சியைச் சாராத முதல் பிரதமர் யார்?
3. ஷா கமிஷன் ஏன் நியமிக்கப்பட்டது?
4. நாடாளுமன்றத்தைக் காணாத இந்தியப் பிரதமர் யார்?

5. 1980- ஆம் ஆண்டு மக்களவைத் தேர்தலில் இந்திரா காந்தி எத்தனை இடங்களை வென்றார்?

6. நீல நட்சத்திர நடவடிக்கையின் தளபதி யார்?

குறிப்பு

## 5.8. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்

1. ஜனவரி 1977 ஆண்டில், எதிர்க்கட்சித் தலைவர்கள் காங்கிரஸ் (X) ஜனசங், பாரதிய லோக் தளம் (பிஎல்டி) மற்றும் சோசலிஸ்ட் கட்சி ஆகியவற்றை புதிய ஜனதா கட்சியில் இணைப்பதாக அறிவித்தனர்.

2. மொராஜி தேசாய் முதல் காங்கிரஸ் அல்லாத பிரதமர் ஆவார் (1977-79).

3. 1977 ஆம் ஆண்டில் உச்சநீதிமன்றத்தின் ஓய்வுபெற்ற தலைமை நீதிபதி ஜே.சி. ஷாவின் கீழ் அரசு ஒரு விசாரணை ஆணையத்தை நியமித்தது. திருமதி காந்தி அவசரகாலத்தில் செய்த முறைகேடுகள் மற்றும் ஊழல்களை விசாரிப்பதே ஆணையத்தின் நோக்கம்.

4. பிரதமரர் சரண் சிங்.

5. 542 மக்களவைத் தொகுதிகளில் 351 இடங்களை இந்திரா காந்தி வென்றார்.

6. மேஜர் ஜெனரல் குர்தியல் சிங் இருந்தார்.

## 5.9. அத்தியாயச் சுருக்கம்

- காங்கிரஸ் முதல் முறையாகத் தோல்வி அடைந்து ஆட்சி அதிகாரத்திலிருந்து அகற்றப்பட்டது. எதிர்க்கட்சித் தலைவர்களின் புதிய அரசியல் கூட்டணி (ஜனதா) ஆட்சிக்கு வந்தது. மொரார்ஜி தேசாய் முதல் காங்கிரஸ் அல்லாத பிரதமரானார்.
- ஜனதா அரசு அவசரகாலத்தில் பரிக்கப்பட்ட ஜனநாயகம் உரிமை, பேச்சு மற்றும் கருத்துச் சுதந்திரம் மற்றும் பிற உரிமைகளை மீட்டெடுக்க உறுதிப்பூண்டது.

**குறிப்பு**

- இந்திரா காந்திக்கு எதிரான பல்வேறு வழக்குகளையும் விசாரணை ஆணையங்களை நியமித்தது.
- இருப்பினும், இந்திரா காங்கிரஸ் 1978 -ஆம் ஆண்டு நடைப்பெற்றத் தேர்தலில் வெற்றிப்பெற்று எழுச்சியடையத் துவங்கியது.
- 1979-ஆண்டில், ஜனதா கட்சிக்குள் வேறுபாடுகள் மற்றும் மோதல்கள் வளர்ந்தன. சரண் சிங் போன்ற தலைவர்கள் தேசாய்க்கு எதிராகக் கிளர்ச்சிச் செய்தனர். இறுதியில் தேசாய் பிரதமர் பதவியில் இருந்து விலகினார்.
- சரண் சிங் காங்கிரஸின் உதவியுடன் பிரதமரானார். இருப்பினும், அவரது அரசாங்கம் ஒரு மாதம் கூட நீடிக்கவில்லை.
- ஜனாதிபதி ஆறாவது மக்களவைக் கலைத்தார் மற்றும் 7 வது பொதுத் தேர்தல் 1980 இல் நடைபெற்றது.
- பஞ்சாபில் நிகழ்ந்தப் பயங்கரவாதம் இந்திரா காந்திக்கு மிகப்பெரிய சவாலாக இருந்தது. இவர் அனைத்துச் சீக்கியத் தலைவர்களுடனும் நடத்தியப் பேச்சுவார்த்தை தோல்வியில் முடிந்தது. 1983 மற்றும் 1984 ஆம் ஆண்டுகளில் பஞ்சாபில் பயங்கரவாதமும் வன்முறையும் தலைவிரித்தாடியது.
- இறுதியாக, இந்திரா காந்தி பஞ்சாபின் வன்முறை மற்றும் பயங்கரவாத நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்த இராணுவ நடவடிக்கை (நீல நட்சத்திரம்) மேற்கொண்டார்.
- இந்த இராணு நடவடிக்கை மூலமாகப் பொற்கோவிலுக்குள் இருந்த பயங்கரவாதிகள் கொல்லப்பட்டனர். தீவிரவாதம் கட்டுப்படுத்தப்பட்டது. ஆனால் அதற்கான விலையை இந்திரா காந்தி தேசத்திற்காக தனது உயிரைத் தியாகம் செய்தார்.
- இந்திரா காந்தி படுகொலைச் செய்யப்பட்டப் பின்னர் ராஜீவ் காந்தி பிரதமர் ஆனார்.

## 5.10. முக்கியச் சொற்கள்

**காலப்பெட்டகம்:** ஒரு காலப்பெட்டகம் என்பது ஒரு வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தப் பொருட்கள் அல்லது தகவல்களாகும். இது பொதுவாக எதிர்கால மக்களுடன் தொடர்புகொள்வதற்கான

குறிப்பு

முறையாகவும். இது எதிர்கால தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள், மானுடவியலாளர்கள் அல்லது வரலாற்றாசிரியர்களுக்கு உதவும் நோக்கத்தோடு உள்ளது.

**காலிஸ்தான்:** காலிஸ்தான் இயக்கம் என்பது சீக்கியப் பிரிவினைவாத இயக்கமாகும். இது பஞ்சாப் பிராந்தியத்தில் காலிஸ்தான் என்ற தனி நாட்டைச் சீக்கியர்களின் தாயகமாக உருவாக்க முயன்றது.

**அகாலிஸ்:** 'குருத்வாரா சீர்திருத்த இயக்கம்' என்றும் அழைக்கப்படும் அகாலி இயக்கம், இந்தியாவில் குருத்வாராக்களில் சீர்திருத்தத்தைக் கொண்டுவருவதற்கான தொடங்கப்பட்ட இயக்கமாகும்.

## 5.11. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

**குறுகிய வினாக்கள்**

1. ஆறாவது பொதுத் தேர்தல்கள் மற்றும் விளைவுகளின் முக்கியத்துவத்தைப் பற்றி எழுதுக.
2. 'ஷா கமிஷன்' குறித்து எழுதுக.
3. இந்திரா காந்தி படுகொலைச் செய்யப்பட்டப் பின்னர் சீக்கிய எதிர்ப்பு கலவரம் குறித்து கூறுக.

**நீண்ட வினாக்கள்**

1. ஜனதா கட்சியின் எழுச்சி மற்றும் வீழ்ச்சியைக் குறித்து பகுப்பாய்வு செய்க.
2. 1971-79 காலப்பகுதியில் பொருளாதார நிலைமைகளை மதிப்பிடு செய்க.
3. இந்திரா காந்தியின் இரண்டாவது வெற்றிக்கான காரணங்களைப் பகுப்பாய்வு முறையில் விவரி.
4. இந்திரா காந்தியின் காலத்தில் பஞ்சாபில் ஏற்பட்ட அரசியல் நெருக்கடி குறித்து கட்டுரை வடிவில் எழுதுக.

## 5.12. கூடுதல் வாசிப்புகள்

Ananth V. Krishna. 2011. *India since Independence: Making Sense of Indian Politics.* New Delhi: Pearson.

Barbara A. Somervill. 2007. *Indira Gandhi: Political Leader in India*. Minneapolis: Compass point books.

Bipan Chandra,Miridula Mukherjee, Aditya Mukherjee. 2008. *India since Independence*, Haryana: Penguin Books.

G. Vengatesan. 2007. *History of contemporary India 1947-2007*, Rajapalayam: VC Publications.

G. John Gilbert. 2006. *Contemporary History of India*, New Delhi: Anmol Publications Pvt. Ltd.

Ramachandra Guha. 2008. *India after Gandhi*, London: Picador.

## அலகு-6

## இராஜீவ் காந்தி - வி.பி.சிங். மற்றும் மண்டல் கமிஷன் அறிக்கை

**பாட அமைப்பு**

6.1. முன்னுரை

6.2. நோக்கங்கள்

6.3. புதிய பிரதமர்

- 6.3.1. சீக்கியர் எதிர்ப்புக் கலவரங்கள் (Anti-Sikh Riots)
- 6.3.2. பொதுத்தேர்தல்-1984
- 6.3.3.போபால் பேரழிவு
- 6.3.4. அஸ்ஸாம் உடன்பாடு (Assam Accord), 1985
- 6.3.5. ராஜீவ் காந்தி - லோங்கோவால் உடன்பாடு- 1985
- 6.3.6. தொழில்நுட்ப மிஷன்கள் (Technology Missions)
- 6.3.7. தொலைத் தொடர்பு புரட்சி (Telecommunication Revolution)
- 6.3.8. கணினிமயமாக்கல் திட்டம் (Computerisation Programme)
- 6.3.9. புதிய கல்விக் கொள்கை (New Education Policy)

6.3.10. ஷா பானு வழக்கு, 1985 (The Shah Banu Case)
6.3.11. முஸ்லீம் பெண்கள் மசோதா, 1986
(Muslim Women's Bill, 1986)
6.3.12. 64-வது அரசியலமைப்புச் சட்டத்திருத்த மசோதா
6.3.13. இந்தியத் தபால் சட்டத் திருத்த மசோதா
(Indian Postal Act Amendment Bill)-1986
6.3.14. ராஜீவ் காந்தி வீழ்ச்சி
6.4. வி.பி.சிங். மற்றும் மண்டல் கமிஷன் அறிக்கை (Mandal Commission Report)
6.4.1 மண்டல் ஆர்ப்பாட்டம் (Mandal Agitation)
6.5. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்க பதில்கள்
6.6. அத்தியாயச் சுருக்கம்
6.7. முக்கியச் சொற்கள்
6.8. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்
6.9. கூடுதல் வாசிப்புகள்

**குறிப்பு**

## 6.1. முன்னுரை

இந்திராவிற்குப் பிறகு பிரதமராகப் பொறுப்பேற்ற ராஜீவ் காந்தி ஏழாவது பொதுத் தேர்தலில் பெற்ற மிகப்பெரிய வரலாற்றின் வெற்றியோடு தனது ஆட்சியைத்தொடர்ந்தார். இந்தியாவை 21-ஆம் நூற்றாண்டுக்கு அழைத்து செல்வதற்கான தன்னுடைய நீண்டக்கால சிந்தனையை வெளிட்டார். மேலும், அவரால் அறிமுகப்படுத்தப்பட்ட புதிய கல்விக்கொள்கைச் சமூகத்தில் ஆக்கப்பூர்வமான மாற்றத்தை ஏற்படுத்தியது. ஆயினும், இவரது ஆட்சியின் இறுதியில் இவருக்கு எதிராக வைக்கப்பட்ட ஊழல் குற்றச்சாட்டுகள் வீழ்ச்சியை நோக்கி அழைத்துச் சென்றது. இதன் அடிப்படையில் இந்த அத்தியாயமானது இந்திராவின் இரண்டாவது ஆட்சிவரை (1980 - 84) குறித்தும், ராஜீவ் காந்தியின் நிர்வாகமுறைக்குறித்தும், புதியக்கல்விக்கொள்கைக் குறித்தும் விரிவாக விவாதிக்கிறது.

பிந்தேசுவரி பிரசாத் மண்டல் என்பவர் தலைமையில் இரண்டாவது பிற பிற்படுத்தப்பட்டோர் இடஒதுக்கீடு ஆணையத்தை ஜனதா அரசாங்கம்

குறிப்பு

அமைத்தது. இந்த ஆணையம் இந்திரா காந்தி பிரதமராக இருக்கும்போது தன்னுடையப் பரிந்துரையை வழங்கியது. 10 ஆண்டுகளுக்குப் பிறகு 1990-ஆம் ஆண்டில் வி.பி.சிங் இதை நடைமுறைப்படுத்தினார். இதை எதிர்த்து மிகப்பெரிய ஆர்ப்பாட்டங்கள் வட இந்தியா முழுவதும் பரவத் துவங்கியது. இறுதியில் வி.பி.சிங்கின் ஆட்சிக் கவிழ்ந்தது.

சில அரசியல் குழப்பங்களுக்குப் பிறகு 1991-ஆம் ஆண்டு நடைப்பெற்றத் தேர்தலில் சிறியகட்சிகள் ஆதரவோடுப் பிரதமராகப் பொறுப்பேற்ற நரசிம்மராவ், அரசியலுக்குக் கொஞ்சம்கூடச் சம்பந்தமில்லாத மன்மோகன் சிங்கை நிதியமைச்சராக்கினார். மன்மோகன் சிங்கால் அறிவிக்கப்பட்ட மிகப்பெரியப் பொருளாதாரக் கொள்கை மாற்றமே புதியப் பொருளாதாரக் கொள்கை என்றப் பெயரில் நடைமுறையிலுள்ளது.

ஐந்தாண்டுகளை நிறைவுச் செய்த நரசிம்மராவ் 1996-ஆம் ஆண்டுத் தேர்தலில் அவரது கட்சித் தோல்வியடைந்தது மட்டுமின்றி எந்தவொரு கட்சிக்கும் அரிதிப்பெரும்பான்மைக் கிடைக்கவில்லை என்பதை குறித்து விரிவாக விவாதிக்கிறது.

## 6.2. நோக்கங்கள்

இந்தப் பாடத்தைப் படித்தப் பிறகு, கீழ்க்கண்டவற்றை அறிய முடியும்:

- ராஜீவ் காந்தியின் நிர்வாக முறைகளை அறிந்துக் கொள்ள முடியும்.
- புதிய கல்விக் கொள்கையின் சிறப்பியல்புகளைத் தெரிந்துக் கொள்ள இயலும்.
- மண்டல் ஆணைக்குழு அறிக்கை மற்றும் அதன் செயல்பாடுகள் குறித்து அறிய முடியும்.

## 6.3. புதிய பிரதமர்

இந்திரா காந்தி கொலைச் செய்யப்பட்ட பிறகு ராஜீவ் காந்தி பிரதமராக நியமிக்கப்பட்டார். ஆயினும் மக்களின் ஆதரவோடும் ஒப்புதலோடும் தேர்ந்தெடுக்கப்பட்டப் பிரதமராக வேண்டும் என்று

தீர்மானித்தார். ராஜீவ் காந்தி தனது பிரதமர் பதவியைச் சட்டப்படி முறைப்படுத்த (legitimacy) முடிவு செய்தார். அதன் விளைவாக 1984 டிசம்பர் மாதம் மக்களவைத் தேர்தல் நடத்தப்பட்டது.

### 6.3.1. சீக்கியர் எதிர்ப்புக் கலவரங்கள் (Anti-Sikh Riots)

பிரதமர் இந்திரா காந்தி இரண்டு சீக்கியப் பாதுகாவலர்களால் சுட்டுக் கொல்லப்பட்டார். இக்கொடூரக் கொலை மக்களை அதிர்ச்சிக்குள்ளாக்கியது. தலைநகர் டெல்லியில் சீக்கியர்களுக்கு எதிரானக் கலவரங்கள் காட்டுத் தீ போல் பரவியது. சீக்கியர் குடும்பங்கள் மிருகத்தனமாகத் தாக்கப்பட்டன; கடைகளும், கிடங்குகளும் சூறையாடப்பட்டன, தீக்கிரையாக்கப்பட்டன, வாகனங்கள் கொளுத்தப்பட்டன. சீக்கியர்கள் படுகொலைச் செய்யப்பட்டனர்.

நான்கு நாட்கள் நீடித்த இக்கலவரங்களில் 3,000க்கும் மேற்பட்டச் சீக்கியர்கள் உயிரிழந்தனர். 25,000க்கும் மேற்பட்டச் சீக்கியர்கள் வீடிழந்து அகதிகளாயினர்.புதிதாகப் பிரதமர் பொறுப்பேற்ற ராஜீவ் காந்தி இராணுவத்தின் துணைக் கொண்டு இனக் கலவரத்தை முடிவுக்குக் கொண்டு வந்தார். இரண்டு சீக்கியப் பாதுகாவலர்கள் இந்திரா காந்தியைக் கொன்றதற்காக அவர்கள் சார்ந்தச் சமுதாயமே தண்டிக்கப்பட்டது.

### 6.3.2. பொதுத்தேர்தல்-1984

1984 தேர்தலில் இந்திரா காங்கிரஸ் மக்களவையின் 508 இடங்களில் 401 இடங்களில் வெற்றிப் பெற்றது. அதாவது மக்களவையில் ஐந்தில் நான்கு இடங்கள் காங்கிரஸுக்குக் கிடைத்தன. இது நேருவும், இந்திராவும் பெற்ற அதிகபட்ச இடங்களை விட அதிகம். இத்தேர்தலின் மூலம் நேரு-காந்தி வாரிசு அரசியலுக்கு மக்களின் அங்கீகாரம் கிடைத்தது.

குறிப்பு

## 6.3.3.போபால் பேரழிவு

ராஜீவ் காந்தி தேர்தல் பிரச்சாரத்தில் தீவிரமாக ஈடுபட்டிருந்த போது மத்தியப் பிரதேசத்தின் தலைநகரான போபாலில் யூனியன் கார்பைடு (Union Carbid) என்ற பூச்சிக் கொல்லி மருந்து தயாரிக்கும் பன்னாட்டுத் தொழிற்சாலையின் குழாயிலிருந்து கசிந்து பரவிய நச்சு வாயுவால் (Methyl-isocyanate gas) 3,000 பேருக்கும் மேல் இறந்தனர். பல்லாயிரக்கணக்கானோர் உடல் ஊனமுற்றனர். போபால் விஷவாயுப் பேரழிவுப் பற்றி அறிந்த பிரதமர் ராஜீவ் காந்தி விபத்து நடந்த இடத்துக்கு விரைந்து வந்தார். இறந்தோர் மற்றும் உடல் நிலை மிகவும் மோசமாகப் பாதிக்கப்பட்டக் குடும்பங்களுக்கு ஆறுதல் கூறினார். உடனடியாக இழப்பீட்டுத் தொகை வழங்க வேண்டும் என்று உத்தரவிட்டார். எனினும் ராஜீவ் காந்தி போபால் பேரழிவின் பரிமாணங்கள் வெளி உலகுக்குத் தெரியாமல் தடுத்து விட்டார். விபத்து நடந்த நான்காண்டுகளுக்குப் பின் 1989 பிப்ரவரி மாதம் பாதிக்கப்பட்டவர்களுக்கான இழப்பீடு பற்றி யூனியன் கார்பைடு கார்ப்பேரஷனுக்கும் ராஜீவ் காந்தி அரசாங்கத்துக்குமிடையே உடன்பாடு ஏற்பட்டது.

## 6.3.4. அஸ்ஸாம் உடன்பாடு (Assam Accord), 1985

ராஜீவ் காந்தி பிரதமரான ஒன்றரை ஆண்டுகளுக்குள் எதிர் கொண்ட சவால்களில் குறிப்பிடத்தக்கவை அஸ்ஸாம் அகதிகள் பிரச்சனையும், பஞ்சாப் பிரச்சனையும் ஆகும். பிரதமர் இந்திரா காந்தியால் தீர்வுகாணாமல் விடப்பட்ட அஸ்ஸாம் அகதிகள் பிரச்சனைக்கு ஒரு வழியைக் கண்டார் ராஜீவ் காந்தி. 1985, ஆகஸ்ட் 15 நாள் அஸ்ஸாம் மாணவர்கள் தலைவர்களுடன் ஒரு உடன்பாட்டுக் வந்தார். அந்த அஸ்ஸாம் உடன்பாட்டின்படி 1) 1971 க்கு முன் அஸ்ஸாமுக்கு வந்து குடியேறியோர் அஸ்ஸாமியராக ஏற்றுக் கொள்ளப்பட்டனர் 2) 1971க்குப்பின் அஸ்ஸாமுக்கு வந்த, குறிப்பாக பங்களாதேஷ் போருக்குப்பின் வந்த, அகதிகளின் குடியுரிமைப் பறித்து விடுதல் அல்லது பங்களாதேசுக்குத் திருப்பி அனுப்பிவிட வேண்டும் 3) இரண்டாவது எண்ணெய் சுத்திகரிப்புச் சாலை, பேப்பர் மில்,

தொழில்நுட்பக் கல்லூரிகள் உள்ளிட்ட பொருளாதார வளர்ச்சித் திட்டம் 4) அஸ்ஸாமில் மக்களின் கலாச்சாரப் பாதுகாப்பு, ராஜீவ் காந்தி செய்துக் கொண்ட அஸ்ஸாம் உடன்பாடு மண்ணின் மைந்தர்களின் பேராதரவைப் பெற்றது. ஆனால் அஸ்ஸாம் முஸ்லீம் சிறுபான்மைச் சமூகத்தினரின் ஆதரவை இழக்கச் செய்தது. அந்த இழப்பு 1985 டிசம்பர் மாதம் நடைபெற்றத் தேர்தலில் பிரதிபலித்தது.

## 6.3.5. ராஜீவ் காந்தி - லோங்கோவால் உடன்பாடு- 1985 (Rajiv Gandhi - Longowal Agreement)

ராஜீவ் காந்தி பிரதமரானவுடன் எதிர் கொண்ட சவால்களில் ஒன்று பஞ்சாப் பிரச்சனை ஆகும். பிரதமர் பொறுப்பேற்ற ராஜீவ் காந்தி பஞ்சாப் பிரச்சனைக்கு இராணுவத் தீர்வுக்குப் பதில் நல்லிணக்கத் தீர்வு காண விரும்பினார். அதன் விளைவாக 1985 ஜுலை 24 ஆம் தேதி அகாலி தளத் தலைவர் சந்த் லோங்கோவாலுடன் வரலாற்றுச் சிறப்பு மிக்க உடன்பாடு செய்துக் கொண்டார்.

## 6.3.6. தொழில்நுட்ப மிஷன்கள் (Technology Missions)

அஸ்ஸாம் மற்றும் பஞ்சாப் பிரச்சனைகளுக்குத் தீர்வுக் கண்ட பிரதமர் ராஜீவ் காந்தி இந்தியாவை 21-ம் நூற்றாண்டுச்சவால்களை எதிர்கொள்வதற்குத் தயாராக்கும் முயற்சியில் முனைப்புடன் ஈடுபட்டார். மேலும், தொழில்நுட்பத் திறமைகளை வளர்த்துக் கொள்வதன் மூலமே இதைச் சாதிக்க முடியும் என்ற முடிவுக்கு வந்த ராஜீவ் காந்தி சாம் பிட்ரோடாவின் (Sam Pitroda) ஆலோசனையின் பேரில் 6 தொழில்நுட்ப மிஷன்களைத் (Technology Missions) தோற்றுவித்தார்.

பிரதமர் ராஜீவ் காந்தியால் துவக்கப்பட்ட 6 தொழில்நுட்ப மிஷன்களாவன: 1) குடிநீர் மிஷன் (Drinking Water Mission) இந்தியர் அனைவருக்கும், குறிப்பாக கிராம மக்களுக்கு நன்கு பாதுகாக்கப்பட்ட, சுகாதாரமான, போதிய குடிநீர் கிடைக்க வேண்டும் என்பதே இத்திட்டத்தின் நோக்கமாகும். மண்ணியல் (Geology), சிவில் பொறியியல் (Civil Engineering), உயிர் வேதியல் (Bio-Chemistry)

ஆகியவற்றின் துணைக் கொண்டு செயற்கைக்கோள்கள் (Satellites) மூலம் நாட்டிலுள்ள நீர்வளங்களைக் கண்டறிந்து, வெளிக் கொண்டு வந்து, சேமித்துத் தூய்மைப்படுத்தி மக்களுக்கு வினியோகிக்கும் மாபெரும் முயற்சியில் குடிநீர் மிஷன் ஈடுபட்டது. 2) எழுத்தறிவு மிஷன் (Literacy Mission). "மக்கள் எழுத்தறிவில்லை" (Mass Illiteracy) என்ற களங்கத்தைப் போக்கி இந்தியக் கிராமங்களை எழுத்தறிவு மூலம் தேசிய வளர்ச்சி நீரோட்டத்தோடு இணைக்கும் மகத்தான முயற்சி இது. இத்திட்டத்தின் மூலம் கிராமங்களில் தொலைக்காட்சி (Television), பார்த்தல் - கேட்டல் ஒலி நாடாக்கள் (Video and Audio Cassettes), கற்பித்தல் சாதனங்கள் முறைகள் மூலம் "அனைவருக்கும் எழுத்தறிவு" என்ற கல்வித் திட்டம் துவக்கப்பட்டது. இதுவே பின்னர் முழு எழுத்தறிவு இயக்கமாக மலர்ந்தது. 3) நோய் தடுப்பு மிஷன் (Immunisation Mission) குழந்தைப் பேறுகால இறப்பு, இளம்பிள்ளை வாதம், தட்டம்மை போன்ற மழலை நோய்களுக்கு முற்றுப்புள்ளி வைக்கும் நோக்கத்தோடு நோய் தடுப்பு மிஷன் துவக்கப்பட்டது. 4) பால் உற்பத்தி மிஷன் (Milk Production Mission). சத்துணவுக்கு ஆதாரமான பால் உற்பத்தியைப் பெருக்கி வெண்மைப் புரட்சியை ஏற்படுத்துவதற்கான செயல் திட்டம் இது. 5) சமையல் எண்ணெய் மிஷன் (Edible Oill Mission) சமையல் எண்ணெய் இறக்குமதி செய்யப்பட்டு அந்நியச் செலவாணி விரயமாவதைத் தடுத்து "சமையலெண்ணெய் சுயதேவைப் பூர்த்தி" என்ற இலக்கை எட்டுவதற்காகத் துவக்கப்பட்ட மிஷனாகும். 6) தொலைபேசி மிஷன் (Telephone Mission). ஒரு கிராமத்துக்கு ஒரு தொலைபேசி என்ற குறிக்கோளுடன் 20-ம் நூற்றாண்டு முடிவதற்குள் இந்தத் திட்டம் நிறைவேற்றப்பட வேண்டும் என்ற இலக்குடன் இந்த மிஷன் அறிமுகப்படுத்தப்பட்டது.

## 6.3.7. தொலைத் தொடர்பு புரட்சி (Telecommunication Revolution)

பிரதமர் ராஜீவ் காந்தி சாம் பிட்ரோடாவின் ஆலோசனையின்படி தொலைத் தகவல் தொடர்பில் மாபெரும் மாற்றங்களைச் செய்தார். தானியங்கி தொலைத் தொடர்பு சாதனங்களை இறக்குமதி செய்வதற்குப்

குறிப்பு

பதில் உள்நாட்டிலேயே உற்பத்தி செய்யப்பட்டது. கண்ணாடி இழை (Fiber optics) தயாரிப்பதற்காக இரண்டு தொழிற்சாலைகள் துவக்கப்பட்டன. இந்தியாவின் பெரிய நகரங்களை இணைப்பதற்காக "உயர் வேக கண்ணாடி இழை பெருவழி" (High Speed Fiber-Optic High Way) உருவாக்கப்பட்டது. 400 மாவட்டத் தலைமையகங்கள் தானியங்கி தொலைத் தொடர்பால் இணைக்கப்பட்டன. 120 நாடுகளுடன் தொலைத் தொடர்பு (International Direct Dialing) ஏற்படுத்தப்பட்டது. பொதுத் தொலைபேசி நிலையங்கள் (Public Call offices) நாடு முழுவதும் துவங்கப்பட்டன. ஆடம்பரப் பொருளாகக் கருதப்பட்ட தொலைபேசிகள் (Telephones) அன்றாடத் தேவைக்கான அவசியப் பொருளாயிற்று. 1980-ஆம் ஆண்டில் இருந்த 2.5 மில்லியன் தொலைபேசிகளின் எண்ணிக்கை 1990-ஆம் ஆண்டில் 5 மில்லியனாகவும், 1998-ஆண்டில் 20 மில்லியனாகவும் விரிவடைந்தது. இந்தியா தொலைத் தொடர்புப் புரட்சியை வியப்போடு வரவேற்றுப் பயன்பெற்றது. ராஜீவ் காந்தியின் தொலைநோக்குத் தீர்மானத்தின் விளைவாக இந்தியா உலகத் தகவல் தொழில்நுட்பப் புரட்சியில் குறிப்பிடத்தக்கப் பங்கேற்க முடிந்தது.

## 6.3.8. கணினிமயமாக்கல் திட்டம் (Computerisation Programme)

கணினிமயமாக்கல் திட்டம் பிரதமர் இந்திரா காந்தியின் இரண்டாவது ஆட்சிக் காலத்தின் இறுதியில் உருவாக்கப்பட்டாலும், ராஜீவ் காந்தி இத்திட்டத்துக்கு ஊக்கமளித்து, ஆதரவளித்து, உதவி செய்து நடைமுறைப்படுத்தினார். இந்தியத் தொழில் முனைவோர்களே கணினிகளைத் தயாரிக்க வேண்டும் என்ற நோக்கத்தில் கணினி உதிரிபாகங்களுக்கான இறக்குமதி வரி கணிசமாகக் குறைக்கப்பட்டது. சந்தைப் போட்டி இருந்தால்தான் கணினியின் தரம் உயரும், விலை குறையும் தேவைப் பூர்த்தியாகும் என்பதற்காக வெளிநாட்டுக் கணினி உற்பத்தியாளர்கள் இந்தியாவில் வர்த்தகம் செய்ய அனுமதிக்கப்பட்டனர். அரசாங்க அலுவலகங்களிலும், கல்வி நிலையங்களிலும் கணினி அறிமுகப்படுத்தப்பட்டது. ராஜீவ் காந்தி எதிர்ப்பைப் பொருட்படுத்தாமல் கணினிமயமாக்கல் திட்டத்தை முனைப்புடன் செயல்படுத்தினார். அதன் விளைவாக கணினி இந்தியரிடையே விரைந்துச் செல்வாக்குப் பெற்றது.

இத்திட்டத்தின் கீழ் பல்லாயிரக்கணக்கான படித்த இளைஞர்களுக்கு வேலைவாய்ப்புக் கிடைத்தது. கணினி மென்பொருள் (Computer Software) ஏற்றுமதியால் அந்நியச் செலவாணி அதிகரித்தது. மென்பொருள் தொழில்நுட்பத் திறன் கொண்ட இந்தியர்களுக்கு வெளிநாடுகளில் வரவேற்பு பெருகியது. சுருங்கக் கூறின் இந்தியாவில் தகவல் தொடர்புப் புரட்சி (Information and Communication Revolution) ஏற்பட்டது.

## 6.3.9. புதிய கல்விக் கொள்கை (New Education Policy)

1985 ஆகஸ்டு 15 ஆம் தேதி இந்திய விடுதலை நாளன்று பிரதமர் ராஜீவ் காந்தி செங்கோட்டையில் தேசியக் கொடியேற்றி உரையாற்றுகையில் புதிய கல்விக் கொள்கையை அறிவித்தார். ஒரு மாதத்துக்குள் அக்கொள்கையை நாட்டுக்கு அளிப்பதாக அறிவித்தார். அவ்வாறே கல்வி அமைச்சர் கே.சி. பந்த் புதிய கல்விக் கொள்கை பற்றிய அரசாங்க ஆவணத்தை மக்களவையில் சமர்ப்பித்தார். ராஜீவ் காந்தி அரசாங்கத்தின் புதிய கல்விக் கொள்கை நான்கு பகுதிகளைக் கொண்டது. 1) கல்வி, சமுதாயம், வளர்ச்சி 2) இந்தியக் கல்வி வளர்ச்சிப் பற்றியக் கண்ணோட்டம் 3) கல்வி முறை பற்றிய மதிப்பீடு 4) கல்விச் சீரமைப்புக்கான அணுகுமுறை.

1968-ல் உருவாக்கப்பட்டத் தேசியக் கல்விக் கொள்கை நடைமுறைச் சிக்கல்களால் சரியாகச் செயல்படவில்லை. துவக்கக் கல்வி நிலையிலிருந்து முதுநிலை மற்றும் ஆராய்ச்சி நிலை வரை இந்திய கல்வி முறை குழப்பத்தில் இருந்தது. எனவே ராஜீவ் காந்தி அரசாங்கம் இந்தியக் கல்வி விதிமுறைளைச் சீரமைக்கும் நோக்கத்தோடு புதிய கல்விக் கொள்கையை அறிமுகப்படுத்தியது. வளர்ச்சி (Development), ஒருமைப்பாடு (Integration), நடுநோக்கு (Equity), தரம் (Quality), பொருத்தம் (Relevance), முதன்மைநிலை (Excellence) ஆகியவை புதிய கல்விக் கொள்கையின் சிறப்பு அம்சங்களாகும்.

புதிய கல்விக் கொள்கையின் நோக்கங்களாவன:

1) அனைவருக்கும் ஆரம்பக்கல்வி (Universalisation of Primary Education). 1995 ஆண்டுக்குள் 100 விழுக்காடு எழுத்து அறிவை

(Literacy) எட்டுதல் 2) மேல்நிலைக்கல்வி நிலையில் தொழிற் கல்விக்கு (Vocationalisation at Higher Secondary level) முக்கியத்துவம் கொடுத்தல் 3) உயர் மற்றும் தொழில் நுட்பக் கல்வியை நவீனமயமாக்கல் (Modernisation of Higer and Technical Education) 4) இந்திரா காந்தி பெயரால் ஒரு திறந்த வெளிப் பல்கலைக் கழகம் (Indira Gandhi Open University) எற்படுத்தல் 5) நடுநோக்குச் சமத்துவ நோக்கத்தை நிறைவேற்ற ஒவ்வொரு மாவட்டத்திலும் மத்திய மாதிரி நவோதயா பள்ளிகளைத் (Navodaya Schools) துவங்கல் 6) உயர் கல்விக்கு அளிக்கப்படும் மானியத்தைக் குறைத்தல்; ஆசிரியர்களின் ஊதியத்தை உயர்த்தல்; தொழிற்கல்விக்கான வசதிகளை விரிவுபடுத்தல்; உயர்நிலைக் கல்வி நிறுவனங்களைப் பொருத்தமானவையாகச் செயல்படச் செய்தல்.

1986 ஆம் ஆண்டு நாடாளுமன்றம் புதிய கல்விக் கொள்கையை ஏற்றுக் கொண்டது. அதன் அடிப்படையில் செயல் திட்டம் (Programme of Action) தயாரிக்கப்பட்டது. 23 செயல்குழுக்கள் (Task Forces) நியமிக்கப் பட்டன. புதிய கல்விக் கொள்கை திறமையாகச் செயல்படுவதற்கான அனைத்து முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன. துவக்கப் பள்ளிகளைச் சீரமைக்கக் "கரும்பலகை நடவடிக்கை" (Operation Black Board) மேற்கொள்ளப்பட்டது. மாவட்டங்களில் தரமான நவோதயப் பள்ளிகள் துவக்கப்பட்டன. மேல்நிலைக் கல்வி நிலையில் தொழிற் படிப்புகள் (Vocational courses) அறிமுகப்படுத்தப்பட்டன. கல்லூரி - பல்கலைக்கழக- தொழிற்கல்வி நிறுவனங்கள் நவீனமயமாக்கப்பட்டன. கல்லூரி ஆசிரியர் பயிற்சி மையங்கள் (Academic staff colleges) நாடெங்கிலும் துவக்கப்பட்டன. சுயாட்சிக் கல்லூரிகள் (Autonomous colleges) துவங்குவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. உயர் மற்றும் தொழிற்கல்வியின் தரக்கட்டுப்பாடுச் (Accreditation) செய்ய வேண்டியதன் இன்றியமையாமை வலியுறுத்தப்பட்டது. இக்கல்விப் புரட்சி ராஜீவ் காந்தி அரசாங்கத்தின் தனிப்பெரும் சாதனையாகும். இது சமகால இந்தியக் கல்வி வரலாற்றில் முக்கிய மைல்கள் ஆகும்.

குறிப்பு

## 6.3.10. ஷா பானு வழக்கு, 1985 (The Shah Banu Case)

ராஜீவ் ஆட்சிக்காலத் துவக்கத்தில் ஷா பானு பேகத்தின் வழக்கு பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. 1985 ஏப்ரல் மாதம் உச்ச நீதிமன்றம் ஷா பானு கொடுத்த ஜீவனாம்ச வழக்கில் அவருக்கு ஆதரவாகத் தீர்ப்பளித்தது. அத்தீர்ப்பு முஸ்லீம் பழமைவாதிகளின் எதிர்ப்பையும், விரோதத்தையும் கிளப்பி விட்டது.

உச்ச நீதிமன்றம் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த தீர்ப்பை வழங்கியது. அதாவது விவாகரத்துச் செய்யப்பட்ட ஷா பானு பிற இந்தியப் பெண்களைப் போன்றே ஜீவனாம்சம் பெறும் உரிமையை உடையவர் என்று தீர்ப்பளித்தது. அது மட்டுமல்ல. ஷா பானுவுக்குக் கொடுக்க வேண்டிய மாத ஜீவனாம்சத் தொகையை ரூ.500 ஆகவும் உயர்த்தியது. ஷா பானு வழக்கில் உச்ச நீதிமன்றம் அளித்தத் தீர்ப்புச் சமய-அரசியல் சர்ச்சையைக் கிளப்பி விட்டது. முஸ்லீம் பெண்கள் முஸ்லீம் தனிச் சட்டப்படி (Muslim Personal Law) நடத்தப்படவேண்டுமா அல்லது சமயச் சார்பற்றப் பொதுச் சட்டத்துக்குக் கட்டுப்பட வேண்டுமா என்ற கேள்விகள் பிரதமர் ராஜீவ் காந்திக்கு தர்மச்சங்கடத்தை உருவாக்கியது. உச்ச நீதிமன்றத் தீர்ப்பை ஆதரித்தால் முஸ்லீம் சிறுபான்மையினரின் ஆதரவை இழக்க வேண்டும். ஆதரிக்காவிட்டால் இந்துக்களின் எதிர்ப்பை எதிர்கொள்ள வேண்டும். எதிர்பாரா விதமாக ஷா பானு வழக்கைத் திரும்பப் பெற்றுக் கொண்டார். ராஜீவ் காந்தி தர்ம சங்கடமான நிலையிலிருந்து தப்பினார்.

## 6.3.11. முஸ்லீம் பெண்கள் மசோதா, 1986 (Muslim Women's Bill, 1986)

**பனட்வாலா மசோதா**

1986 பிப்ரவரி மாதம் ராஜீவ் காந்தி அரசாங்கம் முஸ்லீம் பெண்கள் மசோதாவை நாடாளுமன்றத்தில் அறிமுகப்படுத்தியது. அந்த மசோதா விவாகரத்து செய்யப்பட்ட முஸ்லீம் பெண்களின் உரிமைகளைப் பற்றியது. அம்மசோதா பனட்வாலா மசோதாவைத் (Banatwala Bill) தள்ளுபடி செய்தது. ஜி.எம்.பனட்வாலா நாடாளுமன்ற உறுப்பினராக

**குறிப்பு**

இருந்தபோது இந்தியக் குற்ற நடைமுறைச் சட்டத்தில் (Criminal Procedure Code) திருத்தம் செய்வதற்காக ஒரு தனியார் மசோதாவைக் கொண்டு வந்தார். அம்மசோதாவின் முக்கிய நோக்கங்கள் இரண்டு 1) நீதிமன்றம் முஸ்லீம் பெண்களுக்கு ஜீவனாம்சம் வழங்குவதைத் தடைச் செய்தல் 2) முஸ்லீம் பெண்கள் முஸ்லீம் தனிச்சட்டத்தை மீறி ஜீவனாம்சம் கேட்பதற்கு உரிமை இல்லை என்பதை உறுதி செய்தல். பிரதமர் இந்திரா காந்தியின் ஆட்சிக்காலத்தில் அறிமுகப்படுத்தப் பட்டு, சட்ட அங்கீகாரம் பெறாமலிருந்த இப்பிற்போக்கு மசோதாவை ராஜீவ் காந்தி கொண்டு வந்த முஸ்லீம் பெண்கள் மசோதா ரத்துச் செய்தது.

முஸ்லீம் பெண்கள் மசோதாவின்படி விவாகரத்துச் செய்யப்பட முஸ்லீம் பெண்களுக்கு ஜீவனாம்சம் கொடுக்கும் பொறுப்பு விவாகரத்துச் செய்த கணவனுக்கு இல்லை. மாறாக, அப்பொறுப்பை அப்பெண்ணின் பெற்றோரோ அல்லது உறவினர்களோ அல்லது முஸ்லீம் அறக்கொடை நிறுவனங்களே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று புதிய மசோதா கூறியது. 1986 மே மாதம் முஸ்லீம் பெண்கள் மசோதா சட்டமாயிற்று. மசோதாவின் உள் முரண்பாடு அதன் முற்போக்குத் தன்மையை முனைமழுங்கச் செய்துவிட்டது.

அச்சட்டம் அபாயகரமான சமய சர்ச்சையை ஏற்படுத்தியது. ஷா பானு வழக்கில் உச்ச நீதிமன்றத் தீர்ப்பை உரக்க ஆதரித்த அமைச்சர் அரீப் முகமது கான் மிகுந்த மனவருத்தத்துடனும் ஏமாற்றதுடனும் அமைச்சர் பதவியை ராஜினாமா செய்தார். விவாகரத்துப் பெற்ற முஸ்லீம் பெண்களுக்கு “வக்ப் போர்டு” போன்ற அறக்கட்டளை நிறுவனத்திலிருந்து எப்படி ஜீவனாம்சம் கொடுக்க முடியும் என்று முஸ்லீம் தலைவர்கள் எதிர்த்தனர்.

## 6.3.12. 64-வது அரசியலமைப்புச் சட்டத்திருத்த மசோதா

பிரதமர் ராஜீவ் காந்தி உயிருக்குப் போராடிக்கொண்டிருந்த நேரத்தில் பஞ்சாயத்து உள்ளாட்சி நிறுவனங்களுக்கு உயிர்ப்பிக்கத் தீர்மானித்தார். அவர் அனைத்து முதலமைச்சர்களுக்கும் எழுதியக் கடிதத்தில் பின்வருமாறு கூறினார். பஞ்சாயத்து ராஜ்ய அமைப்புகளை ஆரம்பித்தப்போது இருந்த ஆர்வம் பலமாநிலங்களில் அருகி நலிந்துவிட்டது. உரிய காலத்தே அவைகளுக்குத் தேர்தல்கள்

நடத்தப்படுவதில்லை. பஞ்சாயத்துப் புனரமைப்பில் மாநில அரசாங்கங்கள் அக்கறையைக் காட்டாவிடில் மத்திய அரசாங்கம் தலையிட்டு உள்ளாட்சி அமைப்புகளுக்கு அதிக அதிகாரங்களைப் பகிர்ந்தளிக்கத் தயங்காது.

ராஜீவ் காந்தியின் எண்ணத்துக்கேற்ப 64வது அரசியலமைப்புச் சட்டத் திருத்தத்தைக் கொண்டு வந்தார். அச்சட்டத் திருத்தம் துணிகரமானத் தொலை நோக்குடைய நடவடிக்கையாகும். ஏனெனில் பஞ்சாயத்து அமைப்புமுறையை அரசியலமைப்புச் சட்டமயமாக்கும் (Constitutionalising the Panchayat Structure) முயற்சி அது. புரட்சிகரமான அச்சட்டத்திருத்த மசோதாவுக்கு நாடாளுமன்ற மக்களவை ஒப்புதல் அளித்தது. ஆனால் எதிர்க்கட்சிகள் பெரும்பான்மை பலம் பெற்றிருந்த மாநிலங்கள் அவை அம்மசோதாவுக்கு அங்கீகாரம் அளிக்க மறுத்துவிட்டது. எனவே, 64வது சட்டத்திருத்த மசோதா ராஜீவ் காந்தியின் ஆட்சிக் காலத்தில் சட்ட வடிவம் பெறவில்லை. பின்னர் அதே மசோதா சில மாற்றங்களுடன் பிரதமர் பி.வி.நரசிம்மராவால் கொண்டு வரப்பட்டு நாடாளுமன்றத்தால் ஒரு மனதாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. கிராம மறுமலர்ச்சிக்காகப் புல்லிதழ் ஜனநாயக அதிகாரப் பரவல் முறை அமைப்பைப் புதுப்பித்ததற்கானப் பெருமை பிரதமர் ராஜீவ் காந்தியைச் சேரும். இதை ராஜீவ் காந்தியின் தனிப்பெரும் சாதனையாகக் கருதலாம்.

## 6.3.13. இந்தியத் தபால் சட்டத் திருத்த மசோதா (Indian Postal Act Amendment Bill)-1986

இந்தியத் தபால் சட்டத் திருத்த மசோதா தனியார் தபாலையும் இடை நிறுத்திப் பிரித்துப் பார்ப்பதற்கான அதிகாரத்தை அரசாங்கத்துக்கு அளித்தது. பஞ்சாபில் சீக்கியப் பயங்கரவாத நடவடிக்கைகளைத் தடை செய்யும் நோக்கத்துடன் இந்த சட்டம் திருத்தம் செய்யப்படுவதாக அரசாங்கத் தரப்பில் கூறப்பட்டது. எனினும் தனிநபரின் அடிப்படை உரிமையில் குறுக்கிடும் அரசாங்கத்தின் ஜனநாயக விரோதப் போக்கை எதிர்க் கட்சிகளும், பத்திரிகைகளும் கடுமையாகக் கண்டித்தன. இந்த மசோதா ராஜீவ் காந்தியின் அதிகாரத் துஷ்பிரயோகமாகச் சித்தரிக்கப்பட்டது. குடியரசு தலைவர் கியானி ஜெயில்சிங் 1987-ஜனவரி

அம்மசோதாவில் கையொப்பமிட மறுத்து விட்டார். குடிமக்களின் அடிப்படை உரிமைகளை மீறுவதால் கையொப்பமிடவில்லை என்ற விளக்கமளித்தார். குடியரசு தலைவரின் செயல் பிரதமர் குடியரசு தலைவர் தொடர்பில் விரிசலை ஏற்படுத்தியது. அது ராஜீவ் காந்தியின் செல்வாக்கைப் பாதித்தது.

## 6.3.14. ராஜீவ் காந்தி வீழ்ச்சி

ராஜீவ் காந்தி அமைச்சகத்தில் நிதி அமைச்சராக இருந்த வி.பி. சிங்கின் ஆணையின் படி பேர்பாக்ஸ் விவகாரம் மிகப் பெரிய சர்ச்சையைக் கிளப்பியது. அதனைத்தொடர்ந்து அவர் பாதுகாப்பு அமைச்சராக மாற்றப்பட்டார். அங்கும் நீர் மூழ்கிக் கப்பல் பேரம் மற்றும் போபர்ஸ் பீரங்கி பேரம் ஆகியவற்றை வெளிக்கொண்டு வந்தார். அதனைத்தொடர்ந்து வி.பி. சிங். கட்சியிலிருந்தும் ஆட்சியிலிருந்தும் வெளியேறி ராஜீவ் காந்திக்கு எதிராக ஊழல் பிரச்சாரத்தை முன்னெடுத்தார். இது ராஜீவ் காந்தி வீழ்ச்சிக்கு வழிவகுத்தது. அது மட்டுமின்றி 1989 ஆம் ஆண்டு நடைபெற்றத் தேர்தலில் காங்கிரஸ் இரண்டாவது முறையாக தோல்வியடையக் காரணமாகவே இருந்தது.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

3. ராஜீவ் காந்தி எந்த ஆண்டு பிரதமர் ஆனார்?
4. போபால் எரிவாயு விபத்து எப்போது நடந்தது?
5. புதிய கல்வி கொள்கையை அறிமுகப்படுத்தியவர் யார்?
6. ஆறு தொழில்நுட்ப அம்சங்களை அறிமுகப்படுத்த ராஜீவ் காந்தியை வழிநடத்தியவர் யார்?
7. இந்தியாவின் முதல் திறந்த வெளிப்பல்கலைக்கழகம் எது?
8. நவோதயா வித்யாலயப் பள்ளிகளை அறிமுகப்படுத்தியவர் யார்?
9. கரும்பலகைத் திட்டத்தின் நோக்கம் என்ன?
10. ராஜீவ் அமைச்சரவையில் நிதி மற்றும் பாதுகாப்பு அமைச்சராகப் பணியாற்றிய, பின்னர் எதிர்க்கட்சித் தலைவராகவும், ராஜீவ் காந்திக்குப் பின்னர் பிரதமராகவும் இருந்த காங்கிரஸ் தலைவர் யார்?

## 6.4. வி.பி.சிங். மற்றும் மண்டல் கமிஷன் அறிக்கை (Mandal Commission Report)

பிரதமர் மொராஜி தேசாய் ஆட்சிக்காலத்தில் 1979 ஜனவரி முதல் தேதி பி.பி.மண்டல் (B.P. Mandal) தலைமையில் இரண்டாவது பிற்படுத்தபட்ட வகுப்புகள் கமிஷன் (Backward Classes Commission) நியமிக்கப்பட்டது. மண்டல் கமிஷன் தனது அறிக்கையை 1980 டிசம்பர் 31ஆம் தேதி சமர்ப்பித்தது. பத்தாண்டு காலம் கிடப்பில் போடப்பட்ட மண்டல் கமிஷன் அறிக்கைக்கு உயிர்கொடுக்க விரும்பினார் பிரதமர் வி.பி.சிங். இவரின் அரசு 1990 ஆகஸ்டு 7 ஆம் தேதி மண்டல் அறிக்கையை ஏற்றுக் கொண்டதாக அறிவித்தது. அதன்படி 1. இட ஒதுக்கீட்டுத் திட்டத்தின் முதல் கட்டமாக மண்டல் கமிஷன் அறிக்கைப் பட்டியலிலும், மாநிலங்கள் பட்டியல்களிலும் பொதுவாகக் காணப்படும் பிற்படுத்தபட்ட வகுப்பினருக்கு இட ஒதுக்கீட்டுச் சலுகை அளித்தல். 2. சமூக மற்றும் கல்வி நிலையில் பின்தங்கியுள்ள பிற்படுத்தபட்ட வகுப்பினருக்கு 27% இட ஒதுக்கீடுச் செய்தல். இந்த இட ஒதுக்கீடு மத்திய அரசாங்கப் பணிகள் மற்றும் பொதுத்துறை நிறுவனங்களில் பின்பற்றப்படும்.

வி.பி.சிங் அரசாங்கம் சமர்ப்பித்த இடஒதுக்கீட்டுத் திட்டத்தை நாடாளுமன்றத்தின் இரு அவைகளும் ஏற்றுக் கொண்டன. 1990 ஆகஸ்டு 7 தேதி மத்திய அரசாங்கம் மண்டல் கமிஷன் பரிந்துரையை ஏற்றுக்கொண்டு பிற்படுத்தப்பட்ட வகுப்பினருக்கு 27% இட ஒதுக்கீடுச் செய்வதாக அறிவித்தது. பிற்படுத்தப்பட்ட வகுப்பினருக்குச் சமுதாய அதிகார அமைப்பிலும் முடிவெடுப்பதிலும் உரிய பங்களிக்க வேண்டும். மண்டல் கமிஷன் அறிக்கையைச் செயல்படுத்துவது அதற்கான முதல்படியாகும். “பலவீனப் பிரிவினருக்கு நீதி வழங்க சில துணிகரமானத் தீர்மானங்கள் மேற்கொள்ள வேண்டியது தவிர்க்க முடியாதது” என்று உறுதியாகக் கூறினார் பிரதமர் வி.பி.சிங்.

குறிப்பு

## 6.4.1 மண்டல் ஆர்ப்பாட்டம் (Mandal Agitation)

வி.பி.சிங் அரசாங்கத்தின் பிற்பட்ட வகுப்பாருக்கு 27% இட ஒதுக்கீடு என்ற அறிவிப்பை (1990 ஆகஸ்டு 7) குடுவைக்குள் கிடந்தப் பூதத்தைக் கிளப்பி விட்டது போலாயிற்று. ஆகஸ்டு 8 தேதி வட இந்திய மாநிலங்களில் வன்முறை வெடித்தது. பல பிரதான நகரங்களில் மத்தியதர மற்றும் உயர் வகுப்பைச் சேர்ந்தோர் அரசாங்கத்தின் இட ஒதுக்கீட்டுத் திட்டத்துக்கு எதிராக ஆர்ப்பாட்டங்களில் இறங்கினர். குறிப்பாக மாணவர்கள் இந்த ஆர்ப்பாட்டத்தில் பிரதானப் பங்கேற்றனர். பீகாரில் துவங்கிய வன்முறைக் கிளர்ச்சிப் பிற மாநிலங்களுக்கும் காட்டுத்தீ போல விரைந்துப் பரவிற்று. அரசாங்கச் சொத்துக்கள் அழிக்கப்பட்டன. டெல்லி, கோரக்பூர், வாரணாசி, கான்பூர், மதுபானி, தான்பாத் போன்ற நகரங்களில் நடந்த துப்பாக்கிச் சூட்டில் பலர் இறந்தனர். போலீஸ் அராஜகம் போராட்டத்தைத் தீவிரப்படுத்தியது. ராஜஸ்தானத்தில் ஆர்ப்பாட்டத்தை அடக்க இராணுவத்தை அனுப்ப வேண்டியதாயிற்று. டெல்லியில் மாணவர்கள் பல்கலைக்கழகப் பட்டங்களைக் கிழித்தெறிந்தனர்.

மண்டல் ஆர்ப்பாட்டம் கொதிநிலையை எட்டியது. அமைச்சரவைக்குழுவின் அரசியல் விவகாரங்கள் கமிட்டி 5% லிருந்து 10% இடங்களைப் பொருளாதாரத்தில் பின்தங்கிய வகுப்பாருக்கு ஒதுக்குவது பற்றியத் திட்டத்தை நாடாளுமன்றத்தில் ஆகஸ்டு 27 அன்று சமர்ப்பிக்கத் தீர்மானித்தது. டிசம்பர் 4 நாளில் இதுபற்றி பரிசீலிப்பதற்காகக் கூட்டப் பட்ட அனைத்துக்கட்சிகள் கூட்டம் இச்சிறப்பு இடஒதுக்கீட்டை (Special Reservation) நிராகரித்தது. அக்கூட்டத்தில் காங்கிரஸ் கலந்துக் கொள்ளவில்லை. இடஒதுக்கீட்டுப் பற்றிக் காங்கிரஸில் கருத்தொற்றுமை ஏற்படவில்லை. இடஒதுக்கீட்டுத் திட்டத்தை எதிர்த்து எதிர்க் கட்சிகளும் ஆர்ப்பாட்டத்தில் குதித்ததால் நிலைமை மோசத்திலிருந்து படுமோசமாயிற்று. டெல்லி பல்கலைக்கழக மாணவர் ராஜீவ் கோஸ்வாமி (Rajiv Goswami) தீக்குளித்தார். மாணவர்கள் கொதித்தெழுந்தனர். செப்டம்பர் 22 தேதியில் உச்ச நீதிமன்றம் அரசாங்கத்தின் இடஒதுக்கீட்டுத் திட்டத்தைச் செயல்படுத்துவதைத் தடை செய்ய மறுத்துவிட்டது. எஸ்.எஸ்.சௌகான்

(S.S.Chowhan) என்ற மற்றொரு மாணவன் செப்டம்பர் 25 தேதி தீக்குளித்தார். வன்முறைக்கிளர்ச்சி உச்சகட்டத்தை எட்டியது. உச்ச நீதிமன்றம் இட ஒதுக்கீட்டுத் திட்டத்தை அக்டோபர் 1 தேதியில் நடைமுறைப்படுத்துவதிலிருந்து நிறுத்தி வைத்தது.

பிரதமர் வி.பி.சிங் பிற்படுத்தப்பட்டோர் இடஒதுக்கீட்டுக் கொள்கையையும் திட்டத்தையும் நிறைவேற்றுவதை “வரலாற்றுக் கட்டாயமா”கக் கருதினார். புறக்கணிக்கப்பட்டச் சகோதரர்களுக்குச் சமூக நீதி வழங்க வேண்டியதைக் கட்டாயக் கடமையாகக் கொண்டார். கட்டாயப்படுத்தாமல் வரலாற்றை மாற்ற முடியாது என்றார். எனவே ஆதரவுக் கட்சிகளைக்கூடக் கலந்தாலோசிக்காமல் மண்டல் முடிவை மேற்கொண்டார். இம்முடிவைக் காங்கிரஸ் கூண்டோடு எதிர்த்தது. பா.ஜ.க.வும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும் பொருளாதார அளவுகோலின்படி இட ஒதுக்கீடு செய்வதை விரும்பின. பத்திரிகைகளும் வி.பி.சிங்கின் தீவிரத் திட்டத்தை ஆதரிக்கவில்லை. எனினும், சமகால இந்திய வரலாற்றில் பிற்படுத்தபட்ட வகுப்பாருக்கு அதிகாரமளித்தப் (empowerment) பெருமை வி.பி.சிங்கையே சேரும் எதற்கும் ஒரு விலையைக் கொடுக்க வேண்டும் என்றார் வி.பி.சிங். மண்டல் அறிக்கையை நிறைவேற்றமுற்பட்ட வி.பி.சிங் பிரதமர் பதவியை விலையாகக் கொடுத்தார்.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

11. மண்டல் ஆணையத்தின் அடிப்படை நோக்கம் என்ன?
12. மண்டல் ஆணைய அறிக்கையை முதலில் செயல்படுத்தியவர் யார்?

## 6.5. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்க பதில்கள்

1. 42 மக்களவைத் தொகுதிகளில் 351 இடங்களை இந்திரா காந்தி வென்றார்.
2. மேஜர் ஜெனரல் குர்தியல் சிங் இருந்தார்.
3. இந்திரா காந்தி படுகொலை செய்யப்பட்ட பின்னர் 1984 அக்டோபர் 31 அன்று ராஜீவ் காந்தி பிரதமரானார்.
4. டிசம்பர் 3, 1984 அன்று, போபால் எரிவாயு விபத்து நடந்தது.
5. ராஜீவ் காந்தி புதிய கல்வி கொள்கையை அறிமுகப்படுத்தினார்.

6. ஆறு தொழில்நுட்ப அம்சங்களை அறிமுகப்படுத்த சாம் பிட்ரோடா ராஜீவ் காந்திக்கு வழிகாட்டினார்.
7. இந்திரா காந்தி தேசிய திறந்த வெளிப் பல்கலைக்கழகம் இந்தியாவின் முதல் திறந்த வெளிப்பல்கலைக்கழகமாகும்.
8. ராஜீவ் காந்தி நவோதயா வித்யாலய பள்ளிகளை அறிமுகப்படுத்தினார்.
9. ஆரம்பப் பள்ளிகளில் குறைந்தபட்ச அத்தியாவசிய வசதிகளை வழங்கும் நோக்கத்துடன் புதிய கல்விக் கொள்கையின் ஒரு பகுதியாகக் கரும்பலகைத் திட்டம் தொடங்கப்பட்டது.
10. வி.பி. சிங்.
11. மண்டல் ஆணையத்தின் அடிப்படை நோக்கம் பிற பிற்படுத்தப்பட்ட வகுப்பினருக்கு (ஓபிசி) இட ஒதுக்கீடு வழங்குவதாகும்.
12. முதன்முதலில் மண்டல் கமிஷன் அறிக்கையை 1990- இல் வி.பி. சிங் செயல்படுத்தினார்.

## 6.6. அத்தியாயச் சுருக்கம்

- இந்திரா காந்தி படுகொலைச் செய்யப்பட்டப் பின்னர் ராஜீவ் காந்தி பிரதமர் ஆனார்.
- 8- வது பொதுத் தேர்தலில் மிகப்பெரிய வெற்றியைப் பெற்று மீண்டும் பிரதமரனார் ராஜீவ் காந்தி.
- சாம் பிட்ரோடாவின் வழிகாட்டுதலின் பேரில் ஆறு தொழில்நுட்ப அம்சங்களை அவர் அறிமுகப்படுத்தினார்.
- ராஜீவ் காந்தி புதிய கல்வி கொள்கையை அறிமுகப்படுத்தினார். இது கல்வித்துறையில் மிகப்பெரிய மாற்றத்தை ஏற்படுத்தியது.
- புதிய கல்வி கொள்கையின் ஒரு அம்சமாக, திறந்த வெளிப் பல்கலைக்கழக முறை இந்தியாவில் முதல் முறையாக அறிமுகப்படுத்தப்பட்டது.
- கிராமப்புற மாணவர்களிடையே கல்வித் தரத்தை மேம்படுத்துவதற்காக, நாடு முழுவதும் ஒவ்வொரு மாவட்டத்திலும் நவோதயா பள்ளிகள் தொடங்கப்பட்டன.

- இரண்டாவது பிற்படுத்தப்பட்டோருக்கான இடஒதுக்கீடு ஆணை ஜனதா அரசாங்கத்தால் 1979 ஆம் ஆண்டு மண்டல் தலைமையில் நியமிக்கப்பட்டது.
- இந்திரா காந்தியின் காலத்தில் கமிஷன் தனது அறிக்கையைச் சமர்ப்பித்தது. ஆனால் அதை 1990 ஆண்டில் வி.பி. சிங் நடைமுறைப்படுத்தினார்.
- ஆனால் இதற்கு எதிராக வட இந்தியாவில் போராட்டங்கள் வெடித்தன. இறுதியாக உச்சநீதிமன்றம் தற்காலிகத் தடைவிதித்தது.

## 6.7. முக்கியச் சொற்கள்

**நவோதயா வித்யாலயப் பள்ளிகள்:** புதிய கல்விகொள்கையின்படி கிராமப்புற மாணவர்களின் கல்வியித் தரத்தை ஊக்குவிக்க ஒவ்வொரு மாவட்டத்திலும் அமைக்கப்பட்டுள்ள உண்டு உறைவிடப்பள்ளியே நவோதயா விதயாலயப் பள்ளிகள் என அழைக்கப்படுகிறது.

## 6.8. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

**குறுகிய வினாக்கள்**

1. ராஜீவ் காந்தியின் லாங்கோவல் ஒப்பந்தம் குறித்து எழுதுக.
2. இந்திரா காந்தி படுகொலைச் செய்யப்பட்டப் பின்னர் சீக்கிய எதிர்ப்பு கலவரம் குறித்து கூறுக.
3. போபால் எரிவாயு விபத்துக் குறித்து எழுதுக.
4. ராஜீவ் காந்தியின் தகவல்தொடர்பு கொள்கையைப் பற்றி கூறுக.
5. ‘மண்டல் கிளர்ச்சி’ குறித்து எழுதுக.

**நீண்ட வினாக்கள்**

1. அறிவியல் மற்றும் தொழில்நுட்பத் தொடர்பாக ராஜீவ் காந்தியின் கொள்கையை விளக்குக.
2. புதிய கல்விக் கொள்கையின் முக்கிய அம்சங்களை மதிப்பிடுக.

மண்டல் ஆணையம் மற்றும் அதன் பரிந்துரைகள் குறித்து கட்டுரை வடிவில் எழுதுக.

குறிப்பு

## 6.9. கூடுதல் வாசிப்புகள்

Ananth V. Krishna. 2011. *India since Independence: Making Sense of Indian Politics.* New Delhi: Pearson.

பிபன் சந்திரா, மிருதுலா முகர்ஜி, ஆதித்யா முகர்ஜி. 2015.*சுதந்திரத்திற்குப் பிறகு இந்தியா,* சென்னை: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.

Barbara A. Somervill. 2007. *Indira Gandhi: Political Leader in India.* Minneapolis: Compass point books.

Bipan Chandra,Miridula Mukherjee, Aditya Mukherjee. 2008. *India since Independence*,Haryana: Penguin Books.

Grover B.L,and Grover S. 2007. *A New Look at Modern Indian History*. New Delhi: S. Chand & Company.

G. Vengatesan. 2007. *History of contemporary India 1947-2007,* Rajapalayam: VC Publications.

G. John Gilbert. 2006.*Contemporary History of India*, New Delhi: Anmol Publications Pvt. Ltd.

Ramachandra Guha. 2008. *India after Gandhi*, London: Picador.

# அலகு-7

## நரசிம்ம ராவ் நிர்வாகம் - உலகமயமாக்கல் - தனியார்மயமாக்கல் - தாராளமயமாக்கல்

**பாட அமைப்பு**

7.1. முன்னுரை
7.2. நோக்கங்கள்
7.3. பிரதமர் நரசிம்ம ராவ்
7.3.1. நரசிம்ம ராவ் ஆட்சி (1991-1996)
7.3.2. புதியப் பொருளாதாரக் கொள்கை

7.3.3. டாக்டர் மன்மோகன் சிங்
7.3.4. பொருளாதாரப் புரட்சி
7.3.5. வரவு-செலவுத் திட்டம்
7.3.6. காங்கிரஸ் தலைவர் ராவ்
7.4. உலகமயமாதல் தாராளமயமாதல், தனியார்மயமாதல்
7.4.1. பொருளாதார சீர்திருத்தம்
7.4.2. சந்தைப் பொருளாதாரம் (Market Economy)
7.5. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்
7.6. அத்தியாயச் சுருக்கம்
7.7. முக்கியச் சொற்கள்
7.8. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்
7.9. கூடுதல் வாசிப்புகள்

## 7.1. முன்னுரை

சுதந்திர இந்தியாவில் இடஒதுக்கீடுக்கொள்கை மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த அம்சமாகும். அதிலும் குறிப்பாக, பிற பிற்படுத்தப்பட்டோருக்கான அரசுப்பணிகளில் வழங்கப்படுகின்ற இடஒதுக்கீடு நீண்டநாள் கோரிக்கையாகும். 1950-ஆண்டில் துவக்கத்தில் காகா காலேல்கர் என்பவர் தலைமையில் முதல் பிற்படுத்தப்பட்டோருக்கான குழு நேருவின் ஆட்சியில் அமைக்கப்பட்டது. பிந்தேசுவரி பிரசாத் மண்டல் என்பவர் தலைமையில் இரண்டாவது பிற பிற்படுத்தப்பட்டோர் இடஒதுக்கீடு ஆணையத்தை ஜனதா அரசாங்கம் அமைத்தது. இந்த ஆணையம் இந்திரா காந்தி பிரதமராக இருக்கும்போது தன்னுடையப் பரிந்துரையை வழங்கியது. 10 ஆண்டுகளுக்குப் பிறகு 1990-ஆம் ஆண்டில் வி.பி.சிங் இதை நடைமுறைப்படுத்தினார். இதை எதிர்த்து மிகப்பெரிய ஆர்ப்பாட்டங்கள் வட இந்தியா முழுவதும் பரவத் துவங்கியது. இறுதியில் வி.பி.சிங்கின் ஆட்சிக் கவிழ்ந்தது.

சில அரசியல் குழப்பங்களுக்குப் பிறகு 1991-ஆம் ஆண்டு நடைப்பெற்றத் தேர்தலில் சிறியகட்சிகள் ஆதரவோடுப் பிரதமராகப் பொறுப்பேற்ற நரசிம்மராவ், அரசியலுக்குக் கொஞ்சம்கூடச் சம்பந்தமில்லாத மன்மோகன் சிங்கை நிதியமைச்சராக்கினார். மன்மோகன்

**குறிப்பு**

சிங்கால் அறிவிக்கப்பட்ட மிகப்பெரியப் பொருளாதாரக் கொள்கை மாற்றமே புதியப் பொருளாதாரக் கொள்கை என்றப் பெயரில் நடைமுறையிலுள்ளது.

ஐந்தாண்டுகளை நிறைவுச் செய்த நரசிம்மராவ் 1996-ஆம் ஆண்டுத் தேர்தலில் அவரது கட்சித் தோல்வியடைந்தது மட்டுமின்றி எந்தவொரு கட்சிக்கும் அரிதிப்பெரும்பான்மைக் கிடைக்கவில்லை. இரண்டு ஆண்டுகள் அரசியல் குழப்பத்தைத்தொடர்ந்து 1998-ஆம் ஆண்டு நடைப்பெற்றத் தேர்தலில் கூட்டணிக்கட்சியின் உதவியோடு வாஜ்பாய் பிரதமராகப் பொறுப்பேற்றார். 1996-ஆம் ஆண்டில் 13 நாட்கள் மட்டும் பிரதமராக இருந்த வாஜ்பாய் தற்போது 13 மாதங்கள் தனது ஆட்சியைத் தொடர்ந்தார். 1999-ஆம் ஆண்டு நடந்தத் தேர்தலில் தேசிய ஜனநாயகக் கூட்டணி அரிதிப்பெரும்பான்மையுடன் ஆட்சிக்கு வந்து 2004-ஆம் ஆண்டு வரை ஆட்சியில் நீடித்தது. இந்த அத்தியாயமானது மேலே குறிப்பிடப்பட்டுள்ள அமசங்களை மையப்பொருளாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளது.

## 7.2. நோக்கங்கள்

இந்தப் பாடத்தைப் படித்த பிறகு, கீழ்க்கண்டவற்றை அறிய முடியும்:

- நரசிம்மராவ் செயல்பாடுகள் குறித்து அறிய முடியும்.
- புதிய பொருளாதாரக் கொள்கையையும் அதன் விளைவுகளையும் தெரிந்துக் கொள்ள முடியும்.

## 7.3. பிரதமர் நரசிம்ம ராவ்

மண்டல் கமிஷன் பரிந்துரையை நடைமுறைப் படுத்தியதால் வி.பி. சிங் ஆட்சியை இழந்தார். காங்கரஸ் ஆதரவோடு பிரதமர் பொறுப்பேற்ற சந்திர சேகர் அப்பதவில் ஆறு மாதம் மட்டுமே நீடித்தார். அதன் பிறகு மக்களவைக் களைக்கப்பட்டு மீட்டும் பொதுத்தேர்தல் நடத்தப்பட்டது. தேர்தல் பிரசாரத்தில் ஈடுபட்ட ராஜீவ் காந்தி 1991 ஆம் ஆண்டு மே 21 ஆம் தேதி ஸ்ரீபெரும்புதூரில் படுகொலைச் செய்யப்பட்டார். இது நாட்டையே அதிர்ச்சிக்குள்ளாக்கியது. அதேசமயத்தில் தேர்தல் முடிவுகள் எந்தக் கட்சிக்கும் பெரும்பான்மைக்

கிடைக்கவில்லை, அதே வேலையில் காங்கிரஸ் தனிப்பெரும் கட்சியாக உருவெடுத்தது. சில பிராந்தியக் கட்சிகள் ஆதரவோடு அப்போது காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பி.வி. நரசிம்ம ராவ் பிரதமராகப் பொறுப்பேற்றார்.

## 7.3.1. நரசிம்ம ராவ் ஆட்சி (1991-1996)

குடியரசு தலைவர் ஆர்.வெங்கட்ராமனால் பதவிப் பிரமாணம் செய்து வைக்கப்பட்ட மூன்றாவது பிரதமரான ராவ் இந்தியாவின் ஒன்பதாவது பிரதமராகப் பொறுப்பேற்றுச் சிறுபான்மை அரசாங்கத்தை (Minority Government) அமைத்தார். 58 அமைச்சர்களைக் கொண்ட அமைச்சரவை நரசிம்மராவ் தலைமையின்கீழ் ஆட்சிப் பொறுப்பேற்றது.

## 7.3.2. புதியப் பொருளாதாரக் கொள்கை

**பொருளாதார நெருக்கடி**

நரசிம்ம ராவ் பிரதமர் பொறுப்பேற்றபோது இந்தியாவின் பொருளாதார நிலை மிகுந்த கவலை அளிக்கக் கூடியதாக இருந்தது. நாடு பொருளாதார நெருக்கடியில் நலிந்துக் கொண்டிருந்தது. அதற்குக் காரணம் அந்நியச் செலவாணி அடிமட்டத்தில் இருந்தது; ஏற்றுமதி-இறக்குமதி தேக்க நிலையை அடைந்தது; தொழில் வளர்ச்சி விகிதம் எதிர் மறையாக இருந்தது. உள்நாட்டு, வெளிநாட்டு முதலீடுகள் மிகக் குறைவாக இருந்தன. கடன் சுமை அபாய அளவை எட்டியது. வெளிநாடுகளில் வாழும் இந்தியர்கள் (non-resident Indians-NRIs) தங்களது இந்தியச் சேமிப்பைக் குறைக்கலாயினர். சர்வதேச வங்கிகள் இந்தியாவுக்குக் கடனுதவி அளிக்கத் தயங்கின. வெளிநாடுகளிலிருந்து மூலப்பொருள்கள், குறிப்பாகப் பெட்ரோலியப் பொருள்கள், இறக்குமதி செய்வது இயலாதக் காரியமாயிற்று என்பதை சுருங்கக்கூறின் இந்தியப் பொருளாதாரம் நோயுற்ற நிலையில் இருந்தது.

## 7.3.3. டாக்டர் மன்மோகன் சிங்

குறிப்பு

டாக்டர் மன்மோகன் சிங், நரசிம்ம ராவ் அரசாங்கத்தில் நிதி அமைச்சராக இருந்தார். அவர் காங்கிரஸ் கட்சிக்கு வெளியிலிருந்து அழைத்துவரப்பட்டவர். பொருளாதார மேதை. சர்வதேச நிதி நிறுவனங்களுடன் நன்கு தொடர்புக் கொண்டிருந்தவர். உலக நிதி நிலைபற்றி நன்கறிந்தவர். இந்தியாவை எதிர்கொண்டிருந்தப் பொருளாதார நெருக்கடியை, குறிப்பாக அந்நியச் செலாவணிச் சவாலைச் சமாளிக்கக்கூடியத் திறமையுடையவர். அவரது பொருளாதார அணுகுமுறை சமகால இந்தியப் பொருளாதார வரலாற்றில் குறிப்பிடத்தக்க திருப்புமுனையை ஏற்படுத்தியது எனலாம்.

## 7.3.4. பொருளாதாரப் புரட்சி

மூச்சுத் திணறிக் கொண்டிருந்த இந்தியப் பெருளாதாரத்துக்கு உலக வங்கிக் (World Bank) கடன்கள் என்ற பிராண வாயுவைச் செலுத்தி உயிர்பிழைக்க வைக்கும் முயற்சியை மேற்கொண்டார் நிதி அமைச்சர் மன்மோகன் சிங், ஆனால் கடன் கொடுக்கும் நிறுவனங்கள் பல நிபந்தனைகளை விதித்தது 1) பண வீக்கத்தை 8% ஆகக் கட்டுப்படுத்த வேண்டும் 2) பணச் செலவுப் பற்றாக் குறையைக் (Fiscal deficit) குறைக்க வேண்டும் 3) ரூபாய் மாற்று விகிதத்தைப் (Convertibility of rule) படிப்படியாக மாற்றியமைக்க வேண்டும் 4) தங்கத் தீர்வைத் தடையை நீக்க வேண்டும் 5) அந்நியச் செலாவணிக் கட்டுப்பாடுகளை விலக்க வேண்டும். எதிர்க்கட்சிகளின் கடுமையான எதிர்ப்பை எதிர்கொண்டு ராவ் அரசாங்கம் புதிய பொருளாதாரக் கொள்கையைத் தொலைநோக்குடன் வகுத்துத் துணிவுடன் செயல்படுத்தியது.

அமைப்பு மாற்றம் (Structural change), தாராளமயமாக்கல் (liberalisation), தனியார் மயமாக்கல் (Privitisation), நவீனமயமாக்கல் (modemisation), உலகமயமாக்கல் (globalisation) ஆகியவை புதிய பொருளாதாரக் கொள்கையின் பரிமாணங்கள் அல்லது சிறப்பியல்புகள் ஆகும். சோஷலிசம், கலப்புப் பொருளாதாரம், பொதுத்துறைக்கு

முன்னுரிமையை கைவிடப்பட்டது. மாறாக, தனியார் துறையை ஊக்குவித்து, போட்டிப் பொருளாதாரத்துக்கு வாய்ப்பளித்து, சந்தைப் பொருளாதார முறை பின்பற்றப்பட்டது. பிரதமர் ராஜீவ் காந்தி துவக்கியப் பொருளாதாரப் புரட்சி ராவ் அரசாங்கத்தால் முழு மூச்சுடன் முன்கொண்டு செல்லப்பட்டது.

ஒருங்கிணைந்த புதிய பொருளாதாரத் திட்டத்தின் விளைவாக, 1) பொருளாதார, தொழில் மற்றும் வர்த்தக நடவடிக்கைகளில் அரசாங்கக் குறுக்கீடும், கட்டுப்பாடும், நிர்வாக நடைமுறைகளும் தளர்த்தப்பட்டு, எளிதாக்கப்பட்டன 2) சந்தைப் பொருளாதாரத்திற்கு சிறப்பிடம் அளிக்கப்பட்டது 3) அரசு மானியம் படிப்படியாகக் குறைப்பதற்கான முயற்சி மேற்கொள்ளப்பட்டது 4) நஷ்டத்தில் இயங்கி வந்த பொதுத்துறை நிறுவனங்களின் அரசாங்க முதலீடு படிப்படியாக விலக்கிக் கொள்ளப்பட்டு அதற்கு பதில் தனியார் முதலீடு ஊக்குவிக்கப்பட்டது 5) அத்தியாவசியத் தொழில்கள் தவிர பிற தொழில்களுக்கு உரிமம் (Licence) வழங்கும் முறை பெரிதும் தளர்த்தப்பட்டது அல்லது விலக்கிக் கொள்ளப்பட்டது 6) சர்வதேச சந்தையின் தரக்கட்டுப்பாட்டுக்கேற்ப ஏற்றுமதியை அதிகரிப்பதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. நிதி அமைச்சர் டாக்டர் மன்மோகன் சிங் ராவ் அரசாங்கத்தின் புதிய பொருளாதாரக் கொள்கைக்கு நம்பகமான வடிவம் கொடுத்துச் செயல்படுத்தினார்.

புதிய பொருளாதாரச் சீர்திருத்தத்தின் விளைவாகப் பல நன்மைகள் ஏற்பட்டன. 1) பணவீக்க விகிதம் கணிசமாகக் குறைந்தது 2) ஏற்றுமதி அதிகரித்ததால் அந்நியச் செலாவணி சேமிப்பு அதிகரித்தது 3) தாராளமயப் பொருளாதாரக் கொள்கையால் உள்நாட்டு மற்றும் வெளிநாட்டு மூலதனம் பெருகியது. 4) வரிக்கொள்கை மாற்றத்தின் மூலம் சேமிப்பை அதிகரித்தது; அரசாங்க வருவாயைப் பெருக்கி, உற்பத்தி அளவு உயர்த்தப்பட்டது 5) இந்தியா சர்வதேச சந்தையில் வெளிநாடுகளுடன் போட்டியிட்டு விற்பனை செய்யும் தன்னம்பிக்கையையும் துணிவையும் பெற்றது 6) வெளிநாட்டு இந்தியர்கள் தடையின்றித் தங்கம் கொண்டு வருவதற்கு அனுமதி அளித்ததின் மூலம் தங்கத்தின் விலை கட்டுப்படுத்தப்பட்டது 7) அந்நியச் செலாவணி அதிகரித்ததன் மூலம் இந்திய வளர்ச்சிக்கழகத்தின் சேமிப்பு உயர்ந்தது 8) தொழில் நுட்பங்களால் ஏற்படும் விளைவுகளிலிருந்து

தொழிலாளர்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதற்காக தேசிய நவீன நிதி நிறுவப்பட்டது 9) பொது வினியோக முறையில் (Public Distribution System-PDS) விரும்பத்தக்க மாற்றங்கள் செய்யப்பட்டன 10) தொழிற்சாலைகளின் பெருக்கத்தால் சுற்றுச் சூழல் மாசுபடுவதைத் தடுப்பதற்குத் தேவையான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன.

சாப்பாட்டின் சுவை சாப்பிட்டால் தான் தெரியும். அதே போன்று புதிய பொருளாதாரக் கொள்கையின் பயன் விலைவாசிக் குறைவில் தான் பிரதிபலிக்க வேண்டும். விலைவாசியைக் கட்டுப்படுத்தாத எந்தப் பொருளாதாரக் கொள்கையும் நீடித்த நன்மையைத் தராது. வேலையின்மையும், வறுமையும், விலைவாசியும் ஒரு நாட்டின் பொருளாதாரத்தின் ஆரோக்கியத்தை அறிவதற்கான அளவு கோலாகும். இந்த அளவு கோலைக் கொண்டு பார்த்தால் ராவ் அரசாங்கத்தின் புதிய பொருளாதாரக் கொள்கை மக்களின் அன்றாட அடிப்படைப் பிரச்னைகளைத் தீர்க்கவில்லை. அந்நியச் செலாவணி நெருக்கடியைச் சமாளிக்க ரூபாயின் மதிப்பு இருமுறை குறைக்கப் பட்டது. அதேபோன்று வெளிநாட்டுச் செலாவணியைச் சரிக்கட்ட இந்திய இருப்பில் இருந்த தங்கத்தை வெளிநாட்டில் அடகு வைக்க நேர்ந்தது. சுருங்கக்கூறின், நரசிம்மராவ் அரசாங்கத்தின் புதிய பொருளாதாரக் கொள்கை உடனடிப் பொருளாதார நெருக்கடியைச் சமாளிக்க உதவியதேயன்றி மக்களின் பொருளாதாரத் தேவைகளைப் பூர்த்திச் செய்யவில்லை. இந்தியப் பொருளாதார நோயாளி காப்பாற்றப் பட்டார்.

## 7.3.5. வரவு-செலவுத் திட்டம்

நிதி அமைச்சர் மன்மோகன் சிங் சமர்ப்பித்த 1991-1992 ஆம் ஆண்டுக்கான வரவு-செலவுத் திட்டம் (Budget) பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. குறிப்பாக உரமானியத்தை விலக்கிக்கொள்ளும் திட்டமும், ராஜீவ் காந்தி அறக்கட்டளைக்கு மானியம் வழங்கும் திட்டமும் கடுமையான கண்டனத்துக்குள்ளாயின. உரமானியத்தால் அரசாங்கத்துக்கு ஏற்பட்ட இழப்பைக் குறைக்க மானிய நீக்கத்தால் அரசுக்கு ரூ.2000 கோடி சேமிப்புக்கான திட்டத்தை முன் வைத்தார் நிதி அமைச்சர். சர்வதேச நிதி நிறுவனத்தின் நிர்பந்தத்தால் உரமானிய நீக்க நடவடிக்கையை மேற்கொண்டார் என்ற குற்றச்சாட்டுக்கு இலக்கானார்

மன்மோகன் சிங். காங்கிரஸ் கட்சிக்குள்ளேயே எதிர்ப்பு ஏற்பட்டது. காபினட் கூட்டத்தில் உரமானிய விலக்கல் பற்றி முடிவெடுப்பதற்குக் காரணமான மூத்த அமைச்சர்கள் கூட மக்களவை விவாதத்தின் போது நிதி அமைச்சருக்கு ஆதரவாக இல்லை. “மன்மோகன் சிங் இதுபோன்று தண்டிக்கப்பட்டதை அவரது வாழ்நாளில் எதிர்கொண்டிருக்க முடியாது” என்று குறிப்பிட்டுள்ளார் ஆர் வெங்கட்ராமன். நிதி அமைச்சர் ராஜினாமா செய்தார். ஆனால் பிரதமர் அதை ஏற்கவில்லை. நிதி அமைச்சர் உரமானிய விலக்கலை 40% லிருந்து 30% ஆகக் குறைத்து நிலைமையைச் சமாளித்தார். ராவ் அரசாங்கம் மற்றொரு இடர்ப்பாட்டிலிருந்து தப்பியது.

வரவு-செலவுத் திட்டத்தில் ராஜீவ் காந்தி அறக்கட்டளைக்கு ரூ.100 கோடி மானியம் கோரப்பட்டது. அம்மானியம் ஐந்தாண்டுகளுக்குக் கொடுக்க வழி வகுக்கப்பட்டது. முன்னாள் பிரதமர் ராஜீவ் காந்தியின் நினைவாக நிறுவப்பட்ட அந்த அறக்கட்டளைக்கு சோனியா காந்தி ஆயுள் தலைவராகவும் ராகுல், பிரியங்கா, சங்கர் தயாள் சர்மா, மற்றும் சிலர் அறங்காவலர்களாக (Trustees)வும் இருந்தனர். உரமானியத்தை விலக்க வேண்டுமென்ற நிதி அமைச்சர் “குடும்ப அறக்கட்டளை”க்குப் பொதுமக்களின் வரிப்பணத்தை மானியமாகக் கொடுக்க முன்வந்ததை எதிர்க்கட்சிகள் கடுமையாகக் கண்டித்தன. சோனியா காந்தி அரசாங்க மானியத்தை ஏற்க மறுத்து பிரதமருக்குக் கடிதம் எழுதியதால் அதுபற்றியச் சர்ச்சைக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது.

### 7.3.6. காங்கிரஸ் தலைவர் ராவ்

பி.வி. நரசிம்ம ராவ் பிரதமர் பொறுப்பேற்றபோது நாடாளுமன்ற உறுப்பினராயில்லை. எனவே ராவ் ஆந்திர மாநிலத்தில் “நந்தியால்” தொகுதியில் போட்டியிட்டு 1991 நவம்பர் 17 தேதி 5,80,287 வாக்கு வித்தியாசத்தில் வெற்றிப் பெற்றார். இத்தேர்தலில் தெலுங்கு தேசம் கட்சி நரசிம்மராவுக்கெதிராக வேட்பாளரை நிறுத்தவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. நரசிம்ம ராவ் நந்தியால் தேர்தலில் வெற்றிபெற்ற பின் 1991 ஏப்ரல் 14,15,16 தேதிகளில் காங்கிரஸின் 79வது மாநாட்டைத் திருப்பதியில் கூட்டினார். பல ஆண்டு காலமாக நடத்தப்படாமலிருந்த

காங்கிரஸ் மாநாட்டை நடத்தினார் ராவ். நரசிம்மராவ் திருப்பதி மாநாட்டில் காங்கிரஸ் தலைவராக முறைப்படித் தேர்ந்தெடுக்கப்பட்டார். காங்கிரஸ் தலைவராக இருபது ஆண்டு கால இடைவெளிக்குப் பின் ராவ் தேர்ந்தெடுக்கப்பட்டது. அவரது சட்ட முறைமையையும், நம்பகத்தன்மையையும், உண்மையான கட்சி அங்கீகாரத்தையும் அளித்தது.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. புதிய பொருளாதாரக் கொள்கைத் தொடங்கப்பட்டப்போது இந்தியப் பிரதமர் யார்?
2. உரத்திற்கான மானியங்களை முதல் முறையாக திரும்பப் பெறுவதற்கான திட்டத்தைத் தொடங்கியவர் யார்?

## 7.4. உலகமயமாதல் தாராளமயமாதல், தனியார்மயமாதல்

பிரதமர் ராஜீவ் காந்தியின் ஆட்சிக் காலத்தில் (1984 - 89) ஏழாவது திட்டம் (1985 - 90) நடைமுறைக்கு வந்தது. வளர்ச்சித் திட்டங்களில் மக்கள் பங்கேற்பு, வேலை வாய்ப்புப் பெருக்கம், உணவுப் பொருள் தன்னிறைவு, பொருளாதார வளர்ச்சியில் பெண்களின் பங்கு, பொருளாதாரக் கட்டமைப்புகளில் உள்ள தடைகளை நீக்கல், தொழிற்சாலைகளை நவீனப்படுத்தி செயல்திறனை அதிகரித்தல், அறிவியல் தொழில் நுட்பங்களைப் பொருளாதார வளர்ச்சிக்குப் பயன்படுத்துதல் போன்றவை இத்திட்டத்தின் சிறப்புத் தன்மைகளாகும். புதிய பொருளாதாரக் கொள்கையின் மூலம் இந்தியாவை 21-ம் நூற்றாண்டு சவால்களை எதிர் கொள்வதற்கான தூரப் பார்வையுடன் கலப்புப் பொருளாதாரக் கொள்கையில் மாற்றங்கள் செய்யப்பட்டன.

நவீனமயமாதல், நகர்மயமாதல், தாராளமயமாதல், தனியார்மயமாதல், உலகமயமாதல் ஆகியவற்றின் அடிப்படையில் சோஷலிசப் பொருளாதாரத்தை சந்தைப் பொருளாதாரத்துக்கு மாற்றுவதற்கான முயற்சி மேற்கொள்ளப்பட்டது. பல்வேறு கட்டுப்பாடுகளால் மூச்சுத் திணறிக் கொண்டிருந்த இந்தியப் பொருளாதாரம் சுதந்திரக் காற்றை சுவாசிக்கத் தொடங்கியது. ஆனால் ராஜீவ் ஆட்சிக்குப் பின் வந்த தேசிய முன்னணி ஆட்சிக் காலத்தில் (1989 - 91) இந்தியப்

பொருளாதாரம் மீண்டும் மூச்சு முட்டலில் முடிந்தது. பொதுவாக, 1980 - 90க்கிடைப்பட்ட பத்தாண்டு காலத்தில் பொருளாதாரப் பின்னடைவு ஏற்பட்டது எனலாம்.

## 7.4.1. பொருளாதார சீர்திருத்தம்

ஏழாவது திட்டம் 1990 மார்ச் மாதம் முடிவுக்கு வந்தது. ஆனால் தேசிய முன்னணி ஆட்சிக் காலத்தில் அடுத்த திட்டம் துவக்கப்படவில்லை. திட்டத் தொடர்ச்சியில் தடை ஏற்பட்டது. எனவே, 1990 - 92 ஆண்டு திட்ட காலமாகக் கருதப்பட்டது. எட்டாவது ஐந்தாண்டுத் திட்டம் (1992 - 97) பிரதமர் நரசிம்மராவ் ஆட்சிக் காலத்தில் நிறைவேற்றப்பட்டது. இத்திட்டம் புதிய அணுகுமுறையைப் பின்பற்றியது. திட்டக் கமிஷன் திட்டங்களைத் தயாரிப்பதோடு நில்லாமல், அதற்கான நோக்கங்களையும் முதலீட்டு நோக்கங்களையும் சுட்டிக் காட்டியது. இத்திட்டக் காலத்தில் ஏற்பட்ட அசாதாரண: அந்நியச் செலாவணி நெருக்கடியைத் தீர்க்க பொருளாதாரச் சீர்திருத்தம் செய்ய வேண்டியது காலத்தின் கட்டாயமாயிற்று.

இத்திட்டக் காலத்தில் நரசிம்மராவ் அரசாங்கத்தில் நிதி அமைச்சராயிருந்த டாக்டர் மன்மோகன் சிங், புதிய பொருளாதாரக் கொள்கையை அறிவித்து புரட்சிகரமான பொருளாதாரச் சீர்திருத்தம் செய்தார். அதன்படி தொழில் உரிம முறை (Industrial Licensing System) கைவிடப்பட்டது. விதிமுறைகள் தளர்த்த ப்பட்டு தாராளமய மாக்கப்பட்டது (Liberalisation); வெளிநாட்டு முதலீட்டை ஊக்குவித்து பொருளாதாரம் தனியார்மயமாக்கப்பட்டது (Privatisation); உலக வர்த்தகச் சந்தை மற்றும் வர்த்தகத் தேவைகளுக்கேற்ப பொருளாதாரம் உலகமயமாக்கப் பட்டது (Globalisation) மானியங்கள் (Subsides) குறைக்கப்பட்டன. அரசியல் ஒருமித்த கருத்தை உருவாக்காமல் பொருளாதார சீர்திருத்தத்தை தேசியக் கொள்கையாகக் கருதமுடியாது என்ற உண்மையை உணர்ந்த ராவ் அரசாங்கம் இச்சீர்திருத்தத்தின் வேகத்தையும், வீச்சையும் குறைத்தது. சீர்திருத்தத்தின் பயன்கள் கீழ்த்தட்டு மக்களைச் சென்றடையவில்லை என்பதால் மக்கள். இதன்மீது சந்தேகங் கொண்டனர். சீர்திருத்தத்தால் பாதிக்கப்பட்டோர் குறிப்பாக, தொழிலாளிகள், விவசாயிகள் - இம்முயற்சியைக் கடுமையாக

எதிர்த்தனர். அரசியல் கட்சிகளிடையே நிலவிய இருமனப் போக்கு (Ambivalence) சீர்திருத்தத்தைப் பற்றிய தெளிவற்ற நிலையை ஏற்படுத்தியது. இருப்பினும்,, எட்டாவது திட்டக் காலத்தில் உள்நாட்டு மொத்த உற்பத்தி (GDP) வளர்ச்சி விகிதம் தொடர்ந்து 7 சதவிகிதமாக இருந்தது பொருளாதார அதிசயமாகும்.

## 7.4.2. சந்தைப் பொருளாதாரம் (Market Economy)

1996 பொதுத் தேர்தலில் காங்கிரஸ் தோற்றது. மூன்றாண்டுகளில் (1996 - 99) நான்கு பிரதமர்கள் வாஜ்பாய், தேவகவுடா, குஜ்ரால், மீண்டும் வாஜ்பாய் இந்தியாவை ஆட்சி செய்தனர். அரசியல் நிலையாமை பொருளாதார வளர்ச்சியைப் பெரிதும் பாதித்தது. ஒன்பதாவது ஐந்தாண்டுத் திட்டம் (1997 - 2002) 1997-ல் துவங்கப்பட்டாலும் 1999-ல் தான் தேசிய வளர்ச்சிக் குழு (National Development Council)வின் அனுமதியைப் பெற்றது! “சமூக நீதி மற்றும் சமத்துவத்துடன் கூடிய வளர்ச்சி” என்பதே இத்திட்டத்தின் குவிமையக் குறிக்கோள். இக்குறிக்கோளை சந்தை சக்தி (Market Force) மற்றும் தனியார் துறைக்கு முக்கியத்துவம் என்ற திட்ட உத்தி (Planning Strateges)யைக் கொண்டு அடைவதென்று தீர்மானிக்கப்பட்டது. 1999-ல் நடைபெற்ற நாடாளுமன்ற மக்களவைத் தேர்தலில் வெற்றி பெற்ற பாரதீய ஜனதா கட்சியின் தேசிய ஜனநாயகக் கூட்டணி (National Democratic Alliance - NDA) அரசாங்கத்தை அமைத்து ஆட்சி செய்தது. (1999 - 2004). இந்த ஆட்சிக் காலத்தில் தான் பத்தாவது ஐந்தாண்டுத் திட்டம் (2002 - 2007) செயல்படுத்தப்பட்டது. ஒன்பதாவது திட்டக் காலத்தில் திட்டமிட்ட பொருளாதார சீர்திருத்த நடவடிக்கைகள் விரிவுபடுத்தப்பட்டன, ஆழப்படுத்தப்பட்டன. 1) வறுமை ஒழிப்பு 2) வேலை வாய்ப்பு விரிவாக்கம் 3) பொருளாதார ஏற்றத் தாழ்வை அகற்றுதல் ஆகிய மூன்றும் முக்கிய வழிகாட்டு விதிகளாகக் கொள்ளப்பட்டன. பத்தாவது திட்டக் காலத்தில் 8 சதவிகித சராசரி ஆண்டு ஒட்டு மொத்த உள்நாட்டு பொருள் உற்பத்தி விகிதம் என்ற இலக்கு நிர்ணயிக்கப்பட்டது.

தேசிய ஜனநாயகக் கூட்டணி ஆட்சிக் காலத்தில் திட்டமிட்ட பொருளாதாரத்தின் கதவு சந்தை அல்லது முதலாளித்துவ முறைக்கு விரிவாகத் திறந்து விடப்பட்டது. தனியார் மயமாக்குதல், மானியக் குறைப்பு, அந்நிய நேரடி முதலீடு, பொதுத்துறை நிறுவனங்கள் பங்கு விற்பனை, வருமான வரிச் சீர்திருத்தம், வட்டிக் குறைப்பு, சுங்க வரிக் குறைப்பு, இறக்குமதி வரிவிகிதக் குறைப்பு, வெளி வர்த்தகக் கடன்கள் பற்றிய கொள்கை தளர்த்தப்படல் போன்ற பல துணிகரமான முடிவுகள் மேற்கொள்ளப்பட்டன. இத்தகைய முடிவுகளால் செல்வந்தர்கள் மேலும் செல்வந்தர்களாயினர் ஏழைகள் பரம ஏழைகளாயினர். பொருளாதார வல்லரசாக (Economic Superpower) வேண்டும் என்பதற்காக எடுக்கப்பட்ட பொருளாதாரப் புரட்சி நடவடிக்கைகளால் வறுமையைப் போக்கவோ, வேலையில்லாத் திண்டாட்டத்தை குறைக்கவோ, விவசாயிகளின் தற்கொலைகளைத் தடுக்கவோ முடியவில்லை. இதற்கான விலையை பா.ஜ.க. தலைமையிலான தேசிய ஜனநாயகக் கூட்டணி 2004-ல் நடைபெற்ற நாடாளுமன்றத் தேர்தலில் தரவேண்டியதாயிற்று பிரதமர் வாஜ்பாய் ஆட்சியைப் பறிகொடுத்தார்.

## 7.5. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்

1. புதிய பொருளாதாரக் கொள்கை அறிமுகப்படுத்தப்பட்டபோது நரசிம்மராவ் இந்தியாவின் பிரதமராக இருந்தார்.
2. முன்னாள் நிதியமைச்சர் டாக்டர் மன்மோகன் சிங் முதல் முறையாக உரத்திற்கான மானியங்களை திரும்பப் பெறுவதற்கான திட்டத்தை முன்வைத்தார்.

## 7.6. அத்தியாயச் சுருக்கம்

- நரசிம்ம ராவ் 1991 ல் ஆட்சிக்கு வந்தார். அவருடைய அரசாங்கம் புதிய பொருளாதாரக் கொள்கையை அறிமுகப்படுத்தியது அதன்படி தனியார்மயம், தாராளமயம் மற்றும் உலகமயம் ஆகியவைப் பொருளாதாரத்தின் முக்கிய அம்சமாகளாக மாறின.

- இச்சீர்திருத்தங்களை அப்போதைய நிதியமைச்சர் மன்மோகன் சிங் அறிமுகப்படுத்தினார்.

குறிப்பு

## 7.7. முக்கியச் சொற்கள்

**தாராளமயம்:** புதிய பொருளாதாரக் கொள்கையின் ஒரு அம்சமாகும். தேவையில்லாத கட்டுப்பாடுகளை விளக்கித் தொழிற்செய்வதற்கு ஏற்ற எளிய முறைகளை தாராளமயம் என்று அழைக்கப்படுகிறது.

**தனியார்மயம்:** புதிய பொருளாதாரக் கொள்கையின் அடுத்து ஒரு அம்சம் தனியார்மயமாக்கம் இதன்படி அரசு பங்குகள் படிப்படியாக தனியார்த்துறைக்கு விற்பனை செய்யப்படும். மேலும், நிறுவனங்களுக்கிடையே போட்டியை ஏற்படுத்துவதற்கு இத்தகைய தனியார்மயக்கோட்பாடு அவசியமாகிறது.

## 7.8. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

**குறுகிய வினாக்கள்**

1. பாருளாதார நெருக்கடி குறித்து எழுதுக.
2. ந்தைப் பொருளாதாரம் சுருக்கமாக எழுதுக.

**நீண்ட வினாக்கள்**

1. திய பொருளாதாரக் கொள்கையை க் குறித்து விளக்குக.
2. ரசிம்ம ராவ் ஆட்சிப் பற்றி விளக்குக.

## 7.9. கூடுதல் வாசிப்புகள்

Ananth V. Krishna. 2011. *India since Independence: Making Sense of Indian Politics.* New Delhi: Pearson.

Bipan Chandra, Miridula Mukherjee, Aditya Mukherjee. 2008. *India since Independence,* Haryana: Penguin Books.

G. John Gilbert. 2006. *Contemporary History of India,* New Delhi: Anmol Publications Pvt. Ltd.

G. Vengatesan. 2007. *History of contemporary India 1947-2007,* Rajapalayam: VC Publications.

R.S. Chaurasia. 2002. *History of Modern India 1707 AD upto 2000 AD.* New Delhi: Atlantic Publishers & Distributors.

Sriram Maheshwari. 1991. *The Mandal Commission and Mandalisation: A Critique.* New Delhi: Concept Publishing Company.

பிபன் சந்திரா, மிருதுலா முகர்ஜி, ஆதித்யா முகர்ஜி. 2015.*சுதந்திரத்திற்குப் பிறகு இந்தியா,* சென்னை: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.

வெங்கடேசன்.க. 2012. *சமகால இந்திய வரலாறு 1947-2012,* ராஜபாளையம்: வி.சி.பப்ளிகேஷன்ஸ்.

# அலகு-8

## பாஜகவின் தோற்றம் - ஏ.பி.வாஜ்பாய் மற்றும் அவரது வளர்ச்சி திட்டங்கள்

**பாட அமைப்பு**

8.1. முன்னுரை

8.2. நோக்கங்கள்

8.3. தேசிய ஜனநாயகக் கூட்டணி ஆட்சி (1998-2004)

- 8.3.1. வாஜ்பாயின் அணு ஆயுதக்கொள்கை
- 8.3.2. பேருந்து இராஜதந்திரம்
- 8.3.3. கூட்டணிக் கட்சிகளின் நெருக்குதல்
- 8.3.4. கார்கில் போர் (Kargil War), 1999 மே - ஜூலை
- 8.3.5. 13வது பொதுத்தேர்தல், 1999 செப்டம்பர் - அக்டோபர்
- 8.3.6. தேசிய ஜனநாயகக் கூட்டணி ஆட்சி, 1999-2004
- 8.3.7. விமானக் கடத்தல், 1999 டிசம்பர்
- 8.3.8. கி.பி. 2000
- 8.3.9. தெகல்கா எழுப்பிய ஊழல் புயல், 2001 மார்ச்
- 8.3.10. நாடாளுமன்றம் தாக்கப்படல்

குறிப்பு

8.3.11. பொடா சட்டம் (POTA) 2002, ஏப்ரல் 2
8.3.12. மூன்று மாநிலத் தேர்தல் முடிவு
8.3.13. அரசியலமைப்புச் சட்ட மறு ஆய்வுக் கமிஷன் (Constitution Review Commission)
8.3.14. குஜராத் கலவரம் கோத்ரா நிகழ்ச்சி
8.3.15. இனப்படுகொலை
8.3.16. குடியரசுத் தலைவர் தேர்தல், 2002 ஆகஸ்டு
8.3.17. வீழ்ச்சியை நோக்கி அரசு
8.3.18. கட்சித்தாவல் தடைத்திருத்தச் சட்டம், 2003
8.3.19. 2004 ஆம் ஆண்டுப் பொதுத்தேர்தல்
8.4. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்
8.5. அத்தியாயச் சுருக்கம்
8.6. முக்கியச் சொற்கள்
8.7. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்
8.8. கூடுதல் வாசிப்புகள்

## 8.1. முன்னுரை

இரண்டு ஆண்டுகள் அரசியல் குழப்பத்தைத்தொடர்ந்து 1998-ஆம் ஆண்டு நடைப்பெற்றத் தேர்தலில் கூட்டணிக்கட்சியின் உதவியோடு வாஜ்பாய் பிரதமராகப் பொறுப்பேற்றார். 1996-ஆம் ஆண்டில் 13 நாட்கள் மட்டும் பிரதமராக இருந்த வாஜ்பாய் தற்போது 13 மாதங்கள் தனது ஆட்சியைத் தொடர்ந்தார். 1999-ஆம் ஆண்டு நடந்தத் தேர்தலில் தேசிய ஜனநாயகக் கூட்டணி அரிதிப்பெரும்பான்மையுடன் ஆட்சிக்கு வந்து 2004-ஆம் ஆண்டு வரை ஆட்சியில் நீடித்தது. இந்த அத்தியாயமானது மேலே குறிப்பிடப்பட்டுள்ள அமசங்களை மையப்பொருளாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளது.

## 8.2. நோக்கங்கள்

இந்தப் பாடத்தைப் படித்த பிறகு, கீழ்க்கண்டவற்றை அறிய முடியும்:

- வாஜ்பாயின் கீழ் பாஜகவின் எழுச்சியைப் பற்றி அறிந்துக் கொள்ள முடியும்.

- வாஜ்பாயின் உள்நாட்டுக் கொள்கையை மதிப்பிடுவதற்கு உதவுகிறது (1998-2004).

குறிப்பு

## 8.3. தேசிய ஜனநாயகக் கூட்டணி ஆட்சி (1998-2004)

ஐந்து ஆண்டுகள் முடிவில் 1996-ஆம் ஆண்டில் பொதுத்தேர்தல் நடைப்பெற்றது. இத்தேர்தலிலும் எந்த கட்சிக்கும் அரிதி பெரும்பான்மை கிடைக்கவில்லை. பா.ஜ.க தனிபெரும் கட்சியாக உருவெடுத்தது. அக்கட்சியின் தலைவர் வாஜ்பாய் பிரதமராகப் பொறுப்பேற்றார். ஆனால், இவரது ஆட்சி வெறும் 13 நாட்கள் மட்டுமே நீடித்தது பின்னர் காங்கிரஸ் ஆதரவோடு ஐக்கிய முன்னணி ஒன்றறை ஆண்டுகள் ஆட்சிச் செய்தது தேவகவுடாவும் பின்னர் ஐ.கே. குஜராலும் பிரதமராக இருந்தனர். பின்னர் 1998 ஆம் ஆண்டு நடைபெற்ற 12 வது பொதுத்தேர்தலில் பா.ஜ.க. தலைமையிலான என்.டி.எ. ஆட்சிக்கு வந்தது. மீண்டும் பிரதமரானார் வாஜ்பாய், இந்தமுறை பதிமூன்று மாதங்கள் அரசாங்கம் ஆட்சியில் நீடித்தது.

### 8.3.1. வாஜ்பாயின் அணு ஆயுதக்கொள்கை

“அமைதிக்கு அணு” என்ற கொள்கையில் உறுதியாக இருந்த நேருவின் ஆட்சிக்காலத்தில் (1947-1964) அணு ஆயுத வெடிப்புச் சோதனை செய்யப்படவில்லை. இந்திரா காந்தியின் முதல் ஆட்சிக்காலத்தில் அணு ஆயுத வெடிப்புச் சோதனை செய்யப்பட்டு 1974 மே 18 தேதி “அமைதிக்கான அணு ஆயுதப் பரிசோதனை” என்று அறிவிக்கப்பட்டது. வாஜ்பாய் ஆட்சியின் துவக்கத்திலேயே 1998 மே 11-13 மூன்று நாட்களில் ஐந்து அணு ஆயுத வெடிப்புச் சோதனைகள் செய்யப்பட்டன. இதன்மூலம் இந்தியா ஒரு வலிமையான, தன்னம்பிக்கைமிக்க அணு ஆயுத நாடு என்று பிரகடனப் படுத்தப்பட்டது. சுருங்கக்கூறின், இந்தியாவும் ஒரு அணு ஆயுத வல்லரசு என்பதைக் காட்டிக் கொள்வதே வாஜ்பாயின் அணு ஆயுதக் கொள்கையின் குவிமையமாக இருந்தது.

## 8.3.2. பேருந்து இராஜதந்திரம்

குறிப்பு

மே 1998 இல் இரு நாடுகளும் அணுசக்தி சோதனைகளை நடத்தியதிலிருந்து இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையிலான உறவு மோசமாக இருந்தது. இந்தியா மற்றும் பாகிஸ்தான் பிரதமர்கள் 1998 செப்டம்பரில் நியூயார்க்கில் ஐ.நா பொதுச் சபைக் கூட்டத்தில் சந்தித்தப்போது,அவர்கள் டெல்லி மற்றும் லாகூர் இடையே வழக்கமான பேருந்துச் சேவைகள் துவங்குவதற்கு முன்வந்தனர். பிப்ரவரி 20, 1999 அன்று, புதுதில்லியில் இருந்து லாகூருக்கு வரலாற்று முக்கியத்து வாய்ந்த பேருந்துச் சேவையை பிரதமர் வாஜ்பாய் துவங்கிவைத்தார். அவரே பேருந்தில் பயணம் செய்து, பாகிஸ்தான் பிரதமரைச் சந்தித்து "லாகூர் பிரகடனத்தை" வெளியிட்டார். இப்பேருந்து சேவை இரு நாட்டு மக்களும் தொடர்புக்கொள்வதற்கு முக்கியக் காரணியாக அமைந்தது. மேலும் வாஜ்பாயின் இராஜ தந்திரத்திற்கு சிறந்த எடுத்துகாட்டுகாகும்.

## 8.3.3. கூட்டணிக் கட்சிகளின் நெருக்குதல்

பிரதமர் வாஜ்பாயால் பொக்ரான் பரிசோதனை மூலம் கூட்டணி அரசாங்கத்தைக் காப்பாற்ற முடியவில்லை. கூட்டணி முரட்டுக் குதிரைகள் பல திக்குகளில் பயணிக்கத் துவங்கின. ஒவ்வொரு உறுப்புக் கட்சியும் அதன் அரசியல் அரசாங்கப் பலத்தைப் பெருக்கிக்கொள்வதில் குறியாக இருந்தது. இந்தியத் தேசிய லோக் தளத் தலைவர் ஓம் பிரகாஷ் சௌதாலா அரசாங்கத்துக்கு அளித்து வந்த ஆதரவைத் திடீரென்று விலக்கிக்கொண்டார். வாஜ்பாய் அரசாங்கம் ஆர்.எஸ்.எஸ். சங்பரிவார அமைப்புகளின் நெருக்குதல்களுக்குள்ளாயிற்று. நாட்டின் பல பகுதிகளில் சிறுபான்மையினர் தாக்கப்பட்டனர். மானியம் பற்றிக் கூட்டணிக் கட்சிகளுக்குள் கருத்தொற்றுமை ஏற்படாமையால் பொருளாதாரச் சீர்திருத்தம் பின்னுக்குத் தள்ளப்பட்டது. அ.தி.மு.க திரிணாமூல் காங்கிரஸ், சமதா கட்சி ஆகியவை முறையே தமிழ்நாடு, மேற்கு வங்காளம், பீகார் ஆகிய மாநில அரசாங்கங்களைக் கலைக்கக்கோரி மத்திய அரசாங்கத்தை வலியுறுத்தின. நெருக்கடிக்குள்ளான வாஜ்பாய் அரசாங்கம் அம்மூன்று மாநிலங்களுக்கும் விசாரணைக் குழுக்களை அனுப்பி அம்மாநில அரசாங்கங்களின்

எதிர்ப்பையும் விரோதத்தையும் பெற்றுக்கொண்டது. தனது நோக்கம் நிறைவேறவில்லை என்ற ஆத்திரத்தில் அ.தி.மு.க தலைவர் ஜெ.ஜெயலலிதா, வாஜ்பாய் அரசாங்கத்துக்கு அளித்துவந்த ஆதரவை விலக்கிக்கொண்டார். கூட்டணி அரசாங்கம் பெரும்பான்மை பலத்தை இழந்தது. எனவே குடியரசு தலைவர் கே.ஆர்.நாராயணன் பிரதமர் வாஜ்பாயை மக்களவையில் பெரும்பான்மை ஆதரவை நிரூபிக்குமாறு கேட்டுக் கொண்டார். நம்பிக்கை வாக்கெடுப்பில் ஒரு வாக்கு வித்தியாசத்தில் 1999 ஏப்ரலில் வாஜ்பாய் கூட்டணி அரசாங்கம் கவிழ்ந்தது. 1999 ஏப்ரல் 26ம் தேதி மக்களவையைக் கலைக்க உத்திரவிட்டார் குடியரசு தலைவர் கே.ஆர். நாராயணன். பொதுத்தேர்தல் முடிந்து அடுத்த அரசாங்கம் அமையும்வரை காபந்து பிரதமராக (Care - taker Prime Ministor) இருக்குமாறு குடியரசு தலைவர், வாஜ்பாயைக் கேட்டுக்கொண்டார்.

## 8.3.4. கார்கில் போர் (Kargil War), 1999 மே - ஜூலை

1998 டிசம்பர் மாதத்திலிருந்து 1999 மார்ச் வரை பாகிஸ்தான் இராணுவத்தினர் கட்டுப்பாட்டுக் கோட்டைத்தாண்டி (Line of Control - LOC) இந்தியாவுக்குள் நுழைந்திருந்தது இந்திய இராணுவத்துக்குத் தெரியவில்லை. 1999 மே மாதம் அந்த இராணுவம் மேலும் முன்னேறி கார்கில் பகுதியில் நிலை கொண்டது. ஊர்மக்கள் வழியாக இச்செய்தியறிந்த இந்திய இராணுவம் விழித்துக் கொண்டது. அரசாங்கம் பாகிஸ்தான் ஊடுருவலை முறியடிக்க முடிவு செய்தது. 1999 மே மாதம் துவங்கிய கார்கில் போர் 1999 ஆகஸ்டு மாதத்துவக்கத்தில் முடிவுற்றது. இப்போர் 3000 லிருந்து 6000 மீட்டர் உயரத்தில் கடுங்குளிரில் கட்டுப்பாட்டுக் கோட்டின் 200 கி.மீ. தூரத்தில் நடந்தது.

கார்கில் போரில் இந்தியாவின் முப்படைகளும் பங்கேற்றன. இவை முறையே விஜய் தாக்குதல் (Operation Vijay), சபத்சாகர் தாக்குதல் (Operation Saped Sagar), தல்வர் தாக்குதல் (Operation Talwar) என்று அழைக்கப்பட்டன. கடும் மும்முனைத் தாக்குதலைத் தாக்குப் பிடிக்க முடியாத பாகிஸ்தான் படை இந்திய எல்லையிலிருந்து பின்வாங்கிற்று. 1999 ஜீலை 11 ம் தேதி பாகிஸ்தான் பிரதமர் நவாஸ்

ஷெரீப் படைகளை விலக்கிக் கொள்வதாக அறிவித்தார். போர் முடிவுக்கு வந்தது.

அறிவிக்கப்படாத கார்கில் போரில் இந்தியா வென்றது; ஆனால் இந்த வெற்றிக்குக் கொடுத்த விலை அதிகம் இழப்புப் பெரிது இருப்பினும் கார்கில் ஆய்வுக்குழு அறிக்கை (Kargil Review Committee Report) கடுமையான போர்க்களச் சூழ்நிலையிலும் இந்திய வீரர்களின் ஊக்கம் மிக உயர்ந்த நிலையில் இருந்ததாகக் குறிப்பிட்டுள்ளது.

## 8.3.5. 13வது பொதுத்தேர்தல், 1999 செப்டம்பர் - அக்டோபர்

இந்தியாவின் 13-வது நாடாளுமன்ற மக்களவைக்கான பொதுத்தேர்தல் 1999 செப்டம்பர் - அக்டோபர் மாதங்களில் 5 கட்டங்களாக நடைபெற்றது. ஒரு மாதத்துக்கு மேல் நடைபெற்ற மிகநீண்ட இடைக்காலத் தேர்தல் இதுதான். வாஜ்பாய் பிரதமருக்கான வேட்பாளராக தேர்தல் கூட்டணிக் கட்சிகளால் முன்மொழியப்பட்டார். பழைய கூட்டணிக் கட்சிகளோடு தி.மு.க. இணைந்தது. தெலுங்கு தேசம் கட்சி அதன் பாணியில் பா.ஜ.க. கூட்டணிக்குத் தொடர்ந்து ஆதரவு அளித்தது. இத்தேர்தலில் பா.ஜ.க. 29 சதவிகித வாக்குகளைப் பெற்று 182 இடங்களைப் பிடித்தது. காங்கிரஸ் 34 சதவிகித வாக்குகளைப் பெற்றாலும் 112 இடங்களில் மட்டுமே வெற்றிபெற முடிந்தது. பா.ஜ.க. கூட்டணிக்கு 304 இடங்களும், காங்கிரஸ் கூட்டணிக்கு 135 இடங்களும் கிடைத்தன. எனவே, பா.ஜ.க. கூட்டணி அரசாங்கம் அமைப்பது உறுதியாயிற்று.

## 8.3.6. தேசிய ஜனநாயகக் கூட்டணி ஆட்சி, 1999-2004

1999 இடைக் காலப் பொதுத்தேர்தலுக்குப் பிறகு வாஜ்பாய் தலைமையில் முந்தைய கூட்டணியைவிட பலமிக்க 24 கட்சிகளைக்கொண்ட தேசிய ஜனநாயகக் கூட்டணி (National Domacratic Alliance) அரசாங்கம் 1999 அக்டோபர் 10 அமைக்கப்பட்டது. வாஜ்பாய் இந்தியாவின் 13 வது பிரதமராகப் பதவியேற்ற மூன்று மாதங்களுக்குள் புத்தாயிரம் (New Millenium) பிறந்தது நாடு 21 ம் நூற்றாண்டுக்குள் அடியெடுத்து வைத்தது.

குறிப்பு

## 8.3.7. விமானக் கடத்தல், 1999 டிசம்பர்

வாஜ்பாய் அரசாங்கம் பொறுப்பேற்ற இரண்டு மாதங்களுக்குப்பின் 1999 டிசம்பர் 24ம் தேதி இந்தியன் ஏர்லைன்ஸ் விமானம் பயங்கரவாதிகளால் நேபாளத் தலைநகர் காத்மாண்டுவிலிருந்து துபாய், அமிர்தசரஸ் வழியாக ஆப்கானிஸ்தானின் காண்டகாருக்குக் கடத்தப்பட்டது. கடத்தப்பட்ட விமானம் கட்டாயமாக அமிர்தசரசில் தரையிறக்கப்பட்டபோது பயணிகளை மீட்கமுடியவில்லை ஆகாய விமானத்தை அமிர்தசரசிலிருந்து காண்டகாருக்குக்கு கொண்டு சென்ற பயங்கரவாத கடத்தல்காரர்கள் இந்தியச் சிறையிலிருந்த நான்கு அதிதீவிரப் பயங்கரவாதிகளை உடனடியாக விடுவிக்க வேண்டுமென்று கோரினர். வாஜ்பாய் அரசாங்கம் அக்கோரிக்கையை ஏற்றுக்கொண்டது. அதுமட்டுமல்ல. பயங்கரவாதிகள் கோரிய நால்வரையும் விடுவித்து வெளியுறவு அமைச்சர் ஜஸ்வந்த் சிங் தனிவிமானத்தில் அழைத்துச் சென்று கடத்தல் காரர்களிடம் பத்திரமாக ஒப்படைத்தார். பயணிகள் மீட்கப் பட்டனர். விமானக் கடத்தல் விவகாரம் பா.ஜ.க தலைமையிலான கூட்டணி அரசாங்கத்தின் பலவீனத்தை வெளிப்படுத்துவதாக இருந்தது.

## 8.3.8. கி.பி. 2000

சமகால இந்தியா மிகுந்த நம்பிக்கையோடும், எதிர்பார்ப்போடும், உறுதியோடும் புதிய நூற்றாண்டுக்குள் பிரவேசம் செய்தது. அமெரிக்க அதிபர் பில் கிளிண்டனும் மார்ச் 19 கணிணி மென்பொருள் உலகின் முடிச்சூடா மன்னருமான பில்கேட்சும் செப்டம்பர் 14 தேதி இந்தியாவுக்கு வருகைதந்தது உலகின் கவனத்தைக் கவர்ந்தது. சத்தீஷ்கர் (நவ.1) உத்தராஞ்சல் (நவ.9), ஜார்கண்டு (நவ.15) ஆகிய 3 புதிய மாநிலங்களும் ஒரே மாதத்தில் உதயமாயின. டிசம்பர் 22 தேதி இந்தியத் தலைநகர் உயர்பாதுகாப்புப் பிராந்தியமான செங்கோட்டைக்குள் பயங்கரவாதிகள் நுழைந்து இராணுவ அதிகாரிகள் மீது தாக்குதல் நடத்தியது நாட்டை அதிர்ச்சிக்குள்ளாக்கியது.

குறிப்பு

## 8.3.9. தெகல்கா எழுப்பிய ஊழல் புயல், 2001 மார்ச்

21-ம் நூற்றாண்டின் துவக்கத்தில் ஜனவரி 26 தேதி குஜராத் பூகம்பப் பேரழிவுக்கு உள்ளாயிற்று. அதையடுத்து தெகல்கா வலைமனை வெளிப்படுத்திய (Tehelka.com Txposure) இராணுவ தளவாடப் பேர ஊழல் மார்ச் 13 நாட்டை அதிர்ச்சிக்குள்ளாக்கியது. தெகல்கா ஒளிநாடாக்கள் உயர்மட்ட ராணுவ அதிகாரிகள் மற்றும் அரசியல் தலைவர்கள் ஆயுதப்பேர ஆதாயம் பெற்றதை அம்பலப்படுத்தின. இந்த ஊழல் புயலில் சிக்கிய பா.ஜ.க. வின் தேசியத் தலைவர் பங்காரு லட்சுமணனும், கூட்டணி சமதாக் கட்சித் தலைவர் ஜெயா ஜெயிட்லியும் பதவி விலகினர். பாதுகாப்பு அமைச்சர் ஜார்ஜ் பெர்னாண்டஸ் தார்மீகப் பொறுப்பேற்று தன் பதவியை மார்ச் 15 தேதியில் விலகினார். ஊழலில் சிக்கிய வாஜ்பாய் அரசாங்கத்துக்கு எதிர்ப்பு தெரிவித்து மற்றொரு கூட்டணிக் கட்சியான திரிணாமூல் காங்கிரஸ் தலைவரும் ரயில்வே அமைச்சருமான மம்தா பானர்ஜி பதவி விலகியதோடு அவரது கட்சியையும் கூட்டணியிலிருந்து விலக்கிக் கொண்டார். தெகல்கா வலைமனை வெளிப்படுத்திய ஆயுதப் பேர ஊழல் பற்றி விசாரிக்க முன்னாள் உச்சநீதி மன்ற நீதிபதி கே.வெங்கடசுவாமியின் தலைமையில் விசாரணைக் கமிஷன் அமைக்கப்பட்டது.

## 8.3.10. நாடாளுமன்றம் தாக்கப்படல்

கார்கில் போரின்போது வீரமரணமடைந்த போர் வீரர்களை அடக்கம் செய்ய வெளிநாட்டிலிருந்து சவப் பெட்டிகள் வாங்கப்பட்டதில் ஊழல் நடந்ததாக எதிர்க்கட்சிகள் அரசாங்கத்துக்கு எதிராக டிசம்பர் 11 தேதியில் ஒத்திவைப்புத் தீர்மானம் கொண்டு வந்தன. அதுபற்றிய விவாதம் நடந்துக் கொண்டிருக்கையில் நாடாளுமன்றக் கட்டிடம் பயங்கரவாதிகளின் தாக்குதலுக்குள்ளாயிற்று. இத்தாக்குதல் முறியடிக்கப்பட்டுப் பயங்கரவாதிகள் கொல்லப்பட்டனர். இதைத் தொடர்ந்து இந்தியா பாகிஸ்தானுடனான தொடர்புகளைத் துண்டித்துக்கொண்டு, இருநாட்டு எல்லைக் கட்டுப்பாட்டுக்கோடு (LOC) மற்றும் சர்வதேச எல்லைக்கோடு (Inter National Border) நெடுகிலும் இந்திய ராணுவம் குவிக்கப்பட்டது. எல்லைதாண்டியப் பயங்கரவாதத்தை

இந்தியா தனித்து நின்றே முறியடிக்கும் என்றும், இப்பயங்கரவாதம் முற்றிலுமாக நிறுத்தப்படாதவரை பாகிஸ்தானுடன் இருதரப்புப் பேச்சுவார்த்தை இல்லை என்றும் வாஜ்பாய் அரசாங்கம் அறிவித்தது.

## 8.3.11. பொடா சட்டம் (POTA) 2002, ஏப்ரல் 2

பயங்கரவாதிகளால் நாடாளுமன்றக் கட்டிடம் குறிவைத்துத் தாக்கப்பட்டதைத் தொடர்ந்து வாஜ்பாய் அரசாங்கம் சர்ச்சைக்குரிய பயங்கரவாத மற்றும் தகர்ப்பு நடவடிக்கைகள் தடுப்புச் சட்டத்துக்கு (Terrorist and Disruptive Activities Prevention Act- TATA) பதில் பயங்கரவாதத் தடுப்பு அவசர ஆணை டிசம்பர் 30 தேதி (Prevention of Terrorism Ordinance - POTA) வெளியிடப்பட்டது. பயங்கரவாதம் தேசியப் பிரச்னை உள்நாட்டுப் பாதுகாப்பு பற்றியது. எனவே பயங்கரவாதத்துக்கு எதிரான நடவடிக்கைக் குறித்துக் கருத்தொற்றுமை ஏற்படவேண்டியது இறியமையாதது. கருத்தொற்றுமையின்றிக் கொண்டுவரப்பட்ட இந்த அவசரச்சட்டத்தை எதிர்க்கட்சிகள் எதிர்த்தன. “தடா” சட்டம் தவறாகப் பயன்படுத்தப்பட்டதால்தான் கைவிடப்பட்டது. “தடா” வை முழுமூச்சுடன் எதிர்த்த பா.ஜ.க. “பொடா” வைப் பிடிவாதத்துடன் கொண்டுவருவது உள்நோக்கமுடையதாகக் கருதப்பட்டது. இக்கருப்புச் சட்டம் எதிர்க்கட்சிகளைப் பழிவாங்கப் பயன்படுமேயன்றி பயங்கரவாதத்தை ஒழிக்க உபயோகப்படாது என்று எதிர்க்கட்சிகள் வாதிட்டு, அவசர ஆணையை ஏற்க மறுத்தன. எனினும் இச்சட்டத்தைக் கொண்டுவருவதில் குறியாக இருந்த வாஜ்பாய் அரசாங்கம் 2002 மார்ச் 18 மக்களவையில் 261-க்கு 137 என்ற வாக்கு வித்தியாசத்தில் நிறைவேற்றியது. ஆனால் மாநிலங்களவையில் 113-க்கு 98 என்ற வித்தியாசத்தில் தோற்கடிக்கப்பட்டது. எனவே, அரசியலமைப்புச் சட்டம் 108 வது பிரிவின்படி “பொடா“ மசோதா நாடாளுமன்ற இரு அவைகளின் கூட்டுக் கூட்டத்தில் ஏப்ரல் 2 தேதி நிறைவேற்றப்பட்டது அவசரச் சட்டம் அசாதாரண முறையில் நிறைவேற்றப்பட்டது.

## 8.3.12. மூன்று மாநிலத் தேர்தல் முடிவு

குறிப்பு

2002 பிப்ரவரி மாதம் உத்திரப் பிரதேசம், உத்திராஞ்சல், பஞ்சாப் ஆகிய மூன்று மாநிலங்களில் நடைபெற்ற மாநில சட்டமன்றத் தேர்தல்களில் பா.ஜ.க. படுதோல்வி அடைந்தது. குறிப்பாக பா.ஜ.க உத்திரப் பிரதேசத்தில் நிராகரிக்கப்பட்டது ராமர் கோயில் பிரச்னையை முன்னிறுத்தி அரசியல் ஆதாயம் காணமுடியாது என்ற உண்மையை உணர்த்தியது. இம்மும்மாநிலத் தேர்தல் தோல்வி பாஜக-வுக்குப் பெரும் பின்னடைவை ஏற்படுத்தியது. அக்டோபர் மாதம் ஜம்மு-காஷ்மீரில் நடைபெற்றச் சட்டமன்றத் தேர்தலிலும் பாஜக தோல்வியடைந்தது. கோவாவில் மட்டுமே பா.ஜ.க ஆட்சி அமைத்தது. சுருங்கக்கூறின், மூன்று மாநிலத் தேர்தல் முடிவுகள் பா.ஜ.க.வின் மதவாதப் போக்குக்கு ஆதரவில்லை, அதன் ஆட்சியில் மக்களுக்கு நம்பிக்கையில்லை என்பதை வெளிப்படுத்தின.

## 8.3.13. அரசியலமைப்புச் சட்ட மறு ஆய்வுக் கமிஷன் (Constitution Review Commission)

நடைமுறையில் உள்ள இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தைப் பற்றிக் குறை கூறிவந்த பா.ஜ.க. ஆட்சிப் பொறுப்பேற்றவுடன் 2002 பிப்ரவரி மாதம் தேசிய அரசியலமைப்புச் சட்ட மறுஆய்வுக் கமிஷனை ஓய்வுபெற்ற உச்சநீதிமன்றத் தலைமை நீதிபதி எம்.என். வெங்கடாசலய்யாவின் தலைமையில் நியமித்தது. இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் எந்தப் பகுதிகளை மறுஆய்வு செய்ய வேண்டும் என்று கூறப்படாமையால் இக்கமிஷன் பின்வரும் பொருள்கள் பற்றி மறு ஆய்வுச் செய்தது 1) அடிப்படை உரிமைகள் 2) வழிகாட்டு விதிகள் மற்றும் அடிப்படைக் கடமைகள் 3) தேர்தல் நடைமுறை மற்றும் அரசியல் கட்சிகள் 4)நாடாளுமன்றம் மற்றும் மாநில சட்டமன்றங்கள் 5) ஆட்சித்துறை மற்றும் பொது நிர்வாகம் 6) நீதித்துறை 7) மத்திய-மாநில உறவுகள் 8) அதிகாரப் பரவல் மற்றும் அதிகாரப் பகிர்வு 9) சமூக பொருளாதார மாற்றம்.

அரசியலமைப்புச் சட்ட மறுஆய்வுக் கமிஷன் சட்டத் திருத்தம், உரிமைகளில் பாகுபாடு, பத்திரிகைச் சுதந்திரம், நீதிமன்ற அவமதிப்பு,

குடிமக்கள் சட்டப்புறம்பாகக் கைது செய்யப்பட்டுக் கொடுமைப்படுத்தப்படல், பொதுமக்கள் பாதுகாப்பு, தடுப்புக் காவல், வழக்குகளை விரைவாகப் பைசல் செய்தல், நீதித்துறைச் சீர்திருத்தம், குழந்தைகள் உரிமைகள், மக்கள் தொகைக் கட்டுப்பாடு, கட்சித்தாவல், தலைமைத் தேர்தல் ஆணையத்தலைவர் தேர்வு, அரசியல்வாதிகள் லாபம் தரக்கூடிய பதவிகளை வகித்தல், நாடாளுமன்ற உறுப்பினர்களின் காப்புரிமை, தேசிய நீதிக் கமிஷன் பற்றியெல்லாம் பரிந்துரைகள் செய்தது. குறிப்பாக நாடாளுமன்ற ஸ்திரத்தன்மையைப் பாதுகாக்க நம்பிக்கையில்லாத் தீர்மானத்தோடு மாற்றுப் பிரதமருக்கான பெயரையும் கொடுக்க வேண்டும் என்று இக்கமிஷன் கருத்து தெரிவித்தது.

## 8.3.14. குஜராத் கலவரம் கோத்ரா நிகழ்ச்சி

அயோத்தியில் பாபர் மசூதி இடித்துத் தரைமட்டமாக்கப்பட்ட அதே இடத்தில் ராமர் கோயில் கட்டவேண்டுமென்பதற்காக விஸ்வ இந்து பரிஷத் (VHP) ராம நாம ஜெப நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்திருந்தது. அதில் கலந்துக் கொண்டு அயோத்தியிலிருந்து அகமதாபாத்துக்கு சபர்மதி விரைவு வண்டி (Sabarmati Express) யில் விஎச்பி தொண்டர்களும் 2002 பிப்ரவரி 27 அன்று ஆதரவாளர்களும் திரும்பிக்கொண்டிருந்தனர். விரைவு வண்டி காலை 7.43 மணிக்கு கோத்ரா ரயில் நிலையம் முதல் பிளாட்பாரத்தில் வந்து நின்றது. வண்டியிலிருந்து இறங்கிய விஎச்பி பயணிகள் முஸ்லீம் சிற்றுண்டி விற்பனையாளர்களிடம் வாக்குவாதம் செய்ததாகவும், “ஜெய் ஸ்ரீராம்” எனக் கூறுமாறு வலியுறுத்தப்பட்டதாகவும். வாக்குவாதம் கைகலப்பில் முடிந்ததாகவும், ஒரு முஸ்லீம் வியாபாரி தாக்கப்பட்டதாகவும், ஒரு முஸ்லீம் பெண்ணை ரயில் பெட்டிக்குள் கடத்திச் செல்ல முயன்றதாகவும் கூறப்படுகிறது. நிலைமை மோசமாகவே ரயில் புறப்பட்டது.

புறப்பட்ட சில நிமிடங்களில் ரயில் வண்டி நிறுத்தப்பட்டது. ரயிலுக்கு வெளியிலிருந்தும் உள்ளிருந்தும் கற்கள் வீசப்பட்டன. ரயில் வண்டிக்கு வெளியே பெருங்கூட்டம் கூடிவிட்டது. புறப்பட்ட வண்டி மீண்டும் நிறுத்தப்பட்டது. அப்போதுதான் சபர்மதி விரைவுவண்டியின் S6 பெட்டித் தீப்பற்றி எரிந்தது. இதில் 26 பெண்கள் 12 குழந்தைகள் உட்பட 58 பேர் உயிரிழந்தார்கள்.

## 8.3.15. இனப்படுகொலை

குறிப்பு

கோத்ரா கோர நிகழ்ச்சியைக் கண்டித்து விஎச்பி (VHP) பா.ஜ.க. வின் ஆதரவுடன் பிப்ரவரி 28 தேதி குஜராத்தில் பந்த் நடத்த அழைப்புவிடுத்தது. பந்த் குஜராத் முழுவதும் காட்டுத் தீ போல் பரவியது. முஸ்லீம்கள் குறிவைத்துத் தாக்கப்பட்டனர். முஸ்லீம்களின் கடைகளும், ஓட்டல்களும், தொழிற்கூடங்களும் சூறையாடப்பட்டன எரிக்கப்பட்டன, நொறுக்கப்பட்டன பலர் எரித்துக் கொல்லப்பட்டனர் பெண்கள் கற்பழிக்கப்பட்டனர் குழந்தைகள் வெட்டிக் கொல்லப்பட்டன. இனக்கொலை (Genocide) கட்டவிழ்த்து விடப்பட்டது. மார்ச் 3 நாள் ராணுவத்தைப் பயன்படுத்துவதற்குள் (மார்ச் 3) இரண்டாயிரத்தும் (2,000) மேற்பட்டோர் கொல்லப்பட்டதாகவும், இரண்டு இலட்சதித்துக்கும் (2,00,000) மேற்பட்டோர் வீடிழந்து அனாதைகளாயினர் என்றும் அதிகாரபூர்வமற்றக் கணக்கெடுப்பு கூறியது.

## 8.3.16. குடியரசுத் தலைவர் தேர்தல், 2002 ஆகஸ்டு

இந்திய ஏவுகணை தந்தை என்று அழைக்கப்படும் ஏ.பி.ஜே.அப்துல் கலாமுக்கு கூட்டணிக் கட்சிகளும், காங்கிரசும், சமாஜ்வாதிக் கட்சியும் ஆதரவுத் தெரிவித்தன. ஆனால், இடது சாரிக் கட்சிகள் சுதந்திரப் போராட்ட வீராங்கனை காப்டன் லட்சுமி சகாலை மாற்று வேட்பாளராக நிறுத்தின. ஜூலை 18 நாளில் குடியரசு தலைவர் தேர்தலில் அப்துல் கலாம் வெற்றிப் பெற்றார்.

குடியரசு துணைத் தலைவர் பற்றியும் கட்சிகளிடையே கருத்து வேறுபாடுகள் நிலவின. பா.ஜ.க.விற்குப் பெரும்பான்மை பலம் இருந்ததால் முன்னாள் ராஜஸ்தான் முதலமைச்சரும், பா.ஜ.க. வின் மூத்தத் தலைவர்களில் ஒருவருமான பைரோன் சிங் சிகாவத்தைத் துணைத் தலைவர் பதவிக்கான வேட்பாளராக அறிவித்தது.

## 8.3.17. வீழ்ச்சியை நோக்கி அரசு

2002-ஆம் ஆண்டில் தேசிய ஜனநாயகக் கூட்டணி அரசாங்கத்தின் ஆட்சித்திறன் படிப்படியாகக்குறைந்து வந்தது. ஆண்டுத் துவக்கத்தில்

பா.ஜ.க. உத்திரப் பிரதேசம், உத்தராஞ்சல், பஞ்சாப் மாநில சட்டமன்றத் தேர்தல்களில் தோல்வியுற்றதும், அதன்பின் நடைபெற்ற ஜம்மு-காஷ்மீர் சட்டமன்றத் தேர்தலில் நிராகரிக்கப்பட்டதும் பா.ஜ.க. தலைமையிலான கூட்டணி அரசாங்கத்தின் நிர்வாகத் திறனைப் பெரிதும் பாதித்தது. பெட்ரோல் பம்புகள், கெரோசின், மற்றும் கேஸ் முகவர்களுக்கு முறைகேடாகக் கொடுக்கப்பட்டதில் உள்ள ஊழல் பற்றிய புகார் பூதாகரமாக உருவெடுத்தது. பிரதமர் வாஜ்பாய் 2000 ஜனவரிக்குப்பின் கொடுக்கப்பட்ட அனைத்து முகமைகளையும் ஆகஸ்ட் 9 ரத்துச் செய்துப் பிறப்பித்த உத்தரவை ஆகஸ்ட் 28 உச்ச நீதிமன்றம் தள்ளுபடி செய்தது. அதேபோன்று மத்திய அரசின் ஆதரவோடு குஜராத் மாநில சட்டமன்றத் தேர்தலை முன்கூட்டியே நடத்தத்திட்டமிட்ட மாநில அரசாங்கத்தின் முடிவைத் தடைசெய்த செப்டம்பர் 2 தேர்தல் கமிஷன் உத்தரவை உச்சநீதிமன்றம் உறுதிசெய்தது. இரண்டு பயங்கரவாதிகள் செப்டம்பர் 24 மற்றும் 25 தேதிகளில் குஜராத் அக்ஷர்தாம் கோயிலுக்குள் நுழைந்து வெறித்தாக்குதல் நடத்தினர். மத்திய அரசாங்கத்தால் காவிரி நதி நீர்ப் பங்கீடு பற்றி தமிழ்நாட்டுக்கும் கர்நாடகத்துக்குமிடையே நிலவிய மாநிலங்களுக்கிடையேயான பிரச்சனைக்குத் தீர்வு காணமுடியவில்லை. காஷ்மீரிலும் வடகிழக்கு மாநிலங்களிலும் அரசாங்கத்துக்கு எதிரான கிளர்ச்சிகள் (insurgencies) அதிகரித்து வந்தன. ஆண்டு முழுவதும் அரசாங்கம் மதவாத அரசியலிலும், பயங்கர வாதத்துக்கும் எதிரான போரிலும் கவனத்தைச் செலுத்தியதால் நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் பின்னடைவு ஏற்பட்டது. பங்கு விலக்கல் கொள்கைப் பற்றி தேசிய ஜனநாயகக் கூட்டணி கட்சிகள் முரண்பட்டப் போக்குகளைக் கொண்டிருந்தன. இவையாவும் பா.ஜ.க. தலைமையிலான தேசிய ஜனநாயக கூட்டணி அரசாங்கத்தின் வீழ்ச்சிக்கான அறிகுறிகளாகக் கருதப்பட்டன.

## 8.3.18. கட்சித்தாவல் தடைத்திருத்தச் சட்டம், 2003

அரசியல் அமைப்புச் சட்டக் கமிஷன், நாடாளுமன்ற நிலைக்குழு போன்ற அமைப்புகள் கட்சித்தாவல் தடைச்சட்டத்தில் தக்கத் திருத்தங்கள் கொண்டுவர வேண்டும் என்று கூறப்பட்டது. 2003 ஏப்ரலில் வாஜ்பாய் அரசாங்கம் திருத்தம் கொண்டுவரத் தீர்மானித்தது. அதன்படி

கட்சித்தாவல் தடை திருத்தச் சட்டம், 2003 (Anti-defection Amendments Act, 2003) கொண்டுவரப்பட்டது (டிச). இச்சட்டம் 1) ஒரு கட்சியின் மூன்றில் ஒரு பகுதியினர் கட்சியிலிருந்து விலகுவதற்கும், விலகியவர்கள் ஆதாயப் பதவி (Office of Profit) வகிப்பதற்கும் தடை விதித்தது 2) அமைச்சர்களின் எண்ணிக்கை நாடாளுமன்ற அல்லது மாநில சட்ட மன்ற உறுப்பினர்களின் எண்ணிக்கையில் 15% சதவிகிதத்துக்கு மிகாமல் இருக்க வேண்டும் என்று உச்சவரம்பு நிர்ணயித்தது.

கட்சித்தாவல் தடைத் திருத்தச் சட்டம் சமகால இந்திய கட்சி அரசியலில் படிந்த களங்கத்தைப் போக்கியது அரசாங்கத்தின் உறுதித் தன்மைக்கு வழி வகுத்தது. முக்கியச் சட்ட ஓட்டையை அடைத்தது. இனி கட்சியின் பெயரால் தேர்தலில் வெற்றிப் பெற்றுப் பின்னர் கட்சித்தாவலில் ஈடுபடமுடியாது. அதேபோன்று பதவியில் நீடிக்க விருப்பம்போல் அமைச்சரவையை விரிவுபடுத்த இயலாது. எனினும் இத்திருத்தச் சட்டத்திலும் சில குறைபாடுகள் உள்ளன. 1) கட்சித்தாவல் தடைச் செய்யப்பட்டதேயன்றி, கட்சியைவிட்டு விலகியோர் மக்களவை.்.சட்டமன்ற உறுப்பினர் பதவியைப் பறிக்க வழி செய்யவில்லை கட்சியை விட்டு விலகினாலும், சட்டமன்ற உறுப்பினர்களாகவே நீடிப்பர் 2) இச்சட்டம் ஒரு கட்சி ஒட்டுமொத்தமாகக் கூட்டணியிலிருந்து விலகி மற்றொரு கூட்டணியில் கட்சிகளோடு கூட்டணி அமைத்தார். மூன்றாவது அணி பற்றிப் பேசிக்கொண்டிருந்த இடதுசாரிக்கட்சிகளும் மதச்சார்பற்றக் கூட்டணி அமைத்த காங்கிரஸை ஆதரிக்க முன்வந்தன. இரு பெரும் அணிகளும் தேர்தல் களத்தில் சந்தித்தன.

## 8.3.19. 2004 ஆம் ஆண்டுப் பொதுத்தேர்தல்

2003 டிசம்பரில் நான்கு மாநிலங்களுக்கு நடைப்பெற்றத் தேர்தலில் டெல்லியை தவிர பா.ஜ.க. மற்ற மாநிலங்களில் வெற்றிப்பெற்றது. இதனால் புது நம்பிக்கைப்பெற்ற இக்கட்சி 13-வது மக்களவையின் ஆயுட்காலம் முடிவதற்கு முன்னேரே, கலைத்துவிட்டு தேர்தலைச் சந்திக்க தயாரானது. மிகுந்த நம்பிக்கையோடு எதிர்பார்ப்புகளோடு இத்தேர்தல் நடைப்பெற்றது. 14வது மக்களவைத்

தேர்தலில் பா.ஜ.க 138 இடங்களைப் பெற்று அதிர்ச்சித் தோல்வி அடைந்தது. காங்கிரஸ் 145 இடங்களைப் பெற்று ஆச்சர்ய வெற்றி பெற்றது. இம்முடிவுகள் இரு கட்சிகளுக்குமே எதிர்பாராதவையாகும். இத்தேர்தல் முடிவுகள் அனைத்துக் கருத்துக் கணிப்புகளையும் (Opinion Polls), தேர்தல் கணிப்புகளையும் (Exit Polls) பொய்ப்பித்துவிட்டன.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

5. இரண்டாவது அணு வெடிப்புச் சோதனை எப்போது நடத்தப்பட்டது?
6. பஸ் இராஜதந்திரத்தை ஏற்பாடு செய்தவர் யார்?
7. பயங்கரவாதத் தடுப்புச் சட்டம் எப்போது நிறைவேற்றப்பட்டது?
8. சர்வ சிக்ஷா அபியனின் அடிப்படை நோக்கம் என்ன?
9. 13 வது மக்களவைத் தேர்தல் எப்போது நடத்தப்பட்டது?
10. 2002 ல் இந்தியாவின் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் யார்?

## 8.4. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்

1. மண்டல் ஆணையத்தின் அடிப்படை நோக்கம் பிற பிற்படுத்தப்பட்ட வகுப்பினருக்கு (ஓபிசி) இட ஒதுக்கீடு வழங்குவதாகும்.
2. முதன்முதலில் மண்டல் கமிஷன் அறிக்கையை 1990- இல் வி.பி. சிங் செயல்படுத்தினார்.
3. புதிய பொருளாதாரக் கொள்கை அறிமுகப்படுத்தப்பட்டபோது நரசிம்மராவ் இந்தியாவின் பிரதமராக இருந்தார்.
4. முன்னாள் நிதியமைச்சர் டாக்டர் மன்மோகன் சிங் முதல் முறையாக உரத்திற்கான மானியங்களை திரும்பப் பெறுவதற்கான திட்டத்தை முன்வைத்தார்.
5. 1998-ஆம் ஆண்டு 11 மற்றும் 13 ஆம் தேதிகளில், இரண்டாவது அணு வெடிப்புச் சோதனை நடத்தப்பட்டது.
6. முன்னாள் பிரதமர் ஏ.பி. வாஜ்பாய் 1999 ஆண்டில் பஸ் இராஜதந்திரத்தை ஏற்பாடு செய்தார்.
7. பயங்கரவாதத் தடுப்புச் சட்டம் மார்ச் 2002 ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்டது.

குறிப்பு

8. அனைவருக்கும் தொடக்கக் கல்வி என்பது சர்வ சிக்ஷா அபியனின் அடிப்படை நோக்கமாகும்.

9. 13 வது மக்களவைத் தேர்தல் 1999- ஆம் ஆண்டில் நடத்தப்பட்டது.

10. ஏ.பி.ஜே.அப்துல் கலாம் 2002 ல் இந்திய ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## 8.5. அத்தியாயச் சுருக்கம்

- இரண்டாவது பிற்படுத்தப்பட்டோருக்கான இடஒதுக்கீடு ஆணை ஜனதா அரசாங்கத்தால் 1979 ஆம் ஆண்டு மண்டல் தலைமையில் நியமிக்கப்பட்டது.
- இந்திரா காந்தியின் காலத்தில் கமிஷன் தனது அறிக்கையைச் சமர்ப்பித்தது. ஆனால் அதை 1990 ஆண்டில் வி.பி. சிங் நடைமுறைப்படுத்தினார்.
- ஆனால் இதற்கு எதிராக வட இந்தியாவில் போராட்டங்கள் வெடித்தன. இறுதியாக உச்சநீதிமன்றம் தற்காலிகத் தடைவிதித்தது.
- நரசிம்ம ராவ் 1991 ல் ஆட்சிக்கு வந்தார். அவருடைய அரசாங்கம் புதிய பொருளாதாரக் கொள்கையை அறிமுகப்படுத்தியது அதன்படி தனியார்மயம், தாராளமயம் மற்றும் உலகமயம் ஆகியவைப் பொருளாதாரத்தின் முக்கிய அம்சமாகளாக மாறின.
- இச்சீர்திருத்தங்களை அப்போதைய நிதியமைச்சர் மன்மோகன் சிங் அறிமுகப்படுத்தினார்.
- 1998 ல் ஏ.பி வாஜ்பாய் தலைமையில் பாஜக ஆட்சிக்கு வந்தது.
- வாஜ்பாய் அரசாங்கம் தனது முதல் பதவிக் காலத்தில் அணுசக்தி சோதனை மற்றும் பஸ் இராஜதந்திரம் போன்ற தைரியமான நடவடிக்கைகளை எடுத்தது.
- இருப்பினும், அதிமுக வாபஸ் பெற்றதன் காரணமாக 1999 ஆண்டில் மக்களவையில் பாஜக அரசு ஒரு வாக்கு வித்தியாசத்தில் பெரும்பான்மையை இழந்தது.

- 13- வது மக்களவைத் தேர்தல் அதே ஆண்டில் நடத்தப்பட்டது, அந்தத் தேர்தலில், வாஜ்பாயின் தலைமை மற்றும் கார்கிலில் வெற்றி, தேசிய ஜனநாயக கூட்டணிக்கு அரிதிப்பெரும்பான்மை கிடைக்கச் செய்தது. 13 வது மக்களவை அதன் முழு காலத்தையும் (1999-2004) வெற்றிகரமாக நிறைவு செய்தது.
- இந்தக் காலகட்டத்தில் தீவிரவாதச் செயல்கள் பெருகின. குறிப்பாக இந்திய ஏர்லைன்ஸ் விமானம் கடத்தப்பட்டதும் மற்றும் 2001- ஆம் ஆண்டு பாராளுமன்ற தீவிரவாதத் தாக்குதலுக்குள்ளானதும் குறிப்பிடத்தக்க நிகழ்வுகள் ஆகும்.
- பயங்கரவாதத்தைக் கட்டுப்படுத்த வாஜ்பாய் அரசாங்கம் கடுமையான நடவடிக்கைகளை எடுத்தது. இதன் ஒரு பகுதியாக 2002 ஆண்டில், பயங்கரவாதத் தடுப்புச் சட்டம் கொண்டுவரப்பட்டது.
- என்.டி.ஏ. அரசாங்கம் அதன் பதவிக்காலத்தில் உள்கட்டமைப்பு மற்றும் கிராமப்புற வளர்ச்சியிலும் கவனம் செலுத்தியது.

## 8.6. முக்கியச் சொற்கள்

**பெரியப் பொருளாதாரம்:** பெரியப் பொருளாதாரம் (Macro Economic) என்பது பொருளாதாரத்தின் ஒரு கிளை ஆகும். இது ஒட்டுமொத்தப் பொருளாதாரத்தின் செயல்திறன், கட்டமைப்பு, நடத்தை மற்றும் முடிவெடுப்பதைக் கையாளுகிறது. இதில் பிராந்திய, தேசிய மற்றும் உலகளாவிய பொருளாதாரங்கள் அடங்கும்.

**சக்தி நடவடிக்கை:** மே 11-13, 1998 அன்று, இந்தியா இரண்டாவது முறையாக அணுவெடிப்புச் சோதனையை நடத்தியது. இச்சோதனையின் குறியீட்டுப் பெயர் சக்தி.

**தாராளமயம்:** புதிய பொருளாதாரக் கொள்கையின் ஒரு அம்சமாகும். தேவையில்லாத கட்டுப்பாடுகளை விளக்கித் தொழிற்செய்வதற்கு ஏற்ற எளிய முறைகளை தாராளமயம் என்று அழைக்கப்படுகிறது.

**தனியார்மயம்:** புதிய பொருளாதாரக் கொள்கையின் அடுத்து ஒரு அம்சம் தனியார்மயமாக்கம் இதன்படி அரசு பங்குகள் படிப்படியாக தனியார்த்துறைக்கு விற்பனை செய்யப்படும். மேலும்,

குறிப்பு

நிறுவனங்களுக்கிடையே போட்டியை ஏற்படுத்துவதற்கு இத்தகைய தனியார்மயக்கோட்பாடு அவசியமாகிறது.

**அந்தோதியா அன்ன யோஜனா:** லட்சக் கணக்கான ஏழ்மையான குடும்பங்களுக்கு அதிக மானியத்துடன் கூடிய உணவை வழங்க இந்திய அரசு வழங்கும் திட்டம்தான் அந்தோதியா அன்ன யோஜனா.

## 8.7. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

**குறுகிய வினாக்கள்**

1. 'மண்டல் கிளர்ச்சி' குறித்து எழுதுக.
2. 12 வது மக்களவைத் தேர்தலின் முடிவுகளை சுருக்கமாக எழுதுக.
3. வாஜ்பாயின் பதவிக்காலத்தில் அறிவியல் மற்றும் தொழில்நுட்ப வளர்ச்சிப் பற்றி கூறுக.

**நீண்ட வினாக்கள்**

1. மண்டல் ஆணையம் மற்றும் அதன் பரிந்துரைகள் குறித்து கட்டுரை வடிவில் எழுதுக.
2. புதிய பொருளாதாரக் கொள்கையை க் குறித்து விளக்குக.
3. வாஜ்பாய் ஆட்சிக் காலத்தில் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையிலான உறவுநிலைப் பற்றி விளக்குக.
4. வாஜ்பாய் ஆட்சிக் காலத்தில் 'கிராம அபிவிருத்தி திட்டம்' குறித்து கட்டுரை வடிவில் எழுதுக.

## 8.8. கூடுதல் வாசிப்புகள்

Ananth V. Krishna. 2011. *India since Independence: Making Sense of Indian Politics.* New Delhi: Pearson.

Bipan Chandra, Miridula Mukherjee, Aditya Mukherjee. 2008. *India since Independence*, Haryana: Penguin Books.

G. John Gilbert. 2006. *Contemporary History of India*, New Delhi: Anmol Publications Pvt. Ltd.

G. Vengatesan. 2007. *History of contemporary India 1947-2007*, Rajapalayam: VC Publications.

R.S. Chaurasia. 2002. *History of Modern India 1707 AD upto 2000 AD.* New Delhi: Atlantic Publishers & Distributors.

Sriram Maheshwari. 1991. *The Mandal Commission and Mandalisation: A Critique.* New Delhi: Concept Publishing Company.

பிபன் சந்திரா, மிருதுலா முகர்ஜி, ஆதித்யா முகர்ஜி. 2015.*சுதந்திரத்திற்குப் பிறகு இந்தியா,* சென்னை: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.

வெங்கடேசன்.க. 2012. *சமகால இந்திய வரலாறு 1947-2012,* ராஜபாளையம்: வி.சி.பப்ளிகேஷன்ஸ்.

## அலகு-9

## மன்மோகன்சிங் - நரேந்திரமோடி உள்நாட்டு, வெளிநாட்டு கொள்கைகள்

**பாட அமைப்பு**

9.1. முன்னுரை
9.2. நோக்கங்கள்
9.3. ஐக்கிய முற்போக்குக் கூட்டணி ஆட்சி, 2004-2009
9.3.1. சுனாமிச் சவால், 2004
9.3.2. முற்போக்குத் திட்டங்கள் தேசியக் கிராமப்புறச் சுகாதாரத் திட்டம்
9.3.3. சச்சார் கமிஷன், 2005
9.3.4. நிர்வாகச் சீர்திருத்தக் கமிஷன்
9.3.5. தேசிய அறிவுக் கமிஷன் (National Knowledge Commission)
9.3.6. தகவல் அறியும் உரிமைச் சட்டம்
9.3.7. முல்லை பெரியார் அணைத் தகராறு
9.3.8. நதிகள் ஒருங்கிணைப்பு (Interlinking of Rivers)
9.3.9. பாரத் நிர்மாண் திட்டம், 2006
9.3.10. கட்டாயத் திருமணப்பதிவு(Compulsory Registration of Marriage)
9.3.11. தேசிய கிராம வேலைவாய்ப்பு உத்திரவாதத் திட்டம் -

**குறிப்பு**

(National Rural Employment Guarantee Scheme)
9.3.12. காவேரி தீர்ப்பாயத்தின் தீர்ப்பு
(Cauvery Tribunal Award)
9.4. ஐக்கிய முற்போக்குக் கூட்டணி ஆட்சி 2, 2009-2014
9.4.1. அமைச்சரவை
9.4.2. கற்கும் பாரதம்
9.4.3. தேசிய அடையாள அட்டை
9.4.4. வறுமைக் கோடு
9.4.5. ஊழல் எதிர்ப்பு இயக்கம்
9.4.6. லோக்பால் மசோதா முதல் முயற்சி
9.4.7. உணவுப் பாதுகாப்பு
9.4.8. தேசிய ஒருமைப்பாட்டு மன்றம்
9.4.9. மன்மோகன் சிங்கின் வெளிநாட்டுக் கொள்கை
9.4.9.1. இந்திய-அமெரிக்க உறவு
9.4.9.2. இந்திய-அமெரிக்க அணு ஆற்றல் ஒப்பந்தம்
9.4.9.3. மன்மோகன் சிங்கின் அமெரிக்கப் பயணம்
9.4.9.4. ஒபாமாவின் வருகை
9.4.9.5. ஹிலாரி கிளிண்டன் வருகை
9.4.10. இந்திய-ரஷ்ய உறவு
9.4.11. அண்டை நாடுகளுடனான உறவு
9.4.11.1. இந்திய-பாகிஸ்தான்
9.4.11.2. இந்திய-சீன உறவு
9.4.11.3. இந்திய-இலங்கை உறவு
9.5. 16- வது மக்களவைத் தேர்தல்
9.5.1. தெலுங்கானா 29-வது மாநிலமாகிறது
9.5.2. கருப்புப் பணத்தை ஒழித்தல்
9.5.3. பணமதிப்பிழப்பு நடவடிக்கை
9.5.4. இந்தித் திணிப்பைச் சுற்றியுள்ள சர்ச்சை
9.5.5. காவிரி நீர்ப் பகிர்வு இறுதி தீர்ப்பு
9.5.6. சரக்கு மற்றும் சேவை வரி அறிமுகம்
9.5.7. நீதிபதிகள் நியமன மசோதா
9.5.8. நரேந்திர மோடி வெளிநாட்டுக் கொள்கை
9.5.8.1. இந்திய-அமெரிக்க உறவுகள்

9.5.8.2. இந்திய-ரஷ்யா உறவுகள்
9.5.8.3. இந்திய-பாகிஸ்தான் உறவுகள்
9.5.8.4. இந்தியா-சீனா உறவுகள்
9.6. 17-வது மக்களவைகானத் தேர்தல்
9.7. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்
9.8. அத்தியாயச் சுருக்கம்
9.9. முக்கியச் சொற்கள்
9.10. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்
9.11. கூடுதல் வாசிப்புகள்

## 9.1. முன்னுரை

2004-ஆம் ஆண்டு 14-வது மக்களவைக்கு நடைப்பெற்றத் தேர்தலில் அதிசயமூட்டும் வகையில் வாஜ்பாய் தலைமையிலான பாஜக தோல்வியடைந்தது. அதே சமயத்தில், மற்றக்கட்சிகள் ஆதரவோடு காங்கரஸ் கூட்டணியாட்சியை அமைத்தது. இந்தியா புதிய பொருளாதாரக் கொள்கையின் தந்தை என்று கருதப்படும் மன்மோகன் சிங் பிரதமராகப் பொறுப்பேற்றார். 10 ஆண்டுகள் அதிகாரத்திலிருந்த ஐக்கிய முன்னணிப் பல்வேறுத் திட்டங்களை நடைமுறைப்படுத்தியது. குறிப்பாக, 100 நாள் வேலைவாய்ப்புத்திட்டம், தகவல் அறியும் உரிமைச்சட்டம், குடும்ப வன்முறைத் தடுப்புச் சட்டம், தேசிய அடையாள அட்டை (ஆதார்) அறிமுகம் மற்றும் பிற உள்நாட்டுத் திட்டங்களை செயல்படுத்தியது. அதுபோலவே, வெளிநாடுகளோடு குறிப்பாக, அமெரிக்க, ரஷ்யா, சீனா, பாகிஸ்தான் ஆகிய நாடுகளோடு இராஜதந்திர ரீதியில் மேற்கொள்ளப்பட்டச் செயல்பாடுகள் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது.

16-வது மக்களவைத் தேர்தல் 2014-ஆம் ஆண்டில் நடைப்பெற்றது. இந்தத் தேர்தலின் முடிவுகள் மூன்று முக்கியத்துவத்தைக் கொண்டுள்ளது. 1. 10 ஆண்டுகளுக்குப் பிறகு பாஜக மீண்டும் ஆட்சியைக் கைப்பற்றியது. 2. 1984-அம் ஆண்டுக்குப் பிறகு நாடாளுமன்றத்தில் ஒரு கட்சி தனிப்பெரும்பான்மையுடன் ஆட்சியமைத்தது. 3. நேரு, இந்திரா, ராஜீவ் மற்றும் வாஜ்பாயைத் தொடர்ந்து நரேந்திர மோடி இந்தியாவின் தனிப்பெறும் அடையாளமாகக்

காட்சியளிக்கிறார். நரேந்திர மோடி ஆட்சிக்கு வந்தவுடன் கருப்புப் பணத்தை ஒழிப்பதற்கு பல்வேறு முயற்சிகளை எடுக்கப்பட்டது. அதில் ஒரு முக்கிய நடவடிக்கையாக 2016-ஆம் ஆண்டில் ரூபாய் 1000 மற்றும் 500 நோட்டுக்கள் செல்லாது என அறிவித்தது. மேலும், தேசம் முழுவதும் ஒரே விதமான மறைமுக வரியை (சரக்கு மற்றும் சேவை வரி) அறிமுகப்படுத்தியது. மேலும், முந்தைய அரசுகளைப்போன்றே இந்த அரசும் தன்னுடைய இணக்கமான வெளிநாட்டுக்கொள்கையை நடைமுறைப்படுத்தி வருகிறது. இதன் அடிப்படையில் இந்த அத்தியாயமானது மேலேக் குறிப்பிட்ட முக்கிய அம்சங்களை குறித்து விளக்குகிறது.

## 9.2. நோக்கங்கள்

இந்தப் பாடத்தைப் படித்த பிறகு, கீழ்க்கண்டவற்றை அறிய முடியும்:

- மன்மோகன் சிங்கின் உள்நாட்டு நிர்வாகத்தை அறிந்துக் கொள்ள உதவுகிறது.
- அவரது வெளியுறவுக் கொள்கைகளைப் பற்றிப் புரிந்துக் கொள்ள முடியும்.
- நரேந்திர மோடியின் உள் மற்றும் வெளிநாட்டுக் கொள்கையை அறிந்துக் கொள்ள முடியும்.

## 9.3. ஐக்கிய முற்போக்குக் கூட்டணி ஆட்சி, 2004-2009

**கூட்டணி அரசாங்கம்**

14-வது மக்களவைத் தேர்தல் சமகால இந்திய வரலாற்றில் மாபெரும் மாற்றத்தை ஏற்படுத்தியது. பா.ஜ.க. தோல்வியைத் தழுவியது, காங்கிரஸ் வெற்றிவாகைச் சூடியது. 2004 மே 22-ம் நாள் டாக்டர் மன்மோகன் சிங் இந்தியாவின் 14-வது பிரதமராகப் பொறுப்பேற்றார். மார்க்சிய கம்யூனிஸ்ட் கட்சியின் மூத்த மக்களவை உறுப்பினர் சோம்னாத் சட்டர்ஜி சபாநாயகராகவும், காங்கிரஸ் பிரமுகர் பிரணாப் முகர்ஜி மக்களவைத் தலைவராகவும், அடல் பிகாரி வாஜ்பாயி பா.ஜ.க. மக்களவைக் கட்சித் தலைவராகவும், எல்.கே.அத்வானி எதிர்க்கட்சித் தலைவராகவும் செயல்பட்டனர். காங்கிரஸ் தலைவர் சோனியா காந்தி

ஐக்கிய முற்போக்குக் கூட்டணி மற்றும் தேசிய ஆலோசனைக் குழுவின் (National Advisory Committee) தலைவரானார். குறைந்தபட்சச் செயல் திட்டத்துடன் (Common Minimum Programme) ஐக்கிய முற்போக்கு அரசாங்கம் இடதுசாரிக் கட்சிகளின் ஆதரவோடு செயல்படத் துவங்கியது.

## 9.3.1. சுனாமிச் சவால், 2004

ஐக்கிய முற்போக்குக் கூட்டணி ஆட்சிப் பொறுப்பேற்ற ஆண்டு இறுதியில் சுனாமி (Tsunami) ஆழிப் பேரழிவுச் சவாலை எதிர்கொள்ள வேண்டியதாயிற்று. 2004 டிசம்பர் 26-ம் நாள் ஏற்பட்ட அசுரச் சூறாவளி மற்றும் கடல் கொந்தளிப்பால் தமிழ்நாடு, புதுச்சேரி, கேரளா மற்றும் ஆந்திர மாநிலங்களின் கடலோரப் பகுதிகள் பெரிதும் பாதிக்கப்பட்டன. பல்லாயிரக்கணக்கானோர் உயிரையும், உடமைகளையும் இழந்தனர். புதிதாகப் பதவியில் பொறுப்பேற்ற ஐக்கிய முற்போக்குக் கூட்டணி அரசாங்கம் இச்சவாலைத் துணிவுடனும் திறமையுடனும் சமாளித்தது. துயர் துடைப்புப் பணிகள் போர்க்கால அடிப்படையில் மேற்கொள்ளப்பட்டன. தேசிய பேரழிவு மேலாண்மை ஆணையம் (National Disation Management Agency) அமைக்கப்பட்டது. சுனாமி எச்சரிக்கை முறை (Tsunami Warning System) உருவாக்கப்பட்டது. பாதிக்கப்பட்டோரின் மறுவாழ்வுப் பணிகள் முடுக்கிவிடப்பட்டன. மத்திய அரசு சுனாமிச் சவாலை வெற்றிகரமாகச் சந்தித்து உலக நாடுகளின் பாராட்டைப் பெற்றது.

## 9.3.2. முற்போக்குத் திட்டங்கள் தேசியக் கிராமப்புறச் சுகாதாரத் திட்டம்

2005 ஏப்ரல் மாதம் கிராமப்புறச் சுகாதாரத் திட்டம் (National Rural Healil Mission) நடைமுறைப்படுத்தப்பட்டது. இப்புதிய திட்டத்தின் செயல் நோக்கங்கள் 1) அனைத்துக் கிராம மக்களுக்கும் எளிதில் கிடைக்கக்கூடிய உடல் நலச் சேவை 2) அவர்களின் சுகாதார உடனடி உணவு தேவைகளைப் பூர்த்தி செய்தல்; 3) பேறுகால சிசுச் சாவைக்

குறைப்பது 4) நோய்களைக் கட்டுப்படுத்துதல் 5) ஒருங்கிணைக்கப்பட்ட அகல் விரிவான ஆரம்பச் சுகாதார சேவை அனைவருக்கும் கிடைக்கச் செய்யல் 6) மக்கள் தொகையை நிலைப்படுத்துவதன் மூலம் ஆண்-பெண் விகிதத்தைச் சமன்படுத்துதல் இத்திட்டத்தின் துவக்கமாக ஆரம்பச் சுகாதாரக் கட்டுமான வசதிகள் மிகக் குறைவாக உள்ள 18 மாநிலங்களில் நடைமுறைப்படுத்தப்பட்டு, பின்னர் பிற மாநிலங்களுக்கு விரிவுப்படுத்தப்படுகிறது.

## 9.3.3. சச்சார் கமிஷன், 2005

இந்திய முஸ்லீம்களின் சமூக பொருளாதார கல்வி வேலைவாய்ப்பு மற்றும் அரசியல் நிலை பற்றிக் காலனி ஆட்சிக் காலத்திலிருந்தே தெளிவுப்படுத்தப்படாமல் இருந்து வந்தது. பல குழுக்கள் அமைக்கப்பட்டும் இதுபற்றியத் தீர்வு காணப்படவில்லை. எனவே, பிரதமர் மன்மோகன் சிங் உச்ச நீதிமன்ற நீதிபதி ராஜேந்தர் சச்சார் (Rajendar Sachar) தலைமையில் ஏப்ரல் 2005 அன்று ஏழு உறுப்பினர்களைக் கொண்ட ஒரு உயர்மட்ட ஆய்வுக் குழுவை நியமித்தார். இக்குழு நாடு முழுவதும் பயணம் மேற்கொண்டு தகவல்களைத் திரட்டி, தொகுத்து, பகுத்து இந்திய முஸ்லீம்களின் அடையாளம், பாதுகாப்பு, சமத்துவம் பற்றிய அறிக்கையை அளித்தது. இது சமகால இந்திய வரலாற்றில் மேற்கொள்ளப்பட்ட முறையான, அறிவியல்பூர்வமான முயற்சியாகும்.

## 9.3.4. நிர்வாகச் சீர்திருத்தக் கமிஷன்

இந்திய நிர்வாகத்தை மேலும் சீர்திருத்திச் செம்மைப்படுத்த ஐக்கிய முற்போக்குக் கூட்டணி அரசாங்கம் முடிவு செய்தது. அதன்படி பிரதமர் மன்மோகன்சிங் முன்னாள் கர்நாடக முதலமைச்சர் வீரப்ப மொய்லி (Veerappa Moily) தலைமையில் நிர்வாகச் சீர்திருத்தக் கமிஷனை (Administrative Reforms Commission) நியமித்தார். இக்கமிஷன் அதன் முதல் அறிக்கையை 2006 ஜூன் 9-ம் தேதியும், எஞ்சிய அறிக்கைகளை 2007 பிப்ரவரி 12-ம் தேதியும் அளித்தது.

இவ்வறிக்கைகளில் தகவல் அறியும் உரிமை, வேலை வாய்ப்பு உத்திரவாதம், நெருக்கடி நிர்வாகம், பொது ஒழுங்கு மற்றும் நிர்வாக சிக்கல் தீர்ப்பு, பொதுச் சேவைகள் சீரமைப்பு; உள்ளாட்சி அமைப்புகளுக்கு அதிகாரம் மற்றும் நிதிப் பங்கீடு, நல்லாட்சி, நிர்வாக ஒழுக்கம், பொது நிர்வாக முறைப் புனரமைப்பு, மத்திய அரசாங்க அமைப்பு மாற்றம், அரசாங்க அலுவலர் நிர்வாகம், நிதி மேலாண்மை முறை, கூட்டாட்சி அமைப்பு, மின்அரசாங்க நிர்வாகம், பொது ஒழுங்குப் பாதுகாப்பு, நெருக்கடி நிர்வாகம், மாநில-மாவட்ட நிர்வாகச் சீரமைப்புப் பற்றியப் பரிந்துரைகள் கூறப்பட்டுள்ளன. இக்கமிஷன் பிரதமர் நேருவின் ஆட்சிக் காலத்துக்குப் பின் மேற்கொள்ளப்பட்ட மகத்தான முயற்சியாகும்.

## 9.3.5. தேசிய அறிவுக் கமிஷன் (National Knowledge Commission)

2005 ஜூன் 13-ம் தேதி பிரதமர் மன்மோகன் சிங் பிரபல தகவல் தொழில்நுட்ப வல்லுநர் சாம் பிட்ரோடா (Sam Pitroda) தலைமையில் ஐந்து உறுப்பினர்களைக் கொண்ட தேசிய அறிவுக் கமிஷனை நியமித்தார். இக்குழுவின் நோக்கங்களாவன: 1) 21-ம் நூற்றாண்டின் அறிவுச் சவால்களை சமாளிக்கும் வகையில் கல்வி நிறுவனங்களின் தரத்தையும், போட்டித் திறனையும் வளர்த்தல் 2) அறிவியல் தொழில்நுட்ப ஆய்வுக்கூடங்களில் அறிவுப் பெருக்கத்துக்கு ஆவண செய்தல் 3) "அறிவுப் பொருள் உரிமைகள்" (Intellectual Property Rights) சம்மந்தப்பட்ட நிறுவனங்களின் மேலாண்மைத் திறனை உயர்த்தல் 4) விவசாயம் மற்றும் தொழில் சார்ந்தப் பயன்பாட்டு அறிவை ஊக்குவித்தல் 5) அரசாங்கம் திறமையாகவும், வெளிப்படையாகவும், பொறுப்பாகவும் செயல்பட்டுப் பொது மக்களுக்குச் சேவை செய்வதற்கான வழிமுறைகளைக் கூறல் 6) பொது நலனைப் பெருக்கும் வகையில் அறிவைப் பகிர்ந்து கொள்ளல்.

அறிவுக் கமிஷனின் பல்வேறு செயற்குழுக்கள் சம்மந்தப்பட்ட நிபுணர்கள், பயனாளிகள், பங்குதாரர்களுடன் கலந்துப் பேசி, விவாதித்து அதன் அறிக்கையை 12 ஜனவரி 2007 யில் பிரதமரிடம் சமர்ப்பித்தது. அந்த ஆய்வறிக்கையில் 1) நூலகங்கள் 2) அறிவு 3) மின்-ஆட்சி 4)

மொழி பெயர்ப்பு 5) மொழிகள் 6) தேசிய இணைய தளங்கள் ஆகிய தலைப்புகளில் பல பரிந்துரைகளை இக்கமிஷன் செய்துள்ளது. இப்பரிந்துரைகளில் பல செயல்படுத்தப்பட்டுள்ளன. அறிவுக் கமிஷன் தொடர்ந்து பிரதமருக்கு கல்விக் கொள்கை, ஆராய்ச்சி மையங்கள், அறிவுப் பொருளாதாரத் திறமை பற்றிய ஆலோசனைகளை வழங்கும்.

## 9.3.6. தகவல் அறியும் உரிமைச் சட்டம்

தகவல் அறியும் உரிமைச் சட்டம் (Right to Information Act) 2005 அக்டோபர் 12-ம் நாள் நடைமுறைக்கு வந்தது. இச்சட்டத்தின் சிறப்புக் கூறுகளாவன: 1) இச்சட்டத்தில் “தகவல் அறியும் உரிமை” என்ற சொற்றொடர் தெளிவாக வரையறுக்கப்பட்டுள்ளது 2) இவ்வுரிமை தகவல் வெளிப்படையாகவும், தகவல் தருவோர் தரும் தகவலுக்குப் பொறுப்பாக்கப்படுவதற்கும் வழிவகுக்கிறது 3) இச்சட்டம் மத்திய, மாநில, உள்ளாட்சி மற்றும் அரசு சாரா அமைப்புகளைப் பொது அதிகார மையங்கள் (Public Authorities) என்ற பிரிவின் கீழ் கொண்டு வருகிறது 4) மத்திய தகவல் ஆணையம் (Central Information Commission) அமைக்கப்படல் வேண்டும் 5) அதேபோன்று மாநில தகவல் மையங்களை அமைக்க வேண்டும் 6) குடிமகன் தகவல்கோரும் விண்ணப்பத்தை யாரிடம் சமர்ப்பிக்க வேண்டும் என்ற வழிமுறைகள் விவரிக்கப்பட்டுள்ளன. உரிய அதிகாரிகள் 30 நாட்களுக்குள் தகவல் தர வேண்டும் தவறினால் தண்டிக்கப்படுவார்கள்.

புரட்சிகரமான இச்சட்டம் இதுவரை இரகசியமாக வைத்தும், பாதுகாக்கப்பட்டு வந்த அரசாங்க ஆவணக் கதவுகளை குடிமக்களுக்குத் திறந்து விடுகிறது; தகவல் பரிமாற்றத்தை வெளிப்படையாக்குகிறது. அரசாங்க அதிகாரிகள் பொது மக்களுக்குப் பொறுப்பாக்கப்படுகின்றனர். சுருங்கக்கூறின், தகவல் அறியும் உரிமைச் சட்டம் “திறந்த வெளி அரசாங்கச் சகாப்பதத்தைத்துவக்கி” (Era of Open Government) வைக்கின்றது எனலாம்.

குறிப்பு

### 9.3.7. முல்லை பெரியார் அணைத் தகராறு

முல்லை பெரியார் அணைத் தகராறு (Mullai-Periyar Dam Dispute) தமிழ் நாட்டுக்கும் கேரளாவுக்குமிடையே தீராத் தலைவலியாக இருந்து வந்தது. நவம்பர் 10 நீதிமன்றம் இதற்காக நல்லத் தீர்வைத் தந்தது. அத்தீர்ப்பின்படி, ஒரு தொழில்நுட்ப நிபுணர் குழு அமைக்கப்பட்டது. அக்குழு அணையின் பகுதிகளைப் பார்வையிட்டு இவ்வாணைப் பாதுகாப்புடன் உறுதியாக இருப்பதாகவும், அசாதாரண நீர்க்கசிவு எதுவுமில்லை என்றும் அணையைத் தமிழ்நாடு முறைப்படி பராமரித்துப் பலப்படுத்திக் கொண்டிருப்பதாகவும், அணையின் உயரத்தை 136 அடியிலிருந்து 142 அடியாக உயர்த்துவதால் அணைக்கோ அல்லது சுற்றுச்சூழலுக்கோ எவ்வித பாதிப்பும் ஏற்படாதென்றும் அதன் ஆய்வறிக்கையில் தெளிவுபடுத்தியது. நிபுணர் குழுவின் அறிக்கையை ஏற்றுக் கொண்ட உச்ச நீதிமன்றம், 2006 பிப்ரவரி 27, தமிழ்நாடு அரசு அணையின் உயரத்தை உயர்த்திக்கொள்ள உத்திரவிட்டது. ஆனால், கேரள அரசாங்கம் அந்த உத்திரவுக்கெதிராக மேல்முறையீடு செய்துள்ளது.

### 9.3.8. நதிகள் ஒருங்கிணைப்பு (Interlinking of Rivers)

இந்திய நதிகளை ஒருங்கிணைப்பது சுதந்திர இந்தியாவின் கனவுத் திட்டமாகும், ஐக்கிய முற்போக்குக் கூட்டணி அரசாங்கம் இத்திட்டத்திற்கு முன்னுரிமை முக்கியத்துவம் கொடுத்துச் செயல்வேகத்தைத் துரிதப்படுத்தியது. 2005 ஆகஸ்டு மாதம் உத்திரப்பிரதேசம் மற்றும் மத்தியப் பிரதேச மாநிலங்கள் கென் (Ken) பெட்வா (Betwa) நதிகளை இணைப்பதற்கான புரிந்துணர்வு ஒப்பந்தத்தில் (Memorandum of Understanding) கையொப்பமிட்டன. ரூ.4,263 கோடித் திட்டம் இது. இந்த ஒப்பந்தத்தின்படி, திட்ட அறிக்கையைத் தயாரிப்பதற்கான முழுச் செலவையும் ஏற்க மத்திய அரசு முன்வந்தது. இதேபோன்று, ராஜஸ்தான் மற்றும் மத்தியப் பிரதேச மாநிலங்கள் பார்வதி-காலி (Parvati-Kali); சிந்து-சம்பால் ஆகிய (Sindh-Chambal) இரு மாநில நதிகளை இணைக்கச் சம்மதித்தன. இவ்விணைப்பை

ராஜஸ்தானில் உள்ள பனாஸ் (Banas) நதிக்கும் விரிவுபடுத்தத் தீர்மானிக்கப்பட்டது.

குறிப்பு

## 9.3.9. பாரத் நிர்மாண் திட்டம், 2006

கிராம மக்களுக்குப் பாதுகாக்கப்பட்டக் குடிநீர் வழங்குவதே பாரத் நிர்மான் திட்டத்தின் (Bharat Nirman Programme) நோக்கமாகும். 2006 ஜனவரி 11-ம் நாள் பிரதமர் மன்மோகன் சிங் இந்தப் போர்த்திற முக்கியத்துவம் வாய்ந்த 5 அம்சத் திட்டத்தை அறிவித்தார். இத்திட்டத்தின்படி 1) அனைத்துக் கிராம மக்களுக்கும் பாதுகாக்கப்பட்டக் குடிநீர் வழங்கல் 2) குடிநீரின் தரத்தை உயர்த்தல் 3) குடிநீர் வினியோக மேலாண்மைப் பொறுப்பைப் பஞ்சாயத்து நிறுவனங்களிடம் ஒப்படைத்தல் 4) புல்லிதழ் உள்ளாட்சி நிறுவனங்களின் செயல்திறனை உயர்த்துதல் 5) பாதுகாப்பான உத்திரவாதமுள்ள குடிநீர் கிடைப்பதற்கான நீர்நிலைகளை முறையாகப் பராமரித்தல் 6) இதற்கான கிராமக் கட்டுமானத்தையும், அடிப்படை வசதிகளையும் உறுதியுடன் மேம்படுத்துதல்.

## 9.3.10. கட்டாயத் திருமணப்பதிவு (Compulsory Registration of Marriage)

2006-ம் ஆண்டுத் துவக்கத்தில் தேசியப் பெண்கள் மிஷன் (National Commission for Women) கிராமப் பெண்களுக்கு அதிகாரமளிக்கக்கூடிய பேரார்வமிக்க ஒரு திட்டத்தை அறிவித்தது. அத்திட்டத்தின்படி கிராமப் பெண்களிடையே பாலியல் நோய் பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்தத் தீவிர பிரச்சாரம் மேற்கொள்ளப்பட்டது. பெண்களுக்குத் தேவைப்படும் சட்ட மற்றும் காவல்துறை உதவிக் கிடைக்கவும் ஏற்பாடு செய்யப்பட்டது. பிப்ரவரி 14 நால் யாவற்றுக்கும் மேலாக உச்ச நீதிமன்றத்தின் வழிகாட்டலின்படி எந்த சமயத்தைச் சார்ந்தவராயினும் திருமணத்தைக் கட்டாயப் பதிவு செய்ய வேண்டும் இதற்கான விதிமுறைகளில் தக்க திருத்தங்களைச் செய்ய வேண்டும் குழந்தைத் திருமணங்களுக்குத் தடை விதிக்கப்பட்டது இருதார மற்றும் பலதாரத் திருமணங்கள் கட்டுப்படுத்தப்பட்டது மணமான பெண்கள்

திருமணம் செய்து வைக்கப்பட்டக் குடும்பங்களிலேயே வாழ வழிவகுக்கப் பட்டது கணவன் இறந்துவிட்டால் விதவைப் பெண்கள் அவர்களுக்குரிய மரபுரிமைகளையும் பிற உரிமைகளையும் கோரிப் பெறுவதற்கான வசதி செய்யப்பட்டது திருமணம் என்ற பெயரால் பெற்றோர் பெண்களை விற்பதற்கும், மணமானபின் கணவன் மனைவியைப் புறக்கணித்து ஒதுக்குவதற்கும் தடை விதிக்கப்பட்டது. இச்சமுதாயச் சீர்திருத்தம் சமகால இந்தியப் பெண்ணுரிமை வரலாற்றில் முக்கிய மைல்கல்லாகும்.

## 9.3.11. தேசிய கிராம வேலைவாய்ப்பு உத்திரவாதத் திட்டம் - (National Rural Employment Guarantee Scheme)

இந்தியா விடுதலை பெற்ற பின்னர் பல்வேறு வறுமைக் குறைப்பு மற்றும் வேலை வாய்ப்பு விரிவாக்கத் திட்டங்கள் செயல்படுத்தப்பட்டன. இவற்றுள் ஐக்கிய முற்போக்குக் கூட்டணி அரசாங்கம் 2005 செப்டம்பரில் நிறைவேற்றி அடுத்த ஆண்டு பிப்ரவரி 2-ம் நாள் நடைமுறைப்படுத்திய தேசிய கிராம வேலை வாய்ப்பு உத்திரவாதத் திட்டச் சட்டம் வரலாற்றுச் சிறப்புடையதாகும். இப்புரட்சிகரமான கிராமப் பொருளாதாரத் திட்டத்தின் தலையாய நோக்கம் இந்தியாவிலுள்ள ஒவ்வொரு கிராமக் குடும்பத்திற்கும் குறைந்தது 100 நாட்கள் வேலைக்கு உத்திரவாதம் அளிப்பதாகும். முதல் கட்டமாக நாடு முழுவதும் 200 மாவட்டங்கள் தெரிவுச் செய்யப்பட்டு இத்திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டது. அடுத்த ஐந்தாண்டுகளில் இத்திட்டம் அனைத்துக் கிராமங்களுக்கும் விரிவுபடுத்தப்படும். இந்தத் திட்டத்திற்காக ஆண்டொன்றுக்கு ரூ.150,000 கோடி செலவிட மத்திய அரசு திட்டமிட்டது. சமகால இந்திய வரலாற்றில் முதன் முறையாக மேற்கொள்ளப்பட்ட சட்ட உத்திரவாதமுடைய புரட்சிகரமான பிரமாண்டக் கிராம வேலைவாய்ப்பத் திட்டம் இதுவேயாகும்.

## 9.3.12. காவேரி தீர்ப்பாயத்தின் தீர்ப்பு (Cauvery Tribunal Award)

மூன்று உறுப்பினர்களைக் கொண்ட காவேரி நதிநீர் தகராறு தீர்ப்பாயம் (Cauvery Water Dispute Tribunal) தமிழ்நாடு, கர்நாடகா,

குறிப்பு

கேரளா மற்றும் புதுச்சேரி அரசாங்கங்கள் முன்வைத்த வாதங்களையும், ஏராளமான ஆதாரங்களையும் வாதப் பிரதிவாதங்களையும் 580 முறை அமர்ந்து பரிசீலித்தப் பின்னர் 2007 பிப்ரவரி 5, அதன் என்பது பக்கத் தீர்ப்பை வழங்கியது. இவ்வழக்கில் சம்பந்தப்பட்ட மாநிலங்களும், யூனியன் பிரதேசமும் பெற வேண்டிய நீரின் அளவையும் இந்தத் தீர்ப்பில் துல்லியமாகக் கணக்கிட்டுக் கூறியது. அதோடு காவேரி மேலாண்மை மன்றம் (Cauvery Management Board), காவேரி நீர்க்கட்டுப்பாட்டுக் கமிட்டி (Cauvery Water Regulation Committee) போன்ற புதிய அமைப்புகளை ஏற்படுத்துவது போன்ற ஆக்கப்பூர்வமான ஆலோசனைகளையும் தீர்ப்பாயம் வழங்கியது. 16 ஆண்டுகளுக்குப் பின்னர் வழங்கப்பட்ட இத்தீர்ப்புச் சம்பந்தப்பட்ட மாநிலங்களுக்குத் திருப்தியளிக்கவில்லை. எனவே, இம்மாநிலங்கள் மேல்முறையீடு செய்தன.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. 2004-ஆம் ஆண்டு ஏற்பட்ட சுனாமி பேரலையினால் இந்தியாவில் எந்தெந்த இடங்கள் பாதிக்கப்பட்டன?

2.தேசிய ஊரக சுகாதாரப் பணி எப்போது தொடங்கப்பட்டது?

3. “சலோ காவ்ன் கி ஓரே” என்று அழைக்கப்பட்டப் பிரச்சாரம் எது?

## 9.4. ஐக்கிய முற்போக்குக் கூட்டணி ஆட்சி 2, 2009-2014 மீண்டும் முற்போக்குக் கூட்டணி அரசு, 2009

2009 மே 16 ஆம் தேதி 15வது நாடாளுமன்றத் தேர்தல் முடிவுகள் அறிவிக்கப் பட்டன. இந்திய வாக்காளர்கள் மீண்டும் ஐக்கிய முற்போக்குக் கூட்டணியின் மீது நம்பிக்கை வைத்து ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்தனர். 2004 நாடாளுமன்றத் தேர்தலில் 218 இடங்களில் வெற்றி பெற்ற இக்கூட்டணி 2009 தேர்தலில் 262 இடங்களைக் கைப்பற்றியது. இருப்பினும் குறைந்தபட்ச பெரும்பான்மையுடன் ஆட்சி அமைக்க 272 இடங்கள் தேவை. எனவே, தோழமைக் கட்சிகளின் துணையுடன் நாடாளுமன்றத்தின் 543 உறுப்பினர்களில் 322 பேரின் ஆதரவுடன் பலமிக்க ஐக்கிய முற்போக்குக் ஆட்சிக் கூட்டணி அமைக்கப்பட்டது. 2009 மே 22 ஆம் தேதி டாக்டர் மன்மோகன் சிங் தலைமையில் ஐக்கிய

முற்போக்குக் கூட்டணி ஆட்சி மீண்டும் பொறுப்பேற்றது. சுதந்திர இந்தியாவின் முதல் பிரதமரான ஜவஹர்லால் நேருவுக்குப் பிறகு 5 ஆண்டு கால ஆட்சிக்குப் பின்னர் தொடர்ந்து பிரதமர் பதவியில் நீடித்தவர் மன்மோகன் சிங் என்பது குறிப்பிடத்தக்கது.

### 9.4.1. அமைச்சரவை

2009 மே 22 மற்றும் 27 தேதிகளில் இரு கட்டங்களாக டாக்டர் மன்மோகன் சிங் தலைமையில் ஐக்கிய முற்போக்குக் கூட்டணி அரசு பதவிப் பொறுப்பேற்றது. காங்கிரஸ், திமுக, திரிணாமுல் காங்கிரஸ், தேசிய காங்கிரஸ் கட்சி, ஜம்மு--காஷ்மீர் தேசிய மாநாடு, இந்திய யூனியன் முஸ்லீம் லீக் ஆகியவை இக்கூட்டணி அரசின் பிரதான கட்சிகளாகும்.

### 9.4.2. கற்கும் பாரதம்

கற்கும் பாரதம் திட்டம் (Saakshar Bharat Mission) பிரதமர் மன்மோகன் சிங்கால் 2009 செப்டம்பர் 8 ஆம் தேதி, சர்வதேச எழுத்தறிவு நாளன்று துவக்கி வைக்கப்பட்டது. இத்திட்டம் தேசிய பெண்கள் எழுத்தறிவு இயக்கத்தின் (National Mission for Female Literacy) மறுபதிப்பாகும். இத்திட்டத்தின் பிரதான நோக்கங்கள் இரண்டு: 1) எழுத்தறிவு சமுதாயத்தை (Literate Society) உருவாக்கல் 2) 2012 ஆம் ஆண்டுக்குள் 60 மில்லியன் பெண்கள் உள்ளிட்ட 70 மில்லியன் பேருக்கு எழுத்தறிவைக் கொடுத்தல்.

### 9.4.3. தேசிய அடையாள அட்டை

ஐக்கிய ஜனநாயக கூட்டணி அரசு இந்தியக் குடிமக்களுக்கு அனைத்து இன்றியமையாத் தகவல்கள் அடங்கிய தேசிய பல்நோக்கு அடையாள அட்டை (ஆதார்) வழங்கத் தீர்மானித்தது. இத்திட்டத்தைச் செயல்படுத்தத் தேசிய அடையாள அட்டை ஆணையம் 2009 ஜூலை மாதம் அமைக்கப்பட்டது. “இன்போசிஸ்” முன்னாள் தலைவர் நந்தன் நீல்கேனி இந்த ஆணையத்தின் தலைவராக நியமிக்கப்பட்டார்.

பயோமெட்ரிக் முறையில் அடையாள அட்டை வழங்கப்படும். இந்த அட்டையில் கைரேகை, புகைப்படம், பெயர், முகவரி போன்ற தகவல்கள் கொண்ட 12 இலக்க எண்கள் இருக்கும். இத்தகைய தேசிய அடையாள அட்டை தற்போது அனைத்து மத்திய மாநில அரசுகளின் பயன்பாடுகளை அடைவதற்கு முக்கியக் காரணியாக அமைந்துள்ளது.

## 9.4.4. வறுமைக் கோடு

வளரும் இந்தியாவில் வறுமை ஒரு பிரச்சனையாக இருந்து வருகிறது. இதுபற்றி 2011 செப்டம்பர் மாதம் உச்ச நீதிமன்றத்தில் ஒரு வழக்கில் தாக்கல் செய்த பதில் மனுவில் திட்டக் கமிஷன் வறுமைக் கோட்டை (Poverty Line) வரையறுத்துள்ளது. அதன்படி கிராமப்புறத்தில் தனி நபர் மாத வருமானம் ரூ.781, நகர்ப்புறங்களில் தனி நபர் மாத வருவாய் ரூ.965க்கு மிகாமல் இருந்தால், அத்தகைய நபர்கள் வறுமைக் கோட்டுக்குக் கீழ் வாழ்பவர்கள் என்று தெரிவிக்கப்பட்டது. இந்த வரையறையின்படி 5 பேர் கொண்ட ஒரு குடும்பத்தின் மாத வருமானம் கிராமப்புறத்தில் ரூ.3,905, நகர்ப்புறத்தில் ரூ.4,824க்கு மிகாமல் இருப்பின் அந்த குடும்பங்களை வறுமைக் கோட்டுக்குக் கீழே வாழும் குடும்பங்களாகக் கணக்கிடலாம் என்று எடுத்துக்காட்டப்பட்டது.

அரசாங்கத்தின் கணக்குப்படி மேற்கண்ட மாத வருமானத்தில் ஒரு ஏழைக் குடும்பம் பொது வினியோக முறையில் கிடைக்கும் உணவுப் பொருட்களைப் பெற்றுக் கொண்டு, குழந்தைகளை அரசுப் பள்ளியில் படிக்க வைத்து, அரசு மருத்துவமனையில் சிகிச்சைப் பெற்று வாழ முடியும் என்று அரசு கருதுகிறது. பொதுமக்களின் கருத்தறிந்த பின்னர் ஐக்கிய முற்போக்கு கூட்டணி அரசு கிராமப்புற-நகர்ப்புற வறுமைக் கோட்டுக்குக் கீழேயுள்ள மக்களின் மாத வருமானத்தை உயர்த்துவதற்கான வாய்ப்புள்ளது.

## 9.4.5. ஊழல் எதிர்ப்பு இயக்கம்

2011 ஆம் ஆண்டின் பிற்பகுதியில் ஊழல் புகார் 2ஜி ஸ்பெக்ட்ரம் அலைக்கற்றை ஒதுக்கீட்டு ஊழல், ராடியா ஒலிப்பதிவு நாடா பற்றிய சர்ச்சை, காமன்வெல்த் விளையாட்டுப் போட்டி ஊழல், மும்பை ஆதர்ஷ்

குடியிருப்பு சங்க ஊழல், “லாவாசா” ஊழல், உத்திர பிரதேச உணவு தானிய ஊழல், ஆந்திரப் பிரதேச தொழிற்சாலை உள்கட்டுமான கார்ப்பரேஷன் சர்ச்சை, இந்திய பிரிமியர் லீக் கிரிக்கெட் ஊழல், ஹாசன் அலிகான் ஊழல் போன்றவை இந்திய அரசியல் குட்டையைக் குழப்பி விட்டன. ஊழல் பிரச்சனை விசுவரூபம் எடுத்தது. இப்பிரச்சனை ஐக்கிய கூட்டணி அரசின் நம்பகத்தன்மையைப் பெரிதும் பாதித்தது. அரசு எதிர்க்கட்சிகளின் எதிர்ப்புத் தாக்குதலுக்கு உள்ளாயிற்று.

## 9.4.6. லோக்பால் மசோதா முதல் முயற்சி

லோக்பால் என்ற சொல்லை முதன் முதலில் 1963 ஆம் ஆண்டு நாடாளுமன்றத்தில் மக்கள் குறை நீக்கு அமைப்பு (Grivance Redressal Mechanism) பற்றிய விவாதத்தின் போது உறுப்பினர் எல்.எம்.சிங்வி பயன்படுத்தினார். ஐந்து ஆண்டுகளுக்குப் பின்னர் லோக்பால் மசோதா மக்களவையில் சாந்தி பூஷனால் தாக்கல் 1968- ஆம் ஆண்டு செய்யப்பட்டு 1969-ஆண்டில் மக்களவையில் நிறைவேற்றப்பட்டது. ஆனால் இம்மசோதா மாநிலங்கள் அவையில் நிறைவேற்றப்படுவதற்கு முன் மக்களவை கலைக்கப்பட்டதால் மசோதா காலாவதியாயிற்று. அதன்பின் 1971, 1985, 1989, 1996, 1998, 2001, 2005 மற்றும் 2008 ஆம் ஆண்டுகளில் இம்மசோதா தாக்கல் செய்யப்பட்டது. 2010 ஆம் ஆண்டு ஐக்கிய முற்போக்குக் கூட்டணி அரசு புதிய லோக்பால் மசோதாவைத் தயாரித்தது.

## 9.4.7. உணவுப் பாதுகாப்பு

காங்கிரஸ் அதன் 2009 தேர்தல் அறிக்கையில் ஏழை எளியோருக்கு உணவுப் பாதுகாப்பு (Food Security) அளிக்கும் சட்டம் ஒன்றை நிறைவேற்றப் போவதாக வாக்குறுதி அளித்தது. அதன்படி, சோனியா காந்தியின் தலைமையிலான தேசிய ஆலோசனைக் குழு (National Advisory Council) ஒரு உணவுப் பாதுகாப்பு மசோதாயைத் (Food Security Bill) தயாரித்தது. இம்மசோதா 2011 ஜுலை மாதம் நடைபெற்ற அமைச்சர் அவையில் (Empowered Group of Ministries on

Food Security) விரிவாக விவாதிக்கப்பட்டு ஒப்புதல் அளிக்கப்பட்டது. இந்த மசோதா கிராமங்களிலும், நகரங்களிலும், வறுமைக் கோட்டுக்குக் கீழ் வசிக்கும் மக்கள் அனைவருக்கும் உணவுப் பாதுகாப்பு அளிக்கும் வகையில் தயாரிக்கப்பட்டுள்ளது.

குறிப்பு

### 9.4.8. தேசிய ஒருமைப்பாட்டு மன்றம்

தேசிய ஒருமைப்பாட்டு மன்றம் (National Integration Council) 1960களின் துவக்கத்தில் சுதந்திர இந்தியாவின் முதல் பிரதமர் ஜவஹர்லால் நேருவால் உருவாக்கப் பட்டது. இந்த மன்றத்தின் முதல் கூட்டம் 1962இல் கூட்டப்பட்டது. இக்கூட்டத்தில் தேசிய ஒருமைப்பாடு தொடர்பான விவகாரங்கள் விவாதிக்கப்பட்டு, பரிந்துரைகள் செய்யப் பட்டன. அதன்பின் பல கூட்டங்கள் நடைபெற்றன. இம்மன்றத்தின் 14-வது கூட்டம் பிரதமர் மன்மோகன் சிங் தலைமையிலான ஐக்கிய முற்போக்குக் கூட்டணியின் முதலாம் ஆட்சிக் காலத்தில் 2008 அக்டோபர் மாதம் நடைபெற்றது.

2010-ஆம் ஆண்டு ஏப்ரலில் ஐக்கிய முற்போக்குக் கூட்டணி ஆட்சியின் இரண்டாம் ஆட்சிக் காலத்தில் தேசிய ஒருமைப்பாட்டு மன்றம் மறுசீரமைக்கப்பட்டது. தற்போது இம்மன்றத்தில் மைய அரசு அமைச்சர்கள், தேசிய மற்றும் மாநில முதலமைச்சர்கள், மக்களவை மற்றும் மாநிலங்களவை எதிர்க்கட்சித் தலைவர்கள், மாநில மற்றும் யூனியன் பிரதேச முதலமைச்சர்கள், பிரபல பத்திரிகையாளர்கள், பெண் பிரதிநிதிகள், வர்த்தகர்கள், தொழிலதிபர்கள், பொதுவாழ்வுப் பிரபலங்கள் இடம் பெற்றுள்ளனர்.

## 9.4.9. மன்மோகன் சிங்கின் வெளிநாட்டுக் கொள்கை

### 9.4.9.1. இந்திய-அமெரிக்க உறவு

இந்திய-அமெரிக்க உறவு கடந்த 70 ஆண்டுக்கும் மேலாக ஏற்ற இறக்கங்களுடன் நீடித்து வந்துள்ளது. மன்மோகன் சிங் இந்த உறவைப் புதிய உச்சத்துக்குக் கொண்டு சென்றார். 2005 ஜூலை 18 தேதி அவர் பதவி ஏற்றபின் அமெரிக்கா சென்ற போது அமெரிக்க அதிபர் ஜார்ஜ் புஷ்ஷுடன் அணு ஆற்றல் பற்றிய உடன்பாடு ஏற்பட்டது. இதுபற்றி இரு

நாடுகளுக்கிடையே தொடர்ந்து பேச்சுவார்த்தை நடைபெற்றது. பிரதமர் மன்மோகன் சிங் இந்த இராணுவம் சாரா அணு ஆற்றல் உடன்பாடு (Civilian Nuclear Deal) பற்றி நாடாளுமன்றத்தில் தன்நிலை விளக்கம் அளித்தார். இவ்வுடன்பாடு பற்றி எழுப்பப்பட்ட பல்வேறு வினாக்களுக்கு 2006 பிப்ரவரி 27 தேதியில் விளக்கமாக விடையளித்தார். அமெரிக்க அதிபர் புஷ் இந்தியாவுக்கு வந்த போது அணு வர்த்தகம் மற்றும் அணு ஆற்றல் தொழில்நுட்பம் பற்றிய உடன்பாடு உருவாயிற்று. இவ்விரு உடன்பாடுகளும் இறுதியில் இந்திய-அமெரிக்க அணு ஆற்றல் ஒப்பந்தமாயிற்று.

### 9.4.9.2. இந்திய-அமெரிக்க அணு ஆற்றல் ஒப்பந்தம்

2005 ஜூலை 18-ம் நாள் அமெரிக்க அதிபர் ஜார்ஜ் புஷ்ஷும், இந்தியப் பிரதமர் மன்மோகன் சிங்கும் இருநாட்டு அணு அற்றல் பற்றியக் கூட்டு அறிவிப்பு இந்திய அமெரிக்க அணு ஆயுத ஒப்பந்தத்துக்கான அடிப்படை ஆவணமாகும். 2006 மார்ச் 2 தேதியில் பின்னர் இந்த ஒப்பந்தத்துக்கான அடுத்த நடவடிக்கை எடுக்கப்பட்டது. அதன்படி இந்தியா அமெரிக்காவுடன் அணு ஆற்றல் வர்த்தகம் மற்றும் அணு ஆற்றல் தொழில் நுட்பப் பரிவர்த்தனை செய்துக் கொள்ளும். அதோடு அணு ஆயுதம் சாராத-அணு ஆயுதம் சார்ந்த பிரிவுத் திட்டத்தை (Separation Plan) சர்வதேச அணு ஆற்றல் முகமையுடன் (International Atomic Energy Agency-IAEA) முடிவு செய்யும். பிரதமர் மன்மோகன் சிங் வரலாற்று முக்கியத்துவமிக்க ஹெடுச் சட்டத்தில் டிசம்பர் 16 நாளில் (Henry J.Hyds US-India Peaceful Atomic Energy Cooperation Act) கையொப்பமிட்டார்.

2007 ஜூலை மாதம் இந்தியாவுக்கும் அமெரிக்காவுக்குமிடையே நான்கு நாட்கள் நடைபெற்ற தீவிர ராஜதந்திரப் பேச்சுவார்த்தைக்குப் பிறகு 123 உடன்பாடு (123 Agreement) ஏற்பட்டது. இப்படி அழைக்கப்படுவதற்குக் காரணம் அமெரிக்க அணு ஆற்றல் சட்டத்தின் 123 பிரிவு சர்வதேச உடன்பாடு பற்றிக் கூறுவதேயாகும். இந்த உடன்பாட்டின் விளைவாக இந்தியாவுக்குப் பல நன்மைகள் ஏற்படும். குறிப்பாக, கடந்த 40 ஆண்டுகளாகத் தனிமைப்படுத்தப்பட்டிருந்த இந்தியா உலக அணு ஆயுத நாடுகளுக்கிணையான இடத்தைப் பெறும். பல தடைகளைத் தாண்டிச் செய்து கொள்ளப்பட்ட வரலாற்று

குறிப்பு

முக்கியத்துவமிக்க இந்த ஒப்பந்தம் நடைமுறை சாத்தியமான முற்போக்கு முயற்சியாகும்.

### 9.4.9.3. மன்மோகன் சிங்கின் அமெரிக்கப் பயணம்

2009 நவம்பர் மாதம் இந்தியப் பிரதமர் மன்மோகன் சிங் அமெரிக்கப் பயணத்தை மேற்கொண்ட போது அமெரிக்க அதிபர் பராக் ஒபாமாவை சந்தித்து இருநாட்டு உறவு பற்றி விவாதித்தார்; இந்தியர்க்கிடையே எழுந்துள்ள சந்தேகங்களைப் பற்றி விளக்கிக் கூறினார். அதன்பின் 2010 மே மாதம் அதிபர் ஒபாமா தேசிய பாதுகாப்புப் பற்றி வெளியிட்ட அறிக்கையில் இந்திய-அமெரிக்க உறவு இன்றியமையாமை குறித்தும், இரு நாடுகளும் இணைந்துச் செயல்பட வேண்டியதன் அவசியம் பற்றியும் வலியுறுத்தினார். 2010 ஜூன் மாதம் அதிபர் புஷ்ஷூடன் இந்தியா செய்து கொண்ட அமெரிக்க-இந்திய ஒப்பந்தம் உறுதி செய்யப்பட்டது. இந்தியா அமெரிக்காவின் நம்பிக்கைக்குரிய நட்பு நாடாகவும், தவிர்க்க இயலா கூட்டாளியாகவும் கருதப்பட்டது.

### 9.4.9.4. ஒபாமாவின் வருகை

பராக் ஒபாமா அமெரிக்க அதிபரானபின் முதல் முறையாக 2010 நவம்பர் 6 ஆம் தேதி மூன்று நாட்கள் பயணமாக இந்தியாவுக்கு வருகை தந்தார். மும்பை வந்திறங்கிய ஒபாமா தீவிரவாதிகளின் தாக்குதலுக்குள்ளான இடங்களைப் பார்வையிட்டார். பின்னர் இந்திய-அமெரிக்க வர்த்தகக் கழகக் கூட்டத்தில் உரையாற்றிய அதிபர் ஒபாமா குறிப்பிட்டதாவது: உலகப் பொருளாதாரத்தில் வேகமாக வளர்ந்து வரும் நாடு இந்தியா, வளர்ந்த நாடுகளுக்கிடையே இந்தியா தவிர்க்க இயலா சக்தியாக உருவாகி வருகிறது, அமெரிக்கா-இந்தியா இடையே ஆரோக்கியமான போட்டி நிலவுகிறது.

மும்பையிலிருந்து புதுடெல்லி சென்ற அமெரிக்க அதிபர் நவம்பர் 8 தேதியில் இந்தியப் பிரதமருடன் இருநாட்டு நல்லுறவு பற்றி விரிவான பேச்சுவார்த்தை நடத்தினார். அப்போது இருவரும் இருதரப்பு உறவுகள், பாதுகாப்பு, தீவிரவாதத்துக்கு எதிராக ஒருங்கிணைந்துச் செயல்படல், அணு ஆற்றல் ஒத்துழைப்பு உள்ளிட்ட பல பொருள்கள் பற்றிப் பேச்சுவார்த்தை நடத்தினர். அதிபர் ஒபாமாவுக்கு முறைப்படி குடியரசுத் தலைவர் மாளிகையில் சிறப்பான வரவேற்பும் விருந்தும் அளிக்கப்பட்டன.

அதன்பின் அமெரிக்க அதிபர் ஒபாமா இந்திய நாடாளுமன்ற இரு அவைகளின் கூட்டுக் கூட்டத்தில் நிகழ்த்திய உரையில் வலியுறுத்தியக் கருத்துக்களில் சில வருமாறு: 1) இந்தியா தான் இன்றைய தகவல் தொடர்புப் புரட்சிக்கு வித்திட்டது 2) மகாத்மா காந்தியின் கொள்கைகளைக் கடைப்பிடித்தமையால் தான் இந்த அளவுக்கு வளர்ந்துள்ளேன் 3) மாற்றி அமைக்கப்பட இருக்கும் ஐ.நா. பாதுகாப்பு கவுன்சிலில் இந்தியா நிரந்தர உறுப்பினராவதற்கு ஆதரவு அளிக்கும் 4) பாகிஸ்தான் பயங்கரவாதிகளுக்குப் புகலிடம் அளிப்பதை ஏற்க இயலாது மும்பைத் தாக்குதலுக்குத் தொடர்புடைய பயங்கரவாதிகள் தண்டிக்கப்பட வேண்டும் 5) எந்த நாட்டில் மனித உரிமைகள் மீறப்பட்டாலும் இந்தியா கண்டிக்க வேண்டும் 6) இந்திய சந்தை வெளிநாட்டு நிறுவனங்களுக்குத் தடையின்றி திறந்துவிடப்படல் வேண்டும். அமெரிக்க அதிபர் பராக் ஒபாமாவின் வருகையும், பேச்சுக்களும் இந்தியரிடையே பெரியத் தாக்கத்தை ஏற்படுத்தியது எனலாம். ஒபாமா இந்தியாவிலிருந்து திரும்பியப் பின்னர் அமெரிக்க காங்கிரஸ் உலகின் மிகப் பெரிய ஜனநாயக நாடான இந்தியா ஐ.நா. பாதுகாப்பு கவுன்சிலில் நிரந்தர உறுப்பு நாடாவதற்குத் தேவையான சட்டத் திருத்தம் செய்யப்பட வேண்டும் 2010 நவம்பர் 22 தேதியில் என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### 9.4.9.5. ஹிலாரி கிளிண்டன் வருகை

அமெரிக்க வெளியுறவுத் துறை அமைச்சர் ஹிலாரி கிளிண்டன் 2011 ஜூலை 19 ஆம் தேதி இந்தியாவுக்கு வருகை தந்தார். அப்போது இந்திய வெளியுறவுத் துறை அமைச்சர் எஸ்.எம்.கிருஷ்ணாவுடன் உள்நாட்டுப் பாதுகாப்பு, பயங்கரவாதத்தை எதிர்கொள்ளல், 2008 மும்பைத் தாக்குதலுக்குக் காரணமானக் குற்றவாளிகளை நீதியின்முன் நிறுத்தல், அன்னிய நேரடி முதலீடு, இருநாட்டு வர்த்தகத் தொடர்பு பற்றி விரிவாக விவாதிக்கப்பட்டது. இந்த வருகையின் போது திருமதி கிளிண்டன் சென்னைக்கு வந்தது குறிப்பிடத்தக்கது.

சுருங்ககூறின், இந்திய-அமெரிக்கா உறவு மன்மோகன் சிங் ஆட்சிகாலத்தில் வளர்ச்சியை நோக்கிச்சென்றது. இக்காலகட்டத்தில் கையெழுத்தான உடன்படிக்கையிலும் தலைவர்களுக்கிடையே ஏற்பட்ட சந்திப்புகளும் இரு நாட்டு உறவில் ஆக்கப்பூர்வமான அர்த்தமுள்ள

விளைவை ஏற்படுத்தியது. இப்போதையப் பிரதம நரேந்திர மோடியும் இத்தகைய ஆக்கபூர்வமான நடவடிக்கைகளை மேற்கொள்வதால் இரும்பெரும் ஜனநாயக நாடுகளும் நல்லக் கூட்டாளிகளாக விளங்குகின்றன.

**குறிப்பு**

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

4. இந்தியாவிற்கும் அமெரிக்காவிற்கும் இடையில் உள்நாட்டு அணுசக்தி ஒப்பந்தம் முடிவடைந்தபோது அமெரிக்காவின் ஜனாதிபதி யார்?

## 9.4.10. இந்திய-ரஷ்ய உறவு

இந்தியாவும் ரஷ்யாவும் நட்பு நாடுகள். ரஷ்ய அதிபர் விளாடிமிர் புதின் (Vladimir Putin) 26 ஜனவரி 2007 ஆண்டு புதுடெல்லி வந்த போது குடியரசு நாள் கொண்டாட்டத்தில் பங்கேற்று இராணுவ அணிவகுப்பைப் பார்வையிட்டார். ரஷ்ய அதிபர் புதினும் இந்தியப் பிரதமர் மன்மோகன் சிங்கும் பாதுகாப்பு, தற்காப்பு, வர்த்தகம், விண்வெளி ஆய்வு, கலாச்சாரப் பரிமாற்றம் பற்றிப் பேசியதோடு இந்திய-ரஷ்ய உறவு ஏற்பட்ட 60-வது ஆண்டு நிறைவை 2007 ஏப்ரல் 13-ம் நாள் கொண்டாடுவதைத் தீர்மானித்தனர். யாவற்றுக்கும் மேலாக, இந்திய-அமெரிக்க அணு அற்றல் ஒப்பந்தத்தையும், ஐ.நா. பாதுகாப்பு அவையில் இந்தியா நிரந்தர உறுப்பினர் இடத்தை அடைவதையும் புதின் ஆதரித்தார். அதோடு தமிழ்நாடு கூடங்குள அணு ஆற்றல் நிலையத்தை மேம்படுத்தவும், மேலும் நான்கு அணு உலைக் கலங்களை (Nuclear Reactors) வழங்கவும், ரஷ்ய புவிச்சுற்றுக் கோள் அமைப்பில் (Russian Global Navigation Satellite System) இடம் தரவும் ரஷ்யா முன்வந்தது. மேலும் ரஷ்யாவிடம் அபரிமிதமாக உள்ள ஹைட்ரோ -கார்பன் (Hydro-Carbon) கனிம வளத்தை இந்தியாவுடன் பகிர்ந்துக் கொள்ளவும் ரஷ்யா சம்மதித்தது. இவற்றின் காரணமாக இந்திய-ரஷ்யா உறவு புதிய பரிமாணத்தைப் பெற்றது.

இரு நாடுகளுக்குமிடையேயான தொடர்பு, ராணுவ தளவாடங்களை வாங்கல்விற்றல், எல்லையைத் தாண்டி கூட்டு ஆய்வு, வளர்ச்சி, பயிற்சி, சேவைத் தொடர்பு, பயங்கரவாதத்துக்கு எதிரான கூட்டு முயற்சி போன்ற புதிய பரிமாணங்களை எட்ட வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது.

அதன்படி, 2007 ஏப்ரலில் ரஷ்யாவும் இந்தியாவும் ஜப்பான் கடலில் கூட்டுக் கடற்படைப் பயிற்சியையும், செப்டம்பரில் கூட்டு விண்வெளிப் பயிற்சியையும் மேற்கொண்டன. அக்டோபரில் இரு நாடுகளும் பல்செயல் போர் விமானங்கள் பற்றிய ஒப்பந்தம் செய்து கொண்டன. 2008 டிசம்பர் இந்தியாவில் அணு ஆற்றல் ஆலைகளை அமைப்பது பற்றி இருநாடுகளுக்கிடையே உடன்பாடு ஏற்பட்டது. இந்தியாவும் ரஷ்யாவும் விண்வெளி சம்மந்தமான இருதரப்பு கூட்டுறவு, அறிவியல் தொழில்நுட்பப் பகிர்வு, வடக்கு-தெற்கு போக்குவரத்து இடைப்பாலம், கலாச்சாரப் பரிவர்த்தனை, அமைதிக்கு அணு ஆற்றலைப் பயன்படுத்தல், பயங்கரவாத எதிர்ப்பு பற்றிய உடன்பாடுகள் உறுதி செய்யப்பட்டன.

இந்தப் பத்து ஆண்டுகளில் (2004-2014) இரு நாட்டு உறவுகள் பல்வேறுத் துறைகளில் குறிப்பாகப் பொருளாதாரம், கலாச்சாரம் மற்றும் அறிவியல் தொழில்நுட்ப ஒத்துழைப்பு ஆகியத் துறைகளிலும் இரு நாடுகளும் கவனம் செலுத்தின. எனவே தொன்றுத்தொட்டு வளர்ந்து வந்துள்ள இந்திய-ரஷ்ய உறவு மேலும் வளிமைப்பெற்றது.

## 9.4.11. அண்டை நாடுகளுடனான உறவு

### 9.4.11.1. இந்திய-பாகிஸ்தான்

பாகிஸ்தான் எல்லை தாண்டியப் பயங்கரவாதிகளின் கூடாரமாக இருந்தபோதும் பிரதமர் மன்மோகன் சிங் அந்நாட்டுனான உறவைச் சீர்செய்வதில் தனிக்கவனம் செலுத்தினார். 2006 இல் கியூபா தலைநகர் ஹவானாவில் நடைபெற்ற அணிசேரா இயக்க உச்ச மாநாட்டில் கலந்துக் கொண்ட பிரதமர் மன்மோகன் சிங், பாகிஸ்தான் அதிபர் முஷாரபுடன் பயங்கரவாதப் பிரச்சனை பற்றி விவாதித்தார். பாகிஸ்தான் மண்ணிலிருந்து செயல்பட்டுவரும் பயங்கரவாதக் குழுக்களை ஒடுக்கி, பயங்கரவாத உள்கட்டுமான அமைப்பை முற்றிலுமாக அழிக்காவிடில் இருநாட்டு நல்லுறவு நீடிப்பது சாத்தியமில்லை என்பதை இந்தியப் பிரதமர் பாகிஸ்தான் அதிபரிடம் வலியுறுத்திக் கூறினார். பயங்கரவாத்திற்கு எதிராக இருநாட்டுத் தலைவர்களும் ஒத்துழைக்க ஒப்புக் கொண்டனர். ஆனால் 2008 நவம்பர் 26-29 தேதிகளில் மும்பையில் நடந்த பாகிஸ்தான் பயங்கரவாதிகளின் தொடர்

வெடிகுண்டுத் தாக்குதல்களால் இந்திய-பாகிஸ்தான் உறவு கேள்விக்குறியாகிவிட்டது.

2008 நவம்பர் மாதம் நடைபெற்ற மும்பைத் தாக்குதலைத் தொடர்ந்து இந்தியா பாகிஸ்தானுடன் பேச்சுவார்த்தை நடத்துவதை நிறுத்திவிட்டது. பின்னர் 2011 பிப்ரவரி 10 ஆம் தேதி இந்தியா மீண்டும் நிபந்தனையுடன் கூடிய பேச்சுவார்த்தையைத் தொடங்கச் சம்மதித்தது. மும்பைத் தாக்குதலுக்குக் காரணமானவர்களைத் தண்டிக்காதவரை அந்நாட்டுடன் ராஜதந்திர உறவைத் தொடர்வதில்லை என்பதில் இந்தியா உறுதியாக இருந்தது. இரு அணு ஆயுத நாடுகளுக்கிடையே நல்லுறவு இருக்க வேண்டியது காலத்தின் கட்டாயமாகும். இதற்குக் காரணம். 1) இரு நாடுகளுக்கிடையே அமைதி நிலவினால் தான் இந்தியா வளர்ச்சித் திட்டங்களில் கவனம் செலுத்த முடியும் 2) பாகிஸ்தானின் துணையுடன் தான் பிராந்திய பயங்கரவாதத்தைக் கட்டுப்படுத்த இயலும் 3) இந்தியா வெளிநாடுகளுடனான உறவை விரிவுபடுத்தலாம் 4) பயங்கரவாதத் தாக்குதல்களுக்கு உள்ளாக உள்ள இரு நாடுகளும் பேச்சுவார்த்தை மூலம் பொதுப் பிரச்சனைக்குத் தீர்வு காண்பது சாத்தியமாகும்.

### 9.4.11.2. இந்திய-சீன உறவு

பிரதமர் மன்மோகன் சிங் தலைமையிலான ஐக்கிய முற்போக்குக் கூட்டணி ஆட்சியின் கீழ் இந்திய-சீனா உறவில் வளர்ச்சி ஏற்பட்டது. இருநாட்டு உறவு பொருளாதாரப் பெருக்கத்தைச் சுற்றிச் சுழன்றது. சீனப் பிரதமர் ஹு ஜின்டோ (Hu Jintao) இந்தியாவுக்கு நவம்பர் 20-23, 2006-ஆம் ஆண்டு வந்த போது 13 இருதரப்பு உடன்பாடுகள் உருவாயின. இதைத் தொடர்ந்து இரு நாடுகளுக்கிடையே ஏப்ரல் 24, 2007-ஆம் ஆண்டு 10-வது சுற்றுப் பேச்சுவார்த்தை நடைபெற்றது. 44 ஆண்டுகளுக்குப் பிறகு இரு நாடுகளின் வர்த்தகப் பரிமாற்றத்துக்காக 1962-ல் மூடப்பட்ட நாதுல்லா பாதை (Nathula Poll) மீண்டும் திறந்து விடப்பட்டது. 2008-ம் ஆண்டுத் ஜூன் 13-15 இந்தியப் பிரதமர் சீனா சென்ற போது இருநாட்டு உறவு மேலும் பலப்பட்டது. இந்தியா சீனா பிரதமர்கள் 21-ம் நூற்றாண்டுக்கான பகிர்ந்துக்கொள் பார்வை (A Shared vision for the 21st Century) என்ற கூட்டறிக்கையை வெளியிட்டனர்.

இந்தியாவும் சீனாவும் சூழ்நிலைக் கட்டாயத்தால் வர்த்தக விரிவாக்கத்திலும், அமைதிப் பேச்சுவார்த்தையிலும் இருதரப்பு இணக்க

**குறிப்பு**

உடன்பாடுகளிலும் கவனம் செலுத்தி வருகின்றன. எனினும், இவ்விரு நாடுகளும் ஆசியாவின் தலைமைக்கும், உலக நாடுகளின் செல்வாக்கைப் பெறுவதிலும் முனைப்பாக உள்ளன. சீனா அருணாசலப் பிரதேசத்தைத் தங்கள் பகுதி என்று அறிவித்தது பாகிஸ்தான் ஆக்கிரமிப்புப் பகுதியில், இந்தியாவின் எதிர்ப்பையும் மீறி கட்டுமானப் பணிகளை மேற்கொண்டிருப்பது காஷ்மீர் லடாக் பகுதியில் உள்ள எடம்சோக் கிராமத்தில் செயல்பட்டு வந்த வேலை வாய்ப்பு உறுதித் திட்டப் பணிகளுக்கு எதிர்ப்புத் தெரிவித்தது பாகிஸ்தானுக்குத் தொடர்ந்து ஆயுத மற்றும் அணு ஆற்றல் உதவி செய்வது, துறைமுகங்களை மேம்படுத்துவதாகக் கூறிக் கொண்டு கடலோரங்களைத் தனது கட்டுப்பாட்டின் கீழ் வைத்திருக்க முயற்சிப்பது இலங்கையில் அம்பணத் தோட்டத்தில் சீனா உருவாக்கியிருக்கும் அதிநவீன் துறைமுகம் இந்திய எல்லை நாடுகளுக்கு அளித்து வரும் இராணுவ உதவி போன்ற நடவடிக்கைகள் இந்திய-சீன நல்லுறவுக்கு மிகப்பெரியச் சவாலாக உள்ளன.

### 9.4.11.3. இந்திய-இலங்கை உறவு

இந்தியாவும் இலங்கையும் “சார்க்” போன்ற பிராந்திய கூட்டமைப்புகளின் உறுப்பினர் நாடுகளாக உள்ளன. இதன் விளைவாக, இரு நாடுகளின் வர்த்தக உறவு பலமாக உள்ளது. 2010 ஆம் ஆண்டில் மட்டும் இருநாட்டு வர்த்தகம் 40% அதிகரித்தது. இருப்பினும் மீனவர் பிரச்சனை இரு நாடுகளுக்கு இடையேயான உறவைப் பெரிதும் பாதிப்பதாக உள்ளது. இப்பிரச்சனைக்குத் தீர்வு காண்பதற்காக கூட்டு நடவடிக்கை குழு (Joint Working Group) அமைக்கப்பட்டுள்ளது.

இந்தியாவுக்கும் இலங்கைக்குமிடையே தீர்வுக் காணப்படாத பிரச்சனைகள் இருப்பினும் இருநாட்டு உறவு சீராகவே இருந்து வந்தது. 2005 டிசம்பர் மாதம் இந்தியாவுக்கு வந்த இலங்கை அதிபர் மகிந்த ராஜபக்சே (Mahinda Rajapakse) பிரதமர் மன்மோகன் சிங்குடன் இருநாட்டு உறவு பற்றி விவாதித்த போது சேது சமுத்திரம் கப்பல் வழித்தடம் பற்றிப் பேசியதோடு இலங்கை இனப்பிரச்சனைக்கு பேச்சுவார்த்தை மூலம் அரசியல் தீர்வு காண வேண்டியதன் அவசியத்தை இந்தியப் பிரதமர் அடிக்கோடிட்டுக் காட்டினார்.

**குறிப்பு**

பின்னர் இந்திய-இலங்கை கூட்டு வர்த்தகக் குழு (India-Sri Lanka loint Business Council) இரு நாடுகளுக்கிடையேயான பொருளாதாரத் தொடர்பை மேலும் 3 நவம்ர் 2006-ஆம் ஆண்டு பலப்படுத்தத் தீர்மானித்தது. 2008-ம் ஆண்டில் இலங்கையில் உள்நாட்டுப் போர் தீவிரமடைந்தது. தமிழீழ விடுதலைப் புலிகளுக்கும் (Liberation Tigers of Tamil Elam-LTTE) இலங்கை இராணுவத்துக்குமிடையே இப்போர் உச்சகட்டத்தை அடைந்தது. இப்போர் மத்திய அரசுக்கு, குறிப்பாக தமிழ்நாட்டு அரசுக்கு அரசியல் நெருக்கடியை உருவாக்கியது. இந்தப்போரில் நடைப்பெற்ற மனித உரிமை மீறல் சர்வதேச நாடுகளுக்கிடையே மிகப்பெரியக் கண்டனத்தை உருவாக்கியது. அதே சமயத்தில் தமிழகத்திலுள்ள அரசியல் தலைவர்கள் இந்தப்போரைக் கண்டிதது மட்டுமின்றி போர்காலக்கட்டத்தில் இந்திய நடந்துக்கொண்ட விதம் குறித்தும் தங்களது கடுமையான விமர்சனத்தை வைத்தன.

## 9.5. 16- வது மக்களவைத் தேர்தல்

16 வது மக்களவைக்கான தேர்தல்கள் 2014 மே மாதம் நடைபெற்றது. இந்த முறை மக்கள் தீர்ப்பு மிகவும் தெளிவாக இருந்தது. முப்பது ஆண்டுகளுக்குப் பிறகு முதல் முறையாக, ஒரு கட்சி மக்களவையில் பெரும்பான்மையைப் பெற்றது. பாஜக பெரும்பான்மையைப் பெற்றிருந்தாலும், அவர்கள் தேசிய ஜனநாயக கூட்டணி என்ற பெயரில் அரசாங்கத்தை அமைத்தனர். வாஜ்பாய் இந்தியப் பிரதமரான பிறகு மோடி பாஜகவில் ஒரு கவர்ந்திழுக்கும் தலைவர் என்பதை நிரூபித்தார்.

### 9.5.1. தெலுங்கானா 29-வது மாநிலமாகிறது

ஆந்திரா 1967 இல் ஒரு தனி தெலுங்கானாவிற்கான போராட்டங்களை கண்டது. A.gp.V.- II அரசாங்கம் இறுதியாக தெலுங்கானா மாநிலத்தை அமைப்பதாக அறிவித்தது. தெலுங்கானா 1 ஜூன் 2014 அன்று இந்தியாவின் 29 வது மாநிலமாக பிறந்தது. இது தென் மாநிலமான ஆந்திராவில் இருந்து ஒரு புதிய அரசியல்

குறிப்பு

பிரதேசமாக உருவாக்கப்பட்டுள்ளது. தலைநகர் ஹைதராபாத்தில் மாநிலத்தின் முதல் முதலமைச்சராக சந்திர சேகர் ராவ் பதவியேற்றார். ஒரே மொழி பேசும் தெலுங்கானா மற்றும் ஆந்திரா ஆகிய இரண்டும் தனித்தனி மாநிலமாக மாறின.

## 9.5.2. கருப்புப் பணத்தை ஒழித்தல்

மோடியின் அரசாங்கம் சுவிஸ் வங்கிகள் மற்றும் பிற நாடுகள் கணக்குகளில் பதுக்கி வைக்கப்பட்டுள்ள கறுப்புப் பணத்தை கண்டுப்பிடித்துத் திருப்பித் தரும் என்று பாஜகவின் தேர்தல் அறிக்கையானது மக்களுக்கு உறுதியளித்தது. 27 மே 2014 அன்று பதவியேற்ற பின்னர், உச்சநீதிமன்ற உத்தரவுகளை பின்பற்றி மோடி அரசு, நீதிபதி எம்.பி. ஷா யின் கீழ் ஒரு சிறப்பு விசாரணைக் குழுவை (special investigation team (SIT)) அமைத்தது.

11 உறுப்பினர்களைக் கொண்ட குழு உருவாக்கப்பட்டது. 1. வெளிநாட்டு வங்கிகளில் கணக்குகள் உள்ள நபர்களை விசாரிக்க முடிவு செய்யப்பட்டது 2. ஏற்கனவே ஒப்புக்கொண்ட விஷயங்களை மறுஆய்வு செய்ய 3. வெளிநாட்டு வங்கிகளில் டெபாசிட் செய்யப்பட்டுள்ள கறுப்புப் பணத்தைத் கண்டுப்பிடிப்பதற்கான ஒரு விரிவான செயல் திட்டத்தைத் தயாரித்தல். இப்பணிகள் எஸ்ஐடி மத்திய நேரடி வரி வாரியத்தால் தொகுக்கப்படும்.

## 9.5.3. பணமதிப்பிழப்பு நடவடிக்கை

கறுப்புப் பணத்தை ஒழிப்பதற்காக, என்.டி.ஏ அரசாங்கம் பணமதிப்பிழப்பை அறிவித்தது. அதன்படி பணியை 8 நவம்பர் 2016 அன்று இந்திய பிரதமர் புழக்கத்தில் இருந்த ரூ .1000 மற்றும் 500 நோட்டுகள் இனி சட்டப்பூர்வமாகச் செல்லாது என்று அறிவித்தார். இந்த நடவடிக்கை கறுப்புப் பணத்தை ஒழிக்க உதவும் என்று அரசாங்கம் முழுமையாக நம்பியது. இருப்பினும், இது கிட்டத்தட்ட அடுத்த ஆறு மாதங்களுக்கு மக்களுக்குச் சொல்லமுடியாத பிரச்சனையை ஏற்படுத்தியது. அதேசமயம், ரிசர்வ் வங்கி புதிய ரூ .500 மற்றும் 2000

நோட்டுகளை வெளியிட்டது. பணமதிப்பிழப்பு விளைவு இன்னும் விவாதத்தில் உள்ளது.

குறிப்பு

### 9.5.4. இந்தித் திணிப்பைச் சுற்றியுள்ள சர்ச்சை

சமூக ஊடகங்களில் ட்வீட் செய்வதற்கும் கருத்துக்களை வெளியிடுவதற்கும் இந்தி பயன்படுத்துமாறு பணியகத்திற்கு உள்துறை அமைச்சகம் 2014 இல் உத்தரவு பிறப்பித்தது. இதன் விளைவாக, உள்துறை அமைச்சக உத்தரவு சமூக ஊடகங்களில் அதிகாரப்பூர்வமான பயன்பாட்டிற்கு இந்தியைக் கட்டாயமாக்கியது. இது இந்தி அல்லாத மொழி பேசும் மக்கள் மீது இந்தித் திணிப்பதாகக் கருதப்பட்டது. இந்தத் திணிப்புக்கு எதிராக, குறிப்பாக தமிழ்நாட்டிலிருந்து எதிர்ப்புக்கள் வெடித்தன.

### 9.5.5. காவிரி நீர்ப் பகிர்வு இறுதி தீர்ப்பு

காவிரி ஆற்றில் இருந்து தண்ணீரைப் பகிர்வது கர்நாடகாவிற்கும் தமிழகத்திற்கும் இடையில் ஒரு சர்ச்சைக்குரிய பிரச்சனையாக உள்ளது. காவிரி நீர் தகராறு தீர்ப்பாயம் அதன் இறுதித் தீர்ப்பை 5 பிப்ரவரி 2007 அன்று அறிவித்தது. தீர்ப்பாயம் 15 ஜூலை 2014 அன்று மீண்டும் கூடியது. தமிழ்நாட்டின் நீண்டகால சட்டப் போராட்டதைத் தொடர்ந்து, பகிர்ந்துக் கொள்ள வேண்டிய நீரின் விகிதம் குறித்து உச்ச நீதிமன்றம் தனது தீர்ப்பை வழங்கியது. இதன்படி, தமிழ்நாடு, கர்நாடகா, கேரளா மற்றும் புதுச்சேரி பெறவேண்டிய நீரின் அளவு தெளிவாக நிர்ணைக்கப்பட்டது. காவிரி மேலாண்மை வாரியமும் அமைக்க வேண்டும் என ஆணையிட்டது.

## 9.5.6. சரக்கு மற்றும் சேவை வரி அறிமுகம்

1 ஜூலை 2017 அன்று, நிதிப் பற்றாக்குறையை நிர்வகிப்பதில் உள்ள சிக்கல்களைக் குறைக்கும் பொருட்டு, மத்திய விற்பனை வரியை அகற்றும் நோக்கில், என்.டி.ஏ அரசாங்கத்தால் சரக்கு மற்றும் சேவை வரி (ஜி.எஸ்.டி) செயல்படுத்தப்பட்டது. அத்தகைய வரி முறை யுபிஏ

ஆட்சிக்காலத்திலே துவங்கிவிட்டது. ஜிஎஸ்டியை மீண்டும் அறிமுகப்படுத்துவதன் மூலம், மோடி அரசு ஒரு வரலாற்றுச் சாதனையை நிகழ்த்தியது.

## 9.5.7. நீதிபதிகள் நியமன மசோதா

தேசிய நீதிபதிகள் நியமன ஆணையம் திருத்த மசோதா, 2014 இல் மக்களவையில் அறிமுகப்படுத்தப்பட்டன. அரசியலமைப்புத் திருத்த மசோதா கொலீஜியம் முறையை அகற்ற பரிந்துரைக்கிறது மற்றும் நீதிபதிகளை நியமிக்க ஆறு பேர் கொண்ட குழுவை நிறுவுகிறது. நீதிபதிகள் நியமனம் மற்றும் இடமாற்றம் செய்யப்பட வேண்டிய நடைமுறைகளை திருத்த மசோதா வகுக்கிறது. முதல் மசோதா நிறைவேற்றப்பட்ட பின்னர், அரசியலமைப்பு அந்தஸ்தை முன்மொழியப்பட்ட ஆணையத்திற்கு வழங்க இரண்டாவது மசோதாவை அரசாங்கம் அறிமுகப்படுத்தும். இந்த மசோதாக்கள் ஏற்கனவே நிர்வாகிக்கும் நீதித்துறையுக்கும் இடையிலான மோதலைத் தூண்டிவிட்டன. இந்த முன்மொழிவு உச்சநீதிமன்றத்தால் ரத்துச் செய்யப்பட்டது.

## 9.5.8. நரேந்திர மோடி வெளிநாட்டுக் கொள்கை

### 9.5.8.1. இந்திய-அமெரிக்க உறவுகள்

நரேந்திர மோடி இந்தியாவின் பிரதமரானபோது,இந்திய-அமெரிக்க உறவில் மூன்று காரணிகள் பெருமளவில் வளர்ந்தன: 1) முதலாவது மோடிக்கு எதிரான விசா தடை. அவர் முதல்வராக இருந்தபோது குஜராத் வகுப்புவாத வன்முறை காரணமாக மத சுதந்திரத்தைக் கடுமையாக மீறியதற்காக அமெரிக்க குடிவரவு மற்றும் தேசிய சட்டத்தின் கீழ் இந்தத் தடை அவருக்கு விதிக்கப்பட்டது. 2) 2013-ஆம் ஆண்டில் பிற்பகுதியில் கோப்ராகேட் இராஜதந்திர நெருக்கடி இரண்டாவதாக இருந்தது. 3) வர்த்தக தகராறுகள் மற்றும் அறிவுசார் சொத்துரிமை. இரு நாடுகளுக்கும் இடையிலான இருதரப்பு உறவுகளில் இவை மூன்று காரணிகளாக விளங்கின. மே 2014-ஆம் ஆண்டில்

அமெரிக்க அதிபர் பராக் ஒபாமா விசா தடையை மாற்றியமைத்து மோடியை அமெரிக்காவிற்கு வருமாறு அழைத்தார்.

குறிப்பு

### IAEA பாதுகாப்பாளர்கள்

மன்மோகன் சிங்கின் யுபிஏ அரசாங்கத்தின் அடிச்சுவடுகளை உண்மையாக பின்பற்றி, மோடியின் என்டிஏ அரசாங்கம் 22 ஜூன் 2014 அன்று சர்வதேச அணுசக்தி நிறுவனத்துடன் (ஐஏஇஏ) கூடுதல் நெறிமுறைக்கு ஒப்புதல் அளித்தது. 2008 ஆகஸ்ட் 1 ஆம் தேதி மன்மோகன் அரசாங்கம் இந்திய சிவில் அணுசக்தி வசதிகளை ஐ.ஏ.சி.ஏ பாதுகாப்பின் கீழ் வைப்பதற்கான ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டது. அக்டோபர் 10 ஆம் தேதி, இந்தோ-அமெரிக்க சிவில் அணுசக்தி ஒப்பந்தம் இணைக்கப்பட்டது.

மோடி அரசு அணுசக்தி ஒப்பந்தத்தை முன்னெடுத்துச் சென்று கூடுதல் நெறிமுறைக்கு ஒப்புதல் அளித்தது, ஐ.ஏ.சி.ஏ.வால் கண்காணிக்கப்படும் வசதிகளை உள்ளடக்கியது. புதிய ஏற்பாடு IAEA பணியாளர்களின் வழக்கமான நுழைவு மற்றும் வெளியேறவும் உதவும். அமெரிக்காவின் வாஷிங்டன், 2014 செப்டம்பரில் மோடியின் முன்மொழியப்பட்ட விஜயத்திற்கு முன்னர், ஜூலை, 2005 இன் இந்தோ-அமெரிக்க கூட்டு அறிக்கையில் தொகுக்கப்பட்ட இந்தியாவின் உறுதிப்பாட்டை நிறைவேற்றுவதே அவரது அரசாங்கத்தின் முக்கிய நோக்கமாகும். ஐ.ஏ.இ.ஏ உடனான பாதுகாப்பு ஒப்பந்தம் இந்தியாவில் கூடங்குளம் அலகுகள் 1 உட்பட 20 அணுசக்தி வசதிகளை உள்ளடக்கியது.

ஒபாமாவின் இந்திய வருகையும் மோடியின் அமெரிக்க பயணமும் இரு நாட்டு உறவில் தொடர்ந்து ஆக்கப்பூர்மான விளைவுகளை ஏற்படுத்தியது. தற்போதைய அதிபர் ட்ரம்பும் மோடியும் சிறந்த நட்புறவை பேணுவதால் இரு நாட்டு உறவுகள் சரியான திசை நோக்கிச் செல்கிறது. அதே சமயத்தில் ட்ரம்பின் விசாக் கட்டுபாடுகளும் காஷ்மீர்த் தொடர்பாக ட்ரம்பின் கருத்துகளும் அவ்வப்போது சர்ச்சையை ஏற்படுத்திவருகிறது.

### 9.5.8.2. இந்திய-ரஷ்யா உறவுகள்

பிரதம மந்திரி நரேந்திர மோடி, ரஷ்ய அதிபர் விளாடிமிர் புதினை 2014 ஜூலை 15 ஆம் தேதி பிரேசிலின் ∴போர்கலேசாவில் நடைபெற்ற 6

வது பிரிக்ஷ் உச்சி மாநாட்டின் தனியாகச் சந்தித்து, பாதுகாப்பு ஒத்துழைப்புகள் மற்றும் பொருளாதார உறவுகள் தொடர்பான முக்கிய இருதரப்புப் பிரச்சனைகள் குறித்து விவாதித்தார். மோடி புதினை இந்தியாவுக்கு வருமாறு அழைப்புவிடுத்தார்.

### 9.5.8.3. இந்திய-பாகிஸ்தான் உறவுகள்

பதவியேற்பு விழாவின் போது (மே 2014) பிரதமர் நரேந்திர மோடியும் பாகிஸ்தான் பிரதமர் நவாஸ் ஷெரீப்பும் சந்தித்து இருதரப்பு உறவுகள் குறித்து விவாதித்தனர். அதே சமயத்தில் ஆகஸ்ட் 12 மோடியின் ஜம்மு-காஷ்மீர் பயணத்தின் போது,"பயங்கரவாதத்தை உருவாக்குமிடமாக" பாகிஸ்தான் உள்ளது என கூறினார், ஆயினும் பாகிஸ்தான் இதை நிராகரித்தது. எல்லைக்கடந்து வரும் பயங்கர வாதம் தொடர்ந்து இரு நாட்டு உறவுகளையும் பாதித்தது. இந்தியாவில் குற்றச்செயலில் ஈடுபட்டுவிட்டுப் பாகிஸ்தானில் அடைகலம் பெற்றுள்ள தீவிரவாதத் தலைவர்களை இந்தியாவுக்கு அனுப்ப பாகிஸ்தான் மறுப்பதும், சிறுபான்மைனர்க்கெதிராகப் பாகிஸ்தானில் கட்டவிழ்த்துவிடும் மனித உரிமை மீறலும்த் தொடர்ந்து இவ்விருநாடுகளுக்குமிடையே உள்ள உறவை வெகுவாகப் பாதிக்கிறது. தெற்காசியாவில் அமைதி, நிலைத்தன்மை, வருமை ஒழிப்பு மற்றும் பொருளாதார மேம்பாட்டிற்கு இவ்விருநாடுகளுக்கும் இடையேள்ள உறவுகள் முக்கியப்பங்காற்றுகிறது. தீவிரவாதத்தை வேரோடு அகற்றி அமைதியான முறையில் அனைத்துப்பிரச்சனைகளுக்கும் தீர்வுக்கான பாகிஸ்தான் முன்வருமேயானால் இவ்விருநாடுகளுக்கிடையே நீடித்த நட்புறவு ஏற்படும்.

### 9.5.8.4. இந்தியா-சீனா உறவுகள்

பாஜக ஆட்சிக்கு வந்தவுடன் மற்ற நாடுகளை போலவே சீனாவோடு நட்புறவை மேற்கோள்ள விரும்பியது. அதற்காக இந்தியாவிலுள்ள உயர்மட்டத்தலைவர்கள் சீனாவிற்கு அரசுமுறைப் பயணத்தை மேற்கோண்டனர்

அப்போதைய குடியரசுத் துணை தலைவர் ஹமீத் அன்சாரி, ஜூன் 2014 இல் சீனாவுக்குச் சென்று பஞ்சீல் கையெழுத்திட்ட 60 வது ஆண்டு நிறைவு நாளில் பங்கேற்றார். பஞ்சீல் கொள்கையின் மீது இந்தியா கொண்டுள்ள உறுதியான நம்பிக்கையை வெளிப்படுத்தினார். சீனாவின்

பிரதமர் லெவன் ஜின்பிங், பஞ்சீலின் ஐந்து கோட்பாடுகளை சீனா பின்பற்றும் என்று வலியுறுத்தினார்.

இந்தியாவில் குறைந்தது 4 சீனத் தொழில்துறை பூங்காக்களை அமைப்பதற்கான ஒரு முக்கிய ஒப்பந்தத்தில் தொழில்துறை அமைச்சகம் கையெழுத்திட்டது. மேற்கத்திய ஆதரவுடைய உலக வங்கி மற்றும் ஆசிய அபிவிருத்தி வங்கியின் செல்வாக்கிலிருந்து விடுபட்டு, பண்டைய "பட்டுப் பாதையில்" பொருளாதார வளர்ச்சியைக் கொண்டுவருவதற்காக ஆசியா உள்கட்டமைப்பு முதலீட்டு வங்கியில் (VIIgp) பங்கேற்க சீனா இந்தியாவை அழைத்தது.

இருநாடுகளுக்கிடையே வர்த்தகத் தொடர்புகளை ஊக்குவிக்கப் பல்வேறு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டது. இந்தியப்பிரதமர் சீனா அதிபரும் கடந்த ஆறு ஆண்டுகளில் பல்வேறு இடங்களில் சந்தித்துப் பொருளாதார முக்கியத்துவமாய்ந்த ஒப்பந்தங்களில் கையெழுத்திட்டன. முறைசாரா மாநாடுகளில் இருத்தலைவர்களும் சந்தித்து இருதரப்பு மற்றும் சர்வதேச முக்கியத்துவாய்ந்தப் பிரச்சனைகளை விவாதித்து வந்துள்ளன. கடந்த ஆண்டு மாமல்லப்புரத்தில் நடைப்பெற்ற இருத்தலைவர்களிகிடையேயான முறைசாரா உச்சி மாநாடு அனைவருடைய கவனத்தையும் ஈர்த்தது.

அதே சமையத்தில் இவ்விருநாடுகளுக்குமுள்ள எல்லைப்பிரச்சனை, காஷ்மீர் தொடர்பான சீனாவின் நிலைப்பாடு, பாகிஸ்தானுக்கு ஆதரவான சீனாவின் நிலை ஆகியவை இவ்விருநாடுகளுக்கிடையேயுள்ள உறவே மிகப்பெரிய சவாலாக உள்ளது.

## 9.6. 17-வது மக்களவைகானத் தேர்தல்

2019-ஆம் ஆண்டு ஏப்ரல் மற்றும் மே மாதங்களில் மக்களவைக்கானத் தேர்தல் நடைப்பெற்றது. அரசுக்கெதிராகப் பல்வேறுக் குற்றச்சாட்டுகள் வைக்கப்பட்டப் போதிலும் இரண்டாவது முறையாக மக்களின் தீர்ப்பு தெளிவானதாக இருந்தது. பாஜக இரண்டாவது முறையாகத் தனிப்பெறுபான்மையுடன் ஆட்சியைப்பிடித்தது. பாஜக மட்டும் முந்நூறு இடங்களைக் கைப்பற்றியது. இது கடந்த தேர்தலில்

குறிப்பு

பெற்ற எண்ணிக்கையைவிட அதிகம். இரண்டாவது முறையாக காங்கிரஸ் அதிகாரப்பூர்வமாக எதிர்க்கட்சி நிலையை இழந்தது.

புதிய அரசாங்கம் பல்வேறு முக்கிய நிர்வாகப்பணிகளில் ஈடுபட்டு வருகிறது. குறிப்பாக, ஜம்மு-காஷ்மீர்க்கு வழங்கப்பட்டுள்ள சிறப்புச் சலுகைகளை வழங்கும் அரசியலமைப்பு 370 மற்றும் 35 ஏ சரத்தை ரத்துச்செய்து அந்த மாநிலத்தை இரண்டு யூனியன் பிரதேசமாகப் (ஜம்மு-காஷ்மீர் மற்றும் லடாக்) பிரித்துள்ளது. இதன் மூலமாக, அங்கு நிரந்திர அமைதிவரும் என அரசு நம்புகிறது.

தற்போது நடைமுறைக்கு வந்துள்ள குடியுரிமைத் திருத்தச் சட்டமும், மக்கள் தொகைப்பதிவேடும், மக்களிடையே ஆதரவையும் எதிர்ப்பையும் பெற்றுள்ளது. தற்போதைய பொருளாதார மந்தநிலை இந்த அரசாங்கத்திற்கு சவாலாகவுள்ளது.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

5. தேசிய உணவு பாதுகாப்பு சட்டம் எப்போது நிறைவேற்றப்பட்டது?
6. தெலுங்கானா எப்போது தனி மாநிலமாக உருவாகியது?
7. சரக்கு மற்றும் சேவை வரி எப்போது அறிமுகப்படுத்தப்பட்டது?

## 9.7. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்

1. 2004 சுனாமி அந்தமான் மற்றும் நிக்கோபார் தீவுகளைத் தாக்கி அழித்தது மற்றும் கடலோர மாநிலங்களான தமிழ்நாடு, கேரளா, ஆந்திரா மற்றும் பாண்டிச்சேரி ஆகிய மாநிலங்களுக்கு பேரழிவை ஏற்படுத்தியது.
2. ஏப்ரல் 2005 ஆண்டில் தேசிய ஊரக சுகாதாரப் பணி தொடங்கப்பட்டது.
3. பிப்ரவரி 2006 ஆண்டில், தேசிய மகளிர் ஆணையம் கிராமங்களில் பெண்களை மேம்படுத்துவதற்கான ஒரு லட்சியத் திட்டத்தை அறிமுகப்படுத்தியது. இந்த பிரச்சாரத்தை “சலோ காவ்ன் கி ஓரே” என்று அழைத்தனர்.
4. இந்தியாவிற்கும் அமெரிக்காவிற்கும் இடையில் உள்நாட்டு அணுசக்தி ஒப்பந்தம் முடிவடைந்தபோது ஜார்ஜ் புஷ் அமெரிக்காவின் ஜனாதிபதியாக இருந்தார்.

5. தேசிய உணவு பாதுகாப்புச் சட்டம் 2013 செப்டம்பர் 12 அன்று நிறைவேற்றப்பட்டது.

6. தெலுங்கானா ஜூன் 1, 2014 அன்று தனி மாநிலமாக உருவானது.

7. ஜூலை 1, 2017 அன்று சரக்கு மற்றும் சேவை வரி அறிமுகப்படுத்தப்பட்டது

குறிப்பு

## 9.8. அத்தியாயச் சுருக்கம்

- மன்மோகன் சிங் இந்தியாவின் 13-வது பிரதமராக 2004 முதல்2014 வரை பதவி வகித்தார்.
- அரசு நடவடிக்கைகளில் வெளிப்படைத்தன்மையைப் பேணுவதற்கான ஒரு முக்கியச் செயலாக தகவல் அறியும் உரிமைச் சட்டம் கருதப்பட்டது. இவரது அரசு அறிமுகப்படுத்தியது.
- குடும்ப வன்முறை தடுப்புச் சட்டம் பெண்கள் வீட்டு வன்முறையிலிருந்து தடுப்பதை நோக்கமாகக் கொண்ட மற்றொரு முக்கியமானத் திட்டமாகும்.
- மன்மோகன் சிங் பொருளாதார ரீதியாக பின்தங்கிய மக்களுக்கு, 100 நாள் வேலைவாய்ப்பு உத்தரவாதத் திட்டம் மற்றும் தேசிய உணவு பாதுகாப்புச் சட்டம் போன்ற பல சீர்திருத்தங்களை அறிமுகப்படுத்தினார்.
- கல்வி உரிமைச் சட்டத்தை நடைமுறைப்படுத்தியதின் மூலமாக அனைவருக்கும் கல்வி என்ற இலக்கை நோக்கித் தொடர்ந்துப் பயணிக்க தொடங்கியது.
- அவரது வெளியுறவுக் கொள்கை குறிப்பாக அமெரிக்கா மற்றும் ரஷ்யா நாடுகள் மீது இணக்கமானதாக இருந்தது.
- அமெரிக்காவுடன் சிவில் அணுசக்தி ஒப்பந்தமும் மற்றும் விண்வெளி ஆராய்ச்சித் தொடர்பான ஒப்பந்தங்கள் செயல்படுத்தப்பட்டது. .
- நரேந்திர மோடி 2014 ல் பிரதமராகப் பதவியேற்றார்.
- பதவியேற்றவுடன் மோடி கறுப்புப் பணத்தைத் திரும்பக் கொண்டுவர நடவடிக்கை எடுத்தார். குறிப்பாக அவரது

**குறிப்பு**

அரசாங்கம் நீதிபதி எம்.பி. ஷா தலைமையில் சிறப்பு விசாரணைக் குழுவை (எஸ்ஐடி) நியமிக்கப்பட்டது.

- பணமதிப்பிழப்பு என்பது கறுப்புப் பணம் மற்றும் பயங்கரவாதத்திற்கு எதிரான மற்றொரு முக்கியமான நடவடிக்கையாகக் கருதப்படுகிறது.
- மன்மோகன் சிங்கைப் போலவே, மோடியும் அமெரிக்கா மற்றும் ரஷ்யாவுடன் நல்லுறவைப் பேணுகிறார்.
- சார்க் நாடுகளுடன் நல்ல உறவை ஏற்படுத்த அவர் மேற்கொண்ட முயற்சிகள் குறிப்பிடத்தக்கவை. இருப்பினும், எல்லை தாண்டியப் பயங்கரவாதம் காரணமாக பாகிஸ்தானுடனான உறவுகள் சிறப்பாக இல்லை.
- என்.டி.ஏ. அரசாங்கத்தின் பதவிக்காலம் முறையான மற்றும் முறைசாரா உச்சி மாநாட்டின் மூலம் சீனாவுடன் நல்லுறவைப் பேணுகிறது.

## 9.9. முக்கியச் சொற்கள்

**சுனாமி:** சுனாமி என்பது ஜப்பானிய வார்த்தையாகும், அதாவது துறைமுக அலை: “சு” என்றால் துறைமுகம்,“நமி” என்றால் “அலை”. 2004 ல் தென்னிந்தியாவின் கடலோரப் பகுதிகளை சுனாமி தாக்கியது. இதனால் பல்லாயிரக்கணக்கான மக்கள் உயிர் இழந்தனர்.

**பணமதிப்பிழப்பு:** இது பணத்தையோ அல்லது நாணயத்தியோ அக்காலப் பொருளாதார சூழ்நிலைக்கு ஏற்றவாறு செல்லாது என அரசால் அறிவிக்கப்படும் நடைமுறையே பணமதிப்பிழப்பாகும். 8 நவம்பர் 2016 அன்று ரூபாய் 500 மற்றும் 1,000 நோட்டுகள் செல்லாது என இந்திய அரசு அறிவித்தது. இதன் மூலமாகக் கறுப்புப் பணம் ஒழிக்கப்படும் என்றும், தீவிரவாதத்திற்கு நிதி வழங்கப்படுவது தடுக்கப்படும் என்று அரசு நம்பியது.

**பாரத் நிர்மன்:** பாரத் நிர்மான் என்பது அடிப்படை கிராமப்புற உள்கட்டமைப்பை உருவாக்குவதற்கும் மேம்படுத்துவதற்கும் ஒரு இந்தியத் திட்டமாகும். இது நீர்ப்பாசனம், சாலைகள், வீட்டுவசதி, நீர்

வழங்கல், மின்மயமாக்கல் மற்றும் தொலைத்தொடர்பு இணைப்புத் தொடர்பானத் திட்டங்களை உள்ளடக்கியது.

**தேசிய உணவு பாதுகாப்பு சட்டம்:** தேசிய உணவு பாதுகாப்புச் சட்டம், 2013 அல்லது உணவு உரிமைச் சட்டம் என்றும் அழைக்கப்படுகிறது. இது இந்தியாவின் 1.2 பில்லியன் மக்களில் சுமார் மூன்றில் இரண்டு பங்கு மக்களுக்கு மானிய விலையில் உணவு தானியங்களை வழங்குவதை நோக்கமாகக் கொண்டுள்ளது.

**குறிப்பு**

## 9.10. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

### குறுகிய வினாக்கள்

1. வேலைவாய்ப்பு உத்தரவாதத் திட்டத்தைக் குறித்து எழுதுக?
2. குடும்ப வன்முறை தடுப்புச் சட்டம் குறித்து கூறுக.
3. மன்மோகன் சிங்கின் ஆட்சியின் போது இந்திய-இலங்கை உறவு குறித்து எழுதுக?
5. கறுப்புப் பணத்தை அடையாளம் காண தேசிய ஜனநாயக கூட்டணி அரசு எடுத்துள்ள நடவடிக்கைகள் குறித்து எழுதுக.
6. மோடி ஆட்சியின் போது இந்திய-பாகிஸ்தான் உறவுகளை மதிப்பிடுக?

### நெடு வினாக்கள்

1. தகவல் உரிமைச் சட்டத்தின் முக்கிய அம்சங்களை விளக்குக.
2. மன்மோகன் சிங் காலத்தில் இந்திய-அமெரிக்கா உறவை மதிப்பிடு செய்க.
3. நரேந்திர மோடியின் உள்நாட்டுக் கொள்கை குறித்துக் கட்டுரை வடிவில் எழுதுக?
4. மோடி காலத்தில் அண்டை நாடுகளுடனான இந்தியாவின் உறவை விவரி.

## 9.11. கூடுதல் வாசிப்புகள்

பிபன் சந்திரா, மிருதுலா முகர்ஜி, ஆதித்யா முகர்ஜி. 2015.*சுதந்திரத்திற்குப் பிறகு இந்தியா,* சென்னை: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.

வெங்கடேசன்.க. 2012. *சமகால இந்திய வரலாறு 1947-2012,* ராஜபாளையம்: வி.சி.பப்ளிகேஷன்ஸ்.

Bipan Chandra, Miridula Mukherjee, Aditya Mukherjee. 2008. *India since Independence*, Haryana: Penguin Books.

G. Vengatesan. 1991. *History of contemporary India 1947-2014,* Rajapalayam: VC Publications.

R.S. Chaurasia. 2002. *History of Modern India 1707 AD upto 2000 AD.* New Delhi: Atlantic Publishers & Distributors.

S.K. Shah. 2017. *India's Foreign Policy,* Alpha Editions.

V.N. Khanna, Leslie K Kumar. 2018. *Foreign Policy of India.* New Delhi: Vikas Publications PVT. LTD.

V. P. Dutt. 1993. *India's Foreign Policy.* New Delhi: Vikas Publications VT. LTD.

# அலகு-10

## இந்தியாவின் திட்டமிட்டப் பொருளாதாரம் - ஐந்தாண்டுத் திட்டங்கள் - தொழில் வளர்ச்சி

**பாட அமைப்பு**

10.1. முன்னுரை
10.2. நோக்கங்கள்
10.3. இந்தியா திட்டமிட்டப் பொருளாதாரம்
  10.3.1. திட்டக்கமிஷன் (Planning Commission, 1950)
  10.3.2. தேசிய வளர்ச்சி மன்றம் (National Development Council)
10.4. ஐந்தாண்டுத் திட்டங்கள்
  10.4.1. முதல் ஐந்தாண்டுத் திட்டம் (1951-1956)
  10.4.2. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் (1956-1961)
  10.4.3. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் (1961 - 1966)
10.5.தொழில் வளர்ச்சி

10.6. தொழில் கொள்கை, 1948
10.7. புதிய தொழில் கொள்கை
10.8. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்
10.9. அத்தியாயச் சுறுக்கம்
10.10. முக்கிய சொற்கள்
10.11. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்
10.12. கூடுதல் வாசிப்புகள்

## 10.1. முன்னுரை

ஆரம்பக் காலத்தில் நேரு அரசாங்கம் சந்தித்தச் சவால்களில் மிகவும் முக்கியமானதுப் பொருளாதாரப் பிரச்சனையாகும். ஆங்கிலேய ஆட்சியில் பொருளாதாராச் சுரண்டலும் பஞ்சம் மற்றும் வறச்சியும் நாட்டை இக்காட்டான சூழ்நிலைக்குத் தள்ளியது. இந்நிலையில்தான் திட்டமிட்டப் பொருளாதாரத்தை ஐந்தாண்டுத் திட்டங்களின் மூலமாக நேரு ஊக்கப்படுத்தினார். இந்த அத்தியாயமானது திட்டக்குழு மற்றும் ஐந்தாண்டுத் திட்டங்கள் குறித்து விவரிக்கிறது.

## 10.2. நோக்கங்கள்

இந்தப் பாடத்தைப் படித்த பிறகு, நீங்கள் பின்வருவனவற்றைப் புரிந்துக் கொள்ள முடியும்:

- திட்டக்குழு மற்றும் ஐந்தாண்டுத் திட்டங்களை அறிந்துக் கொள்ள முடியும்.
- தொழில்துறை வளர்ச்சி திட்டங்களை புரிந்துக் கொள்ள முடியும்.

## 10.3. இந்தியா திட்டமிட்டப் பொருளாதாரம்

### பொருளாதார வளர்ச்சித் திட்ட முயற்சி

இந்திய விடுதலைப் போராட்ட காலத்தில் நாட்டின் பொருளாதாரப் பின்னடைவுக்கு அந்நிய ஆதிக்கச் சுரண்டல் ஆட்சியே காரணம் என்று கருதப்பட்டது. தாதாபாய் நொரோஜி இந்தியாவின் வறுமை" (Poverty of India) என்ற நூலை வெளியிட்டு வறுமை ஒழிப்பின்

இன்றியமையாமையை உணர்த்தினார். 1928 ஆண்டிலிருந்து ஜவகர்லால் நேரு சோவியத் ரஷ்யாவின் திட்டமிட்டப் பொருளாதார வளர்ச்சியால் பெரிதும் கவரப்பட்டார். 1938- ஆம் ஆண்டு இந்தியத் தேசிய காங்கிரஸ் ஜவகர்லால் நேருவின் தலைமையில் இந்தியப் பொருளாதார வளர்ச்சி பற்றி ஆராய்ந்து தக்கப் பரிந்துரைகளைக் கூறுவதற்காக ‘தேசிய திட்டக் கமிட்டி’யை (National Planning Committee) அமைத்தது. 1944-ல் எட்டுத் தொழில் அதிபர்கள் இந்தியப் பொருளாதார வளர்ச்சிக்கான பம்பாய்த் திட்டத்தைத் (Bombay Plan) தயாரித்தனர். அத்திட்டம் ‘டாட்டா பிர்லா திட்டம்’ என்று அறியப்பட்டது. அதைத் தொடர்ந்து இந்தியத் தொழிலாளர் கூட்டமைப்பு (Indian Federation of Labour) ஒரு மக்கள் திட்டத்தைத் (People's Plan) தயாரித்தது. எஸ்.என்.அகர்வால் தயாரித்த காந்தியத் திட்டம் (Gandhian Plan) சுயதேவையைப் பூர்த்திச் செய்துக் கொள்ளும் கிராமங்களைக் கொண்ட பரவல் பொருளாதார முறையை மையமாகக் கொண்டது. பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் சர் அர்தேஷிர் தலால் (Sir Ardeshir Dalal) தலைமையில் ஒரு திட்டத் துறையைத் (Platining Department) தோற்றுவித்தது. அத்துறை இரண்டாம் உலகப் போருக்குப் பின் செயல்படுத்துவதற்கான குறுகிய மற்றும் நீண்ட காலத் திட்டங்களைத் தயாரித்தது.

1946-ல் நேருவின் தலைமையில் அமைக்கப்பட்ட இடைக்கால அரசாங்கம் ஒரு உயர் திகார திட்ட ஆலோசனை போர்டை (Advisory Planning Board) ஏற்படுத்தியது. அது நாட்டை எதிர்கொண்டிருந்த பலதரப்பட்டப் பொருளாதாரப் பிரச்சனைகளைப் பரிசீலித்தது. இந்தியப் பொருளாதார வளர்ச்சி பற்றித் தொடர்ந்து கவனம் செலுத்தும் பொருட்டுத் திட்டக் கமிஷன் (Planning Commission) ஒன்றை ஏற்படுத்த வேண்டும் என்று பரிந்துரைத்தது. அதன் அடிப்படையில் இந்தியா விடுதலை அடைந்த பின் பிரதமர் நேரு திட்டக் கமிஷன் உருவாக்குவதற்கான அனைத்து முயற்சிகளையும் மேற்கொண்டார்.

### 10.3.1. திட்டக்கமிஷன் (Planning Commission, 1950)

இந்தியத் திட்டக் கமிஷன் 1950 மார்ச் 15 ஆம் தேதி துவக்கப்பட்டது. இது அரசியலமைப்புச் சட்ட அங்கீகாரமில்லாத

ஆலோசனைக் குழு ஆகும். இதன் தலைவர் பிரதமர், துணைத் தலைவர் மற்றும் பிற முழு நேர அதிகாரிகளும் இதில் செயல்படுகின்றன. திட்டக்கமிஷன் மத்திய அமைச்சரவையோடு நெருங்கியத் தொடர்பு கொண்டு செயல்படும். திட்டக்கமிஷனின் நோக்கங்களாவன: 1) நாட்டு வளங்களை - இயற்கை, மனித மற்றும் மூலதன வளங்கள் மதிப்பீடு செய்து அவற்றை மேலும் வளர்ப்பதற்கான வழிவகைகளைக் காணல். 2) பொருளாதார வளர்ச்சிக்கான திட்டங்களைத் தயாரித்துத் தேவையான வளங்களைத் திரட்டி, திறமையாகப் பயன்படுத்தல். 3) பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையான வளங்களில் பற்றாக்குறை இருப்பின் அவற்றைக் கண்டறிந்து நிறைவு செய்வதற்கான யோசனைகளைக் கூறல். 4) திட்டங்களின் முன்னுரிமைகளைத் தீர்மானித்தல், எந்த நிலைகளில் திட்டங்களை எவ்வாறு செயல்படுத்துவது என்பதை நெறிப்படுத்தல். 5) பொருளாதார வளர்ச்சிக்குத் தடையாக உள்ள காரணங்களைக் கண்டறிந்து களைதல். திட்டச் செயல்பாடு பற்றி அவ்வப்போது மதிப்பீடுச் செய்து மேற்கொண்டு பொருளாதாரப் பெருக்கத்துக்கானக் கொள்கை முடிவுகள் எடுப்பதற்கான பரிந்துரைகளைச் செய்தல்.

## 10.3.2. தேசிய வளர்ச்சி மன்றம் (National Development Council)

மாநிலங்களின் ஒத்துழைப்பும், பங்கேற்பும், பங்களிப்புமின்றிப் பொருளாதார வளர்ச்சித் திட்டங்கள் வெற்றி பெறாது. எனவே, திட்டமிட்டப் பொருளாதார வளர்ச்சிக்கு மாநிலங்களின் ஒத்துழைப்பைப் பெரும் பொருட்டு 1952- ஆம் ஆண்டு தேசிய வளர்ச்சி மன்றம் அமைக்கப்பட்டது. பிரதமர் இதன் தலைவர், மாநில முதலமைச்சர்கள் மற்றும் உணவு, உள் துறை, நிதி மற்றும் பாதுகாப்பு அமைச்சர்கள் இம்மன்றத்தின் உறுப்பினர்கள்.

**தேசிய வளர்ச்சி மன்றப் பணிகளாவன:**

1) திட்டங்களைத் தயாரிப்பதற்கான வழிகாட்டல். 2) திட்டங்களுக்கான வளங்களை மதிப்பீடு செய்ய உதவல். 3) திட்டக் கமிஷனால் தயாரிக்கப்பட்டத் திட்டங்களைப் பரிசீலித்தல். 4) பொருளாதார வளர்ச்சியைப் பாதிக்கக்கூடிய முக்கிய ஆறு பொருளாதாரக்

கொள்கைகளைப் பற்றி விவாதித்தல். 5) திட்டச் செயல்பாட்டை விமா முத்து, திட்ட இலக்குகளை விரைந்து, அவற்றை அடைவதற்கான வழிகள் பற்றி யோசனைக் கூறல். 6) திட்டமிட்ட வளர்ச்சித் தொடர்பான நிர்வாகப் பணிகளைச் செம் பயப்படுத்துவதற்கான வழிவகைகளைக் கண்டறிதல். 7) பின்தங்கிய பகுதிகள் மற்றும் மக்களின் முன்னேற்றத்துக்கான முயற்சிகளை மேற்கொள்ள உறுதுணையாக இருத்தல். 8) தேவையான வளங்களைச் சேகரிப்பதற்கான நடவடிக்கைகளைப் பாத்துரைத்தல். 9) திட்டத்தின் செயல்பாட்டை மதிப்பீடு செய்ய உதவுதல். தேசிய வளர்ச்சி மன்றம் வழக்கமாக இரண்டாண்டுகளுக்கொருமுறை கூடுகிறது. இம்மன்றம் மத்திய - மாநில அரசாங்கங்களுக்கும் திட்டக்கமிஷனுக்கும் இணைப்புப் பாலமாக உள்ளது. இதன் பரிந்துரைகள் கொள்கை வழிகாட்டு நெறிகளாகக் இருக்கின்றன திட்டச் செயல்பாட்டின் நிறைகுறைகளை விவாதிப்பதற்கும், குறைகளை நிறை காண்பதற்கும், திட்ட வெற்றிக்கு மத்திய மாநில அரசுகளைப் பொறுப்பேற்கச் செய்வதற்கும் இம்மன்றம் பயன்படுகிறது. தேசிய வளர்ச்சி மன்றம் திட்டக் கமிஷனைப் பின்னுக்குத் தள்ளிவிட்டது. அமைச்சரவைக்கு மேலாக மேலாதிக்கம் செய்கிறது. “பேச்சுக் தடை“யாக மட்டும் உள்ளது போன்ற குற்றச்சாட்டுகள் உள்ளன. தேசிய வளர்ச்சி மன்றத்தின் முக்கியத்துவத்தைக் குறைத்து மதிப்பிட முடியாது. கார் திட்டங்கள் பற்றி மாநிலங்களுக்கிடையே கருத்தொற்றுமை ஏற்பட உதவுகிறது. அதுமட்டுமல்ல,தேசிய வளர்ச்சி மன்றம் உண்மையானக் கூட்டாட்சியைப் பிரதிபலிப்பதாக உள்ளது” என்று ஆர்.வெங்கட்ராமன் கருதுகிறார்.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. தேசிய திட்டக்குழு என்றால் என்ன?
2. திட்டக்குழுவின் தலைவர் யார்?

3 இந்திய வர்த்தக மற்றும் தொழில்துறை கூட்டமைப்பின் (1934) தலைவராக இருந்தவர் யார்?

## 10.4. ஐந்தாண்டுத் திட்டங்கள்

குறிப்பு

நேரு அரசாங்கம் அதன் கவனத்தைப் பொருளாதார வளர்ச்சி மீது திருப்பியது. புதிதாகப் பெற்ற சுதந்திரம் நிலைக்க வேண்டுமாயின் வளர்ச்சியை நோக்கி முன்னேறுவதை மக்கள் உணரவேண்டும். இல்லாவிடில் இந்தியா எந்த இலட்சியங்களுக்காகப் போராடியதோ அவை நீர்க்குமிழிகளாக மறைந்துவிடும். அதுமட்டுமல்ல சோவியத் யூனியனிலும், சீனாவிலும், கிழக்காசிய நாடுகளிலும் ஏற்பட்டப் பொருளாதாரப் புரட்சி மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டியதன் இன்றியமையாமையை அடிக்கோடிட்டுக் காட்டியது. எனவே, நேரு அரசாங்கம் இந்தியாவின் பொருளாதார உணர்வு தேவைகளை ஐந்தாண்டுத் திட்டங்கள் மூலம் நிறைவேற்ற உறுதியைப் பூண்டது.

## 10.4.1. முதல் ஐந்தாண்டுத் திட்டம் (1951-1956)

**நோக்கம்**

1951 ஜூலை மாதம் திட்டக் கமிஷன் முதல் ஐந்தாண்டுத் திட்டவரைவைச் சமர்ப்பித்தது. நேரு அரசாங்கம் பலதரப்பு விமர்சனங்களையும் பரிசீலித்தப் பின் 1952-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தை வெளியிட்டது. முதல் திட்டம் சுதந்திர இந்தியாவின் திட்டமிட்டப் பொருளாதார வளர்ச்சிக்கான “கன்னி முயற்சி” ஆகும். அதன் மூல நோக்கங்கள் இரண்டு: 1) உலகப் போர்களாலும், இந்தியப் பிரிவினையாலும் உருக்குலைந்து போயிருந்த இந்தியப் பொருளாதாரத்தைச் சீரமைத்தல். 2) மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தி, வளமிக்கப் பன்முக வளர்ச்சிக்கான வாய்ப்புகளை உருவாக்கல்.

**திட்டம்**

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்றப் பொருள் வளங்களைத் தொழில் நுட்பரீதியாகப் பெருக்கி, மனித வளத்தைச் செம்மைப்படுத்தி, மக்களின் தேவைகளையும் எதிர்பார்ப்புகளையும் பூர்த்திச் செய்வதற்கான அமைப்பு முறையை ஏற்படுத்த வேண்டியது அவசியமாயிற்று. பொருள் உற்பத்தியைப் பெருக்கல், தேசிய வருவாயை

குறிப்பு

உயர்த்தல், பொருளாதார ஏற்றத்தாழ்வுகளைக் குறைத்தல், நிலையான சொத்துக்களைச் சேர்த்தல் ஆகியவற்றுக்கிடையே சமநிலையை ஏற்படுத்துவது திட்டக் கமிஷனின் முன்னுரிமையாக இருந்தது. முதல் ஐந்தாண்டுத் திட்டம் அடுத்துவரும் திட்டங்களுக்கான முன்னோடியாகும். முதல் ஐந்தாண்டுத் திட்டம் அரசியலமைப்புச் சட்டத்தின் பொருளாதார, சமூக நோக்கங்களுக்குச் செயலுருவம் கொடுப்பதற்கான முயற்சியாகும். நடைமுறையில் இருந்த பலதரப்பட்டப் பொருளாதார நடவடிக்கைகள் ஒரு குடையின் கீழ்க்கொண்டு வரப்பட்டன. முதல் திட்டம் தேசியப் பொருளாதார அணுகுமுறையை அறிமுகப்படுத்தியது. விரைவான தொழில் வளர்ச்சிக்குத் தேவையான உட்கட்டுமானத்தைப் பலப்படுத்தியது. நம்பகமான புள்ளி விவரங்கள் இல்லாத போதும் முதல் திட்டம் அறிவுப்பூர்வமாகத் தீட்டப்பட்டு முனைப்பார்வத்துடன் செயல்படுத்தப்பட்டது. விவசாயத்துக்கும், கிராம வளர்ச்சிக்கும் சிறப்பிடம் கொடுக்கப்பட்டது. உணவு அமைச்சராயிருந்த ஜெயராம் தாஸ், நேரு எதிர்பார்த்த அளவுக்குச் செயல்படவில்லை. நிதி அமைச்சர் ஜான் மத்தாய்க்கு திட்டமிட்டப் பொருளாதார வளர்ச்சியில் நம்பிக்கையில்லை. பல நடைமுறை இடர்ப்பாடுகள் இருந்தன. எனினும், நேரு பொருளாதார வளர்ச்சியின் அவசியத்தையும், அவசரத்தையும் உணர்ந்து திட்டமிட்டப் பொருளாதார ஏற்றத்துக்காக விரைந்துச் செயல்பட்டார் என்று எஸ்.கோபால் கூறியுள்ளார்.

## 10.4.2. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் (1956-1961)

முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலம் முடிவதற்கு முன்பே இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் வரைவதற்கான முயற்சி மேற்கொள்ளப்பட்டது. கல்கத்தாவிலிருந்த இந்தியப் புள்ளி விவர நிறுவனத்தின் (Indian Statistical Institutes) பேராசிரியர் டாக்டர் பி.சி.மகலாநோபிஸ் (P.C.Mahalanobis) இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட வரைவைத் தயாரிக்குமாறு கேட்டுக் கொள்ளப்பட்டார். அவர் தயாரித்தத் திட்ட வரைவு தக்க மாற்றங்களுடன் 1956-ஆம் ஆண்டு ஏப்ரல் முதல் தேதியிலிருந்து நடைமுறைக்கு வந்தது. நாட்டின் பொருளாதார - சமூக மாற்றங்களை விரைவுபடுத்தும் வகையில் அமைப்பு மாற்றங்கள் (Structural Changesi) மேற்கொள்ளப்பட்டன. சோஷலிசச் சமுதாயத்தை

அமைப்பதற்கு முன்னுரிமைக் கொடுக்கப்பட்டது. அதற்காக, எட்டாண்டுகளுக்கு முன் ஏற்றுக் கொள்ளப்பட்டத் “தொழில் கொள்கைக்கு (Industrial Policy, 1948) பதில் புதிய தொழில் கொள்கைத் தீர்மானம் (New Industrial Policy Resolution, 1956) ஏற்றுக் கொள்ளப்பட்டது. அதன் விளைவே ‘கூட்டுப் பொருளாதாரம்“ ஆகும்.

கிராமப் புற இந்தியாவைச் சீரமைத்தல், தொழில் துறை வளர்ச்சிக்கான அடிக்கல்லை நாட்டுதல், பின்தங்கிய மக்களின் வளர்ச்சிக்காக அதிக பட்ச வாய்ப்புகளை உருவாக்குதல் மற்றும் நாட்டின் அனைத்துப் பகுதிகளுக்கும் ஒரே சீராக வளர்ச்சி அடைவதை உறுதிசெய்தல் ஆகியவை இத்திட்டத்தின் நோக்கங்களாக இருந்தன.

### 10.4.3. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் (1961 - 1966)

முதல் இரண்டு திட்டங்களின் சாதனைகளின் அடிப்படையில் மிகுந்த எதிர்பார்ப்புக்கிடையே மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் 1961-ஆம் ஆண்டு ஏப்ரல் முதல் தேதியிலிருந்து நடைமுறைக்கு வந்தது. இத்திட்டத்தின் செயல் உத்தி, விவசாயம் தொழில், பொருளாதார - சமூக வளர்ச்சி, உள்நாட்டு - வெளிநாட்டு முதலீடுகள் ஆகியவற்றுக்கிடையேயான பரஸ்பரச் சார்புடைமையை வலியுறுத்துவதாக இருந்தது. தற்சார்புப் பொருளாதாரமே (Self-relient Economy) இதன் குறிக்கோளாக இருந்தது. மூன்றாவது திட்டம் நீண்டகால வளர்ச்சி மாதிரியை (Long-term growth model) வழிகாட்டியாகக் கொண்டது.

மூன்றாவது திட்டக் காலத்தின் முதல் நான்கு ஆண்டுகளில் தேசிய வருவாய் 20 சதவிகிதமாக உயர்ந்தது. கனரகத் தொழில்களுக்கு, அதாவது பொதுத்துறைக்கு, தொடர்ந்து முன்னுரிமைக் கொடுக்கப்பட்டது. வர்த்தகப் பற்றாக்குறை அதிகரித்ததால் கடன் பொறுப்புகள் பெருகின. சர்வதேச நிதி நிறுவனத்திடமிருந்து (International Monetary Fund) கடன்களைப் பெறவேண்டியக் கட்டாயம் ஏற்பட்டது. நிதிப் பற்றாக்குறை, சீன ஆக்கிரமிப்பு (1962), வெளிநாட்டு உதவித் தட்டுப்பாடு, பாதுகாப்புச் செலவு அதிகரிப்பு, பஞ்சம் போன்ற காரணங்களால் பொருளாதார வளர்ச்சிப் பெரிதும் பாதிக்கப்பட்டது. ஆகியவற்றிற்கும் மேலாக நேருவின் மறைவு (1964 மே 27) மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை முடக்கி விட்டது எனலாம்.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**



4. முதல் ஐந்தாண்டுத் திட்டம் எப்போது அறிமுகப்படுத்தப்பட்டது?
5. பெரிய அளவிலான தொழில்களை மேம்படுத்துவதில் கவனம் செலுத்தியது எந்த ஐந்தாண்டுத் திட்டம்?

## 10.5.தொழில் வளர்ச்சி

**நவீனமயமாக்கல் (Modernisation)**

இந்தியா சுதந்திரம் பெற்றவுடன் மிகவும் பின் தங்கியிருந்த நிலமானியப் பொருளாதாரத்தை நவீன முற்போக்கு பொருளாதாரமாக உருமாற்றம் செய்வதற்கான மகத்தான முயற்சி மேற்கொள்ளப்பட்டது. நவீனமயமாக்கல் மூலமாக இந்தியாவைத் தொழில்மயமான நாடாக்க வேண்டும் என்ற எண்ணத்தோடும், எதிர்பார்ப்போடும் பொருளாதாரம் திட்டமிடப்பட்டது. நவீனமயமாக்கல் என்றால், 1) பொருள் உற்பத்தித் துறையில் - பொதுத்துறை, தனியார் துறை, கூட்டுறவுத் துறை - மாற்றத்தைக் கொண்டு வருதல் 2) பல்வகையான பொருளாதார நடவடிக்கைகளை மேற்கொள்ளல் 3)பொருளாதார வளர்ச்சிக்காக அறிவியல் தொழில் நுட்பங்களைப் பயன்படுத்துதல் 4)நிறுவனப் புத்தமைப்புகளை (Institutional Innovations)ப் புகுத்துதல் 5) மக்களின் மனப்போக்கிலும், தொழில் நடத்தையிலும், தொழில் நுட்ப அறிவிலும் திறமையிலும் அடிப்படை மாற்றத்தை ஏற்படுத்துதல் 6) அனைத்து நிலைகளிலும் முன்னேற்றம் ஏற்பட அர்ப்பணித்துக் கொள்ளல் ஆகும்.

**தொழில்மயமாக்கல் (Industrialisation)**

நவீனமயமாக்கலின் மறுபக்கம் தொழில் மயமாக்கலாகும். தொழிற்புரட்சி காணாத இந்தியாவில் தொழில் மாற்றத்தை ஏற்படுத்துவதே தொழில்மயமாக்கலின் நோக்கமாகும். விவசாயத்தையே நம்பிக் கொண்டிருந்த நாட்டில் தொழில்களை விரிவுபடுத்தித் துரிதப் பொருளாதார வளர்ச்சியையும் வளத்தையும் பெருக்கும் நோக்கத்துடன் திட்டமிட்ட பொருளாதார முறை பின்பற்றப்பட்டது. தொழில் பெருக்கத்தால் தன்னிறைவுப் பொருளாதார இலக்கை அடையலாம்

வேலை வாய்ப்பை அதிகரிக்கலாம் தேச மற்றும் தனிநபர் வருவாயைப் பெருக்கலாம் உற்பத்தி சாதனங்களைத் திறமையாகப் பயன்படுத்தி உற்பத்தித் திறனை அதிகரிக்கலாம் நிதி நிறுவனங்கள், போக்குவரத்து, தகவல் தொடர்பு வளரும் வேளாண்மை முறை செம்மைப்படும் மக்களின் வாங்கும் சக்தி அதிகரிப்பதால் சந்தைப் பொருளாதாரம் பலப்படும் வேலை வாய்ப்பு அதிகரிப்பதால் வறுமை வட்டம் சுருங்கும் இவையன்றி ஏற்றுமதிப் பெருக்கம், நகர வளர்ச்சி, கல்வி மேம்பாடு, தேசப் பாதுகாப்பு பலப்படும்.

**பொதுத்துறை நிறுவனங்கள் (Public Sector Undertakings)**

இந்தியா விடுதலை அடைந்த போது போர்த்தளவாடங்கள், ரயில் போக்குவரத்து, தபால் தந்தி, துறைமுகம் போன்ற சில தொழில்கள் மட்டும் அரசாங்க நிர்வாகத்தின் கீழ் இருந்தன. தொழிற்புரட்சிக்குத் தேவையான கனரகத் தொழில்களைத் துவக்குவதற்குத் தேவையான முதலீடு தனியாரிடம் இல்லை. வெளிநாட்டு மூலதனத்தை நம்பி நாட்டைத் தொழில்மயமாக்க சுதந்திர அரசாங்கம் விரும்பவில்லை. எனவே, திட்டகர்த்தாக்கள் புதிய கனரகத் தொழில்களைப் பொதுத்துறையில் துவங்கவும், தனியார் துறையில் இயங்கி வந்த அத்யாவசியத் தொழில்களை தேசியமயமாக்கவும் திட்டமிட்டனர். அதற்கான காரணங்களாவன: 1) மிகுந்த மூலதனம் தேவைப்பட்ட மையத்துறை (Core Sector)த் தொழில்களை - கனரக இயந்திரங்கள், எ∴கு, உரம், பூச்சிக் கொல்லி மருந்து - துவக்கல் 2) பலமிக்க தொழில் கட்டமைப்பை உருவாக்கல் 3) இறக்குமதிப் பொருள்களுக்கிணையான பொருள்களை (Import Substitution) உற்பத்தி செய்து, ஏற்றுமதியை அதிகரித்தல் 4) அந்நியச் செலாவணியை அதிகரித்து, சுயசார்புப் பொருளாதாரத்தை ஏற்படுத்தல் 5) பிராந்திய பொருளாதார ஏற்றத் தாழ்வுகளைக் குறைத்தல் 6) மக்கள் நல நாட்டை (Welfare State) உருவாக்கல். துவக்கத்திலிருந்தே பொதுத்துறைத் தொழில்களுக்கு முன்னுரிமையும், பாதுகாப்பும், ஊக்கமும் கொடுக்கப்பட்டதால், இவை வியத்தகு வளர்ச்சி அடைந்தன. இவற்றின் விரிவாக்கம் அதிசயிக்கத்தக்கது. முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் 5 ஆக இருந்த பொதுத் துறை நிறுவனங்கள் காலப் போக்கில் 170 ஆக

உயர்ந்தது. இரும்பு, எ∴கு உற்பத்தியிலிருந்து உணவு விடுதி, ரொட்டி அடுமனை (Backery) வளர பொதுத்துறை வட்டத்துக்குள் வந்தன.

பொதுத்துறை நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு உறுதியான அடித்தளத்தை அமைத்தது. தொழில் முன்னேற்றத்துக்கு வழிவகுத்தது. வேலை வாய்ப்பை அதிகரித்தது. எண்ணெய் மற்றும் இயற்கை வாயு குழுமம் (ONGC), இந்திய எண்ணெய்க் கழகம் (ஐழுஊ) போன்ற நிறுவனங்கள் இலாபகரமாகச் செயல்பட்டதால் பெட்ரோலியப் பொருள்களின் இறக்குமதி குறைந்தது அந்நியச் செலாவணி அதிகரித்தது. எனினும், பொதுத்துறை நிறுவனங்கள் துவக்கத்தில் திறமையாகச் செயல்பட்டாலும், போகப் போக திறமை குறைந்து பெரும்பான்மையானவை நட்டத்தில் இயங்கின. மொத்த முதலீட்டில் ஒரு சதவிகிதமே இலாபமாகக் கிடைத்தது. மேலும் வேலை நிறுத்தம், கதவடைப்பு, உள்ளிருப்புப் போராட்டம், தொழிற்சங்கங்களின் பொறுப்பற்ற போக்கு, அரசாங்கத்தின் தவறான விலைக் கொள்கை, அதிகார வர்க்கத்தின் ஆதிக்கம், அரசியல்வாதிகளின் குறுக்கீடு, மேலாண்மைத் திறமையின்மை, உறவினர்க்கு ஆதரவு (Repotism), வேண்டியவர்களுக்குச் சலுகை (Patronage), ஊழல் (Corruption) போன்ற காரணங்களால் நாட்டின் சொத்தாக இருக்க வேண்டிய பொதுத்துறை நிறுவனங்கள் தேசத்தின் சுமையாயின.

**ஏகபோக வர்த்தகத் தடைச் சட்டம், 1969**

Monopolies and Restrictive Trade Practices Act, 1969

பொதுத்துறை நிறுவனங்கள் அரசாங்கத்தில் செல்லப் பிள்ளைகளாக இருக்க, தனியார் துறை நிறுவனங்கள் மாற்றாந்தாய் மனப்பான்மையுடன் நடத்தப்பட்டன. தனியார் நிறுவனங்கள் நாட்டு நலனைக் கருதாமல் இலாப நோக்கோடு செயல்படுபவை என்று கூறப்பட்டது. எனவே, சொத்து ஒரு சிலரிடம் குவிந்துவிடக்கூடாது என்பதற்காக தொழில் கொள்கை வகுக்கப்பட்டது. திட்டமிட்ட பொருளாதாரத்தின் மூலம் சமதர்ம சமுதாயத்தை ஏற்படுத்துவதற்கான முயற்சி மேற்கொள்ளப்பட்டது. பிரதமர் இந்திரா காந்தியின் முதல் ஆட்சிக் காலத்தில் சொத்துக் குவிப்பு அல்லது வர்த்தக ஏகபோகத்தைத் தடுப்பதற்காகக் கடுமையான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. ஏகபோக விசாரணைக் கமிஷன் (Monopolies Inquiry Commission, 1965) நியமிக்கப்பட்டது.

இக்கமிஷனின் பரிந்துரைகளின்படி ஏகபோக வர்த்தகத் தடைச் சட்டம் (Monopolies Restrictive Trade Practices Act, 1969) நிறைவேற்றப்பட்டது. இச்சட்டத்தைச் செயல்படுத்துவதற்காக ஏகபோக வர்த்தகத் தடை ஆணையம் (Monopolies Trade Practices Commission, 1971) அமைக்கப்பட்டது. இத்தகைய ஏகபோக வர்த்தகத் தடை நடவடிக்கைகளால் ஆரோக்கியமற்ற போட்டியைத் தடுக்க முடியும் என்று எதிர்பார்க்கப்பட்டது. இச்சட்டம் நிறைவேற்றப்பட்ட பின்னர் தனியார் தொழில் நிறுவனங்களின் வர்த்தக நடவடிக்கைகள் கடுமையாகக் கண்காணிக்கப்பட்டன. இந்நிறுவனங்களின் வளர்ச்சிக்கு அரசாங்கத்தின் அனுமதியைப் பெற வேண்டியிருந்தது. இதன் காரணமாக ஒரு தலைமுறைக்கு தனியார் தொழிலமைப்புகள் தலைதூக்க முடியாமல் முடக்கப்பட்டன. இருப்பினும் சட்ட ஓட்டைகளைப் பயன்படுத்திக் கொண்டு தனியார் துறையினர் ஏகபோக விரிவாக்கத்தில் ஈடுபடவே செய்தனர்! உதாரணமாக இச்சட்டம் ஏகபோக வர்த்தகத் தீமைகளைத் தடுக்க முற்பட்டதேயன்றி அதன் அடிப்படையை அகற்றவில்லை. மேலும் ஏகபோக வர்த்தகத் தடை ஆணையம் பரிந்துரை செய்யும் அமைப்பாக இருந்ததேயன்றி, அவற்றை நடைமுறைப்படுத்தும் அதிகாரத்தைப் பெற்றிருக்கவில்லை. ஏகபோக வர்த்தகத்தைத் தடை செய்ய முடியாத அதே சமயம் தனியார் துறை வளர்ச்சியைத் தடை செய்த இச்சட்டம் 1991-ல் கைவிடப்பட்டது. இந்த அரசாங்க ஏகபோக பிற்போக்குச் சட்டத்தை ஆபத்தான சட்டம்', 'பைத்தியக்கார பொருளாதாரக் கொடுமை" என்று வர்ணித்துள்ளார் குர்சரன் தாஸ் (Gurcharan Das).

### தொழில் கொள்கை (industrial Policy)

இந்தியாவின் முதல் பிரதமரான ஜவஹர்லால் நேரு சுதந்திர இந்தியா சுதந்திரமான பொருளாதாரக் கொள்கையைப் பின்பற்ற வேண்டும் என்று விரும்பினார். முதலாளித்துவம் சுரண்டலை மையமாகக் கொண்டது. கம்யூனிசம் அடக்குமுறையை அடிப்படையாகக் கொண்டது. ஜனநாயக சோஷலிசம் மக்களின் சம்மதத்தோடும் பங்கேற்போடும் சமதர்ம சமுதாயத்தை ஏற்படுத்த வல்லது. எனவே, விரைவான தொழில் வளர்ச்சி மூலம் வளமான இந்தியாவைக் காண வேண்டும் என்ற குறிக்கோளோடு திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சி முறை மேற்கொள்ளப்பட்டது. இதற்கான தொழில் கொள்கை உருவாக்கப்பட்டது.

## 10.6. தொழில் கொள்கை, 1948

**குறிப்பு**

தொழில் கொள்கை தொழில் வளர்ச்சியைத் தீர்மானிக்கும் அரசாங்க முடிவாகும் தொழில் விரிவாக்கத்தின் நோக்கையும் போக்கையும் நெறிப்படுத்தும் பட்டயமாகும். 1948 ஏப்ரல் மாதம் வெளியிடப்பட்ட முதல் தொழில் கொள்கை தொழில் துறையை நான்கு வகைப்படுத்தியது: 1) போர்த் தளவாடங்கள், ரயில் போக்குவரத்து, அணு ஆற்றல் போன்ற பாதுகாப்பு முக்கியத்துவமுடைய தொழில்கள் கனரக இயந்திரங்கள், எ∴கு, இரும்பு, பெட்ரோலியப் பொருள்கள் உற்பத்தி போன்ற பொதுத்துறைத் தொழில்கள் தனியார் மற்றும் கூட்டுறவுத் துறைத் தொழில்கள். 2) கனரகத் தொழில்களுக்குத் துணைத் தொழில்களான சிறுகுறு தொழில்கள். 3) தொழில் வளர்ச்சிக்கும், விளைவுக்கும் காரணமான முதலாளி - தொழிலாளி நல்லுறவு 4) அந்நிய முதலீட்டுத் தொழில்கள். சுதந்திர இந்தியாவின் முதல் தொழில் கொள்கை தொழில் மயமாதலின் வடிவ விளிம்பை வரையறுத்துக் கொடுத்தது. கலப்புப் பொருளாதாரத்திற்கு கால்கோள் நாட்டப்பட்டது. பொதுத்துறை, கூட்டுறவுத் துறை, தனியார் துறை ஆகியவற்றின் சார்பு முக்கியத்துவத்தை அடிக்கோடிட்டுக் காட்டியது. துவக்கத் தொழில் வளர்ச்சிக்கு அரசாங்கத்தின் வழிகாட்டலும், நெறிப்படுத்தலும், கட்டுப்பாடும் அவசியம் என்பதை வலியுறுத்தியது. அதே சமயம் தொழில் வளர்ச்சிக்கு அந்நிய மூலதனத்தின் தேவை ஏற்றுக் கொள்ளப்பட்டது.

### தொழில்கள் (வளர்ச்சி மற்றும் ஒழுங்குபடுத்தும்) சட்டம், 1951

Industries (Development and Regulation) Act, 1951

தொழில்மயமாக்கலின் முக்கிய கூறுகளில் ஒன்று தொழில் உரிமம் (industrial Licence) ஆகும். தொழில் உரிமம் பெறாமல் தனியார் துறையில் எந்தத் தொழிலையும் துவங்க முடியாது. தொழில் உரிம முறையால் மட்டுமே நாட்டின் வளங்களை சீராகவும், சிறப்பாகவும் பகிர்ந்தளிக்க முடியும் என்ற நம்பிக்கையில் தொழில் உரிம முறை அறிமுகப்படுத்தப்பட்டது. தொழில் உரிமைக் கொள்கையின் அடிப்படையில் தொழில்கள் (வளர்ச்சி மற்றும் ஒழுங்குபடுத்து) சட்டம் நிறைவேற்றப்பட்டது. இதன் நோக்கங்களாவன: 1) தொழில் முதலீட்டை

வளர்த்தல் ஒழுங்குபடுத்துதல் 2)பொருளாதார மயக்குவியலைத் தடுத்தல் 3) சிறு மற்றும் நடுத்தரத் தொழில்களை ஊக்குவித்தல் 4) சமப் பொருளாதார வளர்ச்சிக்கு உதவுதல்.
தொழில் கொள்கை,

குறிப்பு

**1956 தொழில்கள் சட்டம்**

1951 தனியார் துறைத் தொழில்களைக் கட்டுப்படுத்தவும், அவசியமாயின் தேச உடைமையாக்குவதற்குமான அதிகாரத்தை அரசாங்கத்துக்கு வழங்கியது. முதல் தொழில் கொள்கை நடைமுறைக்கு வந்த பின் ஏற்பட்ட மாற்றங்களுக்கேற்ப, இரண்டாவது தொழில் கொள்கை 1956-ல் அறிவிக்கப்பட்டது. இக்கொள்கையின் சிறப்பியல்புகளாவன: 1) தொழில்கள் பொதுத்துறை மற்றும் தனியார் துறைத் தொழில்கள் என்று இருவகையாகப் பிரிக்கப்பட்டன. 2) இவ்விரு துறைகளின் பரஸ்பரத் தொடர்பும், சார்பும் தெளிவாக்கப்பட்டது. 3) சிறுகுறு மற்றும் குடிசைத் தொழில்களின் பங்கு வரையறுக்கப்பட்டது. 4) தொழில் வளர்ச்சியில் தொழில் நுட்ப மற்றும் மேலாண்மை வல்லுநர்களின் பங்கேற்பும் பணியும் வலியுறுத்தப்பட்டது. 5)தொழில் வளர்ச்சியில் தொழிலாளர்களின் பங்கும், அவர்களது ஊதியம் மற்றும் பணி உயர்வும் தெளிவாக்கப்பட்டது. 6) யாவற்றுக்கும் மேலாக பின்தங்கிய, புறக்கணிக்கப்பட்ட பகுதிகளில் தொழில் துவங்க வேண்டியதன் இன்றியமையாமை வலியுறுத்தப்பட்டது.
வரலாற்றுச் சிறப்புடைய இத்தொழில் கொள்கை, முதல் முறையாக அறிவுப்பூர்வமான, நடைமுறை சாத்தியமான, அகல்விரிவான விளக்கமளித்தது. இதில் பொதுத் துறையின் நோக்கும் போக்கும் சந்தேகத்திற்கு இடமின்றி தெளிவாக்கப்பட்டது. இத்துறை நிறுவனங்கள் திறமையாக இயங்க, தேச வருவாயை அதிகரித்து, சேமிப்பைப் பெருக்கி, புதிய தொழில்களைத் துவங்க வழிகோல வேண்டும் என்பது அடிக்கோடிட்டுக் காட்டப்பட்டது. 1956 தொழில் கொள்கையின் வரைவுக்கு உதவிய நேரு திறம்பட செயல்படும் பொதுத்துறை நிறுவனங்கள் மட்டும் நிலைக்க வேண்டும் என்றும், திறமையற்ற நிறுவனங்கள் நீக்கப்பட வேண்டும் என்று உறுதியாகக் கூறினார். இரண்டாவது திட்ட காலத்தில் நடைமுறைக்கு வந்த இத்தொழில் கொள்கை 10 ஆண்டு காலம் பின்பற்றப்பட்டது.

**ஜனதா தொழில் கொள்கை, 1977**

1956 தொழில் கொள்கைப்படி 17 கனரகத் தொழில்கள் பொதுத்துறைக்கு ஒதுக்கப்பட்டன. 1960களில் ஜி.டி.பிர்லா போன்றோர் கனரகத் தொழில்களை குறிப்பாக எஃகு உற்பத்தி துவங்கத் தயாராக இருந்தும் வாய்ப்பு மறுக்கப்பட்டது. போட்டியற்ற பொருளாதாரம் தேக்கமடையும் என்ற உண்மையை ஆட்சியாளர்கள் உணரத் தவறிவிட்டனர். எனவே ஜனதா ஆட்சிக் காலத்தின் (1977-79) துவக்கத்திலேயே 1956 தொழில் கொள்கையில் மாற்றம் செய்யப்பட்டது.

ஜனதா தொழில் கொள்கை (1977) யின் சிறப்புக் கூறுகள் மூன்று: 1) வேலை வாய்ப்பை அதிகரித்தல் 2) வருமானத்தை அதிகரித்தல் 3) வாழ்க்கைத் தரத்தை உயர்த்தல். பொருளாதார பலம் ஒரு சிலரிடம் குவிவதைத் தடுக்க பெருந் தொழில்கள் வளர்ச்சிக்குத் தடைகள் விதிக்கப்பட்டன. பொதுத்துறை நிறுவனங்கள் திறமையாகச் செயல்படவும், குறைகள் களையவும், நுகர் பொருள்களை உற்பத்தி செய்யவும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. தொழிலாளர்கள் நிர்வாகத்தில் பங்கேற்க உரிமை வழங்கப்பட்டது. குடிசைத் தொழில்கள் ஊக்குவிக்கப்பட்டன. “மாவட்ட தொழில் மையங்கள்“ துவங்கப் பட்டன. இத்துறைக்கென ஒதுக்கப்பட்ட பொருள்களின் எண்ணிக்கை அதிகரிக்கப் பட்டது. வெளிநாட்டு நிறுவனங்களின் பங்குத்தொகை 40 சதவிகிதமாகக் குறைக்கப் பட்டது. இக்கொள்கை மூன்றாண்டுகள் பின்பற்றப்பட்டது.

## 10.7. புதிய தொழில் கொள்கை

பிரதமர் இந்திரா காந்தி மீண்டும் ஆட்சிப் பொறுப்பேற்றவுடன் 1980 ஜூலை மாதம் புதிய தொழில் கொள்கையை அறிவித்தார். உற்பத்தித்திறனை அதிகரித்தல், அத்திறனை முழுமையாகப் பயன்படுத்துதல், வேலை வாய்ப்பை அதிகரித்தல், பிராந்தியப் பொருளாதார ஏற்றத்தாழ்வை நீக்கல், தரமிக்க விலை குறைந்த நுகர்பொருள்களைத் தயாரித்தல் ஆகியவை இக்கொள்கையின் குறிக்கோள்களாகும். இத்தொழில் கொள்கையின்படி பொதுத்துறை நிறுவனங்கள் செம்மையாகச் செயல்படுவதற்கான முயற்சி மேற்கொள்ளப்பட்டது. கிராமப்புறங்களிலும், பின்தங்கிய பகுதிகளிலும் தொழிற்சாலைகள் துவங்க ஊக்கமளிக்கப்பட்டது. தனியார் துறையின்

இலக்குகளை அடைவதற்கான உதவியும் ஊக்கமும் அளிக்கப்பட்டன. அரசாங்கம் - தொழில் நிர்வாகம் - தொழிலாளர் ஆகியோரிடையே முத்தரப்பு பேச்சுவார்த்தை“ நடத்த முடிவு செய்யப்பட்டது. நலிவுற்ற தொழில்களைப் பலப்படுத்துவதற்கான நடவடிக்கை எடுக்கப்பட்டது. சிறு தொழில்கள் - குறிப்பாக கைத்தறி, கைவினைத் தொழில், கதர் மற்றும் கிராமக் கைத்தொழில்கள் - வளர்ச்சிக்கு முன்னுரிமை அளிக்கப்பட்டது. ஏற்றுமதிப் பொருள்கள் உற்பத்திக்குச் சிறப்புச் சலுகைகள் வழங்கப்பட்டன. தொழிற்சாலைகளால் சுற்றுச்சூழல் மாசுபடுவது கட்டுப்படுத்தப்பட்டது. தொழில் துறைத் தகவல்கள் அடங்கிய “தகவல் வங்கி“ துவங்கப்பட்டது. சிறு தொழில்களுக்குத் தேவையான மூலப் பொருள்கள் தடையின்றிக் கிடைக்க உபரி இருப்பு (Buffer Stock) வைக்கப்பட்டது. பின்தங்கிய பகுதிகளின் தொழில் வளர்ச்சிக்கான மையக்கரு தொழிற் கூடங்கள்“ (Nucleus Plants) தொடங்க சலுகைகள் அளிக்கப்பட்டன. மேலும் ஏகபோக வணிக நடவடிக்கைத் தடைச் சட்டம் (MRTP Act), மற்றும் அந்நியச் செலாவணி கட்டுப்பாட்டுச் சட்டம் (FERA) ஆகியவற்றின் கடுமையான விதிமுறைகள் தளர்த்தப்பட்டன. சிறுதொழில்கள் முதலீட்டு வரம்பு உயர்த்தப்பட்டது.

புதிய தொழில் கொள்கை தொழில் மற்றும் வர்த்தக வளர்ச்சியின் ஆக்கப்பூர்வமான தாக்கத்தை ஏற்படுத்தியது. பொதுத்துறை சிறப்பாகச் செயல்படவும், தனியார் துறை தடையின்றி வளரவும், சிறுதொழில் துறை புத்தூக்கம் பெறவும் இக்கொள்கை வழிவகுத்தது. எனினும் தொழில் வளர்ச்சி விகிதம் குறைந்ததற்கான காரணங்களைக் கண்டறிந்து நீக்கவும், பொதுத்துறை நிறுவனங்களின் செயல்பாட்டை மதிப்பீடு செய்து தொடர்ந்து நட்டத்தில் இயங்கும் நிறுவனங்களை மறுசீரமைப்பது அல்லது மூடிவிடுவது பற்றி இக்கொள்கை தெளிவுபடுத்தவில்லை. உரிம முறையும், தனியார் துறை வளர்ச்சிக் கட்டுப்பாடுகளிலும் தடைகளும் நீடிக்கவே செய்தன. சுருங்கக்கூறின் சர்வதேசப் போட்டியை எதிர்கொள்ளக் கூடிய வகையில் இத்தொழில் கொள்கை வகுக்ககப்படவில்லை.

### சீர்திருத்தத் தொழில் கொள்கை, 1991

1980-களில் வெளிநாட்டு வர்த்தகம் பொது விவாதப் பொருளாயிற்று. இந்தியாவின் இறக்குமதி ஏற்றுமதிக் கொள்கை கடும்

விமர்சனத்திற்குள்ளாயிற்று. தொழில் வளர்ச்சிக் கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட வேண்டியதன் அவசியம் வலியுறுத்தப்பட்டது. 1985-86ல் தொழில் உரிமை முறையில் நடைமுறை மாற்றங்கள் செய்யப்பட்டாலும் ஒட்டுமொத்த தொழில் வளர்ச்சி திருப்திகரமாக இல்லை. எனவே, பிரதமர் நரசிம்மராவின் ஆட்சிக் காலத்தின் துவக்கத்தில் 1991 ஜுலை மாதம் சீர்திருத்தத் தொழில் கொள்கை அறிவிக்கப்பட்டது. இக்கொள்கையின் முக்கிய நோக்கங்களாவன: 1) நாற்பதாண்டு கால தொழில் கொள்கை மற்றும் தொழில் வளர்ச்சியை மதிப்பீடு செய்து தொழில் சீர்திருத்தம் செய்தல். 2) தொழில் வளர்ச்சிக்கு எதிரான தடைகளை நீக்கல். 3)உற்பத்தித் திறனை உத்வேகப்படுத்துதல். 4. வேலை வாய்ப்பைப் பெருக்கல். 5)தொழில்கள் வெளிநாட்டுப் போட்டியை எதிர்கொள்வதற்குத் தேவையான திறமைகளை வளர்த்துக் கொள்ளல். சீர்திருத்த தொழில் கொள்கையின் நோக்கங்களை நிறைவேற்றப் பின்வரும் புரட்சிகரமான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. 1) தேசப் பாதுகாப்பு கருதி ஒதுக்கப்பட்ட தளவாடப் பொருள் உற்பத்தி போன்ற 17 தொழில்களைத் தவிர பிற தொழில்கள் துவங்குவதற்கான உரிமக் கட்டுப்பாடு நீக்கப்பட்டது. 2) இந்தியத் தொழில் நிறுவனங்களில் வெளிநாட்டு மூலதன உச்ச வரம்பு 40 சதவிகிதத்திலிருந்து 51 சதவிகிதமாக உயர்த்தப்பட்டது. சுற்றுலா, ஓட்டல்கள், உணவு பதப்படுத்துதல், உலோகவியல் உள்ளிட்ட 34 தொழில்களில் முதலீடு செய்ய வெளிநாடுகளில் வாழும் இந்தியர்கள் அனுமதிக்கப்பட்டனர். 3) ஆராய்ச்சி மற்றும் வளர்ச்சி (Research and Development)யை ஊக்குவிக்கும் பொருட்டு வெளிநாட்டு தொழில்நுட்ப ஒப்பந்தங்களுக்கு ஒப்புதல் வழங்கப்பட்டது. 4) பொதுத் துறைக்கு ஒதுக்கப்பட்ட சில தொழில்களில் தனியார் துறைக்குத் திறந்து விடப்பட்டன. 5) தடையற்ற தொழில் வளர்ச்சிக்காக ஏகபோக வர்த்தக நடைமுறைச் சட்டம் (MRT) திருத்தப்பட்டது. 6) சிறு தொழில்கள் விரைவாக வளர சிறப்புச் சலுகைகள் அளிக்கப்பட்டன. சிறு தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் பொருள்களை விற்பனை செய்யும் பொறுப்பு தேசிய சிறுதொழில் கழகத்திடம் ஒப்படைக்கப்பட்டது. சீர்திருத்த தொழில் கொள்கை, 1991 சமகால இந்திய தொழில் - வர்த்தக வளர்ச்சியில் முக்கிய திருப்புமுனையாகும். முந்தைய தொழில் கொள்கைகளிலிருந்து வேறுபடும் இக்கொள்கை அடிப்படை மாற்றங்களைச் செய்தது. உரிம

குறிப்பு

முறை ஒழிப்பு, பொதுத்துறை நிறுவனங்களில் சிலவற்றைத் தனியார் துறைக்குத் திறந்து விடல், அந்நிய முதலீட்டுக்கு அழைப்பு, சிக்கல்மிக்க இறக்குமதிக் கட்டுப்பாடுகள் விலக்கப்படல், விதிமுறைகள் நீக்கம் அல்லது தளர்த்தப்படல், ஆராய்ச்சி - வளர்ச்சிக்குச் சிறப்பிடம், போட்டி சந்தைப் பொருளாதாரத்துக்கு அங்கீகாரம், உலகத் தரத்துக்கேற்ப இந்திய தொழில் நுட்பத் திறனை உயர்த்தல் போன்றவை இக்கொள்கையின் சாதனைகளாகும்.

இக்கொள்கை இந்தியப் பொருளாதாரத்தின் ஈர்ப்பு மையத்தை உரிமக் கட்டுப்பாட்டு முறையிலிருந்து தாராள சந்தைப் போட்டி முறைக்கு மாற்றியது. லைசென்ஸ் ராஜ்யம் (Licence Raj) முடிவுக்கு வந்தது. இடதுசாரி கட்சிகளைத் தவிர பிற கட்சிகளிடையே தொழில் கொள்கை சீர்திருத்தம் பற்றிய கருத்தொற்றுமை ஏற்பட்டது. இக்கொள்கை இந்தியப் பொருளாதாரத்தை 21-ம் நூற்றாண்டு உலகத் தரத்துக்கு உயர்த்த வல்லது என்பதில் ஐயமில்லை. இக்கொள்கையின் அடிப்படையிலேயே பா.ஜ.க. தலைமையிலான தேசிய ஜனநாயகக் கூட்டணி இந்தியாவைப் பொருளாதார வல்லரசாக்கும் முயற்சியில் ஈடுபட்டது.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

6. எப்பொழுது ஏகபோக விசாரணைக் கமிஷன் நியமிக்கப்பட்டது.
7. எந்த ஆண்டு இரண்டாவது தொழில் கொள்கை அறிவிக்கப்பட்டது

## 10.8. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்

1. தேசிய திட்டக் குழு என்பது இந்தியாவிற்கான திட்டமிடப்பட்டப் பொருளாதார வளர்ச்சியினை ஏற்படுத்த ஜவஹர்லால் நேருவின் தலைமையில் அமைக்கப்பட்டது.
2. இந்தியப் பிரதமர் திட்டக்குழுவின் தலைவர்.
3. என்.ஆர் சர்க்கார் 1934 இல் இந்திய வர்த்தக மற்றும் தொழில்துறை கூட்டமைப்பின் (FICCI) தலைவராக இருந்தார்.
4. முதல் ஐந்தாண்டுத் திட்டம் 1951 இல் அறிமுகப்படுத்தப்பட்டது (1951-1956).

5. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் பெரிய அளவிலான தொழில்களை மேம்படுத்துவதில் கவனம் செலுத்தியது.

6. 1965

7. 1956

## 10.9. அத்தியாயச் சுருக்கம்

- 1947 க்குப் பிறகு, இந்தியா திட்டமிட்டப் பொருளாதாரத்தைத் தொடங்கியது.
- திட்டக்குழு 1950 இல் அமைக்கப்பட்டது.
- பிரதம மந்திரி திட்டக்குழுவின் தலைவராக இருந்தார்.
- 1951 - ஆம் ஆண்டு முதல் ஐந்தாண்டுத் திட்டத்தைத் திட்டக்குழு அறிமுகப்படுத்தியது.
- முதல் மற்றும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டங்கள் நீர்ப்பாசனம், மின் திட்டங்கள் மற்றும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தால் ஊக்குவிக்கப்பட்ட கனரக தொழில்கள் உள்ளிட்ட விவசாயத்தை மையமாகக் கொண்டிருந்தன.

## 10.10 சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

**சிறிய வினாக்கள்**

1. திட்டக்குழு குறித்து எழுதுக.
2. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பற்றி விவாதிக்கவும்.
3. புதிய தொழில் கொள்கையை விவாதி.

**பெரிய வினாக்கள்**

1. இந்தியப் பொருளாதாரத்தில் திட்டக்குழுவின் பங்கு மற்றும் ஐந்தாண்டுத் திட்டங்களை பகுப்பாய்வு செய்க.
2. தொழில் கொள்கையை குறித்து கட்டுரை எழுதுக

## 10.11 கூடுதல் வாசிப்புகள்

குறிப்பு

பிபன் சந்திரா, மிருதுலா முகர்ஜி, ஆதித்யா முகர்ஜி. 2015.*சுதந்திரத்திற்குப் பிறகு இந்தியா*, சென்னை: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.

வெங்கடேசன்.க. 2012. *சமகால இந்திய வரலாறு 1947-2012*, ராஜபாளையம்: வி.சி.பப்ளிகேஷன்ஸ்.

G. John Gilbert. 2006.*Contemporary History of India*.New Delhi: Anmol Publications Pvt. Ltd.

Ramachandra Guha. 2008. *India after Gandhi*. London: Picador.

# அலகு-11

## அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சி-பசுமைப் புரட்சி- வெண்மைப் புரட்சி

**பாட அமைப்பு**

11.1. முன்னுரை
11.2. நோக்கங்கள்
11.3. அறிவியல் கொள்கை, 1958
11.4. பசுமைப் புரட்சி (Green Revolution)
11.5. வெண்மைப் புரட்சி (White Revolution)
11.6. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்
11.7. அத்தியாயச் சுருக்கம்
11.8.முக்கியச் சொற்கள்
11.9.சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்
11.10.கூடுதல் வாசிப்புகள்

## 11.1. முன்னுரை

ஆன்மீக நாடாகக் கருதப்படும் இந்தியா பெருமைக்குரிய அறிவியல் பாரம்பரியமுடையது. பண்டைக் கால இந்தியாவில் வானவியல், கணிதவியல், மருத்துவம், உலோக உருவாக்கம்,

கண்ணாடித் தொழில் நுட்பம் ஆகியவை நன்கு வளர்ச்சி அடைந்திருந்தன. வியத்தகு விஞ்ஞானிகள் வாழ்ந்துள்ளனர். இடைக்காலத்தில் அறிவியல் வளர்ச்சி தேக்கமுற்றது. நவீன காலத்தில் இந்தியாவுக்கு வந்த ஐரோப்பிய ஆட்சியாளர்கள் அறிவியல் அணுகுமுறையையும், ஆராய்ச்சியையும் அறிமுகப்படுத்தி ஊக்குவித்தனர். மகேந்திர லால் சர்க்கார், சர்.சி.வி.ராமன், அசுடோஷ் முகர்ஜி, எஸ்.என்.போஸ், மேக்நாத் சகா, பி.சி.மகலா நோபிஸ், ஸ்ரீ நிவாசராமானுஜன், எம்.விஸ்வேசரய்யா போன்ற விஞ்ஞானிகள் தங்கள் பங்களிப்புகளால் ஆழமான அழுத்தமான அறிவியல் அடித்தளத்தை அமைத்துக் கொடுத்தனர்.

## 11.2. நோக்கங்கள்

- அறிவியல் கொள்கைகுறித்து அறிந்துக் கொள்ள இயலும்.
- அறிவியல் - தொழில்நுட்பத் துறைவளர்ச்சிபற்றி தெரிந்துக் கொள்ள முடியும்.
- பசுமைப் புரட்சி குறித்து அறிந்துக் கொள்ள இயலும்.
- வெண்மைப் புரட்சி பற்றி தெரிந்துக் கொள்ள முடியும்.

## 11.3. அறிவியல் கொள்கை, 1958

இந்தியா விடுதலை அடைந்தவுடன் முன்னமே போடப்பட்ட அறிவியல் அடித்தளத்தின் மீது அறிவியல் - தொழில் நுட்ப - தகவல் தொடர்பு தொழில்நுட்ப மாளிகையை எழுப்புவதற்கான முயற்சி மேற்கொள்ளப்பட்டது. அறிவியல் வளர்ச்சியில் பேரார்வம் கொண்ட பிரதமர் நேரு, வெளிநாடுகளைச் சார்ந்திராமல், சுயசார்பு வளர்ச்சியை மையப்படுத்தி, 1958 மார்ச் மாதம் இந்தியாவின் முதல் அறிவியல் கொள்கையை ஒரு அரசாங்கத் தீர்மானத்தின் மூலம் அறிவித்தார். அக்கொள்கையின் மூல நோக்கங்கள் இரண்டு: 1) அறிவியல் - தொழில்நுட்பத்தை அடிப்படை (Basic) நடைமுறை (Applied) மற்றும் கல்வி (Educational) நிலைகளில் வளர்த்து விரிவுபடுத்தல் 2) இத்துறையில் அரசாங்க நிறுவனங்கள் மட்டுமின்றி தனியார்

முயற்சியையும் ஊக்குவித்தல். சமகால இந்தியாவின் அறிவியல் - தொழில்நுட்ப வளர்ச்சி வரலாற்றில் 1948 அறிவியல் கொள்கை முதல் முக்கிய மைல்கல் ஆகும்.

**அறிவியல் - தொழில்நுட்பத் துறை, 1971**

Department of Science and Technology, 1971

பிரதமர் இந்திரா காந்தி தனது முதலாவது ஆட்சிக் காலத்தில் அறிவியல் - தொழில்நுட்ப நிறுவனங்களுக்கு முன்னுரிமை அளித்தார். அதன்படி 1971ல் அறிவியல் - தொழில்நுட்பத் துறை தோற்றுவிக்கப்பட்டது. இதன் முக்கிய நோக்கங்கள் இரண்டு: 1) அறிவியல் - தொழில் நுட்பத்தின் புதிய எல்லைகளில் ஆராய்ச்சியை ஊக்குவித்து வளர்த்தல் 2)நாட்டின் அறிவியல் - தொழில் நுட்ப நடவடிக்கைகளை ஒருங்கிணைக்கும் தலைமைத் துறை (Nodal Department)யாகச் செயல்படல், இத்துறை ஆராய்ச்சி நிறுவனங்களுக்கு நிதிஉதவி அளிப்பதோடு கொள்கை முடிவுகளையும் அறிவிக்கிறது.

**தொழில்நுட்பக் கொள்கை அறிக்கை, 1983**

Technology Policy Statement, 1983

பிரதமர் இந்திரா காந்தி நேருவின் அறிவியல் கொள்கையைப் பின்பற்றியதோடல்லாமல் அதன் வீச்சையும் விரிவுபடுத்தினார். 1966-ல் மின்னணு தொழில்நுட்பம் பற்றிய பாபா கமிட்டி அறிக்கை சமர்ப்பிக்கப்பட்டது. கடல் அறிவியல் - தொழில்நுட்பத்துக்கென தனித் துறை துவங்கப்பட்டது. உயர் தொழில் நுட்பத்தில் தனிக் கவனம் செலுத்தப்பட்டது. யாவற்றுக்கும் மேலாக 1983-ல் தொழில்நுட்பக் கொள்கை அறிக்கை (Technology Policy Statement) வெளியிடப்பட்டது. இக்கொள்கை உலகத் தொழில்நுட்பப் போட்டியை எதிர்கொள்வதற்காக வெளியிடப்பட்டதாகும். இக்கொள்கையின் நோக்கங்களாவன: 1)உள்நாட்டு அறிவியல் - தொழில்நுட்பத்தை மேலும் விரைவாக வளர்த்து பலப்படுத்தல் 2) தேசிய அறிவியல் - தொழில்நுட்பத் திட்டங்களைத் திறமையாக நிறைவேற்றல் 3)வெளிநாட்டுத் தொழில் நுட்பத்தை உள்வாங்கிக் கொண்டு இந்தியத் தொழில் நுட்பத்தைப் பொருத்தமாக மாற்றி அமைத்தல். இக்கொள்கை உலகமயமாக்கலை

முன்கணிப்பு செய்து தொலைநோக்குடன் நடைமுறைப்படுத்தப்பட்ட செயலுத்தியாகும்.

குறிப்பு

**தொழில்நுட்ப மிஷன்கள், 1984 - 1989**

பிரதமர் ராஜீவ்காந்தி அறிவியல் - தொழில்நுட்ப வழியில் இந்தியாவை புதிய புத்தாயிரத்திற்குள் (New Millennium) அழைத்துச் செல்வதற்காக பல தொலைநோக்கு செயல் திட்டங்களைச் செயல்படுத்தினார். அவற்றுள் தொழில்நுட்ப மிஷன்கள் புகழ்மிக்கவை: 1) குடிநீர் மிஷன் 2) எழுத்தறிவு மிஷன் 3) நோய் தடுப்பு மிஷன் 4) பால் உற்பத்தி மிஷன் 5) சமையலெண்ணெய் மிஷன் 6) தொலைபேசி மிஷன். இவர் டாக்டர் சாம் பிட்ரோடாவின் துணையுடன் தொலைநிலை இயக்க மேம்பாட்டு மையத்தை (Centre for Development of Telematics) நிறுவியது நினைவு கூறத்தக்கது. இதுவே இன்றைய தொலைபேசி மற்றும் தொலைத் தொடர்புப் புரட்சிக்கான துவக்கமாகும்.

**ஜெய் விஞ்ஞானி, 2003**

பிரதமர் வாஜ்பாய் ஆட்சிக் காலத்தில் அறிவியல் தொழில்நுட்பக் கொள்கை, 2003 அறிவிக்கப்பட்டது. இக்கொள்கை 1983ல் கொண்டு வரப்பட்ட கொள்கையின் திருத்தப்பட்ட பதிப்பாகும். இப்புதுக் கொள்கையின் பிரதான நோக்கம் ”இந்தியாவை முக்கியமானதொரு அறிவு சக்தி”யாக உருவாக்குவதாகும். இக்கொள்கையின் விளைவாக 21 ஜெய் விஞ்ஞானி அறிவியல் தொழில்நுட்பத் திட்டங்கள் தொடங்கப்பட்டன. இந்திய அறிவியல் விருது அறிவிக்கப்பட்டது. பொதுத்துறை - தனியார் துறை கூட்டு முயற்சியின் விளைவாக 50-க்கும் மேற்பட்ட தனியார் துறை நிறுவனங்களும், 120 அரசு நிதி உதவி பெறும் நிறுவனங்களும் நவீன எரிசக்தி மையங்கள், உயிரியல், தகவல் மென்பொருள், திரவ படிகங்கள் பற்றிய ஆராய்ச்சியில் புதிய தொழில் நுட்பங்களைக் கண்டறிந்து செயல்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டுள்ளன. ”இந்தியாவை தொழில்நுட்பத் துறையில் வழி நடப்பதாக இல்லாமல் முன்னடத்திச் செல்வதாக மாற்றுவதே” இம்முயற்சியின் குறிக்கோளாகும்.

**ஆராய்ச்சி மற்றும் வளர்ச்சித் திட்டங்கள்**

Research and Development Programmes

அறிவியல் - தொழில்நுட்பத் துறை பல்வேறு ஆராய்ச்சி மற்றும் வளர்ச்சித் திட்டங்களைச் செயல்படுத்தி வருகிறது. அவற்றுள் முக்கியமானவை வருமாறு: 1) முன்னுரிமை ஆராய்ச்சி வளர்ச்சி அறிவியல், தொழில்நுட்பம், பொறியியல் போன்ற முன்னுரிமை ஆராய்ச்சி மற்றும் வளர்ச்சிப் பகுதிகளைக் கண்டறிந்து வளர்த்தல். இத்திட்டத்தை அறிவியல் மற்றும் பொறியியல் ஆராய்ச்சி மன்ற (Science and Engineering Research Council)த்தின் மூலம் செயல்படுத்தப்படுகிறது. இந்திய விடுதலை வெள்ளி விழா ஆண்டில் (1997) அறிவாற்றல் மிக்க விஞ்ஞானிகள் உலகத் தரத்தை எட்டுவதற்காக ஊக்கம் அளிக்கும் வகையில் சுவர்ண ஜெயந்தி ஊக்கத்தொகை (Swarnajayanthi Fellowships) வழங்கப்பட்டது. 2) உள் கட்டுமான வசதிகள் 6-வது திட்டக் காலத்தில் (1980 - 85) உயர் முன்னுரிமை அறிவியல், தொழில் நுட்ப வளர்ச்சித் திட்டங்களுக்குத் தேவையான உள்கட்டுமான வசதிகளை அளிப்பதில் சிறப்புக் கவனம் செலுத்தப்பட்டது. தலைசிறந்த விஞ்ஞானிகளை மையப்படுத்தி ஆராய்ச்சி வசதிகள் செய்து கொடுக்கப்பட்டன. ஆராய்ச்சி - வளர்ச்சி ஆய்வுக்கூடங்களுக்கும், பல்கலைக் கழகங்களுக்கும், ஆராய்ச்சி - வளர்ச்சித் திட்டத்தைச் செயல்படுத்தும் தொழிற்சாலைகளுக்கும் அதிநவீன உபகரணங்கள் வழங்கப்பட்டன. 3) திறமைத் தேடல் திட்டம் இளம் மாணவ விஞ்ஞானிகளிடையே மறைந்து கிடக்கும் அபரிமிதமான ஆற்றல்களை வெளிக் கொணர்வதற்காகவும், அவர்களது கல்வி வளர்ச்சிக்கும் பயிற்சிக்கும் பல உதவித் திட்டங்கள் நடைமுறைப்படுத்தப்பட்டன. உதாரணமாக கிஷோர் விஞ்ஞானிக் புரோட்சகாம் யோஜனா (Kishore Vigyanik Protsaham) திட்டப்படி பல்வேறு போட்டித் தேர்வுகள் மூலம் மாணவர்களின் திறமைகள் கண்டறியப்பட்டு, அவர்கள் படிப்பை மேல் பட்டப் படிப்பு வரைத் தொடர உதவித் தொகை அளிக்கப்படுகிறது. அறிவார்வமிக்க மாணவர்களுக்கு சிறப்புப் பயிற்சி கொடுக்கப்படுகிறது. இவர்கள் சர்வதேச அறிவியல் மாநாடுகளில் கலந்து கொள்வதற்காக நிதி உதவி வழங்கப்படுகிறது. 4) தொழில்நுட்பத் தொலைநோக்கு, 2020 தொழில்நுட்பக் கொள்கையை நடைமுறைப்படுத்துவதற்காகத் தனிக்குழு (Technology Policy Implementation Committee) அமைக்கப்பட்டது. இக்குழு தொழில் நுட்பத் தகவல் முறை (Technology Information

System)யை உருவாக்கியது. அதுமட்டுமல்ல. இக்குழு தயாரித்துள்ள தொழில்நுட்ப தொலைநோக்கு 2020 (Technology Vision 2020) பலதரப்பட்ட தொழில்நுட்ப ஆராய்ச்சி - வளர்ச்சிக்கான பாதைகளைப் போட்டுத் தந்துள்ளது. இந்திய தொழில்நுட்பத் தொழில் முனைவோர்களை ஊக்குவிப்பதற்கான சிறப்புத் திட்டம் (Technopreneur Promotion Programme) அறிமுகப்படுத்தப்பட்டது. 1996 செப்டம்பர் மாதம் துவக்கப்பட்ட தொழில்நுட்ப வளர்ச்சி மன்றம் (Technology Development Board) உள் நாட்டுத் தொழில்நுட்பம் மற்றும் பொருத்தமான வெளிநாட்டுத் தொழில்நுட்பத்தை ஒத்த விரிவாக்கத்துக்குப் பயன்படுத்தும் தொழிற்சாலைகளுக்கு உதவுகிறது. அதேபோன்று 1998 ஆகஸ்டு மாதம் ஆரம்பிக்கப்பட்ட தேசிய மதிப்புச் சோதனைக் கூடங்களுக்குத் தர அங்கீகாரம் அளிக்கிறது. 5) வானிலை முன்னறிவிப்பு சேவைகள் 1875ல் நிறுவப்பட்டு இந்தியா விடுதலை பெற்ற பின் நவீனமயமாக்கப்பட்ட இந்திய வானிலை ஆய்வு மையம் (India's Meteorological Department) வானிலை மற்றும் நிலநடுக்கம் பற்றி முன்னறிவிப்பு செய்கிறது. இம்மையத்தின் கிளைகள் நாட்டின் பல பகுதிகளில் செயல்படுகின்றன. இம்மையமும் இதன் கிளைகளும்: 1) புயல் காற்று, தூசிப் புயல், கனமழை, குளிர் - வெப்ப அலைகள் பற்றிய வானிலை முன்னறிவிப்பு செய்கின்றன் 2) விமானம், கப்பல், விவசாயம், நீர்ப்பாசனம், எண்ணெய்க் கண்டுபிடிப்பு, தொழிற்சாலைகள் சம்பந்தப்பட்டோருக்கு வானிலைத் தகவல்களைத் தருகின்றன் 3)நில நடுக்கங்களைப் பதிவு செய்கின்றன் 4) வானிலை ஆராய்ச்சியை ஊக்குவிக்கின்றன் 5) நவீன வானிலை ஆய்வுக் கூடங்களையும், வானிலை பற்றிய தகவல் தொடர்பு இணைப்புகளையும் நிர்வகிக்கின்றன. 6) இந்திய நில அளவாய்வு (Survey of India). இந்த நிறுவனம் 1) இந்திய நில அமைப்பு பற்றிய தேசப் படத்தை (Topographical Map) தொழில்நுட்ப சுத்தமாக வரைந்து வெளியிடுகிறது. 2) இந்தியாவின் அக, புற எல்லைகளை வரையறுத்துக் கொடுக்கிறது. 3) இதேபோன்று கடல் பகுதி எல்லையையும் படரூபமாகத் தருகிறது. 4) நில அளவாய்வுக் கல்வி, நிலவாய்வுத் தொழில்நுட்ப முறைகள் பற்றி அண்டை நாடுகளுக்கு உதவி செய்கிறது. 5) டெல்லியிலுள்ள நிலவாய்வு மையம் (Geometrics Centre) மூலம் நகர்ப் புறத் திட்டம், வன மேலாண்மை, உள் கட்டமைப்பு வளர்ச்சி, சுற்றுப்புறச் சூழல்

குறிப்பு

பராமரிப்பு, விவசாயம், நீர்ப்பாசனம், மண் வளப் பாதுகாப்பு, வனவளப் பாதுகாப்பு, ரயில், விமான, நீர்வழிப் போக்குவரத்து, கனிவளத் தேவைப் பூர்த்தி ஆகியவற்றுக்கு உதவுகிறது. 6)கவர்ச்சிகரமான தேசப் படங்களை குறைந்த விலையில் வெளியிட்டு இப்படங்கள் பற்றிய உணர்வை மக்களிடையே ஏற்படுத்துகிறது. 7) நலிவடைந்தோருக்கு நல்ல திட்டங்கள் சமுதாயத்தின் நலிவடைந்த பிரிவினருக்காகப் பல அறிவியல் - தொழில் நுட்பத் திட்டங்கள் கொண்டு வரப்பட்டுள்ளன. குறிப்பாக, பெண்களுக்கான தொழில்நுட்பப் பூங்கா, சுகாதார வசதிகளுடன் கட்டப்படும் வீடுகள், ஒருங்கிணைந்த நில - நீர் - கூரை மேலாண்மை, தொழிற்பயிற்சி, நவீன வேளாண்மை முறைகளைப் பயன்படுத்துதல், கைவினைத் தொழில்நுட்பம் போன்ற திட்டங்கள் செயல்படுத்தப்பட்டன. நலிவடைந்தோரிடையே தொழில் முனைவோரைக் கண்டறிந்து உதவி செய்து ஊக்குவிப்பதற்காகத் தனி வாரியம் அமைத்து (1982) அறிவியல் தொழில்நுட்பத் தொழில் (Science and Technology Entrepreneurship Parks) உருவாக்கப்பட்டன.

**அறிவியல் மற்றும் தொழில் ஆய்வு மையம் (Council of Scientific and Industrial Research – CSIR)**

1942-ல் துவக்கப்பட்ட அறிவியல் மற்றும் தொழில் ஆய்வு மையம் இந்தியா விடுதலை அடைந்த பின் பெரிதும் பலப்படுத்தப்பட்டது. இதன் நோக்கங்களாவன: 1)அறிவியல் மற்றும் தொழில் ஆராய்ச்சியை மேற்கொண்டு, வழிநடத்தி, ஒருங்கிணைத்தல் 2) ஆய்வுக் கூடங்களுக்கு நிதி உதவி செய்தல் 3) ஆய்வு முடிவுகளை தொழில் வளர்ச்சிக்குப் பயன்படுத்தல். இதற்கு நாடு முழுவதிலும் 40 ஆய்வுக் கூடங்களும், 80 பணி மையங்களும் உள்ளன. 20,000 உயர் அறிவியல் தகுதி பெற்ற விஞ்ஞானிகள் பெரியம் இம்மையம் இத்துறையில் உலகிலேயே மிகப் பெரிய ஆராய்ச்சி மற்றும் தொழில் சம மையங்களில் ஒன்றாகும். இந்த மையம் தொழிற்சாலைகளுக்கு உலகத் தரம் பந்த தொழில்நுட்பச் சேவை செய்து வருகிறது.

அறிவியல் மற்றும் தொழில் ஆய்வு மையத்தின் சாதனைகள் பல: குறைந்த குதிரை ஆற்றல் கொண்ட சுவராஜ் டிராக்டர்களை (Swaraj Tractors) உருவாக்கியது. எருமைப் பாலைக் கொண்டு “அமுல் குழந்தை உணவை“ உற்பத்தி செய்து உள்நாட்டு குழந்தை வாயத் தொழிலுக்கு

அடித்தளம் அமைத்தது. இருவர் அமர்ந்து செல்லக்கூடிய நர்சு“ (Hansa) விமானம், பல வேலைகளுக்குப் பயன்படும் சராஸ் (Saras) விமானம், சேல்வர் எம்கே3 (Flosolver MK3) என்ற உயர் திறன் கணிப்பொறி ஆகியவை குறிப்பிடத்தக்க கண்டுபிடிப்புகள். இவையன்றி இந்த மையம் பல்வேறு தொழில்நுட்ப உபயோகம் பற்றி சிறந்த ஆலோசனை சேவைகள் (Consultancy Serv- செய்து வருகிறது.

## 11.4. பசுமைப் புரட்சி (Green Revolution)

**புரட்சியின் தன்மை**

நேருவின் ஆட்சிக் காலத்தில் விவசாயக் கல்வி, விவசாய ஆராய்ச்சி, விவசாய விரிவுப் பணி ஆகியவற்றுக்கு சிறப்பிடம் அளிக்கப்பட்டது. சமகால இந்திய வரலாற்றில் முதன் முறையாக இந்திய உழவியல் சங்கம் (Indian Society of Agronomy) துவக்கப்பட்டது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் முக்கியக் குறிக்கோள்களில் ஒன்று உணவு தானியப் பற்றாக்குறையைப் போக்குதல் ஆகும். அதன்படி வேளாண்மை மற்றும் நீர்பாசன வளர்ச்சிக்கு முன்னுரிமை அளிக்கப்பட்டது. இது‘வேளாண்மைத் திட்டம்“ என்று அழைக்கப்பட்டது. இரண்டாவது திட்டக் காலத்தில் வேளாண்மை வளர்ச்சியும், விவசாய ஆராய்ச்சி முயற்சியும் ஊக்குவிக்கப்பட்டன. மூன்றாவது திட்டக் காலத்தில் உணவில் தன்னிறைவு பெறுவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. மொத்த திட்ட ஒதுக்கீட்டில் 36% வேளாண்மை, நீர்ப்பாசனம், மின் உற்பத்திக்கு ஒதுக்கப்பட்டது. 1958ல் முதன் முறையாக கோதுமை உற்பத்தி 120 இலட்சம் டன்னிலிருந்து 170 இலட்சம் டன்னாக உயர்ந்தது.

1960-61ல் அறிமுகப்படுத்தப்பட்ட ‘தீவிர வேளாண்மை மாவட்டத் திட்டம்“ (Intensive Agriculture District Programme-IADP) விவசாயிகளுக்கு வீரிய விதைகள், இரசாயன உரங்கள், நவீன விவசாயக் கருவிகள் மற்றும் விவசாயக் கடன் வழங்கல் உயர் விளைச்சலுக்கான உட்கட்டமைப்பை (infrastructure) உருவாக்கிக் கொடுத்தல், விளைச்சலைப் பெருக்கும் விவசாய முறை (Intensive cultivation) ஆகியவற்றுக்கு முக்கியத்துவம் கொடுத்தது. இந்நடவடிக்கைகள் இந்திய

வேளாண்மை வளர்ச்சியில் திருப்புமுனையை ஏற்படுத்தியது. அமெரிக்க விஞ்ஞானி டாக்டர் வில்லியம் கான்டே (Dr.William Gande) இவ்வியத்தகு விவசாய சாதனையைப் "பசுமைப் புரட்சி" என்று குறிப்பிட்டார். நேரு ஊன்றிய பசுமைப் புரட்சி விதை லால் பகதூர் சாஸ்திரி - இந்திரா காந்தி ஆட்சிக் காலங்களில் நன்கு வேர்விட்டு வளர்ந்தது.

**விளக்கம்**

புதிய வேளாண்மைத் தொழில்நுட்ப உத்தி (New Agriculture Strategy)யின் விளைவே பசுமைப் புரட்சி ஆகும். பசுமைப் புரட்சி பின்வரும் முற்போக்குத் திட்டங்களையும், செயல்முறைக்களையும் உள்ளடக்கியது: 1) உயர் விளைச்சல் தரும் வீரிய விதைகளை (High yielding variety seeds - HYVS)ப் பயன்படுத்துதல் 2) இயற்கை உரங்களோடு இரசாயன உரங்களையும் பயன்படுத்துதல் 3)பயிர் பூச்சிக்கொல்லி மருந்துகளை உபயோகித்தல் 4) நீர்ப்பாசன வசதிகளை மேம்படுத்துதல் 5) நவீன விவசாயக் கருவிகளையும், இயந்திரங்களையும் அறிமுகப்படுத்துதல் 6) பலபோக சாகுபடி முறைகளை மேற்கொள்ளல் 7) குறைந்த வட்டியில் வேளாண்மைக் கடன் வழங்கல் 8) ஒருங்கிணைந்த வறட்சிப் பகுதி முன்னேற்றத் திட்டத்தைச் செயல்படுத்தல் 9) விவசாயக் கல்வி, ஆராய்ச்சி மற்றும் பயிற்சியை வெகுவாக ஊக்குவித்தல் 10) விவசாய விளைபொருள்களை விற்பதற்கான சந்தை வசதிகளை (Marketing Facilities) விரிவுபடுத்தல்.

**விளைவுகள்**

பசுமைப் புரட்சியின் விளைவுகள் வியப்புக்குரியவை. இந்திய வேளாண் விஞ்ஞானிகள் மெக்சிகோ (Mexico)விலிருந்து வீரிய கோதுமை வித்துக்களை தருவித்து, இந்திய மண் வளத்துக்கேற்ப அவற்றை உயர் விளைச்சல் தரத்தக்க விதைகளாக மாற்றிக் கொடுத்தனர். இவ்விதைகளைப் பயன்படுத்தி ஒரு ஹெக்டேர் நிலத்தில் 60 லிருந்து 65 குவிண்டால் வரை மகசூல் எடுக்கக் கூடிய அதிசயம் நிகழ்த்தப்பட்டது. இம்முயற்சியில் நோபல் பரிசு பெற்ற டாக்டர் நார்மன் போர்லாக் (Dr.Norman Borlaug)கின் பணியும் பங்கும் நினைவு கூறத்தக்கது. இதைத் தொடர்ந்து முற்போக்கு விவசாயிகள் இரசாயன உரங்கள்,

பூச்சிக் கொல்லி மருந்துகள், விஞ்ஞான விவசாய முறைகள், நவீன விவசாயக் கருவிகள், மண் பரிசோதனை, விவசாய விரிவுப் பணி, விவசாய ஆராய்ச்சி முடிவுகள் ஆகியவற்றை ஆர்வத்துடன் ஏற்றுக் கொண்டு செயல்படுத்தினர்.

பசுமைப் புரட்சியில் மத்திய அரசாங்கத்தின் பங்கேற்பும் பங்களிப்பும் பெருமைக்குரியது. 1965ல் 'விவசாய விலைக் கமிஷன்" நியமிக்கப்பட்டது. தீவிர வேளாண்மை மாவட்டத் திட்டத்தோடு பலபோக வேளாண்மைப் பிராந்தியத் திட்டம்" (intensive Agriculture Area Programme) சேர்க்கப்பட்டது. இதன் நோக்கம் சில குறிப்பிட்ட பயிர்களை குறிப்பிட்ட விவசாயப் பகுதிகளில் விளைவித்தலாகும். 1968லிருந்து 1973 வரை அரசாங்கத்தின் வேளாண்மை மூலதனம் இருமடங்கு அதிகரிக்கப்பட்டது. விளைபொருள்கள் நல்ல விலைக்கு விற்பதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

பசுமைப் புரட்சியின் விளைவுகளைப் பின்வருமாறு வரிசைப்படுத்தலாம்: 1) வேளாண் உற்பத்தி - குறிப்பாக கோதுமை, நெல் - பல மடங்கு பெருகியது 2)விவசாயிகளிடையே விஞ்ஞான வேளாண்மையை மேற்கொள்ள வேண்டும் என்ற மனமாற்றத்தை ஏற்படுத்தியது 3) நவீன விவசாய தொழில் நுட்ப முறைகளை விவசாயிகள் ஆர்வத்துடன் ஆதரிக்கத் துவங்கினர் 4) பருவ மழை பொய்த்ததாலும் நவீன நீர்ப்பாசன வசதிகளைக் கொண்டு வேளாண்மையைத் தொடர்ந்து மேற்கொள்ளும் நிலை ஏற்பட்டது. 5)விவசாயிகளின் வருமானம் பெருகியதால் வேளாண்மை நடவடிக்கைகள் மேலும் நவீனமயமாக்கப்பட்டன் 6) கிராம விவசாய உழைப்பாளர்களுக்கு வேலைவாய்ப்பு அதிகரித்தது 7) இந்திய வேளாண்மை தன்னிறைவு பெற்றது. விளைச்சல் பெருகியதால் உணவுப் பொருள் இறக்குமதி வெகுவாகக் குறைந்தது. பி.எல். 480 (P.L.480) போன்ற அமெரிக்க உணவு உதவித் திட்டத்திலிருந்து நாடு விடுபெற்றது 8) வெளி உதவியின்றி 1987, 1988ல் ஏற்பட்ட வறட்சி வெற்றிகரமாக எதிர் கொள்ளப்பட்டது 9) பிழைப்பு வேளாண்மை வாணிப வேளாண்மையாக உருமாற்றமடைந்தது 10) இந்தியப் பசுமைப் புரட்சி பிற பின்தங்கிய

ஆசிய, ஆப்பிரிக்க, இலத்தீன் அமெரிக்க நாடுகளுக்கு முன்மாதிரியாக இருந்தது.

### குறைபாடுகள்

பசுமைப் புரட்சியில் பல குறைபாடுகள் காணப்பட்டன: 1) பசுமைப் புரட்சி பரிசோதனை முன்னமேயே வளர்ச்சியடைந்த பகுதிகளில் - பஞ்சாப், அரியானா, மேற்கு உத்திரப் பிரதேசம் - மேற்கொள்ளப்பட்டு பிற வளர்ச்சியடைந்த மாநிலப் பகுதிகளுக்கு விரிவுபடுத்தப்பட்டதால் அப்பகுதிகளே மேலும் வளம் பெற்றன. இதனால் பிராந்திய ஏற்றத் தாழ்வுகள் அதிகரித்தன் 2) விஞ்ஞான வேளாண்மைக்கான இடுபொருள்களை வாங்கும் சக்தி வசதியான விவசாயிகளிடம் இருந்தமையால் பசுமைப் புரட்சியின் பயனை இவர்களே அனுபவித்தனர். சிறு குறு விவசாயிகளும், குத்தகைதாரர்களும், நிலமற்ற விவசாய உழைப்பாளர்களும் இப்புரட்சியில் பங்கேற்க முடியவில்லை. இதனால் கிராமங்களில் பொருளாதார இடைவெளி அதிகரித்தது 3) விவசாயம் இயந்திரமயமானதாலும், தொழில்மயமானதாலும் பலர் வேலை இழந்தனர். கிராமப்புற வேலையின்மை அதிகரித்தது 4) இரசாயன உரங்களும், பூச்சிக்கொல்லி மருந்துகளும் அதிகமாகப் பயன்படுத்தப்பட்டதால் இயற்கை மண் வளம் குறைந்தது சுற்றுச் சூழல் மாசுபட்டது ஆழ்குழாய் கிணறுகள் அபரிமிதமாக அதிகரித்ததால் நிலத்தடி நீர்நிலை பாதிக்கப்பட்டது 5) கோதுமை, நெல் போன்ற சிலவகை தானியங்கள்தான் பசுமைப் புரட்சி வட்டத்துக்குள் வந்தனவேயன்றி பல பயறு மற்றும் பருப்பு வகைகள் புறக்கணிக்கப்பட்டன. எனவே, இப்புரட்சியின் வீரியமும் வீச்சும் காலப்போக்கில் குறையலாயின 6) பசுமைப் புரட்சி கிராம வேலையில்லாத் திண்டாட்டத்தை அதிகரித்ததால் விவசாயத் தீவிரவாதமும், விவசாயிகள் எதிர்ப்பு ஆர்ப்பாட்டங்களும் அதிகரித்தன.

### மதிப்பீடு

பசுமைப் புரட்சி சமகால இந்தியச் சாதனையாகும். முதன் முறையாக வேளாண்மை தேச அளவில் நவீனமயமாக்கப்பட்டது அறிவியல் தொழில்நுட்ப முறைகள் பின்பற்றப்பட்டன. விவசாயக் கல்வி, ஆராய்ச்சி, விரிவுப் பணி ஆகியவற்றின் அத்யாவசியம் உணரப்பட்டது உணர்த்தப்பட்டது. வேளாண்மை வளர்ச்சி என்றுமில்லாத அளவுக்கு

ஏற்பட்டது. இப்புரட்சி படிப்படியாக விவசாய வளர்ச்சி குறைந்த பகுதிகளுக்கும் விரிவடைந்தது. சிறு விவசாயிகளும் உற்பத்தி மூலதனங்களையும், இடு பொருள்களையும் செலவிட்டுப் பயனடைந்ததாக ராஜ் கிருஷ்ணா, ஜி.எஸ்.பல்வா , ஜி.கே.சதா, சி.எச்.அனுமந்த ராவ் போன்ற வேளாண் ஆராய்ச்சியாளர்கள் கூறியுள்ளனர். பசுமைப் புரட்சியின் விளைவாக வேளாண்மைசாரா கிராமப்புற வேலைவாய்ப்புகள் அதிகரித்தமையால் வேலையின்மைப் பிரச்னை தீவிரமடையவில்லை. இப்புரட்சியின் எதிர்மறை விளைவுகளை எதிர்கொள்ளப் பல வறுமை ஒழிப்பு மற்றும் வேலைவாய்ப்பு அதிகரிப்புத் திட்டங்கள் அறிமுகப்படுத்தப் பட்டன. இவற்றின் விளைவாக வறுமைக் கோட்டிற்குக் கீழ் உள்ளோரின் எண்ணிக்கை குறைந்தது. வேளாண்மை உற்பத்தியில் இந்தியா தன்னிறைவு பெற்றது் உலக அரங்கில் தலை நிமிர்ந்து நின்றது. நேரு போட்ட விஞ்ஞான விவசாயத்துக்கான அடித்தளத்தின் மீது பிரதமர்கள் லால் பகதூர் சாஸ்திரி, இந்திரா காந்தி ஆகியோரின் பேராதரவுடன் வேளாண் புரட்சியின் தந்தை“யாகக் கருதப்படும் முன்னாள் மத்திய அமைச்சர் சி.சுப்பிரமணியமும், வேளாண் விஞ்ஞானி எம்.எஸ்.சுவாமிநாதன் போன்றோரும் பசுமைப் புரட்சி மாளிகையை எழுப்பினர். இன்றைய ஆட்சியாளர்கள் இரண்டாவது பசுமைப் புரட்சி“ பற்றிப் பேசி வருகின்றனர்.

## 11.5. வெண்மைப் புரட்சி (White Revolution)

### ஆனந் பரிசோதனை (Anand Experiment)

இந்திய விடுதலைப் போராட்டத்தின் போது சர்தார் வல்லபாய் பட்டேலின் சொந்த மாவட்டமான கெட்டாவில் அவரது வழிகாட்டலின் பேரில் வஞ்சிக்கப்பட்ட பால் வியாபாரிகள் பால் போராட்டத்தில்“ இறங்கினர். திருபுவன்தாஸ் கே.பட்டேல் என்ற விடுதலைப் போராட்ட வீரர் கிராமம் கிராமமாகச் சென்று பால் கூட்டுறவு சங்கங்களைத் துவக்குமாறு பிரச்சாரம் செய்தார். இவரே 1946ல் அகமதாபாத்துக்கும் வடோதரா (பரோடா)வுக்குமிடையே உள்ள ஆனந் (Anand) என்ற சிற்றூரில் துவக்கப்பட்ட கெட்டா மாவட்ட பால் உற்பத்தியாளர் கூட்டுறவு யூனியன்“ தலைமைப் பொறுப்பேற்று 25 ஆண்டுகள் தொடர்ந்து பணியாற்றினார். இந்த அமைப்பு “பால் விருட்சமாக விரிவடைந்தது. இதுவே‘ஆனந்

**குறிப்பு**

பரிசோதனை“ என்று அழைக்கப்படுகிறது. அமுல்“ (AMUL) இந்தியா விடுதலை பெற்ற பின்னர் டாக்டர் வர்கீஸ் குரியன் (Dr.Verghese Kurien) என்ற கேரளத்துப் பொறியாளர் 1950லிருந்து 1973 வரை கெட்டா பால் கூட்டுறவு யூனியனின் தலைமை அதிகாரியாகப் பணியாற்றினார். இவரதுஈடுபாட்டாலும், அயரா உழைப்பாலும், நேர்மையான நிர்வாகத்தாலும், பயன்கருதாப் பணியாலும் இக்கூட்டுறவு அமைப்பு வியப்புக்குரிய வளர்ச்சி அடைந்தது. பால் பெருக்கெடுத்தது. 1955ல் உபரிப் பாலை பால் பவுடராகவும், வெண்ணையாகவும் மாற்றுவதற்கான நவீன தொழிற்சாலை துவக்கப்பட்டது. பால் பொருள்களுக்கு “அமுல்“ என்று பெயரிடப்பட்டது. 1960ல் பாலாடைக்கட்டி (Cheese) மற்றும் குழந்தைப் பால் உற்பத்தி செய்வதற்கென மற்றொரு தொழிற்சாலை ஆரம்பிக்கப்பட்டது. இத்தொழிற்சாலை ஆண்டுக்கு 600 டன் பாலாடைக் கட்டியையும், 2500 டன் குழந்தைப் பால் உணவையும் உற்பத்தி செய்து உலக சாதனை படைத்தது. 1964ல் நவீன மாட்டுத் தீவனம் தயாரிக்கும் தொழிற்சாலை துவக்கப்பட்டது. பிரதமர் லால் பகதூர் சாஸ்திரி குரியரின் முயற்சிக்குப் பேராதரவளித்தார் அமுல் முறையைப் பிற மாநிலங்களும் பின்பற்ற வேண்டும் என்று முதலமைச்சர்களுக்குக் கடிதம் எழுதினார். அதுமட்டுமல்ல. தேசிய பால்பண்ணை வளர்ச்சி வாரியம் (National Diary Development Board) ஒன்றையும் துவக்கினார் (1965). டாக்டர் குரியனே அதன் தலைவராகப் பொறுப்பேற்றார்.

பிரதமரின் பேராதரவால் வெகுவாக ஊக்குவிக்கப்பட்ட குரியன் ஆனந்தில் பால் சம்பந்தப்பட்ட பல்வேறு நிறுவனங்களைத் துவக்கி திறம்பட நிர்வகித்தார். பால் மற்றும் பால் பொருள்களின் ஊட்டச் சத்தையும், கால்நடைத் தீவனத்தின் தரத்தையும், அன்றாட உற்பத்தி - விநியோகத்தை நெறிப்படுத்தவும், செலவு - பயன் விகிதத்தைக் கண்டறியவும் கணிப்பொறிகள் பயன்படுத்தப்பட்டன. “அமுல் மாதிரி“ (Amul Model)யைப் பிற மாநிலங்களும் பின்பற்றின. இவ்வாறு துவக்கப்பட்டதே தமிழ் நாட்டின் ‘ஆவின்“ ஆகும். இவற்றின் விளைவாக அமுல்“ என்ற பெயர் இந்தியாவில் மட்டுமின்றி வெளி நாடுகளிலும் பிரசித்தி பெற்றது. இந்தியாவில் பால் வெள்ளம் (Operation Flood)

கரைபுரண்டோடியது. டாக்டர் குரியன் “வெண்மைப் புரட்சியின் தந்தை“ (Father of White Revolution) என்று அழைக்கப்பட்டார்.



**மதிப்பீடு**

பசுமைப் புரட்சியைப் போன்றே வெண்மைப் புரட்சியும் சமகால இந்தியாவின் சிறப்புமிகு சாதனையாகும். இந்தியா பால் உற்பத்தியில் தன்னிறைவு பெற்றதோடு, பால் பொருள்களை வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் நிலையில் உள்ளது. பால் உற்பத்தியோடு பால் உற்பத்தியாளர்களின் வாழ்க்கையும் வளம் பெற்றது. 1927ல் 2.1 மில்லியன் ரூபாய் வருமானம் பெற்று வந்த பால்பண்ணை விவசாயிகள் 1995ல் ரூபாய் 34 மில்லியன் பெற்றனர். பால் உற்பத்தி விவசாயிகளின் முக்கியத் தொழிலாகவும், வருமான ஊற்றாகவும் உள்ளது. சாதி, மதம், இனம்,குலம், கோத்திரம்,ஆண், பெண் வேறுபாடின்றி நிலமற்ற விவசாயிகள், விதவைகள், ஆதரவற்றோர், கிராம வேலைவாய்ப்பற்றோர் வெண்மைப் புரட்சியால் பயனடைகின்றனர். குறிப்பாகப் பெண்களும், பிற்படுத்தப் பட்டோரும், பழங்குடியினரும் பால் உற்பத்தியில் பங்கேற்கும் வாய்ப்பு பெறுகின்றனர். வெண்மைப் புரட்சியின் பயன் 60% ஏழை எளிய விவசாயிகளைச் சென்றடைவதாக ஒரு ஆய்வு கூறுகின்றது. ”பால் கூட்டுறவு சங்கங்கள் குறிப்பிடத்தக்க வறுமை எதிர்ப்புத் திட்டம்” என்று கூறுகிறார் பிபின் சந்திரா. ஆனந் முன்மாதிரி பால் உற்பத்திப் பெருக்கத்துக்கு மட்டுமல்லாது பழ, காய்கறி, எண்ணெய் வித்துக்கள் உற்பத்திக்கும் பயன்படுகிறது. வெளிநாட்டுக் குழுக்கள் இந்தியாவுக்கு வந்து வெண்மைப் புரட்சியின் வெற்றி இரகசியத்தைக் கண்டறியும் நிலை ஏற்பட்டுள்ளது.

**உங்கள் முன்னேற்றத்தைச் சரிபார்க்கவும்**

1. எந்த ஆண்டு இந்தியாவின் முதல் அறிவியல் கொள்கையை ஒரு அரசாங்கத் தீர்மானத்தின் மூலம் அறிவிக்கப்பட்டது?

2. எந்த ஆண்டு அறிவியல் மற்றும் தொழில் ஆய்வு மையம் துவக்கப்பட்டது?

3. 1958ல் முதன் முறையாக கோதுமை உற்பத்தி எத்தனை இலட்சம் டன்னிலிருந்து எத்தனை இலட்சம் டன்னாக உயர்ந்தது?

4. யாரை "வெண்மைப் புரட்சியின் தந்தை" (Father of White Revolution) என்று அழைக்கப்பட்டார்?

## 11.6. உங்கள் முன்னேற்றக் கேள்விகளை சரிபார்க்கப் பதில்கள்

1. 1958 மார்ச் மாதம்
2. 1942-ல்
3. 120 இலட்சம் டன்னிலிருந்து 170 இலட்சம் டன்னாக
4. டாக்டர் வர்கீஸ் குரியன்

## 11.7. அத்தியாயச் சுருக்கம்

- இந்தியா விடுதலை அடைந்தவுடன் ஏற்கனவே போடப்பட்ட அறிவியல் அடித்தளத்தின் மீது அறிவியல் - தொழில் நுட்ப - தகவல் தொடர்பு தொழில்நுட்ப மாளிகையை எழுப்புவதற்கான முயற்சி மேற்கொள்ளப்பட்டது
- அறிவியல் வளர்ச்சியில் பேரார்வம் கொண்ட பிரதமர் நேரு, வெளிநாடுகளைச் சார்ந்திராமல், சுயசார்பு வளர்ச்சியை மையப்படுத்தி, 1958 மார்ச் மாதம் இந்தியாவின் முதல் அறிவியல் கொள்கையை ஒரு அரசாங்கத் தீர்மானத்தின் மூலம் அறிவித்தார்
- பிரதமர் இந்திரா காந்தி தனது முதலாவது ஆட்சிக் காலத்தில் அறிவியல் - தொழில்நுட்ப நிறுவனங்களுக்கு முன்னுரிமை அளித்தார். அதன்படி 1971ல் அறிவியல் - தொழில்நுட்பத் துறை தோற்றுவிக்கப்பட்டது.
- பிரதமர் இந்திரா காந்தி காலத்தில் கடல் அறிவியல் - தொழில்நுட்பத்துக்கென தனித் துறை துவங்கப்பட்டது. உயர் தொழில் நுட்பத்தில் தனிக் கவனம் செலுத்தப்பட்டது. 1983-ல் தொழில்நுட்பக் கொள்கை அறிக்கை (Technology Policy Statement) வெளியிடப்பட்டது. இக்கொள்கை உலகத்

குறிப்பு

தொழில்நுட்பப் போட்டியை எதிர்கொள்வதற்காக வெளியிடப்பட்டதாகும்

- பிரதமர் ராஜீவ்காந்தி அறிவியல் - தொழில்நுட்ப வழியில் இந்தியாவை புதிய புத்தாயிரத்திற்குள் (New Millennium) அழைத்துச் செல்வதற்காக பல தொலைநோக்கு செயல் திட்டங்களான தொழில்நுட்ப மிஷன்களை அறிமுகப்படுத்தினார்.
- பிரதமர் வாஜ்பாய் ஆட்சிக் காலத்தில் அறிவியல் தொழில்நுட்பக் கொள்கை, 2003 அறிவிக்கப்பட்டது. இப்புதுக் கொள்கையின் பிரதான நோக்கம் ”இந்தியாவை முக்கியமானதொரு அறிவு சக்தி”யாக உருவாக்குவதாகும். இக்கொள்கையின் விளைவாக 21 ஜெய் விஞ்ஞானி அறிவியல் தொழில்நுட்பத் திட்டங்கள் தொடங்கப்பட்டன.
- இந்திய விடுதலை வெள்ளி விழா ஆண்டில் (1997) அறிவாற்றல் மிக்க விஞ்ஞானிகள் உலகத் தரத்தை எட்டுவதற்காக ஊக்கம் அளிக்கும் வகையில் சுவர்ண ஜெயந்தி ஊக்கத்தொகை (Swarnajayanthi Fellowships) வழங்கப்பட்டது.
- 1996 செப்டம்பர் மாதம் துவக்கப்பட்ட தொழில்நுட்ப வளர்ச்சி மன்றம் (Technology Development Board) உள் நாட்டுத் தொழில்நுட்பம் மற்றும் பொருத்தமான வெளிநாட்டுத் தொழில்நுட்பத்தை ஒத்த விரிவாக்கத்துக்குப் பயன்படுத்தும் தொழிற்சாலைகளுக்கு உதவுகிறது.
- வானிலை முன்னறிவிப்பு சேவைகள் 1875ல் நிறுவப்பட்டு இந்தியா விடுதலை பெற்ற பின் நவீனமயமாக்கப்பட்ட இந்திய வானிலை ஆய்வு மையம் (India's Meteorological Department) வானிலை மற்றும் நிலநடுக்கம் பற்றி முன்னறிவிப்பு செய்கிறது. இம்மையத்தின் கிளைகள் நாட்டின் பல பகுதிகளில் செயல்படுகின்றன.
- நலிவடைந்தோரிடையே தொழில் முனைவோரைக் கண்டறிந்து உதவி செய்து ஊக்குவிப்பதற்காகத் தனி வாரியம் அமைத்து (1982) அறிவியல் தொழில்நுட்பத் தொழில் (Science and Technology Entrepreneurship Parks) உருவாக்கப்பட்டன.

**குறிப்பு**

- 1942-ல் துவக்கப்பட்ட அறிவியல் மற்றும் தொழில் ஆய்வு மையம் இந்தியா விடுதலை அடைந்த பின் பெரிதும் பலப்படுத்தப்பட்டது. இந்த மையம் பல்வேறு தொழில்நுட்ப உபயோகம் பற்றி சிறந்த ஆலோசனை சேவைகள் (Consultancy Serv- செய்து வருகிறது.
- நேருவின் ஆட்சிக் காலத்தில் விவசாயக் கல்வி, விவசாய ஆராய்ச்சி, விவசாய விரிவுப் பணி ஆகியவற்றுக்கு சிறப்பிடம் அளிக்கப்பட்டது. சமகால இந்திய வரலாற்றில் முதன் முறையாக இந்திய உழவியல் சங்கம் (Indian Society of Agronomy) துவக்கப்பட்டது.
- 1960-61ல் அறிமுகப்படுத்தப்பட்ட 'தீவிர வேளாண்மை மாவட்டத் திட்டம்" (Intensive Agriculture District Programme-IADP) விவசாயிகளுக்கு வீரிய விதைகள், இரசாயன உரங்கள், நவீன விவசாயக் கருவிகள் மற்றும் விவசாயக் கடன் வழங்கல் உயர் விளைச்சலுக்கான உட்கட்டமைப்பை (infrastructure) உருவாக்கிக் கொடுத்தல், விளைச்சலைப் பெருக்கும் விவசாய முறை (Intensive cultivation) ஆகியவற்றுக்கு முக்கியத்துவம் கொடுத்தது
- புதிய வேளாண்மைத் தொழில்நுட்ப உத்தி (New Agriculture Strategy)யின் விளைவே பசுமைப் புரட்சி ஆகும்.
- முற்போக்கு விவசாயிகள் இரசாயன உரங்கள், பூச்சிக் கொல்லி மருந்துகள், விஞ்ஞான விவசாய முறைகள், நவீன விவசாயக் கருவிகள், மண் பரிசோதனை, விவசாய விரிவுப் பணி, விவசாய ஆராய்ச்சி முடிவுகள் ஆகியவற்றை ஆர்வத்துடன் ஏற்றுக் கொண்டு செயல்படுத்தினர்.
- பசுமைப் புரட்சி சமகால இந்தியச் சாதனையாகும். முதன் முறையாக வேளாண்மை தேச அளவில் நவீனமயமாக்கப்பட்டது் அறிவியல் தொழில்நுட்ப முறைகள் பின்பற்றப்பட்டன.
- திருபுவன்தாஸ் கே.பட்டேல் என்ற விடுதலைப் போராட்ட வீரர் 1946ல் அகமதாபாத்துக்கும் வடோதரா (பரோடா)வுக்குமிடையே உள்ள ஆனந் (Anand) என்ற சிற்றூரில் துவக்கப்பட்ட கெட்டா

மாவட்ட பால் உற்பத்தியாளர் கூட்டுறவு யூனியன்“ தலைமைப் பொறுப்பேற்று 25 ஆண்டுகள் தொடர்ந்து பணியாற்றினார்.

- இந்தியா விடுதலை பெற்ற பின்னர் டாக்டர் வர்கீஸ் குரியன் (Dr.Verghese Kurien) என்ற கேரளத்துப் பொறியாளர் 1950லிருந்து 1973 வரை கெட்டா பால் கூட்டுறவு யூனியனின் தலைமை அதிகாரியாகப் பணியாற்றினார். இவரதுஈடுபாட்டாலும், அயரா உழைப்பாலும், நேர்மையான நிர்வாகத்தாலும், பயன்கருதாப் பணியாலும் இக்கூட்டுறவு அமைப்பு வியப்புக்குரிய வளர்ச்சி அடைந்தது.
- 1955ல் உபரிப் பாலை பால் பவுடராகவும், வெண்ணையாகவும் மாற்றுவதற்கான நவீன தொழிற்சாலை துவக்கப்பட்டது. பால் பொருள்களுக்கு “அமுல்“ என்று பெயரிடப்பட்டது. 1960ல் பாலாடைக்கட்டி (Cheese) மற்றும் குழந்தைப் பால் உற்பத்தி செய்வதற்கென மற்றொரு தொழிற்சாலை ஆரம்பிக்கப்பட்டது. இத்தொழிற்சாலை ஆண்டுக்கு 600 டன் பாலாடைக் கட்டியையும், 2500 டன் குழந்தைப் பால் உணவையும் உற்பத்தி செய்து உலக சாதனை படைத்தது. 1964ல் நவீன மாட்டுத் தீவனம் தயாரிக்கும் தொழிற்சாலை துவக்கப்பட்டது.
- தேசிய பால்பண்ணை வளர்ச்சி வாரியம் (National Diary Development Board) 1965-ல் துவங்கப்பட்டது.
- இவற்றின் விளைவாக அமுல்“ என்ற பெயர் இந்தியாவில் மட்டுமின்றி வெளி நாடுகளிலும் பிரசித்தி பெற்றது. இந்தியாவில் பால் வெள்ளம் (Operation Flood) கரைபுரண்டோடியது. டாக்டர் குரியன் “வெண்மைப் புரட்சியின் தந்தை“ (Father of White Revolution) என்று அழைக்கப்பட்டார்.
- இந்தியா பால் உற்பத்தியில் தன்னிறைவு பெற்றதோடு, பால் பொருள்களை வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் நிலையில் உள்ளது. பால் உற்பத்தியோடு பால் உற்பத்தியாளர்களின் வாழ்க்கையும் வளம் பெற்றது.

## 11.8.முக்கியச் சொற்கள்

குறிப்பு

**செயற்கை நுண்ணறிவு :**செயற்கை நுண்ணறிவு என்பது கணினி அறிவியலின் மேம்பட்ட வளர்ச்சியை காட்டும் உச்ச நிலையாகும், இது நுட்பமான இயந்திரங்களை உருவாக்கி மனிதர்களைப்போல செயல்பட வைக்கும் ஒரு நுணுக்கமான தொழில்நுட்பம் ஆகும். செயற்கைஅறிவாற்றல் என்பது கொடுக்கப்படும் உள்ளீட்டிற்கு தகுந்ததுபோல் அதுவாகவே செயல்படுவதுதான் செயற்கை நுண்ணறிவு ஆகும்.

**திறமைத் தேடல் திட்டம்** : இளம் மாணவ விஞ்ஞானிகளிடையே மறைந்து கிடக்கும் அபரிமிதமான ஆற்றல்களை வெளிக் கொணர்வதற்காகவும், அவர்களது கல்வி வளர்ச்சிக்கும் பயிற்சிக்கும் பல உதவித் திட்டங்கள் நடைமுறைப்படுத்தப்பட்டன.

**வேளாண்மை திட்டம்** : நவீன வேளாண்மை தொழில்நுட்பங்களை கடைபிடிக்க விவசாயிகளை ஊக்குவித்தல். விவசாய பெருமக்களை உற்பத்தி ,ழப்பு ஏற்படும் அபாயத்திலிருந்து பாதுகாப்பதுடன் உணவு பாதுகாப்பிற்காக கடன் உதவி செய்து வேளாண் வளர்ச்சியை மேம்படுத்துதல்.

**ஆபரேஷன் வெள்ளம் :** ஆபரேஷன் வெள்ளம் என்பது அனைத்து விவசாயிகளும் வெவ்வேறு தரவரிசைகளின் அடிப்படையில் உற்பத்தி செய்யப்படும் பாலை ஒருங்கிணைக்கும் ஒரு அமைப்பாகும். ,து பின்னர் செயலாக்கப்பட்டு கூட்டுறவுகள் மூலம் நகர்ப்புற மையங்களுக்கு வர்த்தகம் செய்யப்படுகிறது.

## 11.9.சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

**குறுகிய வினாக்கள்**

1. அறிவியல் - தொழில்நுட்பத் துறை குறித்து எழுதுக?
2. ஆராய்ச்சி மற்றும் வளர்ச்சித் திட்டங்களைகுறித்து கூறுக.

**நீண்ட வினாக்கள்**

1. பசுமைப் புரட்சி குறித்துக் கட்டுரை எழுதுக?
2. வெண்மைப் புரட்சி மதிப்பிடு செய்க.

## 11.10.கூடுதல் வாசிப்புகள்

பிபன் சந்திரா, மிருதுலா முகர்ஜி, ஆதித்யா முகர்ஜி. 2015.*சுதந்திரத்திற்குப் பிறகு இந்தியா,* சென்னை: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.

E.A. Narayana. 2008. Panchayati Raj in Action. Delhi: Kalpaz Publications.

G. John Gilbert. 2006. *Contemporary History of India*, New Delhi: Anmol Publications Pvt. Ltd.

வெங்கடேசன்.க. 2012. *சமகால இந்திய வரலாறு 1947-2012,* ராஜபாளையம்: வி.சி.பப்ளிகேஷன்ஸ்.

V. Venkatasubramanian, A.K. Singh, S.V.N. Rao. 2003. *Dairy Development in India.* New Delhi: Concept Publishing Company.

Wilfred Candler, Nalini Kumar. 1998. *India: Dairy Revolution.* Wasington D.C.: The World Bank.

# அலகு-12

## நீலப் புரட்சி- அணு ஆற்றல் ஆராய்ச்சி- விண்வெளி ஆராய்ச்சி மற்றும் வளர்ச்சி- தகவல் தொடர்புகள்

**பாட அமைப்பு**

12.1.முன்னுரை

12.2. நோக்கங்கள்

12.3. நீலப் புரட்சி

12.4. அணு ஆற்றல் ஆராய்ச்சி (Atomic Research)

    12.4.1.அணு ஆற்றல் ஆணையம், 1948

    12.4.2.அணு ஆராய்ச்சி நிறுவனங்கள்

12.5. விண்வெளி ஆராய்ச்சி மற்றும் வளர்ச்சி (Space Research and Development)

12.5.1. விக்ரம் சாராபாய் விண்வெளி மையம் (Vikram Sarabai Space Centre)

12.5.2. விண்வெளி மையம்

12.5.2.1. ஸ்ரீஹரிகோட்டா (Sriharikota)

12.6. தகவல் தொடர்புகள்

12.6.1. தபால்வழி தகவல் தொடர்பு (Postal Communication)

12.6.2. தொலைபேசி மூலம் தகவல் தொடர்பு (Telecommunications)

12.6.3. புதிய தொலைத் தொடர்புக் கொள்கை, 1999 (New Telecom Policy, 1999)

12.6.4. வானொலி தகவல் தொடர்பு (Radio Communication)

12.6.5. தொலைக்காட்சி தகவல் தொடர்பு (Television Communication)

12.7. தகவல் தொழில் நுட்பம் (Information Technoiogy)

12.7.1. புதிய தகவல் தொழில்நுட்பக் கொள்கை

12.8. உங்கள் முன்னேற்ற கேள்விகளை சரிபார்க்க விடைகள்

12.9. அத்தியாயச் சுருக்கம்

12.10. முக்கியச் சொற்கள்

12.11. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

12.12. கூடுதல் வாசிப்புகள்

## 12.1.முன்னுரை

இந்தியாவின் முன்னேற்றத்தில் அறிவியல் தொழில் நுட்பத்தின் பங்களிப்பு அளப்பரியது. சுகந்தரத்துக்கு பிறகு உணவு உற்பத்தியை அதிக படுத்துவதற்கு பால் உற்பத்தியை அதிக படுத்துவதற்கும் கடல் வளத்தை மேம்படுத்துவதற்கும் பல்வேறு திட்டங்கள் தீட்டப்பட்டு அதிலும் குறிப்பாக ஐந்தாண்டு திட்டங்கள் மூலமாக நீலபுரட்சியானது இந்தியாவில் அறிமுகப்படுத்தப்பட்டது இது மீன் வளத்தை பெருக்குவதே தலையாய நோக்கமாக கொண்டு செயல் பட்டது. இது போலவே அறிவியல் தொழிநுட்பத்தை உதவியோடு அணு ஆற்றலை மேம்படுத்துவதற்காக பல்வேறு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன அதன் விளைவாக அணு

ஆராய்ச்சி ஆக்கபூர்வமான பணிகளுக்கு பட்டுமே பயன்படுத்த பட வேண்டும் என்ற கருத்து வலியுறுத்தப்பட்டது. இதன் தொடர்ச்சியாக விண்வெளி ஆராய்ச்சி விக்ரம் சார பாய் தலைவராக கொண்டு துவங்கப்பட்டது.

இயங்குதலும் இயக்கலும் மனித இயல்பு. இவ்விரண்டுக்கும் இன்றியமையாத தேவை தகவல் தொடர்பு ஆகும். கம்யூனிகேஷன் (தகவல் தொடர்பு) என்ற ஆங்கிலச் சொல் கம்யூனிஸ் (Communis) என்ற இலத்தீன் சொல்லிலிருந்து பெறப்பட்டதாகும். "கம்யூனிஸ்" என்றால் பொதுவான" (Common) என்று பொருள். அதாவது ஒருவர் தனது கருத்துக்களையும் உணர்வுகளையும் பிறருடன் பொதுவாகப் பகிர்ந்து கொள்வதாகும். ஒருவருக்கொருவர் நேரிடையாகத் தகவல் பரிமாற்றம் செய்து கொண்டால் அது இருவரிசை தகவல் தொடர்பு (Inter-Personal Communication) ஆகும். குழு தகவல் தொடர்பு (Group Communication) என்பது ஒரு பிரிவினர் அல்லது வகுப்பினரிடையே நடைபெறும் தகவல் தொடர்பாகும். மக்கள் தகவல் தொடர்பு (Mass Communication) என்றால் வானொலி, தொலைக்காட்சி, சினிமா, வீடியோ, இணையதளம், பத்திரிக்கை போன்ற ஊடகங்கள் மூலம் தகவல் தொடர்புப் பரிமாற்றம் செய்வதாகும். சுருங்கக்கூறின் தனித் தகவல் தொடர்பும் (Personal Communication) மக்கள் தகவல் தொடர்பும் (Mass Communication) முக்கிய தகவல் தொடர்பு சாதனங்களாகும்.

இந்த அத்தியாயமானது மேலே குறிப்பிடப்பட்டுள்ள அனைத்து அம்ஸங்களின் முக்கியத்துவத்தை குறித்து விளக்குகிறது.

## 12.2. நோக்கங்கள்

இந்தப் பாடத்தைப் படித்த பிறகு, கீழ்க்கண்டவற்றை அறிய முடியும்:

- நீலப் புரட்சி பற்றி தெரிய உதவுகிறது.
- அணு ஆற்றல் ஆராய்ச்சி பற்றி தெரிய உதவுகிறது.
- விண்வெளி ஆராய்ச்சி மற்றும் வளர்ச்சி அறிய உதவுகிறது.
- தகவல் தொடர்புகள் குறித்து விவரிக்கிறது.

## 12.3. நீலப் புரட்சி

குறிப்பு

நீலப் புரட்சி என்ற சொல், மீன்வளர்ப்பு ஒரு முக்கியமான மற்றும் அதிக உற்பத்தித் திறன் கொண்ட விவசாய நடவடிக்கையாக குறிப்பிடத்தக்க வகையில் வெளிப்படுவதைக் குறிக்கிறது. மீன்வளர்ப்பு என்பது அனைத்து வகையான சுறுசுறுப்பான வளர்ப்பையும் குறிக்கிறது. நீர்வாழ் விலங்குகள் மற்றும் தாவரங்கள், கடல், உவர், அல்லது புதிய நீரில் நிகழ்கின்றன.

நீலப் புரட்சி தொகுப்புத் திட்டத்தின் மூலம் மீன் மற்றும் கடல்சார் உற்பத்தியின் விரைவான அதிகரிப்பு என்ற கருத்து நீலப் புரட்சி என்று அழைக்கப்படுகிறது. இது இந்தியாவில் ஏழாவது ஐந்தாண்டு திட்டத்தில் (1985-1990) மத்திய அரசு மீன் பண்ணையாளர்கள் மேம்பாட்டு முகமைக்கு (FFDA) நிதியுதவி அளித்தபோது தொடங்கப்பட்டது. டாக்டர் ஹிராலால் சௌதுரி மற்றும் டாக்டர் அருண் கிருஷ்ணன் நீல புரட்சியின் தந்தை என்று அழைக்கப்படுகிறார்கள்.

நீலப் புரட்சி, நீல் கிராந்தி மிஷன் என அழைக்கப்படுகிறது மற்றும் மீனவர்கள் மற்றும் மீன் விவசாயிகளின் பொருளாதார செழுமையை அடைவதற்கான தொலைநோக்குப் பார்வையைக் கொண்டுள்ளது, அத்துடன் மீன்வள மேம்பாட்டிற்கான நீர் ஆதாரங்களை நிலையான முறையில் பயன்படுத்துவதன் மூலம் உணவு மற்றும் ஊட்டச்சத்து பாதுகாப்பிற்கு பங்களிக்கிறது.

நீல் கிராந்தி மிஷன் என்றும் அழைக்கப்படும் நீலப் புரட்சி, மீன் வளர்ப்புத் தொழிலின் வளர்ச்சிக்காக அரசாங்கத்தால் எடுக்கப்பட்ட ஒரு முயற்சியாகும். இந்த திட்டத்தின் முக்கிய நோக்கம் விவசாயிகளின் வருமானத்தை இரட்டிப்பாக்கும் வகையில் மீன்பிடித் தொழிலை ஒரு முக்கிய நடவடிக்கையாக ஊக்குவிப்பதாகும். நீலப் புரட்சி முதன்முதலில் சீனாவில் தொடங்கியது, இது உலகளவில் மொத்த மீன்வளர்ப்பு உற்பத்தியில் மூன்றில் இரண்டு பங்கைக் கொண்டுள்ளது.

சமீபத்தில், மீன் வளர்ப்புத் தொழில் ஆண்டுக்கு சராசரியாக 9% வீதத்தில் வளர்ந்து வருகிறது மற்றும் இந்தியா வேகமாக வளரும்

நாடுகளில் ஒன்றாகும். நீல் கிராந்தி மிஷன் இந்தியாவில் நீலப் புரட்சியின் தொடக்கமாகும்.

**குறிப்பு**

உயிர் பாதுகாப்பு மற்றும் சுற்றுப்புறசூழலை கருத்தில் கொண்டு இந்தியாவின் பொருளாதார செழுமையை அடைவதற்கான தொலைநோக்கு பார்வையுடன் இப்புரட்சி நடைபெறுகிறது.

## 12.4. அணு ஆற்றல் ஆராய்ச்சி (Atomic Research)

### ஹோமி பாபா (Homi Jahangir Bhaba)

அணு ஆற்றல் ஆராய்ச்சியைப் பற்றி நினைக்கும் போது ஹோமி ஜஹாங்கீர் பாபாவை நினைவு கூறாமல் இருக்க இயலாது. கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் இயற்பியலும், கணிதமும் கற்ற பாபா வியத்தகு அணு விஞ்ஞானியாக மலர்ந்தார். நவீன போனார்டோ டாவின்சி (Modern Leonardo Davinci)யாகக் கருதப்படும் பார்சிக்கார பாபா கரு மறுமலர்ச்சி மாமனிதர். 1944-ம் ஆண்டிலேயே இவர் அணு ஆற்றல் அறிவியலிலும் பாடச்சியிலும் தனது புலமையை வெளிப்படுத்தினார். அணு ஆற்றலைப் பயன்படுத்தி இந்தியா மின் உற்பத்தியில் தன்னிறைவு பெறலாம் என்ற புரட்சிகரமான கருத்தை வெளியிட்டார். 1946ல் டாட்டா குடும்பத்தின் ஆதரவோடும் உதவியோடும் டாட்டா கப்படை ஆராய்ச்சி நிலையத்தை (Tata Institute of Fundamental Research) உருவாக்கினார். இவர் 1955ல் ஜெனீவாவில் நடைபெற்ற அமைதிப் பயன்களுக்கு அணு அற்றம் பற்றிய முதல் சர்வதேச மாநாட்டுக்குத் தலைமை தாங்கினார். ஹோமி பாபாவின் உரிமிதமான ஆற்றலை அறிந்த நேரு இவர் மூலம் அணு ஆற்றல் மூலம் அமைதியான வளர்ச்சிப் பணிகளை மேற்கொள்ளத் தீர்மானித்தார்.

## 12.4.1.அணு ஆற்றல் ஆணையம், 1948

(Atomic Energy Commission, 1948)

1948 ஏப்ரல் மாதம் அணு ஆற்றல் சட்டம் (Atomic Energy Act) இயற்றப்பட்டது. அந்த ஆண்டு ஆகஸ்டு மாதம் அணு ஆற்றல் ஆணையம் அமைக்கப்பட்டது. ஹோமி பாபா அதன் தலைவராக நியமிக்கப்பட்டார். நேருவின் நேரடி நிர்வாகத்தின் கீழ் செயல்பட்ட

அறிவியல் ஆராய்ச்சித் துறை (Department of Scientific Research)யின் அரவணைப்பில் அணு ஆற்றல் ஆணையம் செயல்பட்டது. இந்த ஆணையத்தின் அப்படை நோக்கங்கள் இரண்டு: 1) அணு ஆற்றலை மின் உற்பத்திக்குப் பயன்படுத்தல் 2 அணு ஆற்றலை வேளாண்மை, உயிரியல், தொழில் மற்றும் மருத்துவ முன்னேற்றத்திற்குப் பயன்படுத்தல். அமைதிக்கு அணு (Atom for Peace) என்ற உறுதியான கொள்கையின் அடிப்படையில் பாபாவின் அணு ஆற்றல் ஆணையம் இயங்கியது. பிரான்சில் உள்ள வெர்சேல்ஸ் மாளிகையைப் போன்று வடிவமைக்கப்பட்ட அப்சரா (Apsara) என்ற அணு ஆராய்ச்சி அமைப்பு உலகப் புகழ் பெற்றது. 1954ல் நேருவின் தலைமையில் அணு ஆற்றல் துறை தனி அமைப்பான போது ஹோமி பாபா அதன் செயலராகப் பணியாற்றினார்.

## 12.4.2.அணு ஆராய்ச்சி நிறுவனங்கள்

1956 ஆகஸ்டு மாதத்திலிருந்து பம்பாயில் உள்ள டிராம்பே (Trombay)யில் துவங்கப்பட்டு செயல்படத் துவங்கிய முதல் அணு ஆற்றல் நிலையம் (Neuclear Reactor) ஆசியாவிலேயே முதல் அமைப்பாகும். 1957ல் அணு ஆற்றல் நிலையம் பாபா அணு ஆராய்ச்சி மையம் (Bhaba Atomic Research Centre) என்று பெயர் மாற்றம் செய்யப்பட்டது. இந்தியாவின் அணு ஆற்றல் திட்டத்தின் தந்தையாகப் போற்றப்படும் ஹோமி பாபாவின் பெயரில் இயங்கும் இந்த ஆணையம் அப்பாரா (Appara), செர்லினா (Zerlina), சைரஸ் (Cirus), பூர்ணிமா (Purnima), துருவா (Dhuruva) ஆகிய 5 அணு ரியாக்டர்களை (Neuclear Reactors) அமைத்துள்ளது. தற்போது இந்தியாவில் 5 அணு ஆராய்ச்சி மையங்கள் உள்ளன: 1) மும்பையில் உள்ள பாபா அணு ஆற்றல் ஆராய்ச்சி மையம் (BARC) 2) தமிழ்நாடு கல்பாக்கத்தில் உள்ள இந்திரா காந்தி அணு ஆராய்ச்சி மையம் (IGCAR) 3) இந்தூரில் உள்ள உயர்நிலை தொழில் நுட்ப மையம் (CAT) 4) கொல்கத்தாவில் உள்ள ஆராய்ச்சி நிலையம் (Variable Energy

Cyclotram Centre - VECCC) 5) ஐதராபாத்திலுள்ள ஆராய்ச்சி நிறுவனம் (Atomic Minerals Directorate for Exploration and Research - AMD).



அணு ஆற்றல் துறை மேற்கண்ட ஆராய்ச்சி நிறுவனங்களின் துணை கொண்டு பல்வேறு அணு ஆற்றல் திட்டங்களை நடைமுறைப்படுத்துகிறது. உதாரணமாக தமிழ்நாடு கூடங்குளத்தில் 2000MW (e) திறன் கொண்ட அணு ஆற்றல் மின் உற்பத்தி திட்ட (Atomic Power Project)த்தை ரஷ்யாவின் உதவியுடன் மேற்கொள்ளப்பட்டுள்ளது. இதேபோன்று சென்னைக்கருகேயுள்ள கல்பாக்கத்தில் அணு ஆற்றலைக் கொண்டு கடல் நீரைக் குடிநீராக்கும் திட்டம் செயல்படுகிறது. அமைதிக்கு அணு“க் கொள்கைப்படி அணு ஆற்றல் வேளாண்மை, தொழில், மருத்துவம், தகவல் தொடர்பு போன்ற வளர்ச்சித் துறைக்குப் பயன்படுத்தப்படுகிறது.

**உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கவும்**

1. எந்தஆண்டுஅணு ஆற்றல் சட்டம் (Atomic Energy Act) இயற்றப்பட்டது?
2. எந்தஆண்டுஅணு ஆற்றல் நிலையம் பாபா அணு ஆராய்ச்சி மையம் (Bhaba Atomic Research Centre) என்று பெயர் மாற்றம் செய்யப்பட்டது.

## 12.5. விண்வெளி ஆராய்ச்சி மற்றும் வளர்ச்சி (Space Research and Development)

சுதந்திர இந்தியா அணு ஆற்றல் ஆராய்ச்சிக்கு முன்னுரிமை கொடுத்ததைப் போன்று விண்வெளி ஆராய்ச்சி வளர்ச்சிக்கும் முக்கியத்துவம் கொடுத்தது. 1962ல் இந்திய தேசிய விண்வெளிக் குழு (Indian National Committee for Space Research) அமைக்கப்பட்டது. 1963ல் நைக்கே அப்பாச்சே (Nicke Apache) என்ற விண்கலம் விண்வெளியில் செலுத்தப்பட்டது. 1972ல் விண்வெளி ஆணையம் (Space Commission) மற்றும் விண்வெளித் துறை (Department of Space) துவக்கப்பட்டது. 1983 ஜுலை மாதம் ஐந்து வரைவுத் திட்டங்கள் அடங்கிய ஒருங்கிணைந்த நெறிப்பாட்டு ஏவுகணை மேம்பாட்டு செயல்திட்ட (Integrated Guided Missile Development

**குறிப்பு**

Programme)த்துக்கு அரசாங்க ஒப்புதல் கிடைத்தது. இத்திட்டத்தில் பிருத்வி, திரிசூல், ஆகாஷ், நாக் ஆகிய ஏவுகணைகளின் வடிவமைப்பு மற்றும் மேம்பாடு பற்றிய தொலைப்பார்வை இருந்தது. 1901ல் செயற்கைக்கோள் புவிநிலை சுற்றுப் பாதையில் செலுத்தப்பட்டது. 2002ல் மெட்சாட் தொடர்களுக்கு விண்வெளி வீராங்கனை கல்பனா சாவ்லாவின் பெயர் சூட்டப்பட்டது. இன்றைய இந்தியா நிலவை நோக்கிய பயணத்துக்குத் தயாராகி வருகிறது. சுருங்கக் கூறின் சமகால இந்தியாவில் விண்வெளி ஆராய்ச்சி மற்றும் வளர்ச்சி வியத்தகு வளர்ச்சி அடைந்துள்ளது.

இந்திய விண்வெளி ஆராய்ச்சி நிறுவனம் Indian Space Research Organisation,ISRO 1963ல் துவக்கப்பட்ட விண்வெளி ஆராய்ச்சிப் பரிசோதனை 1972ல் விண்வெளி ஆணையம் மற்றும் ஆராய்ச்சித் துறை (Space Commission and the Department of Space)யாக விரிவடைந்தது. இதன் தலைமையகம் பெங்களூரில் உள்ளது. இதன் முக்கிய நோக்கம் விண்வெளி தொழில்நுட்பத்தை குறிப்பாகத் தொலைபேசித் தொடர்பு, தொலைக்காட்சி ஒளிபரப்பு, வானிலை இயற்கை வளங்களைக் கண்டறிதல் ஆகியவற்றை வளர்த்து செயல்படுத்தல். செயற்கைக் கோள்களை (Satellites) உருவாக்குவதும், அவற்றை விண்ணில் கொண்டு செல்வதற்கான விண்கலன்களை (Launch Vehicles)யும் தயாரிப்பதும் இதன் முக்கிய பணிகளாகும். விண்வெளித் திட்டம் இந்திய விண்வெளி ஆராய்ச்சி நிறுவனம் (ISRO), தேசிய தொலையுணர்வு அமைப்பு (National Remote Sensing Agency), இயற்பியல் ஆராய்ச்சி ஆய்வுக் கூடம் (Physical Research Laboratory) ஆகியவற்றால் நடைமுறைப்படுத்தப்படுகிறது.

1979 ஆகஸ்டு மாதம் இந்திய விண்வெளி ஆராய்ச்சி நிறுவனம் விண்வெளி செலுத்துக் கலன்-3 (Space Launch Vehicle - SLV3)ஐ விண்ணில் செலுத்தியது. அம்முயற்சி வெற்றிபெறாவிடினும், தொடர்ந்து முயன்று 1983ல் இக்கலத்தைச் செலுத்தி 2500க்கும் மேற்பட்ட படங்களைப் பெற்றது. அதன்பிறகு 1987லும், 1988லும் ஆற்றல்மிகு செயற்கைக்கோள் செலுத்துகலம் (Augmentad Satellite Launch Vehicle - ASLV) அனுப்பப்பட்டது. 1992ல் ஏஎஸ்எல்வி-3 (ASLV-3) ரோகினி

(Rohini) செயற்கைக்கோளை ஏந்திச் சென்றது. இன்றைய இந்தியா செயற்கைக் கோளை உருவாக்குவதிலும், தொலை தூரம் செல்லக்கூடிய ஏவுகணைகளையும் தயாரிப்பதில் வலுவான நிலையில் உள்ளது.

## 12.5.1. விக்ரம் சாராபாய் விண்வெளி மையம் (Vikram Sarabai Space Centre)

**விக்ரம் சாராபாய்**

ஹோமி பாபா அணு ஆராய்ச்சியின் தந்தை என்று அறியப்படுவதைப் போன்று, விக்ரம் சாராபாய் இந்திய விண்வெளித் திட்டத்தின் தந்தை" என்று அழைக்கப்படுகிறார். ஹோமி பாபாவுக்குப் பிறகு அணு ஆற்றல் ஆணையத்தின் தலைமைப் பொறுப்பேற்ற பல்திறன் கொண்ட சாராபாய், விண்கலன்களை உருவாக்குவதில் நிபுணர். விண்வெளித் திட்டங்களை வளர்ச்சியின் நெம்புகோல்களா" (Levers of Development)கக் கருதிய இவர் மூன்று குறிக்கோளைப் பற்றிப் பேசினார்: 1) மக்களிடையே அறிவியல் முறை பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்தல் 2) சூழ்நிலைக் கட்டுப்பாடுகளை எதிர்கொண்டு பரிசோதனை செய்தல் 3) அறிவையும், திறமையையும் நாட்டுப்பாதுகாப்பு, வளர்ச்சி, மாற்றம் ஆகியவற்றுக்காக முழுமையாகப் பயன்படுத்தல். இவரது இடையறாத முயற்சியின் விளைவே விக்ரம் சாராபாய் விண்வெளி மையம் ஆகும்.

## 12.5.2. விண்வெளி மையம்

விக்ரம் சாராபாய் விண்வெளி மையம் கேரளா திருவனந்தபுரம் தும்பா (Thumba)வில் உள்ளது. இது இந்திய விண்வெளி ஆராய்ச்சி மையமாகும். துவக்கத்தில் இந்த மையம் பி.எஸ்.எல்.வி. போன்ற செயற்கைக்கோள் செலுத்து கலன்கள் தயாரிப்புக்களமாகப் பயன்பட்டது. பின்னர் 1969ல் செலுத்துகலன் வளர்ச்சித் திட்டம் தும்பாவிலிருந்து ஆந்திராவில் உள்ள =ஹரிகோட்டாவிற்கு மாற்றப்பட்டது. தற்போது தும்பாவில் ஏவுகணை செலுத்தும் தளம் (Rocket Launching Station) உள்ளது.

### 12.5.2.1. ஸ்ரீஹரிகோட்டா (Sriharikota)

ஸ்ரீஹரிகோட்டா ஆந்திராவில் உள்ள விண்வெளித் துறைமுகம்“ (Space Port) ஆகும். இது சாராபாயின் நன்கொடையாகும் விண்வெளி ஆராய்ச்சிக்கும் வளர்ச்சிக்கும் அவரது பங்களிப்பாகும். சாராபாய் 1969ல் அணு ஆற்றல் ஆணையத்தின் தலைவராக இருந்த போது ஆந்திராவின் கிழக்குக் கடலோரப் பகுதியை ஆகாயத்திலிருந்து பார்வையிட்டு விண்வெளித் திட்டத்திற்குப் பொருத்தமான இடத்தைத் தெரிவு செய்தார். 170 கி.மீ பரப்பளவுள்ள இந்த ஆந்திரக் கடலோரத் தீவுதான் விண்கலன் செலுத்து களமாகும். இங்குள்ள ஷார் (SHAR) மையத்திலிருந்துதான் 1971ல் முதல் ரோகிணி செயற்கைக்கோள் செலுத்தப்பட்டது. பின்னர் எஸ்எல்வி (SLV), ஏஎஸ்எல்வி (ASLV), பிஎஸ்எல்வி (BSLV) போன்ற ஏவுகலன்கள் செலுத்தப்படுகின்றன.

குறிப்பு

**இந்திய தேசிய செயற்கைக்கோள் முறை, 1983**

Indian National Satellite System, 1983 (INSAT)

1983ல் பிரதமர் இந்திரா காந்தியின் ஆட்சிக் காலத்தில் “இன்சாட்“ (INSAT) முறை நடைமுறைப்படுத்தப்பட்டது. அதன்பின் 1991ல் முதல் தலைமுறை செயற்கைக்கோள் (INSAT-1D) செலுத்தப்பட்டது. பின்னர் 1993 ஜுலை , 1995 டிசம்பர், 1999 ஏப்ரல், 2000 மார்ச்சில் இந்திய விண்வெளி ஆராய்ச்சி மையத்தில் (ISRO) வடிவமைக்கப்பட்ட நான்கு இரண்டாம் தலைமுறை செயற்கைக்கோள்கள் (INSATS-2B, 2C, 2D, 2DD) அனுப்பப்பட்டன. தற்போது 450க்கும் மேற்பட்ட இந்திய செயற்கைக்கோள்கள் பூமியைச் சுற்றி வருகின்றன! இவற்றின் மூலம் தொலைபேசித் தொடர்பு, தொலைக்காட்சி ஒளிபரப்பு, வானிலை முன்னறிவிப்பு, பேரழிவு எச்சரிக்கை, தகவல் பரிமாற்றம், வானொலி ஒலிபரப்பு, கல்வி மற்றும் தொழில் பயிற்சி பற்றிய நிகழ்ச்சிகள் ஒலிபரப்பனுப்பீட்டுக் கருவிகள் (Transmitters) மூலம் விண்ணிலிருந்து மண்ணுக்கு அனுப்பப்படுகின்றன.

**செயற்கைக் கோள்கள் (Satellites)**

இந்திய விண்வெளி ஆராய்ச்சி நிறுவனம் துவக்கத்தில் செயற்கைக் கோள்களை மட்டுமே வடிவமைத்துத் தயாரித்தது. அவை முந்தைய சோவியத் ஒன்றியத்திலிருந்த பயாக்கனூர் விண்வெளி மையம்

(Biakanoor Space Centre), பிரெஞ்சு கயானா (French Guyana) தளங்களிலிருந்து ரஷ்ய மற்றும் பிரெஞ்சு செலுத்து கலன்கள் மூலம் விண்வெளிக்குள் செலுத்தப்பட்டன. இந்தியாவில் தயாரிக்கப்பட்ட வரலாற்றுச் சிறப்புமிக்க செயற்கைக்கோள்கள் வருமாறு: ஆர்யப்பட்டா (Aryabhata), 1975 ஆர்யப்பட்டா இந்திய விஞ்ஞானிகள் மற்றும் பொறியாளர்களால் வடிவமைக்கப்பட்டு உருவாக்கப்பட்ட முதல் செயற்கைக்கோள் ஆகும். இது பெங்களூரில் உள்ள விண்வெளி ஆராய்ச்சி மையத்தில் தயாரிக்கப்பட்டது. இதற்கு கி.பி.ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த இந்திய வானவியலாளர் - கணித மேதை ஆர்யப்பட்டாவின் பெயர் சூட்டப்பட்டது. இந்த கோள் 1975 ஏப்ரல் 19-ம் தேதி சோவியத் தளத்திலிருந்து (Cosmodrome) பூமிக்கு அருகாமையிலுள்ள சுற்றுவழி (Orbit)க்கு அனுப்பப்பட்டது. இதன் இயக்கம் ஸ்ரீஹரிகோட்டாவில் உள்ள ஷார் மையத்திலிருந்து கண்காணிக்கப்பட்டது. ஆர்யப்பட்டா அனுப்பிய தகவல்கள் ரஷ்யா, பிரான்ஸ் மற்றும் இந்தியாவிலுள்ள வழிகாட்டுத் தளங்கள் (Tracking Stations) மூலம் பெறப்பட்டன. ஆறு மாதங்களுக்கு மேல் பூமியைச் சுற்றி வந்த இந்த கோளை அனுப்பியதன் மூலம் இந்தியா விண்வெளி யுகத்தில் நுழைந்தது எனலாம்.

**பாஸ்கரா - 1 (Bhaskara I), 1979**

1979 ஜுன் 7-ம் தேதி இந்திய செயற்கைக்கோள் பாஸ்கரா ரஷ்யாவிலிருந்து விண்வெளிக்கு அனுப்பப்பட்டது. பண்டைய இந்திய கணிதமேதை பாஸ்கராவின் பெயரிடப்பட்ட இந்த செயற்கைக்கோளின் எடை 44 கிலோ. தொலைக்காட்சி புகைப்படக் கருவி பொருத்தப்பட்ட இக்கோள் நீரியல் ஆய்வு (Hydraulic), கடலியல் (Oceanography), வானிலை பற்றிய தகவல்களை அனுப்பியது. 1981 நவம்பர் 20-ம் தேதி பாஸ்கரா-II செலுத்தப்பட்டது.

**ரோகினி (Rohini), 1980**

1980 ஜுலை மாதம் 18-ம் தேதி ரோகினி செயற்கைக்கோள் முதன்முறையாக இந்திய விண்வெளி விஞ்ஞானிகளால் வடிவமைக்கப்பட்டு தயாரிக்கப்பட்ட செயற்கைகோள் செலுத்துகலன்-3 (SLV-3) மூலம் விண்வெளி சுற்றுப்பாதையில் விடப்பட்டது. இந்த 45

கட்ட விண்கலன் திருவனந்தபுரத்தில் உள்ள விக்ரம் சாராபாய் விண்வெளி மையத்தில் தயாரிக்கப்பட்டது. எதிர்காலத் திட்டத்திற்காக செங்குத்து செயல்பாட்டை (Vertical Performance) மதிப்பீடு செய்ய 1983 ஏப்ரல் 17-ம் தேதி ரோகினி-III அனுப்பப்பட்டது.

**ஆப்பிள் (Apple), 1981**

1981 ஜுன் மாதம் 657.5 கிலோ எடையுள்ள ஆப்பிள் செயற்கைக்கோள் (3 Axis geo-stationary satellite) பிரெஞ்சு கயானாவிலிருந்து ஐரோப்பிய விண்வெளி மையத்தின் ஏரியான் (Ariane) விண்கலன் மூலம் செலுத்தப்பட்டது. இது இந்தியாவின் முதல் தகவல் தொடர்பு செயற்கைகோள் என்பது குறிப்பிடத்தக்கது. அமெரிக்கா, ரஷ்யா, பிரான்ஸ், கனடாவை அடுத்து இத்தகைய செயற்கைக்கோளை விண்வெளிக்கு அனுப்பிய நாடு இந்தியா தான்.

**ஏவுகலன் தொழில்நுட்பம் (Launch Vehicle Technology)**

செயற்கைக்கோள்களை ஏந்திச் செல்வதற்கான ஏவுகலன் தொழில்நுட்பத்தில் இந்தியா உயர்நிலையை அடைந்துள்ளது. எஸ்.எல்.வி.-3 (SLV-3) மூலம் இந்தியா ஏவுகலன் வளர்ச்சியைத் துவக்கியது எனலாம். அதன்பின் 1992 மே, 1994 மேயில் ஏஎஸ்எல்வி (Augmented satellite Launch Vehicle - ASLV) வெற்றிகரமாக சோதிக்கப்பட்டதன் மூலம் இத்தொழில் நுட்பம் பன்மடங்கு உயர்ந்தது. இறக்குமதி செய்யப்பட்ட கிரையோ எஞ்ஜின் (Cryo Engine) என்ற அதிகுளிர் கனற்பொறித் தொழில்நுட்ப உதவியுடன் புவி ஒத்தியக்கச் செயற்கைக்கோள் ஏவுகலன் (GeoSynchronous Satelite Launch Vehicle-GSLV) பயணத் திட்டத்தைத் துரிதப்படுத்தியது. சமகால இந்திய ஏவுகலன் தொழில்நுட்ப வளர்ச்சி வரலாற்றில் குறிப்பிடத்தக்க திருப்புமுனையை ஏற்படுத்தியது.

2001 ஏப்ரல் 18-ம் தேதி ஜிஎஸ்எல்வி (GSLV) மூலம் பரிசோதனை செயற்கைக்கோள் வெற்றிகரமாக அனுப்பப்பட்டது. 1.53 டன் எடையுள்ள, 125 கோடி ரூபாய் செலவில் உருவாக்கப்பட்ட இந்த ஏவுகலன் விண்வெளியில் 36,000 கிலோ மீட்டர் தூரம் சுற்றி வந்தது. இதன் மூலம் தொலைக்காட்சி சமிக்ஜைகள் பெறவும், தொலைதூர தொலைபேசி

தடையின்றி செயல்படவும் வசதி ஏற்பட்டது. விண்வெளி விஞ்ஞானி கே.கஸ்தூரி ரங்கன் குறிப்பிட்டதைப் போன்று இச்சாதனை "தொழில்நுட்பத் திறமையில் ஏற்பட்ட அசுரத்தாண்டல்"" (A quantum jump in technological competence) ஆகும். செயற்கைக்கோள் ஏவுகலன்களுக்கு அத்யாவசியத் தேவையான உந்து எரிபொருள்கள் (Propellants), பயண வழிகாட்டல் மற்றும் கட்டுப்பாடு (guidance and control) அமைப்புகள் போன்ற பல்வேறு உட்கூறுகள் நம்நாட்டிலேயே கண்டுபிடிக்கப்பட்டு தயாராகி வருவதாகக் கூறுகிறார் மற்றொரு விண்வெளி விஞ்ஞானியான ஏ.பி.ஜே.அப்துல் கலாம். எனினும் இன்றைய இந்தியா ஐரோப்பிய ஏரியான் ஏவுகலனையே நம்பியிருக்க வேண்டியுள்ளது.

**உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கவும்**

3. எப்பொழுதுஇந்திய தேசிய விண்வெளிக் குழு (Indian National Committee for Space Research) அமைக்கப்பட்டது.

4. விக்ரம் சாராபாய் விண்வெளி மையம்எங்கு அமைத்துள்ளது?

## 12.6. தகவல் தொடர்புகள்

இயங்குதலும் இயக்குதலும் மனித இயல்பு. இவ்விரண்டுக்கும் இன்றியமையாத தேவை தகவல் தொடர்பு ஆகும். கம்யூனிகேஷன் (தகவல் தொடர்பு) என்ற ஆங்கிலச் சொல் கம்யூனிஸ் (Communis) என்ற இலத்தீன் சொல்லிலிருந்து பெறப்பட்டதாகும். "கம்யூனிஸ்" என்றால் பொதுவான" (Common) என்று பொருள். அதாவது ஒருவர் தனது கருத்துக்களையும் உணர்வுகளையும் பிறருடன் பொதுவாகப் பகிர்ந்து கொள்வதாகும். ஒருவருக்கொருவர் நேரிடையாகத் தகவல் பரிமாற்றம் செய்து கொண்டால் அது இருவரிசை தகவல் தொடர்பு (Inter-Personal Communication) ஆகும். குழு தகவல் தொடர்பு (Group Communication) என்பது ஒரு பிரிவினர் அல்லது வகுப்பினரிடையே நடைபெறும் தகவல் தொடர்பாகும். மக்கள் தகவல் தொடர்பு (Mass Communication) என்றால் வானொலி, தொலைக்காட்சி, சினிமா, வீடியோ, இணையதளம், பத்திரிக்கை போன்ற ஊடகங்கள் மூலம்

தகவல் தொடர்புப் பரிமாற்றம் செய்வதாகும். சுருங்கக்கூறின் தனித் தகவல் தொடர்பும் (Personal Communication) மக்கள் தகவல் தொடர்பும் (Mass Communication) முக்கிய தகவல் தொடர்பு சாதனங்களாகும்.

## 12.6.1. தபால்வழி தகவல் தொடர்பு (Postal Communication)

**வியத்தகு வளர்ச்சி**

தனித் தகவல் தொடர்புக்குத் தகுந்த எடுத்துக்காட்டு தபால் - தந்தி முறையாகும். இந்தியாவில் பிரிட்டிஷ் காலனி ஆட்சியின் போது தபால் வழி தகவல் தொடர்பு நன்கு வளர்ந்திருந்தது. துவக்கத்தில் அரசாங்க அலுவலர்களுக்கு மட்டுமே பயன்பட்ட தபால் தகவல் முறை 1837க்குப் பிறகு பொது உபயோகத்துக்கு விரிவுபடுத்தப்பட்டது. 1852ல் கராச்சியில்தான் முதல் தபால் ஸ்டாம்ப் வெளியிடப்பட்டது. 1854ல் தபால் நிலையம் (Post Office) முறையாக மறுசீரமைக்கப்பட்ட போது 700 தபால் நிலையங்கள் செயல்பட்டு வந்தன. அதன்பின் பண அஞ்சல் முறையும் (1880) தபால் சேமிப்பு வங்கியும், தபால் ஆயுள் காப்பீட்டு நிறுவனமும் (1884) துவக்கப்பட்டன. 1898ல் இயற்றப்பட்ட இந்திய தபால் அலுவலகச் சட்டப் (Indian Post Office Act)படிதான் இன்றைக்கும் தபால் சேவைகள் நடைபெற்று வருகின்றன. தபால் அனுப்பீட்டு முறை (Postal Transmission) இருநிலை தபால்கள்தனிப்பட்ட எழுத்து வடிவிலான தகவல் தொடர்புகள் இந்திய தபால் வலையத்தால் (Postal network) பரிவர்த்த னை செய்யப்படுகிறது. இது உலகிலேயே மிகப் பெரிய தபால் அனுப்பீட்டு முறையாகும். நாடு முழுவதும் 1.5 இலட்சம் தபால் நிலையங்கள் உள்ளன. இவற்றுள் 89 சதவிகிதம் கிராமப்புறங்களிலும், 11 சதவிகிதம் நகர்ப்புறங்களிலும் உள்ளன. தபால்களை இருவகையாகப் பிரிக்கலாம்: 1) முதல் நிலை தபால் (First Class Mail). அஞ்சலட்டைகள், உள்நாட்டுக் கடிதங்கள், தபாலுறைகள் முதல் தரத் தபாலாகக் கருதப்பட்டு விமானம் மூலம் அனுப்பப்படுகின்றன. 2) இரண்டாம் நிலை தபால் (Second Class Mail). புத்தகக் கட்டுகள், பதிவு செய்யப்பட்ட செய்தித்தாள்கள், சஞ்சிகைகள் இரண்டாம் நிலை தபால்களாகத் தரம் பிரிக்கப்பட்டு, நிலவழியாகவும், நீர்வழியாகவும்

அனுப்பப்படுகின்றன. தபால் தடங்கள் அண்மைக் காலத்தில் தபால்கள் காலதாமதமின்றி விரைவாகவும், திறமையாகவும் பட்டுவாடா செய்யும் பொருட்டு 6 தபால் தடங்கள் (Mail Channels) முறை அறிமுகப்படுத்தப்பட்டது. இவை 1) ராஜதானி தடம் 2) மெட்ரோ தடம் 3) பச்சைத் தடம் 4) வணிகத் தடம் 5) மொத்த தபால் தடம் 6) பத்திரிக்கை தடம் என்று அழைக்கப்படுகிறது. இவற்றுள் முதல் மூன்று தடத் தபால்களும் பிரத்யேகத் தபால் பெட்டிகள் மூலம் பெறப்படுகின்றன. கடைசி மூன்று தடத் தபால்களும் தபால் நிலையங்களில் நேரிடையாகப் பெறப்படுகின்றன. தபால் சேவைகள் (Postal Services) இந்தியத் தபால் வலையம் (Postal network) உலகிலேயே மிகப் பெரிய சேவை அமைப்பாகும். இது தபால் அனுப்பீட்டு முறை தவிர வேறு பல முக்கிய சேவைகளையும் செய்கிறது. இந்தியா எட்டு மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு மண்டலத்துக்கும் “தபால் எண்“ (Postal Index Number - PIN) கொடுக்கப்பட்டுள்ளது. 1972ல் அறிமுகப்படுத்தப்பட்ட இந்த தபால் எண் முறை தபால்களை எளிதில் பட்டுவாடா செய்ய உதவுகிறது. 1975ல் கொண்டு வரப்பட்ட விரைவுத் தபால் முறை (Speed Post) மூலம் உலகின் எந்த இடத்துக்கும் தபால் மூலம் தகவல் அனுப்ப முடியும். 1977ல் செயற்கைக் கோள் மூலம் தகவல் தொடர்பு கொள்ளும் சேவை துவக்கப்பட்டது. 1984ல் தபால் காப்பீட்டுத் திட்டம் (Postal Life Insurance) நடைமுறைப்படுத்தப்பட்டது.

1994ல் முக்கிய தபால் நிலையங்களில் தபால் கடைகள் (Post Shopes) திறக்கப்பட்டன. 1995ல் கிராமப்புற தபால் காப்பீட்டுத் திட்டம் துவக்கப்பட்டது. செயற்கைக்கோள் வழி மணியார்டர் (Money Order) அனுப்பும் முறை புழக்கத்தில் உள்ளது. தபால் துறை வங்கி சேமிப்புத் திட்டம் (Postal Saving) மக்களிடையே மிகுந்த செல்வாக்கு பெற்றுள்ளது. இரவு நேர தபால் நிலையங்கள், வெளிநாடுகளிலிருந்து வரும் பணம் தபால் நிலையங்கள் மூலம் வழங்கப்படல், மின்னஞ்சல் (E-mail), கூரியர் முறை (Courier), கணிப்பொறி மயமாக்கப்படும் தலைமை தபால் அலுவலகங்கள், சிறப்புத் தபால் தலைகள் (Philately) வெளியிடுதல் போன்றவை பிற சேவைகளாகும்.

## 12.6.2. தொலைபேசி மூலம் தகவல் தொடர்பு (Telecommunications)

குறிப்பு

**தொலைத் தொடர்புப் புரட்சி**

இந்தியாவில் தொலைபேசி யானை வருவதற்கு முன் தந்தி முறை (Telegraphy) என்ற மணி ஓசை கேட்டது. 1851ல் முதல் தந்தி கல்கத்தாவிலிருந்து டயமண்டு துறைமுகத்துக்கு அனுப்பப்பட்டது. 1884 மார்ச் மாதத்துக்குள் தந்தித் தகவல் ஆக்ராவிலிருந்து கல்கத்தாவுக்கு அனுப்பும் அளவுக்கு வளர்ச்சி அடைந்தது. அலெக்சாண்டர் கிரஹாம்பெல் தொலைபேசி (Telephone)யைக் கண்டுபிடித்த (1876 மார்ச் 10) ஆறு ஆண்டுகளுக்குள் 1881-82ல் கல்கத்தாவில் தொலைபேசி சேவை துவங்கப்பட்டது. 1990ல் தந்தி மற்றும் தொலைபேசி சேவைகள் இந்திய ரயில்வேக்கு விரிவுபடுத்தப்பட்டது. 1913-14ல் சிம்லாவில் முதல் தானியங்கி தொலைபேசி நிலையம் (Automatic Exchange) நிறுவப்பட்டது. இது தொலைத் தொடர்புப் புரட்சியாகும்.

பிரம்மாண்டமான பரிமாணம்

இந்தியா சுதந்திரம் பெற்ற பின்னர் தொலைபேசித் தகவல் தொடர்பில் மாபெரும் மாற்றம் ஏற்பட்டது. 1984ல் பிரதமர் ராஜீவ் காந்தியால் உருவாக்கப்பட்ட தொலை நிலை இயக்க மேம்பாட்டு மையம் (Centre for Development of Telematics - CDOT) சமகால இந்திய தொலைத்தொடர்பு வரலாற்றில் திருப்பு முனையை ஏற்படுத்தியது. அதன் விளைவாக 2000-ல் தொலைபேசி நிலையங்கள் 300லிருந்து 28,000 ஆக உயர்ந்தது 27 ஆயிரம் தொலைபேசிகள் உபயோகத்தில் இருந்தன.

**பின்னர் தானியங்கி முறையில்**

Mesto garaivig (International Subscriber Dialling - ISD),STARTET GUL (Nationals Subseriber Diialling - NSD), பிசிஓ (Public Call Office - PCO) சேவைகள் புற்றீசல்கள் போல் பெருகின. 1999-ல் கொண்டுவரப்பட்ட புதிய தொலைபேசி கொள்கை (New Telecom Policy) தொலைபேசித் துறையைத் தனியார் துறை படையெடுப்புக்குத் திறந்து விட்டது. டெலிபோன்களுக்கு பதில்

செல்போன்கள் (Cellular Moobile Telephone) மடைதிறந்த வெள்ளம் போல பெருகின. 1998 ஆகஸ்டு 26-ம் தேதி அறிவிக்கப்பட்ட கொள்கை முடிவுப்படி செயற்கைக்கோள் மூலம் உலகளாவிய இயக்க தனித்தகவல் தொடர்பு (Global Mobile Personal Communication) தொலைத் தொடர்புப் புரட்சியின் புதிய பிரம்மாண்டமான பரிமாணத்தைக் கொடுத்தது. இது மின்னணு தொலைத் தொடர்பு சேவையில் ஏற்பட்ட அசுர வளர்ச்சி“ ஆகும்.

## 12.6.3. புதிய தொலைத் தொடர்புக் கொள்கை, 1999 (New Telecom Policy, 1999)

புதிய தொலைத் தொடர்புக் கொள்கை 1999ல் பிரதமர் வாஜ்பாய் ஆட்சிக் காலத்தில் அறிவிக்கப்பட்டது. இக்கொள்கையின் சிறப்புக் கூறுகளாவன: 1) இந்திய தொலைத் தொடர்பு கட்டுப்பாட்டு நிறுவன (Telecol Regulatory Authority of India - TRAI)த்தின் பரிந்துரைப்படி தொலைத் தொடர்புத் துறையில் பங்கேற்போரின் எண்ணிக்கை மற்றும் இவர்கள் தேர்ந்தெடுக்கப்படும் முறை முடிவு செய்யப்படும். 2) தேர்ந்தெடுக்கப்படும் சேவையாளர்கள் (Service Providers) நுழைவுக் கட்டணத்தையும், உரிமக் கட்டணத்தையும் ஒருசேரக் கட்டவேண்டும். 3) இக்கட்டணங்கள் டிராய்“ (TRAI) பரிந்துரையின் மீது தீர்மானிக்கப்படும்.

புதிய கொள்கை இந்தியத் தொலைத் தொடர்பை சந்தை சக்தி“களின் (Market Forces) போட்டிக்கு விட்டுவிட்டது. மேலும் இக்கொள்கை முக்கிய மதிப்புக் கூட்டு (Value Added) தொலைத்தொடர்பு சேவைகளுக்கு வழிவகுத்தது. 1) செல்லுலர் இயக்க சேவைகள் (Cellular Mobile Service Providers); 2) செல்லுலர் இயக்க தொலைபேசி சேவை (Cellular Mobile Telephone Service) 3) பொது இயக்க வானொலி சேவைகள் (Public Mobile Radio Trunked Services) 4) குரல் தபால் சேவை (Voice Mail Audiotex Service); 5)செயற்கைக்கோள் வழி உலகளாவிய இயக்க தனித் தகவல் தொடர்பு சேவை (Global Mobile Personal Communication by Satellite Service).

**குறிப்பு**

**நிறுவனப் பங்களிப்பு**

இந்தியத் தொலைத்தொடர்பு வளர்ச்சி வரலாற்றில் பொதுத்துறை நிறுவனங்கள் பெருமைக்குரிய பங்களிப்புகள் செய்துள்ளன. 1948 ஜூலை மாதம் பெங்களூரில் துவக்கப்பட்ட இந்திய தொலைபேசி நிறுவனம் (Indian Telephone industries Ltd) தொலைத் தொடர்புத் துறைக்குத் தேவையான அனைத்துக் கருவிகளையும் தயாரித்துக் கொடுக்கிறது. 1960ல் ஆரம்பிக்கப்பட்ட இந்துஸ்தான் டெலிபிரிண்டர்ஸ் நிறுவனம் (Hindustan Teleprinters Ltd) மின்னணு தானியங்கி டெலி பிரிண்டர்களை (Electro mechanical Teleprinters)த் தயாரிக்கிறது.

1978-ல் துவக்கப்பட்ட இந்திய தொலைத் தொடர்பு ஆலோசகர்கள் நிறுவனம் (Tele Communications Consultants India Ltd) தொலைத் தொடர்பு சம்மந்தப்பட்ட அனைத்து தீர்வுகளையும் கொடுக்கிறது. 1979-ல் அறிமுகப்படுத்தப்பட்ட தொலைத்தொடர்பு தர உறுதி மையம் (Telecom Quality Assurance Circle) தர அளவைகளையும் (Quality Parameters), தர உறுதி வழிமுறை (Quality Assurance Procedures)களையும் தீர்மானிக்கிறது. 1984-ல் டெலிமாட்டிக்ஸ் வளர்ச்சி மையம் (Centre for Development of Tele Matics - C.BOT) இந்திய சுற்றுச் சூழலுக்கேற்ப புதிய தலைமுறை சுவிட்ச் போர்டு (Switch Boards)களைத் தயாரிக்கிறது. 1986-ல் நடைமுறைக்கு வந்த மகாநகர் தொலைபேசி நிகாம் (Mahanagar Telephone Nigam Ltd) தொலைத் தொடர்பு சேவைகளை மேலாண்மை செய்து, நெறிப்படுத்தி, வழிநடத்திச் செல்கிறது. 2000-ல் மறுசீரமைக்கப்பட்ட பாரத் சஞ்சார் நிகம் (Bharat Sanchar Nigam Ltd - BSNL) செல்லுலர் தொலைத் தொடர்பில் தனியார் துறையுடன் போட்டி போடுகிறது. தகவல் தொடர்புத் துறை இலாபத்தில் இயங்கக்கூடிய ஒருசில பொதுத் துறைகளில் ஒன்றாகும்.

**மக்கள் தகவல் தொடர்பு (Mass Communication)**

சமகால இந்தியா தகவல் தொடர்பு சகாப்தத்தை எதிர் கொண்டுள்ளது. தனி நபர் தகவல் தொடர்பும் (Personal Communication), மக்கள் தகவல் தொடர்பும் (Mass Communication) தகவல் தொடர்பு நாணயத்தின் இரண்டு பக்கங்களாகும். வானொலி, தொலைக்காட்சி, சினிமா, வீடியோ, இணைய தளம் போன்ற ஊடகங்கள் மூலம் மக்கள்

தகவல் தொடர்பு நடைபெறுகிறது. அதாவது மக்கள் தகவல் தொடர்பு என்பது தகவல்களை மக்களிடம் கொண்டு சேர்ப்பதாகும். இதற்குப் பயன்படும் ஊடகங்கள் மக்கள் தகவல் தொடர்பு சாதனங்களாகும். மக்கள் தகவல் தொடர்பு சாதனங்கள் (Mass Communication Tools)

**நோக்கங்களும் பயன்களும்**

மக்கள் தகவல் தொடர்பு சாதனங்கள் 1) வளர்ச்சி (Development) 2) விடுதலை (Liberation); 3) அதிகாரப் பரவலாக்கம் (Empowerment) ஆகியவற்றை நோக்கங்களாகக் கொண்டுள்ளன. இவற்றின் பயன்கள் பல: 1) சமூகம், பிராந்தியம், நாடு, உலகில் நடக்கும் நிகழ்ச்சிகள் பற்றிய தகவல்களை உடனடியாக மக்களிடம் கொண்டு சேர்த்தல் 2) நாட்டின் வளர்ச்சிக் கொள்கைகள், முன்னேற்றத் திட்டங்கள், நடப்பு நடவடிக்கைகள் பற்றி மக்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்தல் 3) அறிவு தேடிகள், அறிவு ஜீவிகள் மற்றும் அறிவு உழைப்பாளிகளின் கல்வி மற்றும் பயிற்சித் தேவைகளைப் பூர்த்தி செய்தல் 4) மக்களிடையே அடங்கிக் கிடக்கும் அல்லது அடக்கி வைக்கப்பட்டிருக்கும் பாலுணர்வு, வன்முறை உணர்ச்சி, மன வக்கிரங்கள் ஆகியவற்றுக்கு வடிகாலாக இருத்தல் 5) பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளை வழங்கல் 6) பொருள்கள் மற்றும் சேவைகளுக்கான விளம்பரம் செய்தல்.

**ஊடகமே செய்தி**

வழக்கமாக வானொலி, தொலைக்காட்சி, பத்திரிக்கை போன்ற பிரதான மக்கள் தகவல் தொடர்பு சாதனங்கள் தகவல்களை ஒருதலைபட்சமாகத் தருகின்றன. அதாவது இவைகள் தீர்மானிக்கும் தகவல்களை, மக்களின் பங்கேற்பின்றி அவர்களிடம் கொண்டு சேர்க்கின்றன (Mediate the Messages). இவைகள் நேர நிரப்பிகள் (Time Fillers). வில்பர் ஷ்ரம் (Wilbour Schramm) என்பவர் இவற்றை மந்திரப் பெருக்கிகள்“ (Magic Multipliers) என்று வர்ணித்துள்ளார். மாறாக பேஜர்கள் (Pagers), செல்லுலர் தொலைபேசிகள், (Cellular Phones), தகவல் தொடர்பு தீர்க்க தரிசியாகக் கருதப்படும் கணினிகள் (Computers), இணைய தளம் (Internet) போன்ற அதிநவீன மக்கள் தகவல் தொடர்பு சாதனங்கள் ‘தகவல் பரிமாற்ற சாதனங்கள்“ (Interactive Media) என்று கூறப்படுகிறது. ஏனெனில் இவற்றின் மூலம் தகவல் பரிமாறிக்

குறிப்பு

கொள்ளப்படுகிறது் தகவல் பரிமாற்றத்தில் சம்மந்தப்பட்டவர்கள் பங்கேற்க முடிகிறது் தொலை தூரத்திலிருந்து ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ளக் கூட முடிகிறது் உலகின் பல பகுதியில் உள்ளவர்கள் கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்வது (Video-Conferencing) சாத்தியமாகிறது. சுருங்கக்கூறின் மார்ஷல் மெக்லுகன் (Marshall Mcluhan) கூறுவதைப் போன்று ஊடகமே செய்தி (Medium is the Message)யாகும்.

## 12.6.4. வானொலி தகவல் தொடர்பு (Radio Communication)

**வானொலி வளர்ச்சி வரலாறு**

கம்பியில்லாத் தந்தி (Wireless Telegraphy) தான் வானொலியின் முன்னோடி. இது தனி மனிதர்களுக்கிடையேயான தகவல் தொடர்பை பொதுத் தகவல் தொடர்பாக்கிற்று. முதல் உலகப் போரின் போது (1914 - 18) வானொலி இராணுவத்தின் இரகசிய தகவல் தேவைகளுக்குப் பயன்படுத்தப்பட்டது. பின்னர் இது தடையற்ற பொதுத் தகவல் தொடர்பு சாதனமாயிற்று. இந்திய வானொலி தனியார் முயற்சியின் விளைவாகும். வானொலி ஆர்வலர்கள் கல்கத்தா, பம்பாய், மதராஸ், லாகூர் போன்ற நகரங்களில் பொழுதுபோக்கு வானொலி மன்றங்கள்“ (Amateur Radio Clubs) அமைத்து ஒலி பரப்பினர். 1921 ஆகஸ்ட் 20-ம் தேதி ஒரு வீட்டின் கூரையின் மீதிருந்து ஒலிபரப்பப்பட்டது. 1922 பிப்ரவரி 23-ம் ஒலிபரப்பு உரிமம் வழங்கப்பட்டது. 1923 நவம்பர் மாதம் உரிமம் பெற்ற முதல் பொழுது போக்கு வானொலி மன்றம் கல்கத்தாவில் தொடங்கப்பட்டது. அதைத் தொடர்ந்து மதராஸ் ராஜதானி“ வானொலி மன்றம் ஆரம்பிக்கப்பட்டது (1924 மே 16). நிதி நெருக்கடி காரணமாக இம்மன்றங்கள் ஒன்று சேர்ந்து இந்திய ஒலிபரப்பு குழுமம் (Indian Broadcasting Corporation Ltd.,) துவங்கின. வானொலிப் பெட்டிகள் ஏராளமாக விற்பனை ஆயின.

பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் இந்திய வானொலி சேவை (Indian State Broadcasting Service - ISBS)யைத் துவங்கிய பின் தனியார் முயற்சி தலைமறைவாகிவிட்டது! இதன் முதல் கட்டுப்பாட்டாளரான“ (Controller) பீல்டன் (Fielden) என்பவர் 1936 ஜுன் மாதம் இந்திய வானொலி

சேவைக்கு அகில இந்திய வானொலி (All India Radio - AIR) என்று பெயர் மாற்றம் செய்தார். அகில இந்திய வானொலி (AIR) இந்தியா சுதந்திரம் பெற்ற போது டெல்லி, பம்பாய், கல்கத்தா, மதராஸ், லக்னோ, திருச்சிராப்பள்ளி ஆகிய ஐந்து நகரங்களிலும், திருவாங்கூர் - ஹைதராபாத், அவுரங்காபாத் ஆகிய மன்னர் மாநிலங்களில் மட்டுமே வானொலி நிலையங்கள் இருந்தன. அவையும் ஆற்றல் குறைந்தவை! அடுத்த இரண்டு ஆண்டுகளில் 25 நிலையங்கள் திறக்கப்பட்டன. 1957 அக்டோபர் மாதம் விவித் பாரதி (Vividh Bharati) என்ற வர்த்தக சானல் ஆரம்பிக்கப்பட்டது. வானொலி மக்களிடையே செல்வாக்கு பெறத் துவங்கியது.

1969 ஜூலை 23-ம் தேதி யுவ வாணி அல்லது இளைஞர் குரல் என்ற சானல் டெல்லி நிலையத்தில் துவக்கப்பட்டது பிற மாநிலங்கள் பின்பற்றின. 1976 ஏப்ரல் மாதம் அகில இந்திய வானொலி தூர்தர்ஷனிலிருந்து பிரிக்கப்பட்டதால் விரைவாக வளர்ச்சி அடைந்தது. பண்பலை வரிசை (Frequency Modulation - FM) முதலில் சென்னையிலும் பின்னர் ஜலந்தரிலும் அறிமுகப்படுத்தப்பட்டது. நாகர்கோயில் போன்ற உள்@ர் நிலையங்கள் (Local Stations) திறக்கப்பட்டன. 1980களில் டெல்லியிலிருந்து மணிக்கொரு செய்தித் தொகுப்பு (News Bulletin) ஒலிபரப்பப்பட்டது. 1990களில் டெல்லி, புனேயிலிருந்து தொலைபேசி வழி வானொலி (Phone-in-Porgramme) பரிசோதனை செய்யப்பட்டது. 1994 முதல் தேதி ஸ்கை வானொலி (Sky Radio Channel) மூலம் சந்தாதாரர்கள் செயற்கைக்கோள் வழியாக 20 வானொலி நிகழ்ச்சிகளைக் கேட்க முடிந்தது. எப்.எம் (FM) பெட்டிகள் மூலம் 17 மையங்களில் வானொலி பேஜிங்“ (Radio Paging) துவக்கப்பட்டது. வானொலி சேவைகள் (AIR Services) அகில இந்திய வானொலியில் நிகழ்ச்சிகள் பலதரப்பட்டவை. இவற்றை 1) தேசிய நிகழ்ச்சிகள் 2) மாநில நிகழ்ச்சிகள் 3) உள்ளூர் நிகழ்ச்சிகள் என்று மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

**தேசிய நிகழ்ச்சிகள்**

தேசிய நிகழ்ச்சிகள் நாடு முழுவதுக்கும் பொதுவானவை. இரண்டாம் உலகப் போரின் போது டெல்லியிலிருந்து ஒலிபரப்பப்பட்ட செய்தித்

குறிப்பு

தொகுப்புகளிலிருந்து தேசிய சேவை“ (National Service) துவங்கியது எனலாம். அதன்பின் செய்திகள் சேவைப் பிரிவு“ செய்திகள், செய்திச் சுருள்கள், ஸ்பாட் லைட், இன்றைய நிகழ்ச்சிகள்“ போன்ற நிகழ்ச்சிகளை ஒலிபரப்பு செய்தது. இசை, நாடகங்கள், பேச்சுக்கள், சிறப்பு நிகழ்ச்சிகள் மாநில மையங்கள் மூலம் ஒலிபரப்பாகின்றன. 1982 லிருந்து வர்த்தக விளம்பரங்கள் அனுமதிக்கப்பட்டன. 1985 ஜனவரி 28-லிருந்து 55 தேர்ந்தெடுக்கப்பட்ட நிலையங்கள் மூலம் வர்த்தக ஒலிபரப்புகள் வழங்கப்பட்டன.

**மாநில நிகழ்ச்சிகள்**

மாநில வானிலை சேவையின் நோக்கம் பிராந்திய பண்பாடு மற்றும் மொழி பேசுவோருக்காக, டெல்லியிலிருந்து ஒலிபரப்பப்படும் தேசிய நிகழ்ச்சிகள் தவிர மாநில சம்மந்தமான நிகழ்ச்சிகள் வழங்கப்படுகின்றன. இவை குறிப்பாக விவசாயிகள், தொழிலாளர்கள், பெண்கள், இளைஞர்கள், குழந்தைகள் சம்மந்தப்பட்டவை. எடுத்துக்காட்டாக சென்னை வானொலி நிலையம் ஒலிபரப்பும் வயலும் வாழ்வும் நிகழ்ச்சி மக்களிடையே செல்வாக்கு பெற்றது. குடும்ப நலம் மற்றும் பொது சுகாதாரம் பற்றிய நிகழ்ச்சிகள் ஒலிபரப்பாகின்றன. இசை, நாடகங்கள், செய்திகள் வழக்கமான நிகழ்ச்சிகளாகும்.

**உள்ளூர் நிகழ்ச்சிகள்**

வெர்கீஸ் கமிட்டி (Verghese Committee, 1978) பரிந்துரையின்படி கல்வி மற்றும் வளர்ச்சித் திட்டங்கள் பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்தும் நோக்கத்தில் உள்ளூர் ஒலிபரப்பு சேவை (Local Service) துவங்கப்பட்டது. ஏழாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் (1982- 87) பண்பலை ஒலிபரப்புத் தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தி 1992க்குள் 73 மாவட்டங்களில் 500-க்கும் மேற்பட்ட உள்ளூர் ஒலிபரப்பு நிலையங்கள் நிறுவப்பட்டன. 1984 அக்டோபர் 30 ஆம் தேதி நாகர்கோவிலில் தான் முதல் சமுதாய பண்பலை ஒலிபரப்புப் பரிசோதனை செய்யப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது. 100 கி.மீ. பரப்புக்கு ஒலிபரப்பாகும் உள்ளூர் நிகழ்ச்சிகளில் பிராந்தியக் கலைஞர்கள் பங்கேற்றனர். கொல்கத்தா, பாட்னா போன்ற நகரங்களில் அரசுசாரா நிறுவனங்கள் (NGOs) உள்@ர்

அலைவரிசையை முதியோர் கல்விக்காகப் பயன்படுத்துகின்றன. சமுதாய வானொலி (Community Radio)யும் அறிமுகப்படுத்தப்பட்டது.

குறிப்பு

**பண்பலை வரிசை ஒலிபரப்பு (FM Broadcasting)**

பண்பலை வரிசை ஒலிபரப்பு முதன் முதலில் 1977ல் சென்னையில் தான் துவக்கப்பட்டது. 1992ல் ஜலந்தரிலும், 1993ல் மும்பையிலும் இந்த ஒலிபரப்பு அறிமுகப்படுத்தப்பட்டது. 1993லிருந்து தனியார் கம்பெனிகளுக்கு நிகழ்ச்சிகளுக்காகவும், விளம்பரங்களுக்காகவும் நேரம் ஒதுக்கப்பட்டது. அதன்பின் 'மக்கள் இசை" (Pop Music)யும், இளைஞர் கலாச்சாரமும் (Youth Culture) பிரபலமாயின. பம்பாய் வானொலி நிலையம் தனியார் தயாரிப்பாளர்களுக்கு நாளொன்றுக்கு 9 மணி நேரம் ஒதுக்கியது. ஆங்கிலம் தெரிந்த நகர மக்களிடையே இந்தப் புது ஒலிபரப்பு மிகுந்த வரவேற்பைப் பெற்றது. எனினும் அகில இந்திய வானொலியின் ஏகபோக ஆதிக்கத்தாலும், அதிக விளம்பரக் கட்டணங்களாலும், தனியார் துறையில் துவங்கப்படுவதற்கான பதிவுக் கட்டணமும் உரிமம் பெறுவதற்கான விதிமுறைகளும், எப்.எம் பெட்டிகள் குறைந்த விலையில் கிடைக்காமையும் பண்பலை வரிசை ஒலிபரப்பு முட்புதரில் விழுந்த விதை போலாயிற்று.

அண்மைக் காலத்தில் இந்த ஒலிபரப்பு தனியார் துறைக்குத் திறந்து விடப்பட்டதால் அகில இந்திய வானொலி எப்.எம் ஒலிபரப்பு பின்னுக்குத் தள்ளப்பட்டு, தனியார் எப்.எம் ஒலிபரப்பு மின்னல் வேகத்தில் வளரலாயிற்று. தமிழ் நாட்டில் நான்கு பண்பலை வரிசை ஒலிபரப்புகள் மிகுந்த செல்வாக்கு பெற்றுள்ளன. சென்னையில் அகில இந்திய வானொலியில் எப்.எம்.ரெயின்போ (FM Rainbow), எப்.எம்.கோல்டு (F.M. Gold) ஆகிய இரு ஒலிபரப்புகளையும் ஓரம் கட்டிவிட்டு, சூரியன் எப்.எம் (Suriyan FM)மும், எப்.எம்.மிர்ச்சி (FM Mirchi)யும் பந்தயக் குதிரைகள் போன்று முன் செல்கின்றன.

**ஒலிபரப்புக் கொள்கை (Broadcasting Policy)**

1948 மார்ச் 15-ம் தேதி இந்திய அரசியலமைப்புச் சட்டமன்ற விவாதத்தில் கலந்து கொண்டு பேசிய பிரதமர் நேரு இந்திய வானொலி இங்கிலாந்தின் பி.பி.சி (BBC)யை முன்மாதிரியாகக் கொண்டு சுயேட்சையாக செயல்பட வேண்டும் என்று வலியுறுத்தினார். ஆனால்

குறிப்பு

அவரது ஆட்சிக் காலத்தில் அந்த ஆசை நிறைவேறவில்லை. 1966 ஏப்ரல் மாதம் வெளியிடப்பட்ட சந்த் கமிட்டி அறிக்கை (Chand Committe Report) அகில இந்திய வானொலி அரசாங்கத்தின் பிடியிலிருந்து விடுபட வேண்டும் என்று பரிந்துரைத்தது. பத்தாண்டுகளுக்குப் பிறகு அகில இந்திய வானொலி தூர்தர்ஷனிலிருந்து பிரிக்கப்பட்டது (1976 ஏப்ரல் 1). ஆனால் அரசாங்கத்தின் கட்டுப்பாட்டிலிருந்து விடுபடவில்லை.

1978 பிப்ரவரி மாதம் வெர்கீஸ் கமிட்டி (Verghese Committee) ஆகாஷ் பாரதி" என்ற பெயரில் தேசிய ஒலிபரப்பு தர்மகர்த்தா (National Broadcasting Trust) சபை அமைக்கப்பட்டு சுதந்திரமாகச் செயல்பட வேண்டும் என்று பரிந்துரைத்தது. ஜனதா அரசாங்கம் அப்பரிந்துரையை ஏற்று ஆகாஷ் பாரதி மசோதா"வைக் கொண்டு வந்தது (1978) ஆனால் சட்டமாகவில்லை. 1995-ல் உச்ச நீதிமன்றம் வானொலி மீது அரசாங்கத்துக்கு இருந்த ஏகபோக உரிமையை நிராகரித்தது. வானொலி பொதுச் சொத்து என்றும், பொதுப் பயன் அரசாங்கத்தின் கட்டுப்பாட்டுக்குள் இருக்கக் கூடாதென்றும், மத்திய அரசாங்கம் சுதந்திர ஒலிபரப்பு ஆணையத்தை (Autonomous Broadcasting Authority) உருவாக்க வேண்டும் என்றும் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த தீர்ப்பை அளித்தது. அதன்படி 1997 நவம்பர் 23-ம் தேதி பிரசார் பாரதி" (Prasar Bharati) அமைக்கப்பட்டது. இந்திய ஒலிபரப்பு குழுமம் (Broadcasting Corporation of India) சுயேட்சையாகச் செயல்படுகிறது.

**மதிப்பீடு**

வானொலி மிகவும் ஆற்றல்மிக்க மக்கள் தகவல் தொடர்பு சாதனமாகும் மக்களை எளிதாக விரைவாக சென்றடையக்கூடிய ஊடகமாகும் தேசிய கொள்கைகளையும், திட்டங்களையும், திட்ட நிறைவேற்றத்தையும் பற்றிய விழிப்புணர்வை உண்டாக்கக் கூடிய கருவியாகும். இசை நிகழ்ச்சிகள், நாடகங்கள், செய்திச் சேவைகள், வர்த்தக சேவை, விவசாயம் மற்றும் குடும்ப நல நிகழ்ச்சிகள், தலைவர்களது உரைகள் மக்களிடையே செல்வாக்கு பெற்றுள்ளன. அகில இந்திய வானொலி நிகழ்ச்சிகள் 95 சதவிகித மக்களைச் சென்றடைவதாக மக்கள் கருத்துக் கணிப்பு கூறுகிறது. வெளிநாட்டு செய்திப் பிரிவும், பிரதியெடுத்தல் மற்றும்

குறிப்பு

நிகழ்ச்சிப் பரிமாற்ற சேவை (Transcription and Programme Exchange Service)யும் ஒலிபரப்பை நவீனமயமாக்கல் நடவடிக்கைகளாகும். எப்எம் நிகழ்ச்சிகள் நல்ல பொழுதுபோக்கு அம்சங்கள். எனினும் பிரசார் பாரதி சுயேட்சை அமைப்பாக அறிவிக்கப்பட்டாலும் சுதந்திரமாக செயல்பட முடியவில்லை. ஆட்சி மாறினாலும் அதன் நிர்வாகத்திலும் நடைமுறையிலும் மாற்றமில்லை. வானொலி தகவல் தொடர்பு தனியார் துறைக்குத் திறந்து விடப்பட்டதால் நல்ல போட்டி ஏற்பட்டுள்ளது. நேரு கூறியதைப் போன்று பிரசார் பாரதி பி.பி.சி. போல் முழு சுதந்திரத்துடன் செயல்பட்டால் இந்நூற்றாண்டின் தலைசிறந்த மக்கள் தகவல் தொடர்பு சாதனமாகப் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

## 12.6.5. தொலைக்காட்சி தகவல் தொடர்பு (Television Communication)

### இந்தியத் தொலைக்காட்சி

திரைப்படத்துக்கு அடுத்தபடி தொலைக்காட்சி தான் மக்களின் அன்றாட வாழ்க்கையைப் பாதிக்கக் கூடிய ஆற்றல்மிக்க பொழுதுபோக்கு மற்றும் தகவல் தொடர்பு ஊடகமாக உள்ளது. இதன் வீச்சும் விளைவும் அளப்பரியது. தொலைக்காட்சி பற்றிய பரிசோதனைகள் 1920களில் அமெரிக்காவிலும், ஐரோப்பாவிலும் துவங்கின. இந்தியாவைப் பொறுத்தவரை வானொலியைப் போன்றே தொலைக்காட்சியும் தனியாரால் துவக்கப்பட்டு அரசாங்க வசமாயிற்று! 1959-ல் பிலிப்ஸ் (இந்தியா) புது டெல்லியில் ஒரு கண்காட்சியில் தொலைக்காட்சிப் பெட்டி வைத்து விளம்பரப்படுத்தியது. அந்த ஆண்டு செப்டம்பர் 15-ம் தேதி டெல்லி தொலைக்காட்சி மையம் (Delhi Television Centre) துவக்கப்பட்டது. 1965 ஆகஸ்ட் மாதத்திலிருந்து பொழுதுபோக்கு மற்றும் தகவல் தொகுப்பு நிகழ்ச்சிகள் அறிமுகப்படுத்தப்பட்டன. 1967 ஜனவரியிலிருந்து விவசாயிகளுக்காக "கிருஷி தர்ஷன்" (Krishi Dharshan) ஒளிபரப்பப்பட்டது. 1972ல் பல நகரங்களில் தொலைக்காட்சி நிலையங்கள் நிறுவப்பட்டன. 1976லிருந்து தூர்தர்ஷன்" (Doordarshan) என்ற பெயரில் செயல்பட்டு வருகிறது. தொலைக்காட்சிக் கொள்கை இந்தியாவில் தொலைக்காட்சி தகவல் தொடர்பு சேவை கல்வி மற்றும் வளர்ச்சிப் பணிகளுக்காக துவக்கப்பட்டது. பின்னர் பொழுதுபோக்கு,

குறிப்பு

விளையாட்டு, வர்த்தக நிகழ்ச்சிகள் என்று விரிவுபடுத்தப்பட்டது. இவற்றை மனதில் கொண்டு தொலைக்காட்சிக் கொள்கை வகுக்கப்பட்டது. இதன் நோக்கங்களாவன: 1) சமுதாய மாற்றத்துக்கான கடத்தி (Catalist)யாகப் பயன்படல் 2) தேசிய ஒருமைப்பாட்டை வலியுறுத்தல் 3)மக்களிடையே அறிவியல் மனப்பான்மையை வளர்த்தல் 4) குடும்ப நலத்துக்குக் குடும்பக் கட்டுப்பாடே சிறந்தது என்ற குறிக்கோளைப் பரப்புதல் 5) வேளாண்மை வளர்ச்சிக்கான விஞ்ஞானத் தகவல்களைக் கொடுத்தல் 6) சுற்றுசூழலைப் பாதுகாப்பதற்கான வழிமுறைகளைக் கூறல் 7) பெண்கள், குழந்தைகள், நலிவடைந்தோர் ஆகியோரது நலன்களுக்கான சமுதாய நலத் திட்டங்கள் பற்றிய தகவல்களைத் தரல் 3)விளையாட்டுப் போட்டிகளில் ஆர்வத்தை ஏற்படுத்தல் 9) பாரம்பரியக் கலைகளுக்குச் சிறப்பிடம் அளித்தல் 10) ஆரோக்கியமான பொழுதுபோக்கு நிகழ்ச்சிகள் வழங்கல். தூர்தர்ஷன் சேவைகள் 1976-ல் “தூர்தர்ஷன்“ துவக்கப்பட்டதிலிருந்து பல சிறப்பான சேவைகளைச் செய்து வருகிறது: 1. மூன்றடுக்கு சேவை. முதலடுக்கு சேவையில் செய்தி, அன்றாட நிகழ்ச்சிகள், அறிவியல், கலை நிகழ்ச்சிகள், நிகழ்ச்சி விளக்கத் திரைப்படங்கள், தொடர்கள், இசை, நாட்டியம், நாடகம், திரைப்படங்கள் ஆகிய பொது நிகழ்ச்சிகளை ஒளிபரப்பல். இரண்டாவது அடுக்கில் மாநில நிகழ்ச்சிகள் இடம் பெறுகின்றன. மூன்றாவது அடுக்கில் தல நிகழ்ச்சிகளுக்கு முன்னுரிமை அளிக்கப்படுகிறது. 2) தகவல் சேவை. இதில் தேச மற்றும் சர்வதேச முக்கியத்துவமுடைய தகவல் தொகுப்புகள் நிபுணர்களின் உரைகள் கலந்துரையாடல் வேளாண்மை , கிராம வளர்ச்சி, உடல் நலம், குடும்ப நலன், சுற்றுச்சூழல், நுகர்வோர் உரிமை பற்றிய தகவல்கள் தரப்படுகின்றன. 3) கல்விச் சேவை. இந்தக் கல்வி சானலில் முறைசார்ந்த மற்றும் முறைசாராக் கல்வி நிகழ்ச்சிகள் ஒளிபரப்பப்படுகின்றன. கல்வி அறிவு குறைந்தோருக்கு முறைசாராக் கல்வி கொடுக்கப்படுகிறது. பல்கலைக் கழக மானியக்குழு வழங்கும் வகுப்பறை நிகழ்ச்சிகள், பள்ளி, கல்லூரி மாணவர்களுக்குப் பயனுடையதாக இருக்கும். இந்திரா காந்தி திறந்த வெளிப் பல்கலைக் கழகம் நடத்தும் கியாந்தர்ஷன்“ (Gyandarshan) நிகழ்ச்சி அஞ்சல் வழிக் கல்வி மாணவர்களுக்கு வழிகாட்ட வல்லது. 4) மெட்ரோ சானல். 1984ல் துவங்கப்பட்ட இந்த சானல் பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளை

குறிப்பு

மையப்படுத்துகிறது. 5) மாநில சானல்கள். செயற்கைக்கோள் வழியாக ஒளிபரப்பாகும் மாநில மொழி சானல்கள் மாநில கலாச்சார தடங்களாகச் செயல்படுகின்றன. 6) 'தூர்தர்ஷன் இந்தியா" இப்பன்னாட்டுச் சானல் தூர்தர்ஷன் நிகழ்ச்சிகளை செயற்கைக்கோள் மூலம் ஆசியா, ஆப்பிரிக்கா, அமெரிக்கா, கனடா போன்ற நாடுகளுக்கு ஒளிபரப்பு செய்யப்படுகிறது. "கேபிள்" தொலைக்காட்சி (Cable TV) கேபிள் தொலைக்காட்சி முறை முதலில் வட அமெரிக்காவில் மலைப் பகுதிகளிலும், தூரப் பகுதிகளிலும் தொலைக்காட்சியைக் கொண்டு செல்வதற்காகப் பயன்படுத்தப்பட்டது. இந்தியாவில் மும்பையில் அடுக்குமாடிக் கட்டிடங்களில் உள்ள வீடுகள், வர்த்தக நிறுவனங்கள் மற்றும் ஓட்டல்களுக்கு முதலில் கேபிள்" இணைப்பு கொடுக்கப்பட்டது. சி டிவி வலையம் (Zee TV Networks), சிட்டி கேபிள் (City Cable), இன் கேபிள் வலையம் (In Cable Net) போன்ற தனியார் நிறுவனங்கள் இம்முயற்சியில் முனைப்பார்வத்துடன் செயல்பட்டன. பின்னர் ரூபர்ட் முர்டோக்கின் ஸ்டார் டிவி (STAR TV) என்ற ஒட்டகம் இந்திய கேபிள் தொலைக் காட்சிக் கூடாரத்திற்குள் நுழைந்தது. ஸ்டார் மூவிஸ், ஸ்டார் ஸ்போர்ட்ஸ், ஸ்டார் நியூஸ் போன்ற கட்டணச் சானல்களை வழங்கியது.

என்டிடிவி 24X7 (NDTV 24X7) பிரபல செய்திச் சானல். தமிழ்நாட்டில் சன் டிவி வலையம் (SUN TV Network) சன் டிவி, சன் நியூஸ், கே டிவி, எஸ்சிவி போன்றவற்றோடு பல மலையாள, கன்னட, தெலுங்கு மொழிச் சானல்களையும் கொடுக்கின்றது. மற்றும் ராஜ் டிவி, ராஜ் டிஜிட்டல் பிளஸ், ஜெயா டிவி, ஸ்டார் விஜய், தமிழன், வின் டிவி போன்ற தமிழ் சானல்களும் உள்ளன. கேரளாவில் ஆசிய நெட்" (Asia Net) பிரபலம். தற்போது கிட்டத்தட்ட 100 இலவச மற்றும் கட்டண கேபிள் சேனல்கள் கிடைக்கின்றன.

தனியார் மயமாக்கல் கொள்கையின் விளைவாக தூர்தர்ஷனின் ஏகபோக ஆதிக்கம் அகற்றப்பட்டு தனியார் துறை கேபிள் தொலைக்காட்சி நிறுவனங்கள் இந்தியாவை உலகமயமாக்கின. சிஎன்என் (Cable News Network - CNN) வளைகுடாப் போரை நேரடியாக ஒளிபரப்பியதன் மூலம் கேபிள் தொலைக்காட்சி உச்சகட்டத்தைத் தொட்டது. பி.பி.சி உலகம், வாய்ஸ் ஆப் அமெரிக்கா, சிஎன்என் போன்ற செய்திச் சானல்கள் உலக

நிகழ்வுகளை நடக்கும் போதே நேரடியாக ஒளிபரப்புகின்றன. ஏஷியா நியூஸ் சானல் ஆசிய நாடுகள் பற்றிய செய்திகளைச் சுவையாகக் கொடுக்கிறது. கார்ட்டூன் வலையம், ஸ்ப்லாஷ், நிக்கலோடியன், அனிமாக்ஸ் போன்ற முழுநேர கார்ட்டூன் சானல்கள் குழந்தைகளிடையே காந்தக் கவர்ச்சியை ஏற்படுத்தியுள்ளது. போகோ (POGO) சானல் நல்ல நகைச்சுவை சானல். "பாஷன் டிவி" இளைஞர்களிடையேயும் முதியோர்களிடையேயும் பெருஞ் செல்வாக்கைப் பெற்றுள்ளது. டிஸ்கவரி சானல், நேஷனல் ஜியோகிராபிக் ஆகியவை தரமான இயற்கைக் காட்சிச் சானல்கள். எம்டிவி, ட்ரேஸ், சி மியூசிக், பிபோர்யூ, எஸ்எஸ்மியூசிக் ஆகியவை இசைச் சானல்கள். தற்போது கேபிள் தொலைக்காட்சிக் காட்டில் நல்ல மழை. விளம்பரங்களுக்கிடையே தான் நிகழ்ச்சிகள் காண்பிக்கப்படுகின்றன. வீட்டுக்கு நேரடி தொலைக்காட்சி Direct - to - Home (DTH) Television தனியார் துறை கேபிள் தொலைக்காட்சி வலையங்களை நடத்துவோர் மற்றும் இடைத்தரகர்களின் ஏகபோகக் கட்டுப்பாட்டிலிருந்து விடுபட 'வீட்டுக்கு நேரடி" தொலைக்காட்சித் தொழில்நுட்பம் கைகொடுக்கிறது. இத்தொழில் நுட்பத்தின் மூலம் ஒவ்வொரு வீட்டிலும் சிறிய சிறப்பு ஆன்டெனா வைத்து அனைத்து சானல்களையும் பார்க்க முடியும். இதற்காகும் செலவு மிகவும் அதிகம் என்பதால் இத்தொலைக்காட்சி மக்களிடையே இன்னும் செல்வாக்கு பெறவில்லை. சென்னையில் செல்வந்தர்கள் வீடுகளில் இத்தொலைக்காட்சி வசதி உள்ளது.

**கேபிள் தொலைக்காட்சியின் விளைவுகள்**

கேபிள் தொலைக்காட்சியின் வரவால் தொலைக்காட்சி வரலாற்றில் பெரிய திருப்பம் ஏற்பட்டுள்ளது. தொலைக்காட்சி அரசாங்கத்தின் பிடியிலிருந்து விடுபட்டு சுதந்திரக் காற்றைச் சுவாசிக்கிறது. நூற்றுக்கணக்கான சானல்கள் கொடுக்கப்படுவதால் நுகர்வோரின் தேர்ந்தெடுக்கும் உரிமையும் இறையான்மையும் உறுதி செய்யப்படுகிறது. பார்ப்போரின் பார்வை விரிவடைகிறது் அறிவு பரவலாகிறது் பல கலாச்சாரங்கள் சங்கமிக்கின்றன் குறிப்பாக பெண்களுக்கு நல்ல பொழுதுபோக்கு வடிகாலாக உள்ளன. விளையாட்டுச் சானல்கள் மக்களை விளையாட்டு உலகத்திற்கு அழைத்துச் செல்கின்றன் இளைஞர்களிடையே விளையாட்டு ஆர்வத்தை ஏற்படுத்துகின்றன.

செய்திச் சானல்கள் உலக நிகழ்ச்சிகளை நேரில் காணும் வாய்ப்பைக் கொடுக்கின்றன. டிஸ்கவரி சேனலும், நேஷனல் ஜியோகிராபிக் சானலும் இயற்கையோடு இணைந்து உறவாடும் உணர்வை ஏற்படுத்துகின்றன. இவையாவும் ஆரோக்கியமான விளைவுகளாகும்.

கேபிள் தொலைக்காட்சியில் பல எதிர்மறை விளைவுகளும் ஏற்படுகின்றன. பல வெளிநாட்டுத் தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் இந்தியப் பண்பாட்டுக்குப் பொருத்தமற்றவையாக உள்ளன. பாலுணர்வு மற்றும் வன்முறை நிகழ்ச்சிகள், தொலைக் காட்சிகளில் அதிகமாக இடம் பெறுவதால் இளைஞர்கள் கெடுவதற்கு வாய்ப்பு அதிகம். குழந்தைகள் கார்ட்டூன் சானல்களில் மனதைப் பறிகொடுத்து படிப்பின் மீது அக்கறை குறையும் ஆபத்து உள்ளது. வெளிநாட்டுச் சானல்களைப் பின்பற்றும் இந்தியச் சானல்களும் எதிர்மறை விளைவுகளை விரிவுபடுத்துகின்றன. தொலைக்காட்சித் தொடர் நிகழ்ச்சிகள் மூலம் வழக்கொழிந்து போன மூட நம்பிக்கைகளும், போலிப் பழக்க வழக்கங்களும், குடும்ப சண்டைச் சச்சரவுகளும் புத்துயிர் பெற்றுள்ளன! விளம்பர நிகழ்ச்சிகள் சானல்களின் வெற்றியைத் தீர்மானிப்பதாக உள்ளன் நிகழ்ச்சிகள் வர்த்தக மயமாக்கப்படுகின்றன. கேபிள் தொலைக்காட்சியின் வரவால் திரைப்படத்துறையும், பத்திரிக்கைத் துறையும் பாதிக்கப்பட்டுள்ளன. முதியவர்கள் பார்க்கக் கூடிய / பார்க்கக் கூடாத காட்சிகளை குழந்தைகளும் இளைஞர்களும் பார்க்க வேண்டிய கட்டாயம் உள்ளது. மதுபானம், சிகரெட், பான்மசாலா பற்றிய விளம்பரங்கள் தூர்தர்ஷனில் தடை செய்யப்பட்டிருந்தாலும், கேபிள் தொலைக்காட்சியில் தடை செய்யப்படவில்லை. கேபிள் தொலைக்காட்சி நெறிப்படுத்தப்படாமையால் உடன்பாட்டு விளைவுகளை விட எதிர்மறை விளைவுகளே அதிகம்.

**திரைப்படங்கள் மூலம் தகவல் தொடர்பு**

Audio - Visual Media in Communication

**திரைப்பட வளர்ச்சி வரலாறு**

இந்தியாவில் திரைப்படங்கள் தோன்றுவதற்கு முன்பு நாடகங்கள் மக்களிடையே செல்வாக்கு பெற்றிருந்தன. தமிழ் நாடு, வங்காள, பார்சி நாடகக் கம்பெனிகள் பிரசித்தம். 1896 ஜூலை 7-ம் தேதி லூமியேர் சகோதரர்கள் (Lumiere Brothers) பம்பாயில் திரைப்படக் கண்காட்சி“

குறிப்பு

நடத்தினர். இதில் ரயில் வருவது, தொழிலாளர்கள் தொழிற் சாலைகளிலிருந்து வேலை முடிந்து திரும்புவது, கடற்கரைக் குளியல் போன்ற காட்சிகள் காட்டப்பட்டன. இது 'நாட்டின் அதிசயம்" என்று வியந்து கூறப்பட்டது. 1896க்கும் 1930க்கும் இடைப்பட்டக் காலத்தில் ஆயிரம் "ஊமைப்படங்கள்" (Silent Movies) தயாரிக்கப்பட்டு திரையிடப்பட்டன.

1931-ல் 'ஆர்தேஷிர் இரானி" (Ardeshir Irani) இயக்கிய ஆலாம் ஆரா (Alam Ara) என்ற திரைப்படம் வெளியிடப்பட்டதிலிருந்து பேசும் திரைப்பட சகாப்தம் துவங்கியது எனலாம். அதைத் தொடர்ந்து சென்னை, கல்கத்தா, பம்பாய் ஆகிய நகரங்களில் சினிமா ஸ்டுடியோக்கள் கட்டப்பட்டன. 1970களில் புது அலை" (New Wave) திரைப்படங்கள் தோன்றின. 1990களில் இரண்டாவது புது அலை திரைப்படங்கள்' அதிகரித்தன. யதார்த்தமான, வியாபார நோக்கமற்ற, பண்பாட்டுப் படங்கள் புது அலைப் படங்கள்" என்று கூறப்படுகின்றது. திரைப்படங்களின் தாக்கம் நாடகங்களைப் போன்று திரைப்படங்கள் கலை வடிவங்களாகக் கருதப்படுவதில்லை. திரைப்படங்கள் மலிவான, தரக்குறைவான மக்கள் பொழுதுபோக்கு சாதனமாகவே கருதப்பட்டது கருதப்படுகிறது. அதனால் தான் அரசாங்கம் கேளிக்கை வரியை அதிகப்படுத்தி, சென்சார் போர்டுகள் மூலம் தணிக்கை செய்கிறது. திரைப்படங்களைக் கலை வடிவமாகக் கருதி பல்கலைக் கழகங்களில் ஆராய்ச்சி மேற்கொள்ளப்படுவதில்லை . 1948-ல் பன்னா ஷா (Panna Shah) என்பவர் பம்பாய் இளைஞர்கள் மீது இந்தி திரைப்படங்களின் தாக்கம் என்பது பற்றி ஆய்வு செய்தார். புதுடெல்லியில் உள்ள மக்கள் தொடர்பு நிலையம் (Institute of Mass Communication) திரைப்படங்களின் சமுதாயத் தாக்கம் (Sociological Impact) பற்றி ஆராய்ந்தது.

ஏராளமான பொருட் செலவில் திரைப்படங்கள் தயாரிக்கப்படுகின்றன. தொலைக்காட்சியில் திரைப்படங்கள் காட்டப்படுவதாலும், திருட்டு விசிடி (VCD)க்கள் தாராளமாகக் கிடைப்பதாலும் திரைப்படங்களின் செல்வாக்கு குறைந்து வருகிறது. எனவே வருவாய் இழப்பை சரிக்கட்ட வன்முறை, பாலியல், பாடல், படுக்கையறை மற்றும் கற்பழிப்புக் காட்சிகளை

அதிகப்படுத்தி, தணிக்கைக் குழுவின் அனுமதியோடு திரையிடப்படுகின்றன. இன்றைக்கும் பெண்கள் போதைப் பொருள்களாகவும், கண்ணீர் சிந்தும் கருவி"களாகவும், குடும்பத்தில் குழப்பம் விளைவிக்கும் வில்லி"களாகவும் காட்டப்படுகின்றனரேயன்றி, நன்கு படித்த அறிவுத் திறன்மிக்க, சுதந்திரமும் தன்னம்பிக்கையுமுடைய கடின உழைப்பாளிகளாகவும் தொழில் முனைவோர்களாகவும், அதிகாரிகளாகவும், சமூக சேவகர்களாகவும் சித்தரிக்கப்படுவதில்லை.

பன்முகப் பண்பாட்டுப் பரிமாணங்களை பிரதிபலிக்கக் கூடிய திரைப்படங்கள் மிகக் குறைவு. புது அலை"ப் படங்கள் வர்த்தக ரீதியாக வெற்றி பெறாமையால் அவற்றின் வரவு குறைவு. பெண்கள் அமைப்புகள் ஆபாசப் படங்கள் / காட்சிகளுக்கெதிராகப் போர்க் கொடி தூக்கியிருப்பது திரைப்படங்களின் சரிவைப் பறைசாற்றுவதாக உள்ளது. திரைப்படங்களை விட திரைப்பட சுவரொட்டிகள் ஆபாசமாக உள்ளன. எனவே அபரிமித ஆற்றல் மிக்க மக்களின் மாபெரும் தகவல் தொடர்வு ஊடகமான திரைப்படம் தன் தரத்தை உயர்த்திக் கொண்டு சிறந்த கலை வடிவமாக ஊடகமாக உருமாற்றம் அடைய வேண்டியது இருபத்தியோராம் நூற்றாண்டின் சவாலாகும்.

### மத்திய மத்திய தணிக்கைக் குழு, 1952 (Central Board of Film Certification)

தணிக்கைக் குழு 1952ல் நிறைவேற்றப்பட்ட திரைப்படச் சட்ட (Cinematography Act, 1952)ப்படி அமைக்கப்பட்டதாகும். இதன் தலைமையகம் மும்பையில் உள்ளது. இதன் 9 பிராந்தியக் கிளைகள் பெங்களூர், மும்பை, கொல்கத்தா, ஐதராபாத், சென்னை, திருவனந்தபுரம், புதுடெல்லி, கட்டாக், கௌகாத்தி ஆகிய நகரங்களில் உள்ளன. இந்தியாவில் 14 மொழிகளில் வெளியிடப்படும் திரைப்படங்கள் அனைத்தும் பிராந்தியக் கிளைகளால் பரிசீலிக்கப்பட்டு, தணிக்கை செய்யப்பட்டு, சான்றிதழ் வழங்கப்படுகிறது. பிராந்தியக் கிளைகளுக்கு ஆலோசனை வழங்க பல்துறை வித்தகர்கள் கொண்ட ஆலோசனைக் குழுக்கள் உள்ளன. பிராந்திய கிளைத் தணிக்கைக் குழுக்களின் முடிவுகளை எதிர்த்து திரைப்படச் சான்றிதழ் மேல்முறையீட்டு மன்ற (Film Certification Appellate Tribunal)த்திடம் மேல்முறையீடு

செய்யலாம். தணிக்கை முறை தேவை தான் என்று ஒரு சாராரும், தேவையில்லை என்று மற்றொரு சாராரும் வாதிட்டு வருகின்றனர். வாகனத்துக்கு பிரேக்“ (Brake) போன்று திரைப்படங்களுக்கு தணிக்கை என்பது ஏற்றுக் கொள்ளக் கூடியதே.

## 12.7. தகவல் தொழில் நுட்பம் (Information Technoiogy)

கணினி (Computer)யின் வருகையால் தகவல் தொடர்பில் மாபெரும் மாற்றம் ஏற்பட்டது. இந்தியாவில் 1960, 1970களில் கணினிகள் இறக்குமதி செய்யப்பட்டன. இவையாவும் ஐபிஎம் (International Business Machiness - IBM) கணினிகளாகும். இவற்றைப் பெரும்பாலும் அரசாங்கத் துறைகளும், பெரிய வர்த்தக நிறுவனங்களும் பயன்படுத்தின. 1978-ல் இந்தியாவிலிருந்த 800 கணினிகளை கணினி பராமரிப்பு குழுமம் (Computer Maintenances Corporation) என்ற பொதுத்துறை நிறுவனம் பராமரித்து வந்தது. பின்னர் சில இந்தியக் கம்பெனிகளே (ECIL, ICIM, Bull - PSI) கணினிகளைத் தயாரிக்கலாயின. 1980, 90களில் இந்தியப் பொருளாதாரம் தாராளமயமாக்கப்பட்ட பின் கரினித் தொழில் வேகமாக வளர்ந்தது. பல்கலைக் கழகங்கள் கணினி அறிவியல் (Computer Science) பட்ட, மேல்பட்டப் படிப்புகளைத் துவக்கின. கணினி பயிற்சி நிலையங்கள் புற்றீசல்கள் போல் தோன்றின. கணினி அலை அடிக்கலாயிற்று! இந்தியாவில் தகவல் தொழில் நுட்ப சகாப்தம் துவங்கியது.

### 12.7.1. புதிய தகவல் தொழில்நுட்பக் கொள்கை

இந்தியாவை 21-ம் நூற்றாண்டுக்குத் தயார் செய்ய வேண்டும் என்ற தொலைநோக்குடன் பிரதமர் ராஜீவ் காந்தியின் ஆட்சிக் காலத்தில் ‘தகவல் புரட்சி“ (Information Revolution)க்கு அடித்தளம் அமைக்கப்பட்டது. அப்போது அறிமுகப் படுத்தப்பட்ட புதிய கணினி கொள்கைப்படி 1) கணினித் துறையில் வெளிநாட்டு முதலீட்டாளர்கள் அனுமதிக்கப்பட்டார்கள் 2) தொலைப்பேசித் தொலைத் தொடர்பும் அதைத் தொடர்ந்து பிற துறைகளும் தாராளமயமாக்கப்பட்டன் 3)

மின்னணுப் பொருள்கள், மென்பொருள், கணினிகள் மீது விதிக்கப்பட்ட இறக்குமதி மற்றும் தீர்வை வரிகள் குறைக்கப்பட்டன் 4)தகவல் தொழில் நுட்பத் தொழில்கள் ஊக்குவிக்கப்பட்டன. பிரதமரின் ஆலோசகர் டாக்டர் சாம் பிட்ரோடா (Dr.Sam Pitroda)வின் உதவியோடு தொலை நிலை இயக்க மேம்பாட்டு மையம் (Centre for Development of Telematics) துவக்கப்பட்டது. பின்னர் பிரதமர் நரசிம்மராவ் ஆட்சிக் காலத்தில் மேற்கொள்ளப்பட்ட தேசிய தொலைபேசி தகவல் தொடர்பு கொள்கை (National Telecommunications Policy, 1994) தகவல் தொழில்நுட்பம் விரிவடையக் காரணமாக இருந்தது.

1997 பிப்ரவரி மாதம் அமைக்கப்பட்ட இந்திய தொலைபேசித் தொடர்பு கட்டுப்பாட்டு ஆணையம் (Telecom Regulatory Authority of India) 1) நாட்டின் தொலைபேசித் தொடர்பு சேவைகளைக் கண்காணித்து நெறிப்படுத்தவும் 2) இச் சேவைகளைச் செய்வோரிடையே ஏற்படும் தகராறுகளைத் தீர்த்து வைக்கவும் 3) தொலைபேசித் தொடர்புத் துறைக்கும் (Department of Tele-Communication - DOT) தனியார் துறைக்குமிடையே உருவாகும் சிக்கல்களுக்குத் தீர்வு காண்பதற்கும் அதிகாரம் பெற்றது.

பிரதமர் வாஜ்பாய் ஆட்சிக் காலத் துவக்கத்தில் பேராசிரியர் எம்.ஜி.கே.மேனன் தலைமையில் தகவல் தொழில் நுட்பம் செயல்படை (Task Force on Information Technology, 1998) அமைக்கப்பட்டது. இக்குழு 108 புரட்சிகரமான பரிந்துரைகளைச் செய்தது. இந்தியா தகவல் தொழில்நுட்பப் புரட்சியோடு 21-ம் நூற்றாண்டுக்குள் நுழைந்தது. தகவல் புரட்சி (Information Revolution) தொழில் புரட்சியை (Industrial Revolution)த் தவறவிட்ட இந்தியா தகவல் புரட்சியை முன்னின்று மேற்கொண்டது. தொழிற் புரட்சி உலக சந்தைக்குப் பெரிய அளவில் பொருள்களை உற்பத்தி செய்து அனுப்பியது. மாறாக தகவல் புரட்சி மென்பொருளை (Software)த் தயாரித்து அனுப்புகிறது. இதில் இந்தியா முதலிடத்தில் உள்ளது என்பது பெருமைக்குரியது. இந்திய மென்பொருள் தொழில்நுட்ப விஞ்ஞானிகளுக்கு உலகெங்கும் நல்ல வரவேற்பு உள்ளது. அதேபோன்று அமெரிக்கா போன்ற மேலை நாடுகள் மென்பொருள் தேவைகளுக்கு இந்தியாவை நாடிவரும் நிலை

ஏற்பட்டுள்ளது. வங்கி, ஆயுள் காப்பீடு, பயணம், சுற்றுலா, விருந்தோம்பல் போன்ற துறைகளில் பல்லாயிரக் கணக்கான தகவல் தொழில்நுட்பத் திறன் பெற்றோர் வேலை செய்கின்றனர். “வெளிவேலை மையங்களும்“ (Outsourcing Centres), “கூப்பிடு மையங்களும்“ (Call Centres) இந்தியாவில் அதிகரித்த வண்ண ம் உள்ளன. அறிவு உழைப்பாளிக (Knowledge Workers)ளின் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது. பொருள் பொருளாதாரத்துக்குப் பதில்“ ‘தகவல் பொருளாதாரம்“ (Information Economics) தலைதூக்கி உள்ளது. இதைத்தான் டேனியல் பெல் (Daniel Bell) ‘தொழில்மய சமுதாயத்துக்கு அடுத்த சமுதாயம்“ (Post - Industrial Society) என்றும், எதிர்கால அதிர்ச்சி “ (Future Shock) என்ற நூலின் ஆசிரியர் ஆல்வின் டோ.ஃப்ளர் (Alvin Toffler), தகவல் சமுதாயம் (Information society) என்றும், மேலாண்மை குரு (Management Guru) என்று அழைக்கப்படும் பீட்டர் டிரக்கர் (Peter F.Drucker) அறிவார்ந்த சமுதாயம்“ (Knowledge society) என்றும் வர்ணித்துள்ளனர். இதுதான் தகவல் செய்த புரட்சி. தகவல் தொழில்நுட்பத்தின் வெளிப்பாடுகள் Manifestation of information Technology தகவல் தொழில்நுட்பம் பல உருவங்களில் வெளிப்படுகிறது: 1) தகவல் மிகுவேக நெடுஞ்சாலை (Information Super High Way). இத்தொழில் நுட்பம் மின்னணு வலையத்தின் (Electronic Network) மூலம் வெளிப்படுகிறது. இதன் முலம் உலகிலுள்ள எந்த நூலகம், வர்த்தக நிறுவனம், அரசாங்கத் துறை மற்றும் தனி நபரோடு தகவல் தொடர்பு கொள்ளலாம் 2) இணைய தளம் (Internet). இதன் மூலம் கணினியில் உரிய மென்பொருளைப் பயன்படுத்தி உலகில் உள்ள எந்த கணினியோடும் இணைந்து தகவல் தொடர்பு கொள்ளலாம், தொலைபேசி மூலம் தகவல் பரிமாற்றம் செய்யலாம், அடுத்த முனையில் உள்ளவரைப் பார்க்கவும் முடியும்! 3) பன்முக ஊடகம் (Multi media) ஒரு கணினியில் மதிப்புக் கூட்டுவதன் மூலம் தகவல் பரிமாற்றம், ஒலி வெளிப்பாடு, வரைகலை (Graphics), உயிர்த்துடிப்புள்ள வரைபடங்கள் (Animation), காட்சிப் படங்கள் (Video Pictures) ஆகிய ஐந்து விதத் தகவல்களையும் பெறலாம் 4) இயக்கத் தொலைபேசி (Cellular Phone). பேஜர் (Pager) ஒருவழித் தகவல் தொடர்புக்கு மட்டும் பயன்பட்டதால்,

இருவழித் தகவல் தொடர்புக்காக இயக்கத் தொலைபேசி அறிமுகப்படுத்தப்பட்டது. இதன் மூலம் இயங்கிக் கொண்டே மற்றொருவருடன் தகவல் தொடர்பு கொள்ள முடியும் 5)மின்னஞ்சல் (E.mail). தொலைபேசி இணைப்புள்ள கணினி மூலம் மற்றொரு கணினியுடன் தகவல் தபால் அனுப்புவதே மின்னஞ்சல் ஆகும் 6) மின் வர்த்தகம், மின் வங்கி, மின் அரசாங்கம் (E-Commerce, E.Banking, E.Governance) தொலைபேசித் தகவல் தொடர்பு மூலம் இருந்த இடத்திலிருந்தே வர்த்தகம் செய்யலாம் வங்கிக் கணக்கு வைத்துக் கொள்ளலாம் அரசாங்கத் துறையுடன் தொடர்பு கொள்ளலாம்.

**மதிப்பீடு**

தகவல் தொழில் நுட்பத்தால் செயல் திறமையும், செயல் வேகமும் அதிகரித்துள்ளது. வேலையின் தன்மை மாறியுள்ளது. அறிவு உழைப்பாளிகளுக்கு, குறிப்பாகப் பெண்களுக்கு, வேலை வாய்ப்பு பெருகியுள்ளது. தகவல் தொழில் நுட்பத் தொழிலில் சுற்றுச் சூழல் மாசுபடுவதில்லை. பணியாளர்களுக்கு அதிக ஊதியம் கிடைக்கிறது. தகவல் பொருளாக (Commodity)வும் பொது வளமாக (Public Resource)வும் பயன்படுகிறது. இந்தியப் பொருளாதாரத்தின் அதிவேக வளர்ச்சிக்கு உதவுகிறது. வித்யா வாஹினி" மற்றும் "கியான் வாஹினி" மூலம் பள்ளிகள் மற்றும் மேற்படிப்பு நிலையங்களுக்கு இணையதள தொடர்பு வழங்கப்பட்டுள்ளது. தகவல் தொழில் நுட்பச் சட்டம் (2000) மின் வர்த்தகத்தை ஊக்குவிப்பதோடு மின் குற்றங்களைத் தடுக்க வழி செய்கிறது. பல மாநிலங்களில் தொழில்நுட்பப் பூங்காக்கள் அமைக்கப்பட்டுள்ளன. எனினும் தகவல் தொழில் நுட்ப வளர்ச்சி நகரங்களோடு நின்று விடுகின்றது. இந்த வசதியைக் குக்கிராமங்களுக்கும் கொண்டு செல்ல வேண்டியது இந்நூற்றாண்டின் சவாலாகும்.

**பத்திரிக்கை தகவல் தொடர்பு (Press Communication)**

**இந்தியப் பத்திரிக்கையின் வரலாறு**

இந்திய பத்திரிக்கை ஒரு பாரம்பரியமிக்க வரலாற்று நிறுவனம். பிரிட்டிஷ் காலனி ஆட்சியின் போதே வேர்விட்டு வளரத் துவங்கியது. 1868ல் அமிர்த பஜார் பத்திரிக்கை (Amrita Bazaar Patrika)

ஆரம்பிக்கப்பட்டதிலிருந்து இந்தியப் பத்திரிக்கையின் வரலாறு துவங்கியது எனலாம். இந்திய விடுதலைப் போராட்டத் தலைவர்கள் தேச விடுதலையோடு பத்திரிக்கைச் சுதந்திரத்துக்காகவும் போராடினர். திலகரும் காந்தியும் தேசத் துரோகக் குற்றம் சாட்டப்பட்டு, விசாரிக்கப்பட்டு, தண்டிக்கப்பட்டு சிறையிலடைக்கப்பட்டனர். இவர்கள் பத்திரிக்கை சுதந்திரம், பேச்சுரிமை, அரசாங்க அடக்குமுறை எதிர்ப்பு, சமூக சமத்துவ நீதி ஆகிய நான்கு சுதந்திரங்களுக்காகவும் போராடினர். போராட்ட கால பத்திரிக்கையாளர்கள் முதலில் இந்தியர்களாகவும் பிறகு பத்திரிக்கையாளர்களாகவும் இருந்து அன்னிய ஆட்சியை எதிர்கொண்டனர். இத்தகைய வரலாற்று அனுபவத்தோடு பத்திரிக்கை உலகு சுதந்திர இந்தியாவுக்குள் அடியெடுத்து வைத்தது.

1776-ல் வில்லியம் போல்ட்ஸ் (William Bolts) என்பவர் முதலில் செய்தித்தாளை வெளியிட்டார். 1780ல் ஜேம்ஸ் அகஸ்டஸ் ஹிக்கி (James Augustus Hicky) பெங்கால் கெசட் (Bengal Gazette)டை ‘மன சுதந்திர“த்துக்காகவும், பத்திரிக்கை சுதந்திரத்துக்காகவும் துவக்கினார். கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்ட அவர் சிறையிலிருந்து எழுதியதால் அப்பத்திரிக்கையும் நிறுத்தப்பட்டது (1781)! 1850 வரை பல பிராந்திய மொழிப் பத்திரிக்கைகள் வெளியிடப்பட்டன. 1857-ல் பேச்சடைப்புச் சட்டம் (Gagging Act, 1857) கொண்டு வரப்பட்டது. பத்திரிக்கைச் சுதந்திரம் (Freedom of the Press) இந்திய அரசியலமைப்புச் சட்டம் பத்திரிக்கை சுதந்திரத்துக்குப் பாதுகாப்பு அளிக்கிறது (சரத்து 19). அரசாங்கத்தின் குறுக்கீடின்றி பத்திரிக்கையை அச்சிடவும், வெளியிடவும், விமரிசிக்கவும், குறை கூறவும் சுதந்திரம் வழங்கப்பட்டது. எனினும் இச்சுதந்திரம் தேசப் பாதுகாப்புக்கும், பொது ஒழுங்குக்கும், வெளிநாட்டுத் தொடர்புக்கும், பொது அமைதிக்கும் ஊறு விளைவிக்காமல் இருக்க வேண்டும் என்ற கட்டுப்பாடுகளும் விதிக்கப்பட்டன (சரத்து 19(2)). அதாவது பத்திரிக்கை சுதந்திரமாகச் செயல்பட்டால் மட்டும் போதாது பொறுப்புடனும் நடந்து கொள்ள வேண்டும் என்பது அடிக்கோடிட்டுக் காட்டப்பட்டது. இந்தியப் பத்திரிக்கை வளர்ச்சி வரலாற்றில் ஏற்ற இறக்கங்கள் இருப்பினும் பொதுவாக பத்திரிக்கை சுதந்திர பாரம்பரியம் பராமரிக்கப்பட்டு வருவதாகக் கூறுகிறார் என்.ராம்.

**பத்திரிக்கையின் பங்கு (Role of the Press)**

இந்தியா சுதந்திரம் அடைவதற்கு முன், பத்திரிக்கையின் பங்கு தெளிவாக இருந்தது. அதாவது அடக்குமுறை அரசாங்கத்துக்கு எதிராகப் போராடுவது சாதி, சமய, வகுப்பு வேறுபாடின்றி சமுதாய நீதிக்காக வாதாடுவது. இந்தியா விடுதலை அடைந்தபின் இந்த நிலையில் குழப்பம் ஏற்பட்டது! முதலில் இந்தியராக இருந்து பிறகு பத்திரிக்கையாளராக இருப்பதா? அல்லது முதலில் பத்திரிக்கையாளராக இருந்து பிறகு இந்தியராக இருப்பதா? சமகால இந்தியப் பத்திரிக்கை உலகு இருதலைக் கொள்ளி எறும்பு போல உள்ளது.

பத்திரிக்கை அரசாங்கத்துக்கு ஆதரவாகவும் இருக்க வேண்டாம் எதிராகவும் இருக்க வேண்டாம் ஆனால் காவல் நாய்“ (Watch - Dog) போன்று விழிப்போடு இருக்க வேண்டும். முதல் பத்திரிக்கை ஆணையம் (First Press Commission, 1952) குறிப்பிட்டதைப் போன்று பத்திரிக்கை சமூக, பொருளாதார, அரசியல் ஒழுங்கையும், கட்டுப்பாட்டையும் நிலைநாட்ட உதவ வேண்டும். பத்திரிக்கை மக்களின் குரலாக ஒலிக்க வேண்டும். குறிப்பாக நலிவடைந்தோருக்கு நீதி கிடைக்க வாதாட வேண்டும். அரசியலுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்காமல் வறுமை, வேலையின்மை, சத்துணவு, வருமான உயர்வு போன்ற பொருளாதாரப் பிரச்னைகளுக்கு முன்னுரிமை கொடுக்க வேண்டும். செய்திகளை நடுநிலை தவறாது வெளியிட்டு பத்திரிக்கையில் நம்பகத் தன்மையை உறுதி செய்ய வேண்டும். யாவற்றுக்கும் மேலாக மூத்த பத்திரிக்கைப் பதிப்பாளர் எஸ். நிகல் சிங் (S.Nihal Singh) குறிப்பிட்டுள்ளதைப் போன்று ”பத்திரிக்கையாளர்கள் பத்திரிக்கை சுதந்திரத்தின் பாதுகாவலர்களாகத் திகழ வேண்டும்”.

**இந்தியப் பத்திரிக்கை பொறுப்பகம் (Press Trust of India - PTI)**

இந்தியப் பத்திரிக்கைப் பொறுப்பகம் 1947 ஆகஸ்டு 27-ம் தேதி துவக்கப்பட்டது. இந்தியப் பத்திரிக்கைகளுக்குப் பொதுவான இந்த அமைப்பு இந்தியாவின் மிகப் பெரிய செய்தி நிறுவனமாகும். இது ஒரு இலாப நோக்கமற்ற கூட்டுறவு அமைப்பாகும். இதன் பணிகள் வருமாறு: 1) உறுப்பினர் பத்திரிக்கைகளுக்கு பாரபட்சமற்ற திறமையான செய்திகளை விரைந்து கொடுத்தல் 2) செய்திச் சேவைகளை

குறிப்பு

ஆங்கிலத்திலும், இந்தியிலும் தரல் 3)செய்தி சேவைகளின்றி இணைய தளம் மூலம் நிழற்படங்கள் அனுப்பல், வரைகலை (Graphics), அறிவியல் சேவை, பொருளாதார சேவை, தகவல் இந்தியா, பங்கு பரிவர்த்தனை போன்ற சேவைகளையும் செய்தல் 4) வெளிநாட்டு பத்திரிக்கை நிறுவனங்களுடன் தொடர்பு கொண்டு, செய்திகளை சேகரித்து, இந்தியப் பத்திரிக்கைகளுக்கு வழங்கல் 5) ஆசிய பத்திரிக்கை நிறுவனங்களுடன் தொடர்பு கொண்டு ஆசிய நாடுகளின் பொருளாதார வளர்ச்சி மற்றும் வர்த்தக வாய்ப்புகள் பற்றிய செய்திகளை இணைய தளத்தின் மூலம் தருதல் 6) 12 பத்திரிக்கை நிறுவனங்களைக் கொண்ட “ஆசிய நெட்“ (Asianet) என்ற அமைப்பில் பங்கேற்று, ஆசிய - பசிபிக் நாடுகளுடன் வர்த்தக மற்றும் அரசாங்கத்தின் அதிகாரப்பூர்வ செய்தித் தொகுப்புகளை பரஸ்பரம் பரிமாறிக் கொள்கிறது. இந்தியப் பத்திரிக்கைக் கழகம் (Press Council of India)

பத்திரிக்கைக் கழகம் முதன் முதலில் சுவீடனில் (Sweden) ஆரம்பிக்கப்பட்டது. அதைத் தொடர்ந்து 40 நாடுகளில் இக்கழகம் துவக்கப்பட்டது. இந்தியாவில் 1965-ம் ஆண்டில் இந்திய பத்திரிக்கைக் கழகச் சட்டம் (Indian Press Council Act, 1965), 1966 நவம்பரிலிருந்து 1976 ஜனவரி முதல் தேதி வரை செயல்பட்டு வந்த இந்திய பத்திரிக்கைக் கழகம் “நெருக்கடி ஆட்சி“ (Emergency Regime)யின் போது கலைக்கப்பட்டது. கலைக்கப்பட்ட இக்கழகத்தை 1979 ஏப்ரல் மாதம் ஜனதா அரசாங்கம் புதுப்பித்தது. இப்புதுப்பிக்கப்பட்ட இந்தியப் பத்திரிக்கைக் கழகமே தற்போது செயல்பட்டு வருகிறது.

இந்தியப் பத்திரிக்கைக் கழகம் 1978ல் இயற்றப்பட்ட இந்திய பத்திரிக்கைச் சட்டப்படி அமைக்கப்பட்ட ‘சட்ட அமைப்பு“ (Statutory Body) ஆகும். 28 உறுப்பினர்களைக் கொண்ட இந்த நிறுவனம் ஓய்வு பெற்ற உச்ச நீதிமன்ற நீதிபதியின் தலைமையில் செயல்படுகிறது. இதன் பணிகளாவன: 1) பத்திரிக்கைப் பொறுப்பிலிருந்து பிறழும் பத்திரிக்கையாளர் அல்லது பதிப்பாளரை எச்சரித்தல், கடிந்து கொள்ளல், கண்டித்தல் 2) பத்திரிக்கை தகராறு சம்மந்தமான சாட்சிகளை விசாரித்தல், ஆவணங்களை ஆய்வு செய்தல், சான்றுகளைப் பெறல் 3) தீர்வுக்காக பத்திரிக்கை குற்றம் (Libel), ஆபாசம் (Obscenity),

நிந்தனை (Contempt) பற்றிய வழக்குகளை விசாரணைக்கு ஏற்றுக் கொள்ளல் 4)பத்திரிக்கைகளும், பத்திரிக்கை நிறுவனங்களும் பத்திரிக்கை சுதந்திரத்தைப் பராமரித்துப் பாதுகாக்க உதவல் 5) பத்திரிக்கைத் தொழிலின் தரத்தைக் காக்கவும், குடிமக்களிடையே உரிமைகள், கடமைகள் பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்தவும் உறுதுணையாக இருத்தல் 6) பத்திரிக்கை ஒழுக்க (துழரஅயடளைவளை நுவாளைஉள)த்துக்கான வழிகாட்டு விதிகளை வகுத்தல். 1992ல் இக்கழகம் வெளியிட்ட வழிகாட்டு விதிகள்.

**மதிப்பீடு**

பத்திரிக்கையும் பிரதிநிதித்துவ ஜனநாயகமும் பிரிக்க முடியாதவை் ஒட்டிப் பிறந்த சயாமிய இரட்டையர் (Siamese Twins) போன்றவை. அதனால் தான் பத்திரிக்கையை அரசாங்கத்தின் சட்டத்துறை (Legislative), ஆட்சித் துறை (Executive), நீதித்துறை (Judiciary) ஆகியவற்றுக்கு அடுத்த நான்காவது துறை (Fourth Estate)யாகக் கருதப்படுகிறது. பத்திரிக்கைகள் தகவல்களை மட்டும் தராமல் நாட்டின் பிரச்னைகள் தீர்வதற்கான தக்க வழிகளை ஆராய்ந்து கூற வேண்டும் அரசுக்கு ஆலோசனைகளைக் கூற வேண்டியது அவசியம். ஏனெனில் கடிந்து அறிவுரை கூறவல்ல பத்திரிக்கையின் துணை கொண்டு செயல்படாத அரசு கெடுக்கும் பகைவர் இன்றியே கெடும். “இடிப்பாறை இல்லாத ஏமரா மன்னன் கெடுப்பாறி லானும் கெடும்” (குறள் 448).

நடைமுறையில் பத்திரிக்கைகள் அரசாங்கத்தை விமரிசிப்பதால் பத்திரிக்கை உலகுக்கும் அரசாங்கத்துக்குமிடையே பகைமை ஏற்படுவதுண்டு. நெருக்கடி ஆட்சி (1975 - 77)யில் தணிக்கை முறையும் தண்டனையும் கொடுமையானதாக இருந்தன. ராஜீவ் காந்தி ஆட்சிக் காலத்தில் பத்திரிக்கையாளர்களை அச்சுறுத்துவதற்காக அவமதிப்பு எதிர்ப்பு மசோதா (Anti Defamation Bill, 1985) அறிமுகப்படுத்தப்பட்டது. தமிழ் நாட்டில் ஜெயலலிதா அரசாங்கம் சட்டமன்ற உரிமை மீறல் குற்றம் சாட்டி இந்து, முரசொலி ஆகிய பத்திரிக்கை ஆசிரியர்கள் மற்றும் பதிப்பாளர்கள் மீது வழக்கு பதிவு செய்து கைது செய்ய உத்தரவிட்டது (2003 நவம்பர் 7). சலபதிராவ் (Chalapathi Rao) குறிப்பிட்டதைப் போன்று ”இந்தியப் பத்திரிக்கையின் வரலாறு அதன்

வளர்ச்சியைப் பற்றியது மட்டுமன்று அதற்கெதிரான சட்டங்களையும் உள்ளடக்கியது தான்". எனவே பத்திரிக்கைகள் எதிர்ப்பு கண்டு அஞ்சாமல் மக்கள் நலனையும் நீதியையும் முன்னிறுத்தி முனைப்போடு செயல்பட வேண்டியது பத்திரிக்கைத் துறையின் பொறுப்பாகும்.

**உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கவும்**

5. 1852ல் எங்கு முதல் தபால் ஸ்டாம்ப் வெளியிடப்பட்டது?
6. எங்கு1881-82ல் தொலைபேசி சேவை துவங்கப்பட்டது.

## 12.8. உங்கள் முன்னேற்ற கேள்விகளை சரிபார்க்க விடைகள்

1. 1948 ஏப்ரல் மாதம்
2. 1957
3. 1962
4. கேரளா திருவனந்தபுரம் தும்பா (Thumba)வில் உள்ளது.
5. கராச்சியில்
6. கல்கத்தாவில்

## 12.9. அத்தியாயச் சுருக்கம்

- அணு ஆற்றல் ஆராய்ச்சியைப் பற்றி நினைக்கும் போது ஹோமி ஜஹாங்கீர் பாபாவை நினைவு கூறாமல் இருக்க இயலாது. கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் இயற்பியலும், கணிதமும் கற்ற பாபா வியத்தகு அணு விஞ்ஞானியாக மலர்ந்தார்.
- இவர் அணு ஆற்றல் அறிவியலிலும் பாடச்சியிலும் தனது புலமையை வெளிப்படுத்தினார். அணு ஆற்றலைப் பயன்படுத்தி இந்தியா மின் உற்பத்தியில் தன்னிறைவு பெறலாம் என்ற புரட்சிகரமான கருத்தை வெளியிட்டார்.
- 1948 ஏப்ரல் மாதம் அணு ஆற்றல் சட்டம் (Atomic Energy Act) இயற்றப்பட்டது. அந்த ஆண்டு ஆகஸ்டு மாதம் அணு ஆற்றல் ஆணையம் அமைக்கப்பட்டது. ஹோமி பாபா அதன் தலைவராக நியமிக்கப்பட்டார். நேருவின் நேரடி நிர்வாகத்தின் கீழ் செயல்பட்ட

அறிவியல் ஆராய்ச்சித் துறை (Department of Scientific Research)யின் அரவணைப்பில் அணு ஆற்றல் ஆணையம் செயல்பட்டது.

**குறிப்பு**

- 1956 ஆகஸ்டு மாதத்திலிருந்து பம்பாயில் உள்ள டிராம்பே (Trombay)யில் துவங்கப்பட்டு செயல்படத் துவங்கிய முதல் அணு ஆற்றல் நிலையம் (Neuclear Reactor) ஆசியாவிலேயே முதல் அமைப்பாகும்.
- 1957ல் அணு ஆற்றல் நிலையம் பாபா அணு ஆராய்ச்சி மையம் (Bhaba Atomic Research Centre) என்று பெயர் மாற்றம் செய்யப்பட்டது. இந்தியாவின் அணு ஆற்றல் திட்டத்தின் தந்தையாகப் போற்றப்படும் ஹோமி பாபாவின் பெயரில் இயங்கும் இந்த ஆணையம் அப்பாரா (Appara), செர்லினா (Zerlina), சைரஸ் (Cirus), பூர்ணிமா (Purnima), துருவா (Dhuruva) ஆகிய 5 அணு ரியாக்டர்களை (Neuclear Reactors) அமைத்துள்ளது.
- சென்னைக்கருகேயுள்ள கல்பாக்கத்தில் அணு ஆற்றலைக் கொண்டு கடல் நீரைக் குடிநீராக்கும் திட்டம் செயல்படுகிறது. அமைதிக்கு அணு“க் கொள்கைப்படி அணு ஆற்றல் வேளாண்மை, தொழில், மருத்துவம், தகவல் தொடர்பு போன்ற வளர்ச்சித் துறைக்குப் பயன்படுத்தப்படுகிறது.
- சுதந்திர இந்தியா அணு ஆற்றல் ஆராய்ச்சிக்கு முன்னுரிமை கொடுத்ததைப் போன்று விண்வெளி ஆராய்ச்சி வளர்ச்சிக்கும் முக்கியத்துவம் கொடுத்தது. 1962ல் இந்திய தேசிய விண்வெளிக் குழு (Indian National Committee for Space Research) அமைக்கப்பட்டது. 1963ல் நைக்கே அப்பாச்சே (Nicke Apache) என்ற விண்கலம் விண்வெளியில் செலுத்தப்பட்டது. 1972ல் விண்வெளி ஆணையம் (Space Commission) மற்றும் விண்வெளித் துறை (Department of Space) துவக்கப்பட்டது.
- இந்திய விண்வெளி ஆராய்ச்சி நிறுவனம் Indian Space Research Organisation,ISRO 1963ல் துவக்கப்பட்ட விண்வெளி ஆராய்ச்சிப் பரிசோதனை 1972ல் விண்வெளி ஆணையம் மற்றும் ஆராய்ச்சித் துறை (Space Commission and the Department of Space)யாக விரிவடைந்தது. இதன் தலைமையகம் பெங்களூரில் உள்ளது. இதன் முக்கிய

**குறிப்பு**

நோக்கம் விண்வெளி தொழில்நுட்பத்தை குறிப்பாகத் தொலைபேசித் தொடர்பு, தொலைக்காட்சி ஒளிபரப்பு, வானிலை இயற்கை வளங்களைக் கண்டறிதல் ஆகியவற்றை வளர்த்து செயல்படுத்தல்.

- ஹோமி பாபா அணு ஆராய்ச்சியின் தந்தை என்று அறியப்படுவதைப் போன்று, விக்ரம் சாராபாய் இந்திய விண்வெளித் திட்டத்தின் தந்தை" என்று அழைக்கப்படுகிறார். ஹோமி பாபாவுக்குப் பிறகு அணு ஆற்றல் ஆணையத்தின் தலைமைப் பொறுப்பேற்ற பல்திறன் கொண்ட சாராபாய், விண்கலன்களை உருவாக்குவதில் நிபுணர்.
- விக்ரம் சாராபாய் விண்வெளி மையம் கேரளா திருவனந்தபுரம் தும்பா (Thumba)வில் உள்ளது. இது இந்திய விண்வெளி ஆராய்ச்சி மையமாகும். துவக்கத்தில் இந்த மையம் பி.எஸ்.எல்.வி. போன்ற செயற்கைக்கோள் செலுத்து கலன்கள் தயாரிப்புக்களமாகப் பயன்பட்டது.
- ஸ்ரீஹரிகோட்டா ஆந்திராவில் உள்ள விண்வெளித் துறைமுகம்" (Space Port) ஆகும். 170 கி.மீ பரப்பளவுள்ள இந்த ஆந்திரக் கடலோரத் தீவுதான் விண்கலன் செலுத்து களமாகும். இங்குள்ள ஷார் (SHAR) மையத்திலிருந்துதான் 1971ல் முதல் ரோகிணி செயற்கைக்கோள் செலுத்தப்பட்டது. பின்னர் எஸ்எல்வி (SLV), ஏஎஸ்எல்வி (ASLV), பிஎஸ்எல்வி (BSLV) போன்ற ஏவுகலன்கள் செலுத்தப்படுகின்றன.
- இந்தியாவில் தயாரிக்கப்பட்ட வரலாற்றுச் சிறப்புமிக்க செயற்கைக்கோள் ஆர்யப்பட்டா (Aryabhata). 1975 ஆர்யப்பட்டா இந்திய விஞ்ஞானிகள் மற்றும் பொறியாளர்களால் வடிவமைக்கப்பட்டு உருவாக்கப்பட்ட முதல் செயற்கைக்கோள் ஆகும். இது பெங்களூரில் உள்ள விண்வெளி ஆராய்ச்சி மையத்தில் தயாரிக்கப்பட்டது. இதற்கு கி.பி.ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த இந்திய வானவியலாளர் - கணித மேதை ஆர்யப்பட்டாவின் பெயர் சூட்டப்பட்டது.
- தொலைக்காட்சி புகைப்படக் கருவி பொருத்தப்பட்ட இக்கோள் நீரியல் ஆய்வு (Hydraulic), கடலியல் (Oceanography), வானிலை பற்றிய தகவல்களை அனுப்பியது. 1981 நவம்பர் 20-ம் தேதி பாஸ்கரா-II செலுத்தப்பட்டது.

குறிப்பு

- 1980 ஜூலை மாதம் 18-ம் தேதி ரோகினி செயற்கைக்கோள் முதன்முறையாக இந்திய விண்வெளி விஞ்ஞானிகளால் வடிவமைக்கப்பட்டு தயாரிக்கப்பட்ட செயற்கைகோள் செலுத்துகலன்-3 (SLV-3) மூலம் விண்வெளி சுற்றுப்பாதையில் விடப்பட்டது.
- 1981 ஜூன் மாதம் 657.5 கிலோ எடையுள்ள ஆப்பிள் செயற்கைக்கோள் (3 Axis geo-stationary satellite) பிரெஞ்சு கயானாவிலிருந்து ஐரோப்பிய விண்வெளி மையத்தின் ஏரியான் (Ariane) விண்கலன் மூலம் செலுத்தப்பட்டது. இது இந்தியாவின் முதல் தகவல் தொடர்பு செயற்கைகோள் என்பது குறிப்பிடத்தக்கது.
- இந்திய விண்வெளி ஆராய்ச்சி நிறுவனம் (ISRO) அதிகுளிர் எரிபொருள் தொழில் நுட்பத்தை (Cryogenic Fuel Technology)க் கண்டுபிடித்துவிட்டால் இந்தியா, செயற்கைக்கோள் தொழில் நுட்பத்தைப் போன்றே, ஏவுகலன் தொழில்நுட்பத்திலும் தன்னிறைவு பெற்றுவிடும். இது இந்தியாவின் இருபத்தியோறாம் நூற்றாண்டின் சாதனைகளில் ஒன்றாக இருக்கும்.
- மக்கள் தகவல் தொடர்பு (Mass Communication) என்றால் வானொலி, தொலைக்காட்சி, சினிமா, வீடியோ, இணையதளம், பத்திரிக்கை போன்ற ஊடகங்கள் மூலம் தகவல் தொடர்புப் பரிமாற்றம் செய்வதாகும். சுருங்கக்கூறின் தனித் தகவல் தொடர்பும் (Personal Communication) மக்கள் தகவல் தொடர்பும் (Mass Communication) முக்கிய தகவல் தொடர்பு சாதனங்களாகும்.
- தனித் தகவல் தொடர்புக்குத் தகுந்த எடுத்துக்காட்டு தபால் - தந்தி முறையாகும். இந்தியாவில் பிரிட்டிஷ் காலனி ஆட்சியின் போது தபால் வழி தகவல் தொடர்பு நன்கு வளர்ந்திருந்தது. துவக்கத்தில் அரசாங்க அலுவலர்களுக்கு மட்டுமே பயன்பட்ட தபால் தகவல் முறை 1837க்குப் பிறகு பொது உபயோகத்துக்கு விரிவுபடுத்தப்பட்டது.
- 1972ல் அறிமுகப்படுத்தப்பட்ட இந்த தபால் எண் முறை தபால்களை எளிதில் பட்டுவாடா செய்ய உதவுகிறது. 1975ல் கொண்டு வரப்பட்ட விரைவுத் தபால் முறை (Speed Post) மூலம் உலகின் எந்த இடத்துக்கும் தபால் மூலம் தகவல் அனுப்ப முடியும். 1977ல் செயற்கைக் கோள் மூலம் தகவல் தொடர்பு கொள்ளும் சேவை

துவக்கப்பட்டது. 1984ல் தபால் காப்பீட்டுத் திட்டம் (Postal Life Insurance) நடைமுறைப்படுத்தப்பட்டது.

குறிப்பு

- அலெக்சாண்டர் கிரஹாம்பெல் தொலைபேசி (Telephone)யைக் கண்டுபிடித்த (1876 மார்ச் 10) ஆறு ஆண்டுகளுக்குள் 1881-82ல் கல்கத்தாவில் தொலைபேசி சேவை துவங்கப்பட்டது. 1990ல் தந்தி மற்றும் தொலைபேசி சேவைகள் இந்திய ரயில்வேக்கு விரிவுபடுத்தப்பட்டது. 1913-14ல் சிம்லாவில் முதல் தானியங்கி தொலைபேசி நிலையம் (Automatic Exchange) நிறுவப்பட்டது. இது தொலைத் தொடர்புப் புரட்சியாகும்.
- 1984ல் பிரதமர் ராஜீவ் காந்தியால் உருவாக்கப்பட்ட தொலை நிலை இயக்க மேம்பாட்டு மையம் (Centre for Development of Telematics - CDOT) சமகால இந்திய தொலைத்தொடர்பு வரலாற்றில் திருப்பு முனையை ஏற்படுத்தியது. அதன் விளைவாக 2000-ல் தொலைபேசி நிலையங்கள் 300லிருந்து 28,000 ஆக உயர்ந்தது 27 ஆயிரம் தொலைபேசிகள் உபயோகத்தில் இருந்தன.
- 1948 ஜுலை மாதம் பெங்களூரில் துவக்கப்பட்ட இந்திய தொலைபேசி நிறுவனம் (Indian Telephone industries Ltd) தொலைத் தொடர்புத் துறைக்குத் தேவையான அனைத்துக் கருவிகளையும் தயாரித்துக் கொடுக்கிறது. 1960ல் ஆரம்பிக்கப்பட்ட இந்துஸ்தான் டெலிபிரிண்டர்ஸ் நிறுவனம் (Hindustan Tele printers Ltd) மின்னணு தானியங்கி டெலி பிரிண்டர்களை (Electro mechanical Tele printers)த் தயாரிக்கிறது.
- தனி நபர் தகவல் தொடர்பும் (Personal Communication), மக்கள் தகவல் தொடர்பும் (Mass Communication) தகவல் தொடர்பு நாணயத்தின் இரண்டு பக்கங்களாகும். வானொலி, தொலைக்காட்சி, சினிமா, வீடியோ, இணைய தளம் போன்ற ஊடகங்கள் மூலம் மக்கள் தகவல் தொடர்பு நடைபெறுகிறது. அதாவது மக்கள் தகவல் தொடர்பு என்பது தகவல்களை மக்களிடம் கொண்டு சேர்ப்பதாகும்.
- பேஜர்கள் (Pagers), செல்லுலர் தொலைபேசிகள், (Cellular Phones), தகவல் தொடர்பு தீர்க்க தரிசியாகக் கருதப்படும் கணினிகள் (Computers), இணைய தளம் (Internet) போன்ற அதிநவீன மக்கள்

தகவல் தொடர்பு சாதனங்கள் ‘தகவல் பரிமாற்ற சாதனங்கள்“ (Interactive Media) என்று கூறப்படுகிறது.

**குறிப்பு**

- கம்பியில்லாத் தந்தி (Wireless Telegraphy) தான் வானொலியின் முன்னோடி. இது தனி மனிதர்களுக்கிடையேயான தகவல் தொடர்பை பொதுத் தகவல் தொடர்பாக்கிற்று.
- பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் இந்திய வானொலி சேவை (Indian State Broadcasting Service - ISBS)யைத் துவங்கிய பின் தனியார் முயற்சி தலைமறைவாகிவிட்டது!
- பீல்டன் (Fielden) என்பவர் 1936 ஜுன் மாதம் இந்திய வானொலி சேவைக்கு அகில இந்திய வானொலி (All India Radio - AIR) என்று பெயர் மாற்றம் செய்தார். அகில இந்திய வானொலி (AIR) இந்தியா சுதந்திரம் பெற்ற போது டெல்லி, பம்பாய், கல்கத்தா, மதராஸ், லக்னோ, திருச்சிராப்பள்ளி ஆகிய ஐந்து நகரங்களிலும், திருவாங்கூர் - ஹைதராபாத், அவுரங்காபாத் ஆகிய மன்னர் மாநிலங்களில் மட்டுமே வானொலி நிலையங்கள் இருந்தன.
- மாநில வானிலை சேவையின் நோக்கம் பிராந்திய பண்பாடு மற்றும் மொழி பேசுவோருக்காக, டெல்லியிலிருந்து ஒலிபரப்பப்படும் தேசிய நிகழ்ச்சிகள் தவிர மாநில சம்மந்தமான நிகழ்ச்சிகள் வழங்கப்படுகின்றன. இவை குறிப்பாக விவசாயிகள், தொழிலாளர்கள், பெண்கள், இளைஞர்கள், குழந்தைகள் சம்மந்தப்பட்டவை.
- பண்பலை வரிசை ஒலிபரப்பு முதன் முதலில் 1977ல் சென்னையில் தான் துவக்கப்பட்டது. 1992ல் ஜலந்தரிலும், 1993ல் மும்பையிலும் இந்த ஒலிபரப்பு அறிமுகப்படுத்தப்பட்டது. 1993லிருந்து தனியார் கம்பெனிகளுக்கு நிகழ்ச்சிகளுக்காகவும், விளம்பரங்களுக்காகவும் நேரம் ஒதுக்கப்பட்டது.
- இந்தியாவில் தொலைக்காட்சி தகவல் தொடர்பு சேவை கல்வி மற்றும் வளர்ச்சிப் பணிகளுக்காக துவக்கப்பட்டது. பின்னர் பொழுதுபோக்கு, விளையாட்டு, வர்த்தக நிகழ்ச்சிகள் என்று விரிவுபடுத்தப்பட்டது. இவற்றை மனதில் கொண்டு தொலைக்காட்சிக் கொள்கை வகுக்கப்பட்டது.
- இந்தியாவில் திரைப்படங்கள் தோன்றுவதற்கு முன்பு நாடகங்கள் மக்களிடையே செல்வாக்கு பெற்றிருந்தன. தமிழ் நாடு, வங்காள, பார்சி

**குறிப்பு**

நாடகக் கம்பெனிகள் பிரசித்தம். 1896 ஜுலை 7-ம் தேதி லூமியேர் சகோதரர்கள் (Lumiere Brothers) பம்பாயில் திரைப்படக் கண்காட்சி“ நடத்தினர்.

- மத்திய தணிக்கைக் குழு 1952ல் நிறைவேற்றப்பட்ட திரைப்படச் சட்ட (Cinematography Act, 1952)ப்படி அமைக்கப்பட்டதாகும். இதன் தலைமையகம் மும்பையில் உள்ளது. இதன் 9 பிராந்தியக் கிளைகள் பெங்களூர், மும்பை, கொல்கத்தா, ஐதராபாத், சென்னை, திருவனந்தபுரம், புதுடெல்லி, கட்டாக், கௌகாத்தி ஆகிய நகரங்களில் உள்ளன.
- இந்தியாவில் 14 மொழிகளில் வெளியிடப்படும் திரைப்படங்கள் அனைத்தும் பிராந்தியக் கிளைகளால் பரிசீலிக்கப்பட்டு, தணிக்கை செய்யப்பட்டு, சான்றிதழ் வழங்கப்படுகிறது. பிராந்தியக் கிளைகளுக்கு ஆலோசனை வழங்க பல்துறை வித்தகர்கள் கொண்ட ஆலோசனைக் குழுக்கள் உள்ளன.
- கணினி (Computer)யின் வருகையால் தகவல் தொடர்பில் மாபெரும் மாற்றம் ஏற்பட்டது. இந்தியாவில் 1960, 1970களில் கணினிகள் இறக்குமதி செய்யப்பட்டன. இவையாவும் ஐபிஎம் (International Business Machiness - IBM) கணினிகளாகும். இவற்றைப் பெரும்பாலும் அரசாங்கத் துறைகளும், பெரிய வர்த்தக நிறுவனங்களும் பயன்படுத்தின.
- இந்தியாவை 21-ம் நூற்றாண்டுக்குத் தயார் செய்ய வேண்டும் என்ற தொலைநோக்குடன் பிரதமர் ராஜீவ் காந்தியின் ஆட்சிக் காலத்தில் ‘தகவல் புரட்சி“ (Information Revolution)க்கு அடித்தளம் அமைக்கப்பட்டது.
- பிரதமர் வாஜ்பாய் ஆட்சிக் காலத் துவக்கத்தில் பேராசிரியர் எம்.ஜி.கே.மேனன் தலைமையில் தகவல் தொழில் நுட்பம் செயல்படை (Task Force on Information Technology, 1998) அமைக்கப்பட்டது. இக்குழு 108 புரட்சிகரமான பரிந்துரைகளைச் செய்தது. இந்தியா தகவல் தொழில்நுட்பப் புரட்சியோடு 21-ம் நூற்றாண்டுக்குள் நுழைந்தது.
- இந்திய பத்திரிக்கை ஒரு பாரம்பரியமிக்க வரலாற்று நிறுவனம். இந்திய விடுதலைப் போராட்டத் தலைவர்கள் தேச விடுதலையோடு

**குறிப்பு**

பத்திரிக்கைச் சுதந்திரத்துக்காகவும் போராடினர். திலகரும் காந்தியும் தேசத் துரோகக் குற்றம் சாட்டப்பட்டு, விசாரிக்கப்பட்டு, தண்டிக்கப்பட்டு சிறையிலடைக்கப்பட்டனர். இவர்கள் பத்திரிக்கை சுதந்திரம், பேச்சுரிமை, அரசாங்க அடக்குமுறை எதிர்ப்பு, சமூக சமத்துவ நீதி ஆகிய நான்கு சுதந்திரங்களுக்காகவும் போராடினர்.

- இந்தியா சுதந்திரம் அடைவதற்கு முன், பத்திரிக்கையின் பங்கு தெளிவாக இருந்தது. அதாவது அடக்குமுறை அரசாங்கத்துக்கு எதிராகப் போராடுவது சாதி, சமய, வகுப்பு வேறுபாடின்றி சமுதாய நீதிக்காக வாதாடுவது.
- இந்தியாவில் 1965-ம் ஆண்டில் இந்திய பத்திரிக்கைக் கழகச் சட்டம் (Indian Press Council Act, 1965), 1966 நவம்பரிலிருந்து 1976 ஜனவரி முதல் தேதி வரை செயல்பட்டு வந்த இந்திய பத்திரிக்கைக் கழகம் "நெருக்கடி ஆட்சி" (Emergency Regime)யின் போது கலைக்கப்பட்டது. கலைக்கப்பட்ட இக்கழகத்தை 1979 ஏப்ரல் மாதம் ஜனதா அரசாங்கம் புதுப்பித்தது. இப்புதுப்பிக்கப்பட்ட இந்தியப் பத்திரிக்கைக் கழகமே தற்போது செயல்பட்டு வருகிறது.

## 12.10. முக்கியச் சொற்கள்

**செயற்கைகோள்** : இது நிலா போன்ற இயற்கைக் கோள்கள் போல் விண்வெளியில் உலா
வருவதினால் இதற்கு செயற்கைக் கோள் என்ற பெயர் வந்தது. 1957 ஆம் ஆண்டு சோவியத் ஒன்றியத்தால் ஸ்புட்னிக் 1 என்கின்ற முதல் செயற்கைக்கோள் விண்வெளியில் செலுத்தப்பட்டது. கோளப்பாதையில் இருக்கும் விண்வெளி நிலையங்களும் செயற்கைக்கோள்கள் ஆகும்.

**தந்தி** : தந்தி (Telegraph) எனப்படுவது ஓரிடத்திலிருந்து தொலைவில் உள்ள வேறோரு இடத்திற்கு விரைந்து செய்தியனுப்பப் பயன்படுத்தப்படும் கருவி ஆகும். இதில் செய்திகளை அனுப்ப எந்தவொரு பொருளும் எடுத்துச் செல்லப்படுவதில்லை.

**பேஜர்** : பேஜர் என்பது ஒரு சாதனமாகும். செயல்படும் ஆபரேட்டரிடமிருந்து குறுஞ்செய்திகளைப் பெற முடியும். நெட்வொர்க்கில் உள்ள ஒவ்வொரு பேஜருக்கும் அதன் சொந்த எண் உள்ளது. அந்த

எண் சாதனத்தின் தனிப்பட்ட அடையாளங்காட்டி மற்றும் ஒரு குறிப்பிட்ட சந்தாதாரருக்கு ஒரு செய்தியை அனுப்ப உங்களை அனுமதிக்கிறது.

குறிப்பு

**பண்பலை :** வானொலி தொழில்நுட்பத்தில், சைகைகளை (குறிப்பலைகளை) ஊர்தி அலையின் அதிர்வெண்ணில் மாற்றங்களாகச் செய்து (ஏற்றி) அலைபரப்பப்படும் மின்காந்த அலைகள். அதிர்வெண் பண்பேற்றம் பெற்ற அலைகள் அல்லது அலைவரிசை அதிர்வெண் மாற்றுகை ஏற்ற அலைகள். இப்படிப்பட்ட அலைகளில் அலைபரப்பப்படும் வானொலிச் சேவை.

**கணினி :**கணினி என்பது எண் முதலான தரவுகளை உட்கொண்டு, முறைப்படி கோத்த ஆணைக் கோவைகளைச் செயற்படுத்தும் ஒரு கருவி. ஒரு பணியைச் செய்ய,அதனைப் பல கூறாகப் பகுத்து, எதன் பின் எதனைச் செய்ய வேண்டும் என்று எண்ணி, ணினியுள் ,டுவதற்காகத் தொகுக்கப்பட்ட ஆணைக் கோவை அல்லது கட்டளைக் கோவையானது, செய்நிரல் எனப்படும்.

## 12.11. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

**குறிகிய வினாக்கள்**

1. அணு ஆற்றல் ஆராய்ச்சியை குறித்து எழுதுக.
2. ஒருங்கிணைந்த நெறிப்பாட்டு ஏவுகணை மேம்பாட்டு செயல்திட்டம் குறித்து குறிப்பு வரைக.
3. இந்திய தேசிய செயற்கைக்கோள் முறை குறித்துக் குறிப்பு எழுதுக.
4. புதிய தொலைத் தொடர்புக் கொள்கை குறித்துக் குறிப்பு எழுதுக.

**விரிவான வினாக்கள்**

1. இந்திய விண்வெளி ஆராய்ச்சி மையம் பற்றி கட்டுரை வடிவில் விவரி.
2. தொலைக்காட்சி தகவல் தொடர்பு குறித்து பகுப்பாய்வு செய்க
3. மத்திய தணிக்கைக் குழுகுறித்து மதிப்பிடு செய்க.

குறிப்பு

## 12.12. கூடுதல் வாசிப்புகள்

பிபன் சந்திரா, மிருதுலா முகர்ஜி, ஆதித்யா முகர்ஜி. 2015.*சுதந்திரத்திற்குப் பிறகு இந்தியா,* சென்னை: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.

வெங்கடேசன்.க. 2012. *சமகால இந்திய வரலாறு 1947-2012,* ராஜபாளையம்: வி.சி.பப்ளிகேஷன்ஸ்.

Bipan Chandra, Miridula Mukherjee, Aditya Mukherjee. 2008. *India since Independence*, Haryana: Penguin Books.

G. Vengatesan. 1991. *History of contemporary India 1947-2014,* Rajapalayam: VC Publications.

R.S. Chaurasia. 2002. *History of Modern India 1707 AD upto 2000 AD.* New Delhi: Atlantic Publishers & Distributors.

S.K. Shah. 2017. *India's Foreign Policy,* Alpha Editions.

V.N. Khanna, Leslie K Kumar. 2018. *Foreign Policy of India.* New Delhi: Vikas Publications PVT. LTD.

V. P. Dutt. 1993. *India's Foreign Policy.* New Delhi: Vikas Publications PVT. LTD.

# அலகு-13

## சமகாலச் சவால்கள்: வகுப்புவாதம்-தீவிரவாதப் பிரச்சனை-தாராளமயமாக்கல், தனியார்மயமாக்கல்

**பாட அமைப்பு**

13.1. முன்னுரை
13.2. நோக்கங்கள்
13.3. குஜராத்தில் இனப் படுகொலை
13.4. தீவிரவாதப் பிரச்சனை
13.5. தாராளமயமாக்கல், தனியார்மயமாக்கல்
13.5.1.தாராளமயமாக்கல் (Liberalisation)

13.5.2. தனியார்மயமாக்கல் (Privatisation)
13.6. உங்கள் முன்னேற்ற கேள்விகளை சரிபார்க்க விடைகள்
13.7. அத்தியாயச் சுருக்கம்
13.8. முக்கியச் சொற்கள்
13.9. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்
13.10. கூடுதல் வாசிப்புகள்

## 13.1. முன்னுரை

சுதந்திர இந்தியா பல்வேறு சவால்களை சந்தித்து வந்துள்ளது. குறிப்பாக, சி. தாமஸ் கருத்தின் படி "மொழிப் போராட்டங்கள், வகுப்புக் கலவரங்கள், இந்திராகாந்தி, ராஜிவ்காந்தி படுகொலை, சீனா மற்றும் பாகிஸ்தான் போர்கள், பஞ்சாபில் பயங்கரவாதத்தின் வளர்ச்சி, காஷ்மீரில் அரசியல் நெருக்கடிகள், அஸ்ஸாமில் இனக்கலவரங்கள், தமிழ்நாட்டில் இந்தி எதிர்ப்புப் போராட்டங்கள், ஊழல், சாதிச் சண்டைகள், கொத்தடிமை முறை, குழந்தைத் தொழிலாளர், பாலியல் வன்முறைகள் மனித உரிமை மீறல்கள் நிலவுகின்றன."

நேரு காலத்தில் நாட்டில் இவ்வளவு பிரச்சனைகள் இல்லை என்று அறிவு ஜீவிகள் கூறுகிறார்கள். "பல ஆண்டுகள் கடந்த பிறகு நேருவின் ஆட்சி பொற்காலம் என்ற கருத்து மேன்மேலும் அதிகரிக்கிறது. நேரு காலத்தில் சிறந்த இலட்சியங்கள் மற்றும் கணிசமானச் சாதனைகள் இருந்தன. அந்த இலட்சியங்கள் இன்று மறந்து போய்விட்டன. அரசியலில் இன்று சுயநலம் புகுந்து விட்டதால் மக்கள் அரசியல்வாதிகளை நம்புவதற்கு மறுக்கிறார்கள். இந்திய மக்களின் ஒற்றுமை மற்றும் தன்னம்பிக்கை மேன்மேலும் குறைந்து வருகிறது. இந்தியச் சமூகம் சிதறிக் கொண்டிருக்கிறது" என்று எஸ்.கோபால் குறிப்பிடுகிறார். சுதந்திரம் அடைந்து 60 ஆண்டுகளுக்குப் பிறகு இந்தியாவின் பிரச்சனைகள் அதிகரித்திருக்கின்றன என்பது உண்மையே. ஆனால், பலதுறைகளில் இந்தியாவில் முன்னேற்றம் ஏற்பட்டிருக்கின்றது என்பதையும் மறுக்க முடியாது. இந்தியச் சமூகத்தில் அடிப்படையான மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன. இந்த மாற்றங்களின் போது, நன்மைகளுடன் தீமைகளும் மேற்பரப்புக்கு வந்துவிட்டன.

## 13.2. நோக்கங்கள்

இந்தப் பாடத்தைப் படித்த பிறகு, கீழ்க்கண்டவற்றை அறிய முடியும்:

- சமகாலச் சவால்கள் குறித்து அறிய உதவுகிறது.
- வகுப்புவாதம் குறித்து விவரிக்கிறது.
- தீவிரவாதப் பிரச்சனை பற்றி தெரிய உதவுகிறது.
- தாராளமயமாக்கல், தனியார்மயமாக்கல் குறித்து விவரிக்கிறது.

## 13.3. குஜராத்தில் இனப் படுகொலை

2002, மார்ச் மாதத்தில் குஜராத்தில் இனப் படுகொலை நடைபெற்றது. "இது இந்தியாவின் நெற்றியில் வைக்கப்பட்ட கரும்புள்ளி. உலகத்தில் இந்தியாவின் பெருமை குறைந்துவிட்டது என்று அப்பொழுது இந்தியாவின் பிரதமராக இருந்த வாஜ்பாயி தொலைக்காட்சி மூலம் கூறினார். முந்தைய நாள் சர்வ கட்சியினர் வெளியிட்ட சமாதான வேண்டுகோளை ஆதரித்தார். குஜராத்தில் படுகொலை 3 மாத காலம் வரை நடைபெற்றது. நகரத்திலிருந்து கிராமங்களுக்கும் இது பரவியது. 2000-க்கும் அதிகமானவர்கள் கொல்லப்பட்டார்கள். சுமார் 2 லட்சம் பேர் உடைமைகளை இழந்து அகதிகளாக முகாம்களில் தங்கினார்கள்.

குஜராத்தில் பிப்ரவரி 27-ஆம் நாள் அன்று காலையில் கோத்ரா என்ற சிறிய நகரில் சபர்மதி எக்ஸ்பிரஸின் ஒரு பெட்டிக்குத் தீ வைக்கப்பட்டது. 15 பெண்கள், 20 குழந்தைகள் உட்பட 58 நபர்கள் நெருப்பில் எரிக்கப்பட்டனர். அவர்கள் எல்லோரும் இந்துக்கள். அயாத்தியில் ராமர் கோயிலைக் கட்டவேண்டும் என்பதற்காக வி.எச்.பி. நடத்திய யாகத்தில் பங்கெடுத்து விட்டு சொந்த ஊருக்குத் திரும்பினார்கள். அப்படித் திரும்புகின்ற வழியில்தான் இந்தத் துயர சம்பவம் நடைபெற்றது.

இந்துத் தொண்டர்களுக்கும் ரயில் நிலையத்தில் இருந்த முஸ்லிம் வியாபாரிகளுக்கும் வாய்த் தகராறு ஏற்பட்டதாகச் சொல்லப்படுகிறது. "ராமர் வாழ்க" என்று கோஷம் போடுமாறு முஸ்லிம்கள் கட்டாயப் படுத்தப்பட்டார்கள். அவர்களுடைய தாடிகள் இழுக்கப்பட்டன. இந்தத் தகராறு பற்றிக் கேள்விப்பட்டதும்

ரயில்நிலையத்துக்கு வெளியில் இருந்த 10, 15 முஸ்லிம்கள் ஓடிவந்து ரயில் மீது கற்களை வீசினார்கள். நிலையத்தைவிட்டு ரயில் புறப்பட்டுவிட்டது. இந்துத் தொண்டர்கள் பயணம் செய்து கொண்டிருந்த பெட்டிகளில் ஒன்றில் தீ பிடித்தது.

முஸ்லிம்கள் அந்தப் பெட்டிக்குள் பெட்ரோலை ஊற்றித் தீ வைத்தார்கள் என்று சொல்லப்பட்டது. நெருப்பு தற்செயலாக ஏற்பட்டிருக்க வேண்டும், வண்டியிலிருந்தவர்கள் தீப்பற்றக்கூடிய பொருளைப் பயன்படுத்தியதால் விபத்து ஏற்பட்டிருக்க வேண்டும் அல்லது ரப்பர் இணைப்புகள் தீப்பிடித்திருக்க வேண்டும் என்று காவல்துறையும் யு.சி.பானர்ஜி கமிட்டியும் கருத்து தெரிவித்தன.

குஜராத்தில் பா.ஜ.க. முதலமைச்சரான நரேந்திர மோடி ஆர்.எஸ்.எஸ். பிரிவைச் சேர்ந்தவர். ஹிட்லர் யூதர்களை வெறுத்ததைப் போல, ஆர்.எஸ்.எஸ்.காரர்கள் முஸ்லிம்களைத் தீவிரமாக வெறுத்தார்கள். பாகிஸ்தானின் உளவுத் துறையின் தூண்டுதலில் ஸ்தல முஸ்லிம்கள் நாச வேலையைச் செய்தார்கள் என்று மோடி குற்றம் சாட்டினார். முஸ்லிம்களே ரயில்பெட்டிக்குத் தீ வைத்தார்கள் என்று வி.எச்.பி. கூறியது. பிப்ரவரி 28-ஆம் தேதி மாநிலத்தின் எல்லா நகரங்களிலும் கடைகளை அடைக்க வேண்டும் என்று வி.எச்.பி. ஆணையிட்டது அரசு அதை ஆதரித்தது. பிப்ரவரி, 28-ல் தொடங்கிய படுகொலை 3 மாத காலம் நீடித்தது. காவித் துணியைத் தலையில் கட்டிய இந்து இளைஞர்கள் முஸ்லிம் குடியிருப்புகளுக்குள் நுழைந்து கொள்ளையடித்து, தீ வைத்தார்கள். முஸ்லிம் பெண்கள் பாலியல் வன்முறைக்கு உட்படுத்தப்பட்டார்கள். காவல்துறை தடுக்கவில்லை மாறாக, சில இடங்களில் வன்முறையாளர்களுக்கு உதவி செய்தது. வன்முறையைத் தடுக்க வேண்டாம் என்று காவல்முறை அதிகாரிகளுக்கு உத்தரவுகள் வந்தன என்பதற்கு ஆதாரம் உண்டு. வன்முறை முக்கிய நகரங்களுக்குப் பரவியது. சுமார் 40 நகரங்களில் ஊரடங்குச் சட்டம் அமுலாக்கப்பட்டது. இது தற்செயலாக நடைபெற்ற கலவரம் அல்ல் முஸ்லிம்களின் கடைகள், நிறுவனங்கள் குறிவைத்துத் தாக்கப்பட்டன. இந்துக்களும், முஸ்லிம்களும் மிகவும் போற்றிய உருது மொழிக் கவிஞரான வாலி குஜராத்தியின் தர்கா அழிக்கப்பட்டது. கிராமங்களில் நேற்று வரை சகோதரர்களாகப் பழகிய குடும்பங்கள் திடீரென்று எதிரிகளாக மாறின. பாதிக்கப்பட்ட கிராமங்களிலிருந்து மக்கள் அதிக

எண்ணிக்கையில் வெளியேறினார்கள். உயர் சாதியினர்களுடன் சேர்ந்து தலித்களும் ஆதிவாசிகளும் இந்த வன்முறையில் பங்கெடுத்தார்கள். குஜராத்தில் நடைபெற்ற சம்பவங்கள் இந்தியாவின் மனசாட்சியை உலுக்கின. காங்கிரஸ் தலைமையில் எதிர்க் கட்சிகள் மாநில அரசாங்கத்தின் மீது நடவடிக்கை எடுக்குமாறு வாஜ்பாயி அரசாங்கத்தை வற்புறுத்தின. மத்திய அரசாங்கம் குஜராத் நிலைமையை ஆராயுமாறு தேசிய மனித உரிமை ஆணையத்தைக் கேட்டுக் கொண்டது. மோடி அரசாங்கம் மக்களுடைய உரிமைகளைப் பாதுகாக்கத் தவறிவிட்டது என்று மனித உரிமை கமிஷன் அறிக்கை வெளியிட்டது. -

பாராளுமன்றத்தில் எதிர்க்கட்சிகள் குஜராத் அரசைக் கண்டிக்கின்ற தீர்மானத்தைக் கொண்டு வந்தன. விவாதம் நடைபெறுவதற்கு ஒரு நாள் முன்னதாக (29-4-2002) மத்திய அமைச்சரும் தலித்களின் முக்கியமான தலைவருமான ராம்விலாஸ் பஸ்வான் மந்திரிசபையிலிருந்து ராஜினாமா செய்தார். தேசிய ஜனநாயகக் கூட்டணியிலிருந்து அவருடைய கட்சி விலகிக்கொண்டது இந்து பத்திரிகை பாராளுமன்றத்தில் நடைபெற்ற விவாதத்தைப் பற்றி மே முதல் நாள் அன்று பின்வருமாறு எழுதியது. “தேசிய ஜனநாயகக் கூட்டணியில் நட்பு கொண்டிருந்த கட்சிகள் எதிர்க்கட்சியோடு சேர்ந்து குஜராத்தில் நடைபெற்ற படுகொலையை வன்மையாகக் கண்டித்தன. நரேந்திர மோடி பதவி விலக வேண்டும் என்று கோரின. மத்திய அமைச்சர் ஒமர் அப்துல்லா (தேசிய மாநாடு) வாக்கெடுப்பில் கலந்து கொள்ளப் போவதில்லை என்று அறிவித்தார். எர்ரன் நாயுடு (தெலுங்கு தேசம்), மமதா பானர்ஜி (திரினாமூல் காங்கிரஸ்) ஆகியோர் மோடி அரசாங்கம் டிஸ்மிஸ் செய்யப்பட வேண்டுமென்று கோரினார்கள். முன்னாள் பிரதமர் சந்திரசேகர், பா.ஜ.க. சார்பில் பேசிய உமாபாரதியைக் கண்டித்தார். அம்மையார் சன்னியாசினியாகப் பேசவில்லை நாஜி இயக்கத் தொண்டராகப் பேசினார் என்று அவர் கூறினார்.

“ஏன் தாமதிக்கிறீர்கள்? குஜராத்தில் இன்னும் எவ்வளவு பேர் கொலை செய்யப்பட வேண்டும்? இன்னும் எத்தனை தீவைப்புச் சம்பவங்கள் நடைபெற வேண்டும்?” என்று சமாஜ்வாடி கட்சித் தலைவர் முலாயம் சிங் யாதவ் உணர்ச்சிகரமாகக் கேட்டார். “அரசாங்கம்

இருக்கிறதா, போகிறதா என்பது பிரச்சினையல்ல் நாடு காப்பாற்றப்பட வேண்டும் அதுதான் பிரச்னை " என்று அவர் கூறினார். "நரேந்திர மோடியின் திட்டப்படி இனப் படுகொலையை குஜராத் அரசாங்கம் நடத்தியிருக்கிறது" என்று சி.பி.எம். தலைவர் சோம்நாத் சாட்டர்ஜி கூறினார்.

எதிர்க்கட்சித் தலைவரும், காங்கிரஸ் தலைவருமான சோனியா காந்தி குஜராத்தில் நடைபெற்ற கற்பழிப்புகள் மற்றும் படுகொலைகளைப் பற்றி விரிவாகப் பேசினார். "நரேந்திரமோடியை உடனடியாகப் பதவியிலிருந்து நீக்க வேண்டும். 355-ஆவது ஷரத்தின் கீழ் மாநில அரசுக்கு எச்சரிக்கை நோட்டிஸ் தரவேண்டும். உச்சநீதிமன்ற நீதிபதி குஜராத் சம்பவங்களைப் பற்றி விசாரணை நடத்த வேண்டும்" என்று அவர் கோரினார். குற்றவாளிகள் எல்லோரும் தண்டிக்கப்பட வேண்டும் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உடனடியாக நிவாரணம் அளிக்கப்பட வேண்டும்" என்றார் அவர்.

காந்திஜி பிறப்பிடமான போர்பந்தரில் ஒரு மாபெரும் பொதுக் கூட்டத்தில் சோனியா பேசினார். அப்போது அவர் "காந்திஜியின் குஜராத் கோட்ஸேயின் குஜராத்தாக மாறிக் கொண்டிருக்கிறது" என்று குறிப்பிட்டார். இந்தியாவின் குடியரசுத் தலைவர் சில நாட்களுக்கு முன்பு தன்னுடைய வேதனையை வெளியிட்டார். தேசிய ஐக்கிய கூட்டணிக்கு ராஜ்ய சபையில் பெரும்பான்மை கிடையாது. ஆகவே பா.ஜ.க. அரசாங்கம் தந்திரமாக நடந்து கொண்டது. 170-ஆவது ஷரத்தின் கீழ் தீர்மானம் கொண்டு வந்தால் விவாதத்துக்குப் பிறகு வாக்கெடுப்பு நடைபெற வேண்டும். எனவே 355-ஆவது ஷரத்தின் கீழ் எதிர்க்கட்சிகள் கொண்டு வந்த தீர்மானத்தை அரசாங்கம் ஏற்றுக் கொண்டது. ராஷ்ட்ரிய ஜனதா தளத்தின் தலைவரான லாலு பிரசாத் யாதவ் கடுமையாகப் பேசினார்: 'ஆர்.எஸ்.எஸ் இயக்கம் கோத்ரா சம்பங்களைத் தூண்டியிருக்கிறது, நரேந்திரமோடியை 'பொடா" சட்டத்தின்கீழ் கைது செய்ய வேண்டும் என்று கூறினார்.

மேற்கூறிய சூழ்நிலையில் மத்திய அரசாங்கம் குஜராத் அரசாங்கத்தைக் கட்டுப்படுத்துவதற்கு ஏதாவது நடவடிக்கை எடுக்க வேண்டியிருந்தது. பஞ்சாபில் காவல்துறையின் தலைமை அதிகாரியாக இருந்த கே.பி.எஸ்.ஜில் நரேந்திரமோடிக்கு ஆலோசகராக

நியமிக்கப்பட்டார். பஞ்சாபில் பயங்கரவாதத்தை ஒடுக்கிய ஜில்லைப் பாதுகாப்பு ஆலோசகராக நியமித்ததைக் குஜராத் அரசாங்கம் விரும்பவில்லை . எனினும் மத்திய அரசாங்கம் தலையிட்ட பிறகு, வன்முறை குறையத் தொடங்கின.

ஜூலை மாதத் துவக்கத்தில் மாநில அரசாங்கம் ஜில்லை டில்லிக்கு அனுப்பியது, சட்ட சபையைக் கலைத்தது உடனடியாகத் தேர்தல் நடத்த வேண்டும் என்று தேர்தல் ஆணையத்தைக் கேட்டுக் கொண்டது. மாநிலத்தில் இருந்த அரசியல் நிலைமை பா.ஜ.க. கட்சிக்குச் சாதகம் என்று நரேந்திரமோடி கருதினார். 1. தேர்தல் ஆணையம் 16-8-2002-ல் கூடி குஜராத்தில் தேர்தல் நடத்துவதைப் பரிசீலித்தது. சட்டம் - ஒழுங்கு நிலைமை இயல்பாக இல்லை, வகுப்புக் கலவரங்களால் ஏற்பட்ட துன்பங்கள் மறையவில்லை, குற்றம் செய்தவர்கள் கைது செய்யப்பட்டு, தண்டிக்கப்படவில்லை என்று தேர்தல் ஆணையம் சுட்டிக்காட்டியது. இப்பொழுது தேர்தல் நடத்தினால் மறுபடியும் கலவரங்கள் ஏற்படும் என்று தேர்தல் கமிஷன் கருதியது. தேர்தல் கமிஷனின் எல்லா உறுப்பினர்களும் குஜராத்துக்குச் சென்றார்கள். குஜராத்தின் 25 மாவட்டங்களின் 20 மாவட்டங்களில் இயல்பு நிலைமை ஏற்படவில்லை . “182 சட்டசபைத் தொகுதிகளில் 154 தொகுதிகளைச் சேர்ந்த 151 நகரங்கள் மற்றும் 993 கிராமங்கள் பாதிக்கப்பட்டுள்ளன. 464 காவல் நிலையங்களில் 284 காவல் நிலையங்கள் பாதிக்கப்பட்டுள்ளன“ என்று காவல் துறை உதவி தலைமை அதிகாரி ஆர்.பி.ஸ்ரீகுமார் கூறியதை தேர்தல் கமிஷன் மேற்கோள் காட்டியது. மற்ற அதிகாரிகள் உண்மை நிலையை மறைத்தார்கள் என்று கமிஷன் கூறியது. கோத்ரா படுகொலைக்குப் பிறகு கிராமங்களிலிருந்து வெளியேறிய மக்கள் மீண்டும் தங்கள் கிராமங்களுக்குத் திரும்பி வராததால் தேர்தல் பட்டியல்களைச் சரிபார்க்க இயலாது என்றும் தேர்தல் கமிஷன் கூறியது. ஒரு மாநில அரசைப் பற்றி தேர்தல் கமிஷன் கடுமையான சொற்களைப் பயன்படுத்தியது அனேகமாக இதுவே முதல் தடவையாக இருக்கும்.

தேர்தல் கமிஷனின் முடிவை எதிர்த்து குஜராத் அரசு உச்சநீதிமன்றத்தில் முறையிட்டது. ஆனால் உச்சநீதிமன்றம் தேர்தல் கமிஷன் முடிவை அங்கீகரித்தது. 2002 டிசம்பர் மாதத்தின் மத்தியில் சட்டமன்றத் தேர்தல் நடைபெறும் என்று தேர்தல் கமிஷன் அறிவித்தது.

செப்டம்பர், 24-ல் காந்திநகரில் பிரபலமான ஆலயத்தைப் பயங்கரவாதிகள் தாக்கினார்கள். 30 நபர்கள் கொல்லப்பட்டனர். அது ஒரு நெருக்கடியை ஏற்படுத்தியது. எனினும், தேர்தல் நடைபெற்றது. பா.ஜ.க. அதிக பெரும்பான்மை பெற்றது. மோடி மீண்டும் முதல் அமைச்சரானார். இந்து வெறியர்கள் தேர்தல் முடிவைப் பற்றி மகிழ்ச்சி அடைந்தார்கள். வி.எச்.பி. தலைவரான பிரவீண் தொகாடியா 2 ஆண்டுகளில் இந்து ராஷ்ட்ரத்தை அமைப்போம்...... இந்தியாவின் வரலாற்றையும் பாகிஸ்தான் பூகோளத்தையும் அப்போது மாற்றுவோம் என்று அப்போது பேசினார்.

கோத்ரா சம்பவங்கள் இந்திய சமூகத்தில் உள்ள நல்ல அம்சங்களையும் தீய அம்சங்களையும் எடுத்துக் காட்டின. ஒரு பக்கத்தில், கிராமங்களிலிருந்து வெளியேறிய முஸ்லிம்கள் மீண்டும் தங்கள் கிராமங்களுக்குத் திரும்ப முடியவில்லை. இந்துக்கள் நடத்திய தொழில்களில் வேலைபார்த்த முஸ்லிம்களுக்கு மறுபடியும் வேலை கிடைக்கவில்லை. காவல்துறை குற்றம் செய்தவர்கள் மீது நடவடிக்கை எடுப்பதில் தாமதப்படுத்தியது. கோத்ராவில் ரயில் பெட்டி எரிப்பில் உயிரிழந்தவர்களுக்கு (எல்லோரும் இந்துக்கள்) 2 லட்சம் ரூபாய் இழப்பீடு கொடுக்கப்பட்டது. கலவரங்களில் உயிரிழந்தவர்களுக்கு (எல்லோரும் முஸ்லிம்கள்) 1 லட்சம் ரூபாய் இழப்பீடு கொடுக்கப்பட்டது. முஸ்லிம்களுக்கு நிவாரண முகாம்கள் அமைக்கப்படவில்லை. ஏற்கெனவே அமைக்கப்பட்டிருந்த முகாம்களும் மூடப்பட்டன. முஸ்லிம்கள் காரணம் இல்லாமல் கைது செய்யப்பட்டார்கள். முஸ்லிம்கள் தங்கள் பாதுகாப்புக்காக பொதுவான குடியிருப்புகளை விட்டு வெளியேறி முஸ்லிம் வசிக்கும் குடியிருப்புகளுக்குச் சென்றனர். காவலர்களையும், ரவுடிக் கும்பல்களையும் மிகவும் துணிந்தவர்கள்தான் எதிர்த்து நிற்க முடிந்தது.

முகுல் சின்ஹா , ஷப்னம் ஹஸ்மி, டீஸ்டா செதல்வாட், பாதிரியார் செஸில் பிரகாஷ் மற்றும் சிலர் தங்களுடைய குடிமக்கள் அமைப்புகளின் சார்பில், பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவி செய்தார்கள். குடிமக்கள் டிரிபியூனல் மனித உரிமை மீறல்கள் மற்றும் பாலியல் வன்முறை சம்பந்தமாக விவரங்களைச் சேகரித்தது. ராகேஷ் சின்ஹா உணர்ச்சிகரமான ஆவணப் படங்களைத் தயாரித்து நாடு முழுவதிலும் திரையிட்டார். பர்சானியா என்ற திரைப்படமும் தயாரிக்கப்பட்டது.

உச்சநீதிமன்றமும் தேசிய மனித உரிமை கமிஷனும் பாராட்டத்தக்க நடவடிக்கைகளை மேற்கொண்டன. வடோதாராவில் ஒரு பேக்கரிக்குத் தீ வைக்கப்பட்டது. 14 நபர்கள் கொல்லப்பட்டனர். எனினும் குற்றவாளி களை நீதிமன்றம் விடுதலை செய்தது. மேல்முறையீட்டில் வழக்கு வேறு மாநிலத்துக்கு மாற்றப்படவேண்டும் என்று உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது. குஜராத் காவல்துறை 4,252 வழக்குகளைப் பதிவு செய்திருந்தது. அவற்றில் 2,100 வழக்குகளை ஆதாரமில்லை என்று காவல்துறை கைவிட்டது. உச்சநீதிமன்றம், வழக்குகளைக் கைவிட்டது பற்றி ஆராய்வதற்குப் பரிசீலனைக் கமிட்டியை நியமித்தது. அந்தக் கமிட்டியின் செயல்பாட்டைப் பற்றி குஜராத் தலைமைக் காவல் அதிகாரி மூன்று மாதங்களுக்கு ஒருமுறை உச்சநீதிமன்றத்துக்கு அறிக்கை அனுப்ப வேண்டும் என்று உத்தரவிடப்பட்டது.

2004, மே மாதத்தில் நடைபெற்ற பாராளுமன்றத் தேர்தலில் தேசிய ஜனநாயகக் கூட்டணி அரசு தோல்வி அடைத்தது. காங்கிரஸ் தலைமை தாங்கிய கூட்டணி வெற்றிபெற்றது. குஜராத்தில் நடைபெற்ற கலவரங்கள் மற்றும் படுகொலை நாடு தழுவிய அளவில் வகுப்புவாத சக்திகளுக்குத் தோல்வியைக் கொடுத்தது. 2005, மார்ச்சில் நரேந்திரமோடி அமெரிக்காவுக்குச் செல்ல விரும்பியபொழுது, அமெரிக்க அரசாங்கம் மோடிக்கு விசா கொடுக்க மறுத்தது. அமெரிக்காவில் வசித்த இந்தியர்களும் சர்வதேச மத சுதந்திர கமிஷனின் உறுப்பினர்களும் முக்கியமான செனட்டர்களும் நரேந்திரமோடி அமெரிக்கா வருவதைத் தடுத்தார்கள். இந்திய அரசாங்கம் நரேந்திரமோடிக்கு அமெரிக்கா விசா கொடுக்காமல் அவமதிப்பது முறையல்ல என்று தெரிவித்தது. பிரிட்டிஷ் அரசாங்கமும் மோடி லண்டனுக்கு வரவிடாமல் தடுத்தது. முஸ்லிம்களை எதிர்த்து குஜராத்தில் நடைபெற்ற படுகொலைகள் இந்திய மக்களை வேதனைப்படுத்தின. குஜராத் காவல்துறை குற்றவாளிகளைத் தேடுவதாகச் சொல்லி முஸ்லிம்களை வேட்டையாடுவது இந்தியா முழுவதும் கண்டனம் செய்யப்பட்டது. பரோடா பல்கலைக்கழகத்தில் ஓவியக் கலை படித்துக்கொண்டிருந்த மாணவன் 2007, ஏப்ரலில் கைது செய்யப்பட்டார். அந்த மாணவர் வரைந்த ஓவியம் மத உணர்ச்சியைப் புண்படுத்துவதாகக் குற்றம் சாட்டப்பட்டது. மாணவனை ஆதரித்த பேராசிரியர் டீன் பதவியிலிருந்து விலக்கப்பட்டார். இந்துத்துவா அரசியல்வாதிகளும் கோத்ரா தொகுதி சட்டமன்ற உறுப்பினரும்

முஸ்லிம்களைத் தாங்கள் பழிவாங்கியதைப் பற்றிய விவரங்களை வெளிப்படையாகப் பேசிக்கொண்டிருந்தை தெஹல்கா ரகசியமாகப் படம்பிடித்து 25-10-2007-ல் ஒளிபரப்பியது.

இந்து வகுப்புவாதிகள் வெற்றியடையவில்லை. வெற்றியடையா விட்டாலும் தாங்கள் செயல்களுக்காக அவர்கள் வருத்தப்படவில்லை. 2007-ல் நடைபெற்ற சட்டமன்றத் தேர்தலில் வெற்றிபெற்று நரேந்திரமோடி மறுபடியும் முதலமைச்சரானார். மகாத்மா காந்தி குஜராத்தில் பிறந்தார். ஆனால், அந்த மாநிலத்தில் மதவாத வெறி வெற்றியடைந்திருக்கிறது.

## 13.4. தீவிரவாதப் பிரச்சனை

சமகால இந்தியாவில் தீவிரவாதம் முக்கியச்சவாலாக உள்ளது. அதிலும் மதத்தை மையமாகக் கொண்ட தீவிரவாதம் மக்களின் உணர்வோடு பின்னிப்பினைந்துள்ளது. தீவிரவாதத்திற்கு மதம் சாதியோ அல்லது சமூகமோ கிடையாது. மாறாக இந்த காரணியை ஒரு துருப்புச் சீட்டாகத் தீவிரவாதத்தில் ஈடுபடுவோர் பயன்படுத்துகின்றன.

இந்தியாவை பொருத்தமட்டில் 1990 ஆம் ஆண்டு வாக்கில்தான் தீவிரவாத வன்முறைகள் முகம்காட்டத்துவங்கின. காஷ்மீரில் பாகிஸ்தானால் உருவாக்கப்படும் எல்லை கடந்த பயங்கரவாதம் அந்த மாநிலத்தின் பொருளாதாரத்தையும் அமைதியும் சீர்குழைத்து வருகிறது. மேலும், அந்த நாட்டின் ஆதரவோடு இந்தியாவில் பிறப்பகுதியிலும் தீவிரவாதச் செயல்கள் நடைப்பெறுகிறது. குறிப்பாக,1993 ஆம் ஆண்டு மும்பை குண்டுவெடிப்பும், 1999 ஆம் ஆண்டு இந்திய ஏர்லைன்ஸ் கடத்தப்பட்டதும். 2008 ஆம் ஆண்டு மும்பையிலுள்ள முக்கிய ஹோட்டல்களிலும் நடைபெற்ற தீவிரவாதச் செயல்களும், 2007 ஆம் ஆண்டு ஹைத்ராபாத் குண்டுவெடிப்பும் மற்றும் 2019 ஆம் ஆண்டு சிஆர்பிஎ.ஃப் படைகள் மீது நிகழ்த்தியத் தீவிரவாதத் தாக்குதலும் நாட்டின் அமைதிக்கும் பாதுகாப்பிற்கும் மிகப்பெரியச் சவாலாகவுள்ளது. 11.09.2001 ஆம் ஆண்டு அமெரிக்காவில் இரட்டைக் கோபுரங்கள் தாக்கப்பட்ட நிகழ்ச்சி உலகநாடுகளை தீவிரவாதத்தின் கொடுமைத்தன்மையை உணரச்செய்தது. மேலும்.தீவிரவாதத்திற்கெதிரான உலகலாவிய ஒருங்கிணைப்பை உருவாக்கியது. உலகத்தின் எந்த ஒரு

நாடும் தீவிரவாதத்தால் பாதிப்பதை தடுத்து நிறுத்த பல்வேறு முயற்சி எடுக்கப்பட்டுள்ளது.

தீவிரவாதத்தால் அதிகம் பாதிக்கப்பட்டுள்ள நாடு இந்தியாவாகும். இரண்டுப் பிரதமர்களை தீவிரவாததிற்கு பழிக்கொடுத்துள்ளது. நாகரிகமான உலகத்தில் தீவிரவாதத்திற்கு இடமே இல்லை. தீவிரவாதம் எந்த வடிவத்தில் வந்தாலும் வேரோடும், வேர்மண்ணோடும் பிடுங்கி எரியப்படவேண்டியத் தீமையாகும். இக்காலத்தில் தீவிரவாதம் இந்தியாவிற்கு மட்டுமின்றி மற்ற நாடுகளுக்கும் மிகப்பெரியச் சவாலாகவுள்ளது.

## 13.5. தாராளமயமாக்கல், தனியார்மயமாக்கல்

தொழில்மயமாக்கலின் மூலமே ஒரு நாடு பொருளாதார முன்னேற்றம் அடைய முடியும் என்பது நன்கு வளர்ந்த நாடுகள் உணர்த்தும் பாடமாகும். சுதந்திர இந்தியா திட்டமிட்ட பொருளாதார வழியில் சுபிட்ச இந்தியாவாக மாற முடியும் என்று தீர்மானித்தது. ஆனால் நாற்பதாண்டு காலம் (1950 - 1990) நடைமுறைப்படுத்தப்பட்ட இத்திட்டமிட்ட பொருளாதார முறையில் தக்க இடைத்திருத்தங்கள் செய்யப்படாமையால் ஏற்றுமதி குறைந்து, இறக்குமதி அதிகரித்து, அந்நியச் செலாவணி சுருங்கி, பொருளாதாரப் பின்னடைவு ஏற்பட்டது. 1980களில் மேற்கொள்ளப்பட்ட பொருளாதார சீர்திருத்த நடவடிக்கை மலர்ந்து 1991ல் புதிய பொருளாதாரக் கொள்கையாக வெளிப்பட்டது. ”சுதந்திர இந்தியப் பொருளாதார வரலாற்றில் முக்கிய மைல்கல்”லான இக்கொள்கையின் தூண்களாவன: 1)தாராளமயமாக்கல் 2) தனியார் மயமாக்கல்.இவையே 21ம் நூற்றாண்டு இந்தியாவின் புதிய பொருளாதாரப் பாதைகளாகும்.

## 13.5.1.தாராளமயமாக்கல் (Liberalisation)

அந்நிய ஆதிக்கத்திலிருந்து விடுபட்ட இந்தியா தனக்குத்தானே ஏற்படுத்திக் கொண்ட கட்டுப்பாடுகளால் பொருளாதாரச் சுதந்திரம் பெற முடியவில்லை. பொருளாதார சுதந்திரத்துக்கான ஒரு வழியே தாராளமயமாக்கலாகும். “தாராளமயமாக்கல்“ என்ற சொல் உரிமம்

(Licence), இசைவாணை (Permit) மற்றும் உரிமைப் பங்கு (Quota) ஆகிய முப்பெரும் தடைகளைத் தளர்த்தி, தனியார் துறையைத் தடையின்றி வளரவிடுவதைக் குறிக்கிறது. அதாவது தனியார் துறையில் ஒரு தொழிலைத் துவங்கவோ அல்லது தொழிலை விரிவுபடுத்தவோ அல்லது ஒரு தொழிலை மற்றொரு தொழிலுடன் இணைக்கவோ விதிக்கப்பட்டிருந்த கட்டுப்பாடுகளை, விதிகளை, நடைமுறைகளை விலக்கிக் கொள்வதாகும். வேறுவிதமாகக் கூறுவதாயின் அரசாங்கப் பொதுத்துறைக்கும், தனியார் துறைக்குமிடையே இருந்த இரும்புத் திரை“யை நீக்குவதாகும். சுருங்கக்கூறின் தனியார் துறையை அரசாங்க ஆதிக்கத்திலிருந்து விடுவிப்பதே தாராளமயமாக்கல் என்று கூறப்படுகிறது.

தாராளமயமாக்கல் கொள்கையின் மூலம் தொழில் முதலீடு, தொழில் துவங்கல், தொழிலை விரிவுபடுத்தல், அந்நியச் செலாவணி, வெளிநாட்டு வர்த்தகம் ஆகியவற்றின் மீது விதிக்கப்பட்டிருந்த கட்டுப்பாடுகள் படிப்படியாகத் தளர்த்தப்பட்டனஅல்லது விலக்கிக் கொள்ளப்பட்டன. இதன் விளைவாக அரசாங்கமே நடத்தி வந்த விமானப் போக்குவரத்து, மின் உற்பத்தி, பாதை போடல், உணவுப் பதனிடுதல், வங்கி, ஆயுள் காப்பீடு போன்ற பொதுத்துறைத் தொழில்களில் தனியார் பங்கேற்பும், அந்நிய முதலீடும் அனுமதிக்கப்பட்டன. இந்தியக் கம்பெனிகளின் பங்குகளை வெளிநாட்டுக் கம்பெனிகள் வாங்கும் நிலை ஏற்பட்டது. இறக்குமதி ஏற்றுமதி காப்பு வரி / சுங்க வரி குறைக்கப்பட்டதால் வெளிநாட்டு வர்த்தகம் வெகுவாக வளர்ந்தது. வர்த்தகக் கணக்கில் ரூபாய் மாற்றத்துக்கு (Rupee Convertibility) அனுமதிக்கப்பட்டது. இவற்றின் விளைவாக தேக்கமுற்ற தன்னிறைவுப் பொருளாதாரம் துடிப்புள்ள உலகப் பொருளாதாரத்துடன் இணைக்கப்பட்டது.

## 13.5.2. தனியார்மயமாக்கல் (Privatisation)

அரசாங்க ஆதரவு, அரவணைப்பு, பாதுகாப்பின் கீழ் துவக்கப்பட்ட பொதுத்துறை நிறுவனங்கள் கட்டுப்பாடின்றி வளர்ந்து வெள்ளை யானைகளாக“ (White Elephants) உருவெடுத்தன. 1950ல் அரசாங்கம் 5 பொதுத்துறை நிறுவனங்களில் 29 கோடி ரூபாய் முதலீடு செய்தது. 1991ல் இந்நிறுவனங்களின் எண்ணிக்கை 236 ஆகப் பெருகி 1,01,797

குறிப்பு

கோடி ரூபாயை மூலதனமாகக் கொண்டிருந்தன. இவற்றுள் பல நட்டத்தில் இயங்கிக் கொண்டிருந்தன. இலாபம் ஈட்டிய நிறுவனங்களிடமிருந்து சேமிப்பு மற்றும் மூலதனத்திலிருந்து கிடைத்த பயனும் மிகக் குறைவாக இருந்தது. மக்களின் வரிப் பணத்தைத் தொடர்ந்து விரயமாக்க விரும்பாத அரசாங்கம் தனியார்மயமாக்கல் கொள்கையை ஏற்றுக் கொண்டது.

'தனியார்மயமாக்கல்" என்றால் பொதுத்துறை நிறுவனங்களின் உரிமை (Ownership), அமைப்பு :(Organisation), மேலாண்மை (Management), செயல்பாடு (Operation), கட்டுப்பாடு (Control) ஆகியவற்றைத் தனியார் வசமாக்கலாகும். அதாவது பொதுத்துறை நிறுவனங்களின் பங்குகளை (Shares) தனியாருக்கு விற்றுவிடுவது. பங்கு விலக்கல் (Disinvestment) கொள்கை மூலம் தனியார்மயமாக்கல் செயல்படுத்தப்பட்டது.

அரசாங்கத்தின் தொழில் கொள்கை அறிக்கை (1991) தேர்ந்தெடுக்கப்பட்ட பொதுத்துறை நிறுவனங்களில் பங்கு விலக்கல் பற்றி அரசாங்கத்தின் நோக்கத்தை அறிவித்தது. பங்கு விலக்கல் பற்றிய ரெங்கராஜன் கமிட்டி (1993) இதற்கான பரிந்துரைகளைச் செய்தது. 1999 டிசம்பர் மாதம் பங்கு விலக்கல் துறை (Department of Disinvestment) புதிதாக உருவாக்கப்பட்டது. பங்கு விலக்கல் பற்றி முடிவெடுக்க விரிவான, படிமுறை, நிர்வாக நடைமுறை மேற்கொள்ளப்பட்டது. அதன்படி 1) பொதுத்துறை நிறுவனத்தை முழுமையாக விற்று விடலாம் 2) அரசாங்கமும் தனியாரும் கூட்டாக நிர்வகிக்கலாம் 3)மூடிவிடலாம் 4) தொழிலாளர்களே பொறுப்பேற்று நடத்தலாம் 5) தனியாருக்குக் குறிப்பிட்ட காலத்துக்குக் குத்தகைக்கு விடலாம் 5) நிதிக் கட்டமைப்பை மறுசீரமைக்கலாம் அல்லது 6) சார்பு நிலையங்களின் பங்குகளை வைத்திருக்கும் கம்பெனிகளை (Holding Companies)ப் போன்று அமைப்பு மாற்றம் செய்யலாம்.

தனியார்மயமாக்கல் கொள்கைப்படி மாடர்ன் புட்ஸ் (Modern Foods) என்ற பொதுத்துறை நிறுவனம் லீவர் கம்பெனிக்கு விற்கப்பட்டது. பாரத் அலுமினியம் கம்பெனி ஸ்டெர்லைட் இன்டஸ்ட்ரீசுக்கு விற்கப்பட்டது. அஸ்வின் நிசாம் என்ற நிறுவனம் மகேந்திரா என்ற தனியார் நிறுவனத்திடம் ஒப்படைக்கப்பட்டது. மங்களூர் கெமிக்கல்

மற்றும் பெர்டிலைசர் என்ற அரசாங்க நிறுவனம் ரூபி குரூப் என்ற நிறுவனத்திற்கு விடப்பட்டது. இலாபம் ஈட்டக் கூடிய வளமான எண்ணெய் நிறுவனங்களைக் (HPCL, BPCL, IOC, ONGC, GAIL)க் கூட 2002 ஏப்ரல் மாதம் முதல் விற்பதற்கான முயற்சி மேற்கொள்ளப்பட்டது. உச்ச நீதிமன்றத்தின் குறுக்கீட்டால் கட்டுப்பாடற்ற பங்கு மூலதன மாற்றம் தடை செய்யப்பட்டது. ஒருமித்த கருத்து உருவாகாமல் தனியார்மயமாக்கல் கொள்கையை செயல்படுத்த முடியாது என்ற உண்மையை பா.ஜ.க. தலைமையிலான தேசிய ஜனநாயகக் கூட்டணி அரசாங்கம் உணர்ந்தது. இதை அதற்குப் பின் காங்கிரஸ் தலைமையில் அமைந்த தேசிய முற்போக்குக் கூட்டணி அரசாங்கமும் எதிர் கொண்டுள்ளது.

குறிப்பு

**மதிப்பீடு**

1991லிருந்து பின்பற்றப்பட்டு வரும் தனியார் மயமாக்கல் கொள்கையின் விளைவாக இந்தியத் தொழில்கள் பொதுத்துறை, தனியார்துறை - உலகப் பொருளாதாரப் போட்டியைத் துணிவுடன் எதிர்கொள்கின்றன. இந்தியா தன் பலத்தை உணரத் தொடங்கியுள்ளது. எடுத்துக்காட்டாக இந்திய மென்பொருள் தொழில்நுட்பம் (Software Technology) உலக அங்கீகாரம் பெற்றுள்ளது. வெளிநாட்டுக் கம்பெனிகள் தங்களது மென்பொருள் தேவைகளுக்கு இந்தியாவை நாடி வரத் துவங்கியுள்ளன! பொருள் சார்ந்த பொருளாதாரம் அறிவு சார்ந்த பொருளாதாரமாக மாறிவருகிறது. இதன் விளைவாக இந்தியாவில் ‘புதிய போட்டி மனப்பான்மை “ (Competitive mind-set)யும், தொழில் உற்பத்தித்திறன் கலாச்சார (Productivity Culture)மும் உருவாகி வருகிறது. இது இந்தியா 21 ஆம் நூற்றாண்டில் ஒரு பொருளாதார சக்தியாக உருவாவகற்கான அறிகறியாகம்.

தனியார்மயமாதல் கலப்படமற்ற நன்கொடையல்ல என்று கூறப்படுகிறது. தேவையான துறைகளைத் தவிர்த்து நுகர்வோர் பொருள்களில் அந்நிய முதலீடு செய்யப்படுகிறது் உயர்தர தொழில் நுட்பத்தைப் பகிர்ந்து கொள்ளாமையால் தொழில் நுட்ப இடைவெளி“ அதிகரிக்கிறது் அந்நியச் செலாவணி விதிகள் மீறப்படுகின்றன் நியாயமற்ற போட்டியால் உள்நாட்டு நிறுவனங்கள் பாதிக்கப்படுகின்றன் வேலையில்லாத் திண்டாட்டம் அதிகரிக்கிறது் அடித்தட்டு மக்களின்

பிரச்னைகளைத் தீர்க்கப் பயன்படவில்லை. போன்ற குறைபாடுகள் உள்ளன. அரசாங்கம் தக்க தடுப்பு நடவடிக்கைகள் மூலம் இக்குறைபாடுகளைத் தீர்க்க முடியும். தனியார்மயமாக்கல் காலக் குரல் காலத்தின் கட்டாயம்.

**உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கவும்**

1. எந்த ஆண்டு மும்பை குண்டுவெடிப்பு நிகழ்ந்தது?

2. எப்பொழுது அமெரிக்காவில் இரட்டைக் கோபுரங்கள் தாக்கப்பட்டன?

3. அரசாங்க ஆதரவு, அரவணைப்பு, பாதுகாப்பின் கீழ் துவக்கப்பட்ட பொதுத்துறை நிறுவனங்கள் எவ்வாறு அழைக்கப்பட்டது?

4. மாடர்ன் புட்ஸ் (Modern Foods) என்ற பொதுத்துறை நிறுவனம் எந்த கம்பெனிக்கு விற்கப்பட்டது?

## 13.6. உங்கள் முன்னேற்ற கேள்விகளை சரிபார்க்க விடைகள்

1. 1993
2. 11.09.2001
3. வெள்ளை யானைகள்
4. லீவர் கம்பெனிக்கு

## 13.7. அத்தியாயச் சுருக்கம்

- சுதந்திர இந்தியா பல்வேறு சவால்களை சந்தித்து வந்துள்ளது. குறிப்பாக ”மொழிப் போராட்டங்கள், வகுப்புக் கலவரங்கள், இந்திராகாந்தி, ராஜிவ்காந்தி படுகொலை, சீனா மற்றும் பாகிஸ்தான் போர்கள், பஞ்சாபில் பயங்கரவாதத்தின் வளர்ச்சி, காஷ்மீரில் அரசியல் நெருக்கடிகள், அஸ்ஸாமில் இனக்கலவரங்கள், தமிழ்நாட்டில் இந்தி எதிர்ப்புப் போராட்டங்கள், ஊழல், சாதிச் சண்டைகள், கொத்தடிமை முறை, குழந்தைத் தொழிலாளர், பாலியல் வன்முறைகள் மனித உரிமை மீறல்கள் போன்றவை நிலவுகின்றன.”
- சமகால இந்தியாவில் தீவிரவாதம் முக்கியச்சவாலாக உள்ளது. அதிலும் மதத்தை மையமாகக் கொண்ட தீவிரவாதம் மக்களின்

உணர்வோடு பின்னிப்பினைந்துள்ளது. தீவிரவாதத்திற்கு மதம் சாதியோ அல்லது சமூகமோ கிடையாது. மாறாக இந்த காரணியை ஒரு துருப்புச் சீட்டாகத் தீவிரவாதத்தில் ஈடுபடுவோர் பயன்படுத்துகின்றன.

- தொழில்மயமாக்கலின் மூலமே ஒரு நாடு பொருளாதார முன்னேற்றம் அடைய முடியும் என்பது நன்கு வளர்ந்த நாடுகள் உணர்த்தும் பாடமாகும்
- "தாராளமயமாக்கல்" என்ற சொல் உரிமம் (Licence), இசைவாணை (Permit) மற்றும் உரிமைப் பங்கு (Quota) ஆகிய முப்பெரும் தடைகளைத் தளர்த்தி, தனியார் துறையைத் தடையின்றி வளரவிடுவதைக் குறிக்கிறது
- தாராளமயமாக்கல் கொள்கையின் மூலம் தொழில் முதலீடு, தொழில் துவங்கல், தொழிலை விரிவுபடுத்தல், அந்நியச் செலாவணி, வெளிநாட்டு வர்த்தகம் ஆகியவற்றின் மீது விதிக்கப்பட்டிருந்த கட்டுப்பாடுகள் படிப்படியாகத் தளர்த்தப்பட்டன.
- தனியார்மயமாக்கல்" என்றால் பொதுத்துறை நிறுவனங்களின் உரிமை (Ownership), அமைப்பு :(Organisation), மேலாண்மை (Management), செயல்பாடு (Operation), கட்டுப்பாடு (Control) ஆகியவற்றைத் தனியார் வசமாக்கலாகும்.
- அதாவது பொதுத்துறை நிறுவனங்களின் பங்குகளை (Shares) தனியாருக்கு விற்றுவிடுவது. பங்கு விலக்கல் (Disinvestment) கொள்கை மூலம் தனியார்மயமாக்கல் செயல்படுத்தப்பட்டது.

## 13.8. முக்கியச் சொற்கள்

**தீவிரவாதம்** : இசுலாமிய, இந்து, சீக்கிய, கிறித்தவ மற்றும் நக்சலைட் புரட்சி இயக்கங்கள் இந்தியாவில் தீவிரவாதத்தின் (Terrorism in India) மூலக்காரணிகளாக இருக்கின்றன. பிரச்சனைகளைத் தீர்க்க சமரசமற்ற, தீவிர வழிமுறைகளைக் கடைப்பிடிக்கும் முறை.

**துன**

**ியார்மயமாக்கல்** : தனியார்மயமாக்கல் (Privatization) என்பது அரசதுறையின் கட்டுபாட்டிலுள்ள நிறுவனங்களின் உடைமைகள் அல்லது

முகாமையினை தனியார்துறையிடம் பகுதியாகவோ அல்லது முழுமையாகவோ மாற்றம் செய்யும் நடவடிக்கையினைக் குறிக்கும்.

குறிப்பு

**தாராளமயமாக்கல் :** தாராளமயமாக்கல் என்பது பொருளாதார அல்லது சமூகக் கொள்கைகளில் அரசின் கட்டுப்பாடுகளைத் தளர்த்துவதாகும். 1991ஆம் ஆண்டில் இந்தியாவில் தாராளமயமாக்கல் நடைமுறைப்படுத்தப்பட்டது.

## 13.9. சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

**குறிகிய வினாக்கள்**

1. சமகாலச் சவால்களை குறித்து எழுதுக.
2. தாராளமயமாக்கல் குறித்து குறிப்பு வரைக.

**விரிவான வினாக்கள்**

1. இந்தியாவில் தீவிரவாதப் பிரச்சனைபற்றி கட்டுரை வடிவில் விவரி.
2. இந்திய வளர்ச்சிக்கு தாராளமயமாக்கல் மற்றும் தனியார்மயமாக்கல் குறித்து பகுப்பாய்வு செய்க

## 13.10. கூடுதல் வாசிப்புகள்

பிபன் சந்திரா, மிருதுலா முகர்ஜி, ஆதித்யா முகர்ஜி. 2015.*சுதந்திரத்திற்குப் பிறகு இந்தியா,* சென்னை: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.

வெங்கடேசன்.க. 2012. *சமகால இந்திய வரலாறு 1947-2012,* ராஜபாளையம்: வி.சி.பப்ளிகேஷன்ஸ்.

Bipan Chandra, Miridula Mukherjee, Aditya Mukherjee. 2008. *India since Independence*, Haryana: Penguin Books.

G. Vengatesan. 1991. *History of contemporary India 1947-2014*,Rajapalayam: VC Publications.

R.S. Chaurasia. 2002. *History of Modern India 1707 AD upto 2000 AD.* New Delhi: Atlantic Publishers & Distributors.

S.K. Shah. 2017. *India's Foreign Policy,* Alpha Editions.

V.N. Khanna, Leslie K Kumar. 2018. *Foreign Policy of India.* New Delhi: Vikas Publications PVT. LTD.

V. P. Dutt. 1993. *India's Foreign Policy.* New Delhi: Vikas Publications PVT. LTD.

குறிப்பு

# அலகு-14

## உலகமயமாக்கல் - மனித உரிமை மீறல்கள் - சுற்றுச்சூழல் பாதிப்பு

**பாட அமைப்பு**

14.1. முன்னுரை
14.2. நோக்கங்கள்
14.3. உலகமயமாக்கல் (Globalisation)
14.4. மனித உரிமை மீறல்கள்
14.5. சுற்றுச்சூழல் பாதிப்பு
14.6. உங்கள் முன்னேற்ற கேள்விகளை சரிபார்க்க விடைகள்
14.7. அத்தியாயச் சுருக்கம்
14.8. முக்கியச் சொற்கள்
14.9.சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்
14.10. கூடுதல் வாசிப்புகள்

## 14.1. முன்னுரை

உலகமயமாதல் என்பது 1990 ஆம் ஆண்டுகளுக்கு பிறகு இந்திய வரலாற்றில் அழிக்க முடியாத இடத்தில் அமர்ந்து உள்ளது. புதிய பொருளாதாரக்கொள்கையின் முக்கிய அமசமான உலக மயமாதலின் பல நன்மைகளும் சில தீமைகளும் உள்ளது. இது போலவே மனித உரிமைகள் என்பது இந்தியா மட்டும் இன்றி அனைத்து உலக நாடுகளிலும் பேச கூடிய மிகப்பெரிய கருத்து. மனித உரிமையை

நிலை நாட்ட இந்தியாவில் பல்வேறு சட்டதிட்டங்கள் நடைமுறையில் உள்ளது ஆகினும் மனித உரிமை மீறல் தொடர்பான செய்திகள் வந்த வண்ணம் உள்ளன. மேலும் சுற்றுப்புற சூழலை பாதுகாக்க வேண்டிய மிகப்பெரிய பொறுப்பு அரசாங்கங்களும் தனி நபருக்கும் உள்ளது. இத்தகைய சுற்றுப்புற சுழல்கள் எதிர் கொள்ளும் சவால்கள் மிகப்பெரியது. வளர்ச்சியை முன் நிறுத்தும் சமூகம் சுற்று புற சூழலை மீதும் மிகுந்த கவனத்தை செலுத்த வேண்டும். இந்த அத்தியாயமானது மேலை குறிப்பிடப்பட்டுள்ள அனைத்து அம்சங்களையும் ஆராய்கிறது.

## 14.2. நோக்கங்கள்

இந்தப் பாடத்தைப் படித்த பிறகு, கீழ்க்கண்டவற்றை அறிய முடியும்:

- உலகமயமாக்கல் குறித்து அறிய உதவுகிறது.
- மனித உரிமை மீறல்கள பற்றி தெரிய உதவுகிறது.
- சுற்றுச்சூழல் பாதிப்பு குறித்து விவரிக்கிறது.

## 14.3. உலகமயமாக்கல் (Globalisation)

தாராளமயமாக்கல், தனியார்மயமாக்கல் ஆகியவற்றின் தவிர்க்க முடியாத விரிவாக்கமே உலகமயமாக்கலாகும். இது பரிமாற்றப் பொருளாதாரம்" (Transactional Economy) என்றும் அழைக்கப்படுகிறது. உலகமயமாக்கல்" என்ற சொல் உலகளாவிய வர்த்தகத்தைக் குறிக்கிறது. வெளிநாட்டு வர்த்தகம் இந்தியாவுக்குப் புதிதல்ல. ஆனால் உலகமயமாக்கல் பொருளாதாரம் நாட்டுக்குப் புதிது. வெளிநாட்டு வர்த்தகம் அந்தந்த நாடுகளின் சட்டதிட்டங்களுக்குட்பட்டு நடத்தப்படும் ஏற்றுமதி இறக்குமதியாகும். உலகமயமாக்கல் என்பது ஏற்றுக்கொள்ளப்பட்ட உலக வர்த்தக விதிகளுக்குட்பட்டு மேற்கொள்ளப்படும் வர்த்தகமாகும்.

அறிவியல், தொழில்நுட்ப, தகவல் தொடர்பு விரிவாக்கத்தின் விளைவாக உலகமே ஒரு பொருளாதாரப் பொதுச் சந்தை (Global Market) ஆகிவிட்டது. இச்சந்தைக்கு எல்லைகள் இல்லை தடைகள் குறைவு போட்டிப் பொருளாதாரத்துக்கான சுதந்திரம் அதிகம். உலகமயமாக்கலால் மூலதனம், தொழில்நுட்பம், பண்டப் பரிவர்த்தனை,

உழைப்பு ஆகியவை தங்குதடையின்றி பரிமாறிக் கொள்வதற்கான வாய்ப்பு ஏற்படுகிறது. “யாதும் ஊரே யாவரும் கேளிர்“ என்ற கனவு நனவாகிறது.

21-ம் நூற்றாண்டின் நுழைவாயிலில் உள்ள இந்தியா உலகப் பொருளாதாரச் சூழ்நிலை மாற்றத்துக்கேற்ப தன்னை மாற்றிக் கொள்ள வேண்டிய கட்டாயத்தில் உள்ளது. வளர்ந்த நாடுகளின் பொருளாதாரத்தோடு இந்தியப் பொருளாதாரத்தை மறுபுத்தமைத்து (Reinvent), மறு அறிமுகம் (reorient) செய்து, மறு சீரமைத்து (Restructure), மறுஒத்துப் போதலுக்கான (Readjust) உருமாற்றம் செய்து கொள்ள வேண்டியது இன்றியமையாததாகும். உலகமயமாக்கல் என்பது ”பாதுகாக்கப்பட்ட நீச்சல் குளத்திலிருந்து போட்டிப் பேரலைகளைக் கொண்ட கடலுக்குச் சென்று நீச்சலடிப்பதைப் போன்றது”. ”உலகமயமாக்கல் மூலம் அரசியல் சுதந்திரமும் பொருளாதாரச் சார்புடைமையும் முரண்பட்டவையல்ல என்பதை இந்தியத் தலைமை ஏற்றுக் கொண்டுள்ளது முதிர்ந்த அனுபவத்துக்கான முக்கிய அடையாளமாகும்” என்று கூறுகிறார் சசி தரூர் (Shashi Tharoor).

**உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கவும்**

1. உலகமயமாக்கல்“ என்ற சொல்எதைக் குறிக்கிறது?

## 14.4. மனித உரிமை மீறல்கள்

**இந்தியாவில் மனித உரிமைகள்**

உரிமை மனிதனின் உடன்பிறப்பு. மனிதன் வசிக்க உணவு தேவை அவன் வாழ உரிமை அவசியம். வாழ்வதற்கான உரிமை சுவாசிக்கும் உரிமை போன்றது. உரிமையற்ற வாழ்க்கை உயிரற்ற உடலுக்கொப்பானது. மனிதனோடு பிறந்த உரிமைகள் அவனிடமிருந்து பிரிக்க முடியாதவை (inalienable). மனித உரிமைகள் மனிதகுலத்துக்குப் பொதுவானவை. “பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்”. மனித உரிமைகள் சாதி, மதம், மொழி, நிற, பால் பாகுபாடு, பிராந்தியப்பற்று கடந்தவை. எவரும் இவற்றைத் துறக்கவோ, பறிக்கவோ, புறக்கணிக்கவோ முடியாது. மனதின்

சுதந்திரமாகவும்,சுயமரியாதையுடனும், கவுரவத்துடனும் வாழ மனித உரிமைகள் இன்றியமையாதவை. மனிதனிடம் மறைந்துகிடக்கும் ஆளுமை ஆற்றல்களை வெளிக்கொணர்வதற்கான வாய்ப்புகளே மனித உரிமைகள். இவை சிறப்புச் சலுகைகள் அல்ல பாதுகாப்புக் கவசமாகும். “மனித உரிகைள் நமது மனப்பான்மையின் அங்கமாகிவிட்டது அமைதியான அப்பழுக்கற்ற அடிப்படையாகிவிட்டது” என்று கூறினார் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கார்.

**வளர்ச்சி**

இந்தியாவில் ஆதிகாலம்தொட்டு சமயத்தலைவர்களும், சமுதாய சீர்திருத்தவாதிகளும் மனிதநேயமே மனித வாழ்வின் குவிமையம் என்பதை வலியுறுத்தினர். இங்கிலாந்தின் மாக்னா கார்ட்டா (1215), அமெரிக்க சுதந்திரப் பிரகடனம் (1776), பிரெஞ்சுப் பிரகடனம் (1789) ஆகியவை மனித உரிமைகள் வளர்ச்சி வரலாற்றின் முக்கிய மைல்கற்களாகும். இந்திய விடுதலைப் போராட்டத்தலைவர்கள் அடிப்படை உரிமைளுக்காகப் போராடினர். சுதந்திரம் எங்களது பிறப்புரிமை“ என்று முழக்கமிட்டார் திலகர். ஐக்கிய நாடுகள் அவை (U.N.O) 1948 டிசம்பர் 11ம் தேதி மனித உரிமைகள் பிரகடனத்தை (Declaration of Human Rights) வெளியிட்டது. இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் மூன்றாவது பகுதி (Part III) அடிப்படை உரிமைகள் (Fundamental Rights) பற்றியது.

**மனித உரிமைகள் பாதுகாப்புச்சட்டம், 1993 Human Rights(Protection) Act, 1993**

1993 செப்டம்பர் 27-ம் தேதி மனித உரிமைகள் பாதுகாப்பு அவசரச் சட்டம் பிறப்பிக்கப்பட்டது. பின்னர் மனித உரிமைகள் பாதுகாப்பு மசோதா 1993 டிசம்பர் மாதம் நாடாளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்டு, குடியரசுத் தலைவரின் ஒப்புதல் பெறப்பட்டது (1994 ஜனவரி 8). இச்சட்டம் 1993 செப்டம்பர் 28லிருந்து நடைமுறைக்கு வந்ததாகக் கருதப்பட்டது. இச்சட்டத்தின் நோக்கங்களாவன: 1) தேச மனித உரிமைகள் ஆணையத்தை அமைத்தல் 2) மாநில மனித உரிமைகள் ஆணையங்களை உருவாக்கல் 3) மாவட்ட மனித உரிமை

நீதிமன்றங்களை ஏற்படுத்தல் 4) மனித உரிமைகளைப் பாதுகாத்தல் 5) மனித உரிமைகள் சம்மந்தப்பட்ட நடவடிக்கைகளுக்கு ஏற்பாடு செய்தல்.



**தேசிய மனித உரிமைகள் ஆணையம்**

**நோக்கம்**

அமெரிக்கா உள்ளிட்ட உலக நாடுகளும், அம்னெஸ்டி இன்டர்நேஷனல் (Amnesty International), ஏசியா வாட்ச் (Asia Watch) போன்ற தன்னார்வத் தொண்டு நிறுவனங்களும் இந்தியாவில், குறிப்பாக பஞ்சாபிலும் காஷ்மீரத்திலும், மனித உரிமைகள் அத்துமீறப்படுவதாகப் பிரச்சாரம் செய்து வந்தன. அப்பிரச்சாரத்தை முறியடிப்பதற்காக 1991ல் காங்கிரஸ் தனது தேர்தல் அறிக்கையில் அறிவித்தபடி நரசிம்மராவ் பிரதமரானவுடன் மனித உரிமைகள் பாதுகாப்புச் சட்டம் இயற்றி மனித உரிமைகள் ஆணையத்தை அமைத்தார். அப்போது உள்துறை அமைச்சராயிருந்த எஸ்.பி.சவான் அரசியல் உள்நோக்கம் கொண்ட பொய்ப்பிரச்சாரத்தைப் பொய்ப்பிப்பதற்காகவே இச்சட்டம் கொண்டுவரப்பட்டதாகக் கூறினார். இதன் மற்றொரு நோக்கம் இந்தியாவில் மனித உரிமைகளுக்காகப் பாடுபடும் அரசுசாரா தன்னார்வ அமைப்புகளை ஊக்கப்படுத்துவதாகும். மக்களிடையே மனித உரிமைகள் பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்தி, இவ்வுரிமைகளுக்குத் தக்க பாதுகாப்பளித்து, மனித உரிமைகள் மீறப்படுவதைக் கண்டறிந்து தக்க நிவாரணம் அளிப்பது பிரிதொரு நோக்கமாகும்.

**அதிகாரங்கள் / பணிகள்**

மனித உரிமைகள் சட்டப்படி மனித உரிமைகள் ஆணையத்துக்குப் பல அதிகாரங்கள் வழங்கப்பட்டுள்ளன. இந்திய அரசியல் சாசன அந்தஸ்து பெற்றுள்ள, நாட்டுக்குப் பொதுவான இந்த ஆணையத்தின் அதிகாரங்களாவன: 1) மனித உரிமை மீறல்களைப் பற்றிய புகார்களின் அடிப்படையில் தானே முன்வந்து (Suo Moto) விசாரணை நடத்தல் 2) மனித உரிமை மீறல் வழக்குகளின்போது, நீதிமன்ற அனுமதியுடன் வழக்கு விசாரணையில் பங்கேற்றல் 3) மாநில அரசாங்கத்தின் அனுமதியோடு, மனித உரிமை மீறல்களுக்காக சிறையில் அடைக்கப்பட்டிருந்தோரிடம் சென்று அங்குள்ள வசதிகளைப் பற்றி ஆராய்ந்து பரிந்துரைகள் செய்தல் 4) மனித உரிமைகளுக்கு அளிக்கப்பட்டுள்ள சட்டப் பாதுகாப்புகள் பற்றிப் பரிசீலித்து

பொருத்தமான தடுப்பு நடவடிக்கைகள் பற்றிப் பரிந்துரைத்தல் 5) மனித உரிமைகளுக்கு எதிரான பயங்கரவாதம் போன்ற காரணிகளைக் கண்டறிந்து தக்க தடுப்பு நடவடிக்கைகளைப் பற்றிப் பரிந்துரைத்தல் 6) மனித உரிமைகள் பற்றிய உடன்படிக்கைகள் மற்றும் ஆவணங்களை ஆய்வு செய்து மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகள் பற்றி ஆலோசனை கூறல் 7) மனித உரிமைகள் பற்றி ஆராய்ச்சி செய்தல் ஆராய்ச்சியை ஊக்குவித்தல் 8) மனித உரிமைகள் பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்தும் வகையில் எழுத்தறிவைப் பரப்பல் 9) மனித உரிமைகள் பாதுகாப்பிற்காகப் பாடுபடும் அரசுசாராத் தன்னார்வத் தொண்டு நிறுவனங்களை ஊக்குவித்தல் 10) மனித உரிமைகளை மேம்படுத்துவதற்கான அனைத்து முயற்சிகளையும் மேற்கொள்ளல்.

மனித உரிமைகள் ஆணையத்துக்குத் தேவையான ஆவணத்தைக் கைப்பற்றவோ அல்லது முக்கிய தகவல்களைப் பெறவோ எந்த இடத்துக்கும் செல்லும் அதிகாரம் உண்டு. அதேபோன்று விசாரணைக்காக மத்திய, மாநில அரசாங்க அதிகாரிகளின் உதவியைக் கோரிப் பெறலாம். விசாரணை முடிந்தபின் பின்வரும் நடவடிக்கைகளை எடுக்கலாம் மனித உரிமைக்குற்றவாளிகளுக்கு எதிராக நடவடிக்கை எடுக்குமாறு சம்மந்தப்பட்ட அரசாங்கத்துக்கோ அல்லது நிறுவனத்துக்கோ பரிந்துரைக்கலாம் 2) உயர் நீதிமன்றத்தையோ அல்லது உச்ச நீதிமன்றத்தையோ அணுகி உரிய உத்தரவுகளை வழங்கக் கோரலாம் 3) மனித உரிமை மீறல்களால் பாதிக்கப்பட்டோருக்கு உரிய இடைக்கால நிவாரணம் வழங்க சம்மந்தப்பட்ட நிறுவனங்களுக்கு சிபாரிசு செய்யலாம் 4) இதன் விசாரணை அறிக்கையை மனுதாரருக்குக் கொடுக்கலாம் 5) இதன் விசாரணை மற்றும் செயல் அறிக்கை நகலை சம்மந்தப்பட்ட அரசாங்கத்துக்கு அனுப்பலாம் 6) இதன் ஆண்டறிக்கையை குடியரசுத்தலைவருக்கும், சம்மந்தப்பட்ட மாநில ஆளுநருக்கும் அனுப்ப வேண்டும். தேசிய மனித உரிமைகள் ஆணையம் உச்ச நீதி மன்றத்தின் முன்னாள் தலைமை நீதிபதியைக் கொண்ட 5 உறுப்பினர்கள் கொண்ட அமைப்பாகும்.

**மாநில மனித உரிமைகள் ஆணையம்**

மனித உரிமைகள் பாதுகாப்புச் சட்டத்தின்கீழ் மாநில மனித உரிமைகள் ஆணையங்கள் அமைக்கப்படுகின்றன. மாநில ஆணையம்

இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தில் மத்திய-மாநில அரசாங்கங்களுக்கான பொதுப்பட்டியலில் (Concurrent list)ல் குறிப்பிடப்பட்டிருந்த அதிகாரங்கள் தொடர்புடைய விவகாரங்கள் பற்றி மட்டுமே விசாரணை மேற்கொள்ள முடியும். தேசிய ஆணையமோ அல்லது சட்டப்படி நியமிக்கப்பட்ட வேறு எந்த ஆணையமோ மேற்கொண்ட விசாரணை பற்றி மாநில ஆணையம் மீண்டும் விசாரிக்க இயலாது. மாநில ஆணையத்துக்கும் மனித உரிமைகள் மீறல், விசாரணை, புலனாய்வு, விசாரணைக்குப்பின் எடுக்கவேண்டிய நடவடிக்கைகள் பற்றிய அதிகாரங்கள் அளிக்கப்பட்டுள்ளன. 1996 டிசம்பர் 20ம் தேதி மனித உரிமைகள் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் தமிழ்நாடு மனித உரிமைகள் ஆணையம் அமைக்கப்பட்டது. இதன் முதல் தலைவராக உயர்நீதிமன்ற முன்னாள் நீதிபதி எஸ்.நயினார் சுந்தரம் பதவியேற்றார் (17 ஏப்ரல் 1997).

தமிழ் நாட்டு மனித உரிமைகள் ஆணையம் விசாரணைக்கு ஏற்றுக்கொண்ட முக்கிய வழக்குகள் 1) தென்மாவட்டங்களில் நிகழ்ந்த வகுப்பு மோதல்கள் 2)கொடைக்கானலில் வேலை வாய்ப்பின்மை பற்றி எழுந்த பிரச்னை 3) கடலூர் சிப்காட்“ வளாகத்தில் ஏற்பட்ட சுற்றுச் சுழல் சீர்கேடு 4) நெய்வேலி பழுப்பு நிலக்கரி கழகத்தால் ஏற்பட்ட சுகாதாரச் சீர்கேடு 5) வத்தலக்குண்டு குடிநீர் மாசடைந்ததால் ஏற்பட்ட நோய்கள் தர்மபுரி மற்றும் திருவள்ளூர் மாவட்டங்களில் நடந்த விஷச்சாராய சாவுகள்.

**மாவட்ட மனித உரிமைகள் நீதிமன்றம்**

மாவட்ட அளவில் நடைபெறும் மனித உரிமைகள் மீறல் குற்றங்களை விரைவாக விசாரிக்கும் பொருட்டு மாவட்ட நீதிமன்றங்கள் நியமிக்கப்படுகின்றன. இவை உயர்நீதிமன்ற தலைமை நீதிபதியின் ஒப்புதலுடன் அமைக்கப்படுகின்றன. உரிமை மீறல் குற்றங்களை விசாரிக்க மாவட்டம்தோரும் ஒரு அமர்வு நீதிமன்றத்தை மனித உரிமைகள் நீதிமன்றமாக அறிவிக்கலாம். மாநில அரசாங்கம் ஒவ்வொரு மாவட்ட நீதிமன்றத்திலும் வழக்குகளை நடத்துவதற்காக தகுதிவாய்ந்த ஒருவரை அரசு குற்றவியல் வழக்குரைஞராக நியமிக்க வேண்டும். தமிழ் நாட்டில் மாநில மனித உரிமைகள் ஆணையம் அமைக்கப்படுவதற்கு

முன்பே மாவட்ட நீதிமன்றங்கள் அமைக்கப்பட்டன என்பது குறிப்பிடத்தக்கது.

குறிப்பு

**ஆணையத்தின் சாதனைகள்**

தேசிய மனித உரிமைகள் ஆணையம் அமைக்கப்பட்டு பத்தாண்டுகளில் (1993-2003) மனித உரிமைகள் மீறல்கள் பற்றி 400,000 புகார்கள் வந்தன. ஆண்டுதோறும் 70,000 புகார்களுக்குமேல் வந்துகொண்டிருக்கின்றன. சட்டத்தால் கைவிடப்பட்டோர், நீதிமன்றங்கள் மூலம் நீதிபெற முடியாதோர், அரசாங்க அங்கங்களின் குறிப்பாகக் காவல் துறையினரின் அத்துமீறல்களிலிருந்து விடுபட விரும்புவோர் இந்த ஆணையத்தின் அரவணைப்பையும் ஆதரவையும் எதிர்பார்த்து புகார் கொடுக்கின்றனர். ஆயிரக்கணக்கில் வந்து குவியும் புகார்களில் விசாரணைக்கு உகந்ததாகக் கருதப்படுபவை ஏற்றுக்கொள்ளப்படுகின்றன.தேசிய ஆணையத்தின் ஆண்டு அறிக்கைகளின்படி 1) சட்டப்புறம்பாகக் கைது செய்து சிறைச்சாலைகளில் அடைத்தல், கைதிகள் கொடூரமாக நடத்தப்படல், காவல்துறையின் கட்டுப்பாட்டில் இருக்கும்போது விசாரணையின்றி நீண்டகாலம் காவலில் வைத்தல், பொய்யான காரணம் கூறி கைது செய்தல், கைதிகள் காணாமல் போதல், நடவடிக்கை எடுக்காமல் இருத்தல், பாலியல் பலாத்காரம், தற்கொலை செய்து கொள்ளல், மரணமடைதல் போன்றவை 2) மருத்துவமனைகளில் ஏற்படும் மனித உரிமை மீறல்கள் மற்றும் மருத்துவர்களின் கவனக்குறைவால் நோயாளிகள் அகால மரணமடைதல் 3)அரசாங்க வாரியங்களில் நடைபெறும் பல்வேறு உரிமை அத்துமீறல்கள் 4)கொத்தடிமைகளைக் கொடுமைப்படுத்தல் 5) கலவரங்களின்போது மக்கள் கூட்டமாகக் கொலை செய்யப்படல் 6) பெருகிவரும் எதிர்ப்படு கொலைகள்" (encounter deaths) போன்ற வழக்குகளை விசாரணைக்கு ஏற்றுக்கொண்டு சம்மந்தப்பட்டோர் மீது உரிய நடவடிக்கை எடுக்குமாறும், பாதிக்கப்பட்டோருக்கு இழப்பீடு தருமாறும் சம்மந்தப்பட்ட நிறுவனங்களுக்கு பரிந்துரைக்கிறது.

மனித உரிமைகள் ஆணையம் பல அசாதாரண மனித உரிமை மீறல் நிகழ்ச்சிகளைத் துணிவுடன் எதிர்கொண்டுள்ளது. உதாரணத்துக்கு மூன்று சம்பவங்களைக் கூறலாம்: 1) 1990 களின் துவக்கத்தில்

பஞ்சாபில் 2097 பேரைக் காணவில்லை என்றும், சட்டப்புறம்பாக மக்கள் கூட்டமாக எரிக்கப்பட்டனர் என்றும் புகார் வந்தது. இது பற்றிய பிரச்னைகளைப்பற்றி ஆணையம் விசாரித்தது. 2) 2000-2001ல் 109 'எதிர்படு கொலைகள்" பற்றிய புகார்கள் வந்தன. இவற்றுள் 68 கொலைகள் (62%) உத்திரப் பிரதேசத்திலிருந்து வந்தவை. 3) 2002 ல் நடந்த குஜராத் கலவரத்தின்போது இந்த ஆணையம் குஜராத் சென்று (மார்ச்) இனப்படுகொலை பற்றி நூற்றுக்கணக்கான புகார்களை நேரில் பெற்றுக் கொண்டது. கோத்ரா ரயில்பெட்டி எரிக்கப்பட்டது, குல்பார்கா சங்கம், நரோடா பாட்டியா, பெஸ்ட் பேக்கரி எரிப்பு, சதார்புரா பற்றிய வழக்குகளை மத்திய புலனாய்வுத் துறை (CBI) யிடம் ஒப்படைக்க வேண்டும் என்றும், பிற வழக்குகளை மாவட்ட மாஜிஸ்ட்ரேட்டால் அமைக்கப்படும் சிறப்பு மன்றங்கள் (Special Cells) விசாரிக்க வேண்டும் என்றும் பரிந்துரைத்தது.

தேசிய ஆணையம் மத்திய அரசாங்கம் கொண்டு வந்த பொடா (POTA) சட்டத்தைக் கடுமையாகக் கண்டித்தது. இந்திய விண்வெளி ஆராய்ச்சி நிறுவன (ISRO) விஞ்ஞானி தவறாக சிறைப்படுத்தப்பட்டதற்கு ரூ. 10 இலட்சம் இழப்பீடு வாங்கித்தந்தது. உத்திரப் பிரதேசத்தில் தலித் பெண்களை மானபங்கப்படுத்திய வனத்துறை அதிகாரிகள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கூறியது.

ஆணையத்தின் அதிகார வரம்புக்குட்பட்டு மேலும் பல சாதனைகள் நிகழ்த்தப்பட்டுள்ளன. அரசாங்கங்கள், அரசாங்க நிறுவனங்கள் அலுவலர்கள் மற்றும் பொதுமக்களிடையே மனித உரிமைகள் பற்றிய விழிப்புணர்வையும், மனித உரிமைகள் காக்கப்பட வேண்டியதன் அவசியத்தையும், மனித உரிமை மீறலின் விளைவுகள் பற்றிய பொறுப்புணர்வையும் ஏற்படுத்தியுள்ளது. அனைத்து மாநிலங்களிலும் உள்ள காவல் துறைத் தலைவர் அலுவலகங்களிலும் மனித உரிமைகள் மையம்" அமைக்கப்படக் காரணமாயுள்ளது. மாநில மனித உரிமை ஆணையங்களும், மாவட்ட மனித உரிமைகள் நீதிமன்றங்கள் அமைவதற்கான முயற்சியை மேற்கொள்கிறது.

மனித உரிமைகள் ஆணையத்தின் முனைப்பார்வத்தின் விளைவாக 1997 ல் இந்திய அரசாங்கம் சித்திரவதை மற்றும் மனிதத்தன்மையற்ற கொடூர தண்டனைகள் பற்றிய சர்வதேச

குறிப்பு

உடன்பாட்டில் கையொப்பமிட்டுள்ளது. மேலும் பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள் பாடத்திட்டங்களில் மனித உரிமைகள்" சேர்க்கப்பட்டுள்ளன. பல பல்கலைக்கழகங்களில் மனித உரிமைகள் பற்றிய பட்ட/பட்டய சான்றிதழ் படிப்புகள் சேர்க்கப்பட்டுள்ளன. பெண்களுக்கு இழைக்கப்படும் அநீதிகள், அரசாங்க ஊழியர்களின் வீடுகளில் சிறார்கள் வேலைக்கு அமர்த்தப்படல், கொத்தடிமைகள் போன்ற மனித மீறல்களை நீக்குவதற்கான பரிந்துரைகளைச் செய்துள்ளது. மனித உரிமைகள் பற்றிய தனித்தன்மை கொண்ட ஒரே அமைப்பான தேசிய மனித உரிமைகள் ஆணையம் "உலக அளவில் மனித உரிமை மீறல்களுக்குத் தண்டனை வழங்குகின்ற அமைப்புகளில் முதலாவதாகும்" என்று கூறுகிறார் மனித உரிமைகள் சட்டம்" ஆசிரியர் ச.சாந்தகுமார். குறைபாடுகள்

தேசிய மனித உரிமைகள் ஆணையத்தின் அமைப்பிலும் செயல்பாட்டிலும் பல குறைகள் காணப்படுகின்றன: 1) ஆண்டுதோறும் பெருகிவரும் மனித உரிமை மீறல் புகார்களை விரைவாக விசாரித்து பைசல் செய்வதற்கான அலுவலர் வசதியும், போதிய நிதியும் உட்கட்டமைப்பும் இல்லை. எனவே, ஐந்து பேர் கொண்ட ஆணையத்தால் திறம்பட செயல்படமுடிய வில்லை. 2) இந்த ஆணையம் மனித உரிமை மீறல் வழக்குகளை விசாரிக்கலாமேயன்றி நீதிவழங்க முடியாது பரிந்துரைகள் செய்யலாமேயொழிய குற்றவாளிகளைத் தண்டிக்க இயலாது. 3) சட்டப்படி ஆணையம் பொது ஊழியர்கள்" (Public Servants) பற்றி விசாரணை நடத்தமுடியுமேயன்றி இராணுவம் மற்றும் துணை இராணுவப் படையினரின் மனித உரிமை மீறல்களைப்பற்றி விரிக்க முடியாது. உதாரணமாக காஷ்மீரில் எல்லைப் பாதுகாப்புப் படையினர்மீது கூறப்படும் புகார்களை விசாரிக்கும் அதிகாரம் இந்த ஆணையத்திற்கில்லை. 4) ஆணையத்துக்கு வரும் புகார்களில் மிகப் பெரும்பான்மையானவை அரசாங்கத் துறைகள்-குறிப்பாகக் காவல்துறை - சம்மந்தப்பட்டிருப்பதால் அரசாங்கத்தின் முழு ஒத்துழைப்பைப் பெற முடிவதில்லை. 5) சட்ட தேவைப்படி இந்த ஆணையம் அரசுசாரா மனித உரிமைகள் அமைப்புகளை ஆதரித்து ஊக்குவிப்பதில்லை. ஆதரவளிக்காத அரசாங்கத் துறைகளை நம்பும் அளவுக்குக் குடிமக்கள் குழுக்களை நம்புவதில்லை. 6) மனித உரிமைகளுக்காகப் பாடுபடுவது அரசாங்கத்துக்கும், தேசப்பாதுகாப்புக்கும்

விரோதமானது என்று அரசாங்கம் கருதுவதால் தேசிய மனித உரிமைகள் ஆணையத்தால் செவ்வனே செயல்படமுடிவதில்லை.

**குறிப்பு**

**அரசாங்கத்தின் பங்கு**

தேசிய மனித உரிமைகள் ஆணையம் சிறப்பாகச் செயல்படுவதற்கு அரசாங்க - சட்ட மன்ற (Legislative) நிர்வாக (Executive) மற்றும் நீதித்துறை (Judiciary) - ஆதரவு இன்றியமையாதது. மனித உரிமைகள் பாதுகாப்புச் சட்டத்தை (1993) நிறைவேற்றிய நாடாளுமன்றம் அச்சட்டம் முறையாக, திறமையாக நடைமுறைப்படுத்தப்படுகின்றதா என்பதைப் பொறுப்புடன் கண்காணிக்க வேண்டும். ஆணையத்தின் ஆண்டு அறிக்கைகளில் அரசாங்கம் வெளிப்படையாகச் செயல்படுவதில்லை (lack of transparency) என்று குறிப்பிடப்பட்டுள்ளது. எனவே, அரசாங்கம் ஆணையத்தின் பரிந்துரைகள்மீது எடுக்கும் நடவடிக்கைகள் பற்றி ஒளிவுமறைவின்றி செயல்பட வேண்டியது அவசியம். அதேபோன்று ஆண்டு அறிக்கைகள் ஆண்டுதோறும் நாடாளுமன்றத்தின் இரு அவைகளிலும் தவறாது விவாதிக்கப்படல் வேண்டும். இந்த ஆணையம் ஓய்வு பெற்ற உச்சநீதிமன்ற தலைமை நீதிபதியின் தலைமையில் செயல்படுவதால் அரசாங்கம் - குறிப்பாக உள்துறை அமைச்சரகம் (Home Ministry) - முழு ஒத்துழைப்பு அளிக்க வேண்டும். அதேபோன்று மாநில அரசாங்கமும், மாநில மனித உரிமைகள் ஆணையமும், மாவட்ட மனித உரிமைகள் நீதிமன்றங்களும் சிறப்பாகச் செயல்படுவதற்குத் தேவையான அலுவலர்களையும், அலுவலக வசதிகளையும், போதிய நிதி உதவியையும் செய்துதர வேண்டும். ஏனெனில் மனித உரிமைகள் ஆணையத்தின் வெற்றி மத்திய மாநில அரசாங்கங்கள் அளிக்கும் ஆதரவைப் பொருத்தே உள்ளது.

**மதிப்பீடு**

மனித உரிமைகளை வரையறுப்பதோ, பட்டியலிடுவதோ கடினம். மனித உரிமைகளின் சாரத்தைத் “தனியுரிமை“ (Liberty) என்ற ஒரு வார்த்தைக்குள் அடக்கிவிடலாம் என்று கூறுகிறார் நானி பல்கிவாலா. மனித உரிமைகள் மனித குலத்துக்குப் பொதுவானவை. மனித உரிமைகள் பாதுகாப்புச் சட்ட (1993)த்தின் கீழ் தேசிய மனித

உரிமைகள் ஆணையம் அமைக்கப்பட்டது சமகால இந்திய வரலாற்றுச் சாதனையாகும். ஜனதா அரசாங்கம் மனித உரிமைகள் ஆணையத்தை அமைக்க முயன்றது. பின்னர் பிரதமர் நரசிம்மராவ் ஆட்சியில் அமைக்கப்பட்ட இந்த ஆணையம் உள் நாட்டு மற்றும் வெளிநாட்டுக் குற்றச்சாட்டுகளை எதிர்கொள்வதற்காக உருவாக்கப்பட்டாலும் இதன் செயல்பாடுகள் மனித உரிமைகளின் ஒழுக்கத் தவிர்க்க முடியாமை“ (Moral Inevitability) யையும், இவ்வுரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டியதன் இன்றியமையாமையையும், மனித உரிமை மீறல்கள் கண்டிக்கவும், தண்டிக்கவும் பட வேண்டியவை என்பதை அடிக்கோடிட்டுக் காட்டுவதாக உள்ளன.

“மௌனம் அடக்குமுறையை ஊட்டி வளர்க்கிறது” (Silence nourishes oppression) என்ற உண்மையை உணர்ந்த ஆணையும் மக்களிடையே மனித உரிமைகள் பாதுகாப்பு பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்துவதில் குறியாக உள்ளது. இந்த ஆணையத்துக்கு மனித உரிமைமீறல் வழக்குகளை விசாரித்து பரிந்துரைகள் கூறவதோடு குற்றவாளிகளைத் தண்டிக்கும் அதிகாரமும் கொடுக்கப்பட்டால் மேலும் திறமையாகச் செயல்படமுடியும். அப்போது இந்த ஆணையம் மனித உரிமைகள் பாதுகாப்பின் அடையாளமாக இருக்கின்றதேயன்றி சக்திமிக்க சுயேச்சை அமைப்பாகச் செயல்படவில்லை என்ற குற்றச்சாட்டுக்கு இடமிருக்காது. சுருங்கக்கூறின் தேசிய மனித உரிமைகள் ஆணையம் உரிமை மீறல்களுக்கெதிரான போர் வாளாக இல்லாவிடினும் பாதுகாப்புக் கவசமாகவும் கேடயமாகவும் உள்ளது என்பதில் ஐயமில்லை.

**உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கவும்**

2. எவைசிறப்புச் சலுகைகள் அல்ல பாதுகாப்புக் கவசமாகும்?
3. சுதந்திரம் எங்களது பிறப்புரிமை என்று முழக்கமிட்டார்யார்?
4. எந்த ஆண்டு மனித உரிமைகள் பாதுகாப்பு அவசரச் சட்டம் பிறப்பிக்கப்பட்டது?

## 14.5.சுற்றுச்சூழல் பாதிப்பு

இந்தப் புவியை நோக்கி வரும் சுற்றுச்சூழல் ஆபத்தின் தீவிரத்தை அரசியல்வாதிகளும், அதிகாரத்தில் உள்ளவர்களும் பார்க்கத்

தவறிவிட்டதாக அறிக்கை ஒன்று தெரிவிக்கிறது. பொது கொள்கைக்கான ஆராய்ச்சி நிறுவனமான ஐபிபிஆர்-இன் அறிக்கை, மனிதர்களின் தாக்கம், சமூதாயத்தையும், உலகப் பொருளாதாரத்தையும் சீர்குலைக்கும் அளவுக்கு ஆபத்தில் உள்ளதாகத் தெரிவிக்கிறது. இதற்குப் பலவிதமான காரணங்களை அடுக்கிறார்கள் விஞ்ஞானிகள். பருவநிலை மாற்றம், பலவகையான உயிரினங்கள் அழிந்து போதல், மண் அரிப்பு, பெருங்கடல்களில் அமிலத் தன்மை அதிகரித்தல், மற்றும் காடுகள் அழிப்பு ஆகியவை குறித்து பெரும் எச்சரிக்கைகளை விடுக்கின்றனர் விஞ்ஞானிகள்.

இந்தக் காரணங்கள் சுற்றுச்சூழலை பெரும் சீரழிவுக்கு இட்டு வருவதாகவும், அது ஆபத்தான நிலைக்கு சென்றுவிட்டதாகவும், ஐபிபிஆர் அறிக்கை தெரிவிக்கிறது. 16 கால்கள் 300 முட்டைகள் இட்டு அச்சுறுத்தும் படைப்புழுக்கள்: பரிதவிக்கும் விவசாயிகள் 2019ல் வளி மண்டலத்தில் கரியமில வாயு அளவு உச்சத்துக்குப் போகும். இந்தச் சுற்றுச்சூழல் சீரழிவு மனித வரலாற்றில் முன்னேப்போதும் இல்லாத அளவுக்கு ஏற்பட்டு வருவதாகவும் அந்த அறிக்கை தெரிவிக்கிறது.

”இந்தப் பேரழிவுகளைத் தடுப்பதற்கான வாய்ப்புகள் அதிவேகமாக மங்கிவருகிறது” என்கிறது ஐபிபிஆர் அறிக்கை. 2005ஆம் ஆண்டிலிருந்து இந்த உலகில் ஏற்பட்ட வெள்ள பாதிப்பு 15 மடங்காகவும், தீவிரமான வெப்பநிலை 20 மடங்கும், காட்டுத்தீ சம்பவங்கள் ஏழு மடங்கும் அதிகரித்துள்ளதாகத் தெரிவிக்கின்றனர் விஞ்ஞானிகள். பருவநிலை மாற்றம் குறித்து கொள்கை உருவாக்கத்தின்போது விவாதிக்கப்படுகிறது. ஆனால் வேறு சில காரணங்கள் பெரிதும் கருத்தில் கொள்ளப்படுவதில்லை.

**காடுகள்**

நிலத்தில் உள்ள மண் மிக வேகமாக அதாவது 10-40 மடங்கு வேகமாக அழிக்கப்படுகிறது. ஆனால் இது இயற்கையான முறையில் மீண்டும் உருவாக்கப்படும் அளவைக் காட்டிலும் மிக அதிகம். 20ஆம் நூற்றாண்டின் மத்திய பகுதிகளிலிருந்து இந்த மண் அரிப்புகளால் 30 சதவீத பயிர் நிலங்கள் பயிர் செய்ய ஏதுவான நிலையை இழந்துள்ளன. 2050ஆம் ஆண்டிற்குள், புவியில் உள்ள 95 சதவீத நிலப்பகுதியின் தரம் குறைந்து விடும்.

**குறிப்பு**

**மூன்று விஷயங்கள் குறித்தான புரிதலுக்கு நாம் வரவேண்டும்**

1.சுற்றுச்சூழல் பாதிப்பின் அளவு மற்றும் வேகம்

2.சமூகத்தில் ஏற்படும் தாக்கங்கள்

3.மாற்றத்திற்கான தேவை

உலகில் உள்ள பல விஞ்ஞானிகள், நாம் ஒரு புதிய சுற்றுச்சூழல் மாற்றத்தில் நுழைந்துள்ளதாக தெரிவிக்கின்றனர். மனிதர்களின் செயல்களால் ஏற்பட்டு வரும் சுற்றுச்சூழல் பேரழிவின் அளவு, வேகம் ஆகியவற்றின் தீவிரத்தன்மையை கோடிட்டுகாட்ட இந்த யுகத்தை சுற்றுச்சூழல் பேரழிவின் யுகம் என்று ஐபிபிஆரின் அறிக்கை எச்சரிக்கிறது.

சுற்றுச்சூழல் மாற்றம் முந்தைய காலத்தைக் காட்டிலும் மிக வேகமாக ஏற்படுகிறது என்றும், அது சமூதாயத்துக்கு அச்சுறுத்தலை ஏற்படுத்தி வருகிறது என்றும் ஐபிபிஆர் கூறுவது சரியே என லண்டன் பல்கலைக்கழக்கத்தின், க்ளோபல் சேஞ் சயின்ஸ் பேராசிரியர் சைமன் லீவிஸ் தெரிவிக்கிறார். ”உணவுப் பொருள்களில் விலையேற்றம் அதனால் மக்கள் மத்தியில் பதற்றம் என எதிர்காலத்தில் பிரச்சனைகள் ஏற்படும். மேலும் மக்கள் இடம் பெயர்தல் அதிகமாக நடைபெறும் அதனால் சமூகத்தில் சச்சரவுகள் ஏற்படும்.” ”இவை அரசியல் ரீதியாகவும் பதற்றங்களை ஏற்படுத்தும்,” என்கிறார் சைமன்.

இந்த நூற்றாண்டில் அதிவேகமான சமூக மற்றும் சுற்றுச்சூழல் மாற்றம் ஏற்படுகிறது என்பதில் மாற்றம் இல்லை. ஆனால் இந்தப் பேரழிவுகளைத் தடுக்க அரசியல் ரீதியான தீர்வுகள் எடுக்கப்படுமா என்பதுதான் தெளிவாக இல்லை. துர்ஹம் பல்கலைக்கழகத்தின் புவியியல் பேராசிரியரான ஹாரியட் பல்கேலி, ”தற்போதைய சூழ்நிலை பாதிப்பை இந்த அறிக்கை காட்டுகிறது,” என்கிறார். ”பல சமயங்களில் நாம் நிறைய நல்ல விஷயங்களை செய்ய வேண்டும் என நினைக்கிறோம். ஆனால், அரசு கொள்கைகள் ஆதாரங்களை கொண்டு அமைக்கப்பட வேண்டியுள்ளது.” எனவே அரசியல் ரீதியான கொள்கைகள் மேற்கொள்ள இது ஒரு சாக்காக கூறப்படுகிறது. அரசியல் ரீதியான கொள்கைகளில் மாற்றங்களை கொண்டுவர இன்னும் எந்த மாதிரியான ஆதாரம் தேவை என்பதே எனது கேள்வி,” என்கிறார் ஹாரியட்.

குறிப்பு

## 14.6. உங்கள் முன்னேற்ற கேள்விகளை சரிபார்க்க விடைகள்

1. உலகளாவிய வர்த்தகத்தை.
2. மனித உரிமைகள்.
3. திலகர்.
4.1993 செப்டம்பர் 27-ம் தேதி.

## 14.7. அத்தியாயச் சுருக்கம்

- தாராளமயமாக்கல், தனியார்மயமாக்கல் ஆகியவற்றின் தவிர்க்க முடியாத விரிவாக்கமே உலகமயமாக்கலாகும். இது பரிமாற்றப் பொருளாதாரம்“ (Transactional Economy) என்றும் அழைக்கப்படுகிறது.
- உலகமயமாக்கல் என்பது ஏற்றுக்கொள்ளப்பட்ட உலக வர்த்தக விதிகளுக்குட்பட்டு மேற்கொள்ளப்படும் வர்த்தகமாகும்.
- அறிவியல், தொழில்நுட்ப, தகவல் தொடர்பு விரிவாக்கத்தின் விளைவாக உலகமே ஒரு பொருளாதாரப் பொதுச் சந்தை (Global Market) ஆகிவிட்டது.
- உலகமயமாக்கலால் மூலதனம், தொழில்நுட்பம், பண்டப் பரிவர்த்தனை, உழைப்பு ஆகியவை தங்குதடையின்றி பரிமாறிக் கொள்வதற்கான வாய்ப்பு ஏற்படுகிறது.
- உரிமை மனிதனின் உடன்பிறப்பு. மனித உரிமைகள் மனிதகுலத்துக்குப் பொதுவானவை. மனித உரிமைகள் சாதி, மதம், மொழி, நிற, பால் பாகுபாடு, பிராந்தியப்பற்று கடந்தவை. மனதின் சுதந்திரமாகவும்,சுயமரியாதையுடனும், கவுரவத்துடனும் வாழ மனித உரிமைகள் இன்றியமையாதவை. மனிதனிடம் மறைந்துகிடக்கும் ஆளுமை ஆற்றல்களை வெளிக்கொணர்வதற்கான வாய்ப்புகளே மனித உரிமைகள்.
- இந்தியாவில் ஆதிகாலம்தொட்டு சமயத்தலைவர்களும், சமுதாய சீர்திருத்தவாதிகளும் மனிதநேயமே மனித வாழ்வின் குவிமையம் என்பதை வலியுறுத்தினர்.

- இந்திய விடுதலைப் போராட்டத்தலைவர்கள் அடிப்படை உரிமைளுக்காகப் போராடினர். சுதந்திரம் எங்களது பிறப்புரிமை" என்று முழக்கமிட்டார் திலகர்.
- ஐக்கிய நாடுகள் அவை (U.N.O) 1948 டிசம்பர் 11ம் தேதி மனித உரிமைகள் பிரகடனத்தை (Declaration of Human Rights) வெளியிட்டது. இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் மூன்றாவது பகுதி (Part III) அடிப்படை உரிமைகள் (Fundamental Rights) பற்றியது.
- 1993 செப்டம்பர் 27-ம் தேதி மனித உரிமைகள் பாதுகாப்பு அவசரச் சட்டம் பிறப்பிக்கப்பட்டது. பின்னர் மனித உரிமைகள் பாதுகாப்பு மசோதா 1993 டிசம்பர் மாதம் நாடாளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்டு, குடியரசுத் தலைவரின் ஒப்புதல் பெறப்பட்டது (1994 ஜனவரி 8).
- மனித உரிமைகள் சட்டப்படி மனித உரிமைகள் ஆணையத்துக்குப் பல அதிகாரங்கள் வழங்கப்பட்டுள்ளன. மனித உரிமைகள் ஆணையத்துக்குத் தேவையான ஆவணத்தைக் கைப்பற்றவோ அல்லது முக்கிய தகவல்களைப் பெறவோ எந்த இடத்துக்கும் செல்லும் அதிகாரம் உண்டு. அதேபோன்று விசாரணைக்காக மத்திய, மாநில அரசாங்க அதிகாரிகளின் உதவியைக் கோரிப் பெறலாம்.
- மனித உரிமைகள் பாதுகாப்புச் சட்டத்தின்கீழ் மாநில மனித உரிமைகள் ஆணையங்கள் அமைக்கப்படுகின்றன. மாநில ஆணையம் இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தில் மத்திய-மாநில அரசாங்கங்களுக்கான பொதுப்பட்டியலில் (Concurrent list)ல் குறிப்பிடப்பட்டிருந்த அதிகாரங்கள் தொடர்புடைய விவகாரங்கள் பற்றி மட்டுமே விசாரணை மேற்கொள்ள முடியும்.
- மாவட்ட அளவில் நடைபெறும் மனித உரிமைகள் மீறல் குற்றங்களை விரைவாக விசாரிக்கும் பொருட்டு மாவட்ட நீதிமன்றங்கள் நியமிக்கப்படுகின்றன. உரிமை மீறல் குற்றங்களை விசாரிக்க மாவட்டம்தோறும் ஒரு அமர்வு நீதிமன்றத்தை மனித உரிமைகள் நீதிமன்றமாக அறிவிக்கலாம். தமிழ் நாட்டில் மாநில மனித உரிமைகள் ஆணையம் அமைக்கப்படுவதற்கு முன்பே

குறிப்பு

மாவட்ட நீதிமன்றங்கள் அமைக்கப்பட்டன என்பது குறிப்பிடத்தக்கது.

- அரசாங்கங்கள், அரசாங்க நிறுவனங்கள் அலுவலர்கள் மற்றும் பொதுமக்களிடையே மனித உரிமைகள் பற்றிய விழிப்புணர்வையும், மனித உரிமைகள் காக்கப்பட வேண்டியதன் அவசியத்தையும், மனித உரிமை மீறலின் விளைவுகள் பற்றிய பொறுப்புணர்வையும் ஏற்படுத்தியுள்ளது.
- தேசிய மனித உரிமைகள் ஆணையம் சிறப்பாகச் செயல்படுவதற்கு அரசாங்க - சட்ட மன்ற (Legislative) நிர்வாக (Executive) மற்றும் நீதித்துறை (Judiciary) - ஆதரவு இன்றியமையாதது. மனித உரிமைகள் பாதுகாப்புச் சட்டத்தை (1993) நிறைவேற்றிய நாடாளுமன்றம் அச்சட்டம் முறையாக, திறமையாக நடைமுறைப்படுத்தப்படுகின்றதா என்பதைப் பொறுப்புடன் கண்காணிக்க வேண்டும். ஆணையத்தின் ஆண்டு அறிக்கைகளில் அரசாங்கம் வெளிப்படையாகச் செயல்படுவதில்லை (lack of transparency) என்று குறிப்பிடப்பட்டுள்ளது.
- இந்தப் புவியை நோக்கி வரும் சுற்றுச்சூழல் ஆபத்தின் தீவிரத்தை அரசியல்வாதிகளும், அதிகாரத்தில் உள்ளவர்களும் பார்க்கத் தவறிவிட்டதாக அறிக்கை ஒன்று தெரிவிக்கிறது. பொது கொள்கைக்கான ஆராய்ச்சி நிறுவனமான ஐபிபிஆர்-இன் அறிக்கை, மனிதர்களின் தாக்கம், சமூதாயத்தையும், உலகப் பொருளாதாரத்தையும் சீர்குலைக்கும் அளவுக்கு ஆபத்தில் உள்ளதாகத் தெரிவிக்கிறது. இதற்குப் பலவிதமான காரணங்களை அடுக்கிறார்கள் விஞ்ஞானிகள். பருவநிலை மாற்றம், பலவகையான உயிரினங்கள் அழிந்து போதல், மண் அரிப்பு, பெருங்கடல்களில் அமிலத் தன்மை அதிகரித்தல், மற்றும் காடுகள் அழிப்பு ஆகியவை குறித்து பெரும் எச்சரிக்கைகளை விடுக்கின்றனர் விஞ்ஞானிகள்.
- நிலத்தில் உள்ள மண் மிக வேகமாக அதாவது 10-40 மடங்கு வேகமாக அழிக்கப்படுகிறது. ஆனால் இது இயற்கையான முறையில் மீண்டும் உருவாக்கப்படும் அளவைக் காட்டிலும் மிக

குறிப்பு

அதிகம். 20ஆம் நூற்றாண்டின் மத்திய பகுதிகளிலிருந்து இந்த மண் அரிப்புகளால் 30 சதவீத பயிர் நிலங்கள் பயிர் செய்ய ஏதுவான நிலையை இழந்துள்ளன. 2050ஆம் ஆண்டிற்குள், புவியில் உள்ள 95 சதவீத நிலப்பகுதியின் தரம் குறைந்து விடும்.

- நிலத்தில் உள்ள மண் மிக வேகமாக அதாவது 10-40 மடங்கு வேகமாக அழிக்கப்படுகிறது. ஆனால் இது இயற்கையான முறையில் மீண்டும் உருவாக்கப்படும் அளவைக் காட்டிலும் மிக அதிகம். 20ஆம் நூற்றாண்டின் மத்திய பகுதிகளிலிருந்து இந்த மண் அரிப்புகளால் 30 சதவீத பயிர் நிலங்கள் பயிர் செய்ய ஏதுவான நிலையை இழந்துள்ளன. 2050ஆம் ஆண்டிற்குள், புவியில் உள்ள 95 சதவீத நிலப்பகுதியின் தரம் குறைந்து விடும்.

## 14.8. முக்கியச் சொற்கள்

**உலகமயமாக்கல் :** உலகமயமாக்கல் என்பது பொருளாதார, அரசியல், தொழில்நுட்ப, சமூக மற்றும் கலாச்சார துறைகளில் உலக ஒருங்கிணைப்பின் ஒரு வரலாற்று செயல்முறையாகும்.

**மனித உரிமை :** எவருக்கும் எந்தவித தீங்கும் ஏற்படாதவரை ஒருவர்தான் நினைத்தபடியெல்லாம் செயல்படுத்துவதும் பிறருடைய உரிமைக்கு பாதிப்பு ஏற்படுவதினால் தான் நினைத்தபடி செயலை செய்ய முடியாமல் இருப்பது மனித உரிமையாகும்.

**மண்சரிவு** : மண்சரிவு அல்லது நிலச்சரிவு என்பது ஒரு புவியியல் நிகழ்வு ஆகும், பெரும் பாறைத் துகள்கள் சிதைவடைந்து கீழே விழுதல் அல்லது சரிவடைவது நிலச்சரிவாகும்.நிலச்சரிவு ஏற்படுவதற்கான முதன்மையான விசை புவியீர்ப்பு விசையாக இருந்தபோதும், உண்மையான சாய்வு உறுதித்தன்மையைப் பாதிக்கும் பிற காரணிகளும் உள்ளன.

## 14.9.சுய உதவி கேள்விகள் மற்றும் பயிற்சிகள்

### குறிகிய வினாக்கள்

1. உலகமயமாக்கல் குறித்து எழுதுக.
2. மனித உரிமைகள் பாதுகாப்புச்சட்டம் குறித்து குறிப்பு வரைக.

**விரிவான வினாக்கள்**

1. இந்தியாவில் மனித உரிமை மீறல்கள் பற்றி கட்டுரை வடிவில் விவரி.
2. சுற்றுச்சூழல் பாதிப்புகுறித்து பகுப்பாய்வு செய்க

## 14.10. கூடுதல் வாசிப்புகள்

பிபன் சந்திரா, மிருதுலா முகர்ஜி, ஆதித்யா முகர்ஜி. 2015.*சுதந்திரத்திற்குப் பிறகு இந்தியா,* சென்னை: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.

Grover B.L.and Grover S. 2007. *A New Look at Modern Indian History*. New Delhi: S. Chand & Company.

G. John Gilbert. 2006. *Contemporary History of India*. New Delhi: Anmol Publications Pvt. Ltd.

வெங்கடேசன்.க. 2012. *சமகால இந்திய வரலாறு 1947-2012*, ராஜபாளையம்: வி.சி. பப்ளிகேஷன்ஸ்.

S.K. Shah. 2017. *India's Foreign Policy.* Alpha Editions.

V.N. Khanna. Leslie K Kumar. 2018. *Foreign Policy of India.* New Delhi: Vikas Publications PVT. LTD.

V. P. Dutt. 1993. *India's Foreign Policy.* New Delhi: Vikas Publications PVT. LTD.